# நபிகள் நாயகம்

வாழ்க்கை வரலாறு

தாழை மதியவன்



இஸ்லாத்தைப்
பலரும் மதமாகவே
எண்ணுகின்றனர்.
அது அகம்புறம்
இரண்டையும் வழி
நடத்திச் செல்லக்கூடிய
மார்க்கமென
அறிந்தார் இல்லை.
அண்ணலாரையும் ஒரு
மத நிறுவனராகவே
கருதுகின்றனர்.
அவர் கடந்த கால
சமுதாயத் தலைவர்
என்பதையோ நிகழ்கால
வாழ்வியலைச்
செம்மையாக்கியவர்
என்பதையோ வருங்கால
மக்களுக்குரிய மகத்தான
வழியை வகுத்துத்
தந்தவர் என்பதையோ
புரிந்தார் இல்லை.

# உள்ளே

# 1. முன்மாதிரி மனிதரைப் பற்றி...

'நூறு பேர் The 100' எனும் நூலை எழுதி அதில் நூறு பேரில் முதல்வராக அண்ணல் நபிகளாரைக் குறிப்பிட்ட மைக்கேல் ஹெச். ஹார்ட் தன்னுடைய முகப்புரையைக் கீழ்க்கண்டவாறு தொடங்குகிறார்:

*'சீசர், அலெக்சாந்தர், தைமூர், கிராம்வெல் இவர்களில் மிகச் சிறந்தவர் யார்?' இப்படியொரு வாக்குவாதம் கற்றறிந்த அறிஞர்கள் சிலரிடையே நடைபெற்றதைத் தாம் இங்கிலாந்தில் 1726இல் தங்கியிருந்தபோது தற்செயலாகக் கேட்க நேர்ந்ததாக வால்ட்டேர் 'ஆங்கிலேயர் பற்றிய கருத்துரைகள்' என்ற தமது நூலில் குறிப்பிடுகிறார். அப்போது அவர்களில் ஒருவர் 'ஐயத்திற்கிடமின்றி தலைசிறந்தவர் சர் ஐசக் நியூட்டன் என்றுதான் சொல்ல வேண்டும்' என்று வலியுறுத்தினார். இந்தக் கருத்தே வால்ட்டேருக்கும் உடன்பாடாக இருந்தது. ஏனென்றால் 'நமது உள்ளங்களை வன்செயலால் அடிமைப்படுத்து பவர்களைவிட உண்மையில் ஆற்றலைக் கொண்டே மனத்தை ஆட்கொள்கின்ற அவர்தாம் (நியூட்டன்) நம் தலை வணக்கத்திற்குரியவர்.'*

ஜூலியஸ் சீசர், அலெக்சாந்தர், தைமூர், கிராம்வெல் ஆகியோர் போர்ப்படைத் தளபதிகளாக விளங்கி வெற்றிகளை ஈட்டியவர்கள். சர் ஐசக் நியூட்டனோ தலைசிறந்த விஞ்ஞானி.

புவி ஈர்ப்பைக் கண்டறிந்து சொன்ன நியூட்டன் மேற்கொண்ட எந்திரப் பரிசோதனைகள் 'முதல் இயக்க விதி'யை நிலைநாட்டின. ஒளிபிரதிபலிப்பு (Reflection of Light) ஒளிக்கோட்டம் (Refraction of Light) ஆகிய இரண்டையும் பகுப்பாய்வு செய்து கண்டுபிடித்த பிரதிபலிப்பு தொலைநோக்காடி (Reflection Telescope) வானியல் ஆராய்ச்சிகளுக்குப் பெரிதும் உதவி வருகின்றன.

முதல் நால்வரின் வெற்றிகள் அரை நூற்றாண்டுக்கு மேல் புவியில் நிலைத்திருக்கவில்லை. ஆனால் நியூட்டன் கண்டுபிடிப்போ உலகம் முழுவதுமுள்ள வானியல் ஆராய்ச்சிக் கூடங்களில் நிலைத்து நின்று

வருகிறது. எனவே நியூட்டன் போற்றப்படத்தக்கவராகிறார்; பூவுலகம் உள்ளவரை பேசப்படுபவராகிறார்.

என்றாலும் நியூட்டன் ‘நூறு பேர்’களைப் பற்றிய நூலில் இரண்டாவது இடத்தைப் பெற்றிருக்கிறார். முதலிடம் அண்ணல் நபிகளாருக்கு வழங்கப்பட்டுள்ளது.

சொந்தச் செல்வாக்கொன்றையே தேர்வுமுறையாகக் கொண்டிருந்த மைக்கேல் எச்.ஹார்ட் புகழ், பெருமை, செல்வாக்கு, திறமை, பல்துறை புலமை, பெருந்தலைமை ஆகியவற்றின் அடிப்படையில் பலரைத் தேர்வு செய்திருந்தாலும் அண்ணலாரையே முதன்மைப்படுத்தி இருப்பார்.

‘இந்த உலகத்தில் அளப்பரிய செல்வாக்குடன் பெரும் தாக்கத்தை உண்டு பண்ணியவர்களின் பட்டியலில் முஹம்மது அவர்களை முதல்வராகத் தேர்ந்தெடுத்தது வாசகர்களில் சிலருக்கு வியப்பாக இருக்கலாம், மற்றும் சிலர் ‘ஏன் அப்படி?’ என வினாவும் தொடுக்கலாம், ஆனால் சமயம், உலகியல் ஆகிய இரு நிலைகளிலும் ஒருசேர மகத்தான வெற்றி பெற்றவர், வரலாற்றில் அவர் ஒருவரேதாம்’ என்றே ‘நூறுபேர்’ நூலில் மைக்கேல் எச்.ஹார்ட் கட்டுரையைத் தொடங்குகிறார்.

ஹார்டு குறிப்பிடும் சமயம், உலகியல் ஆகிய இரு நிலைகளில் மட்டும் அண்ணலார் வெற்றிபெறவில்லை. அகபுற வாழ்க்கை நிலைகளிலும் அவர் முன்மாதிரியாகத் திகழ்ந்தார்.

இஸ்லாம் ஏற்றுப்போற்றும் ஈஸா எனும் ஏசு கிறிஸ்துவைவிட அண்ணலார் முன்னிலை வகிக்கக் காரணம், இறைவன் அவருக்கு ஏற்படுத்திக் கொடுத்த வாய்ப்புக்கள். ஏசுவை இல்லறவாழ்க்கைக்கு முன்மாதிரியாக எடுத்துக்கொள்ள முடியாது; காரணம் அவருக்கு மனைவி அமையவில்லை. அது அகவாழ்க்கை நிலை. புறவாழ்க்கையில் ஆட்சியதிகாரத் துறையிலும் ஏசு கிறிஸ்து முன்மாதிரியாக முடியாது; காரணம் ஆட்சியதிகாரத்தைப் பெறக்கூடிய நிலையை இறைவன் அவருக்கு அமைத்துக்கொடுக்கவில்லை.

அகவாழ்க்கையில் சொந்த மனைவியே கணவனின் கொள்கையைப் பின்பற்றாத நிலைமை இன்றுவரை தொடர்கின்றது. ஆனால் அண்ணலாருக்கு வாய்த்த இல்லறப் பங்காளி கதீஜா கரத்தால் மட்டும் கைகோர்த்தவரில்லை. கருத்தாலும் கைகோர்த்தவர், முதலில் இஸ்லாத்தை ஏற்றவர்.

குறைஷித் தலைவர் அப்துல் முத்தலீபின் வம்சாவளி, நிறைவான இல்வாழ்க்கை, மூன்று அருமையான பெண் பிள்ளைகள்,

ஆண்பிள்ளைகள் இல்லாத குறையைத் தீர்க்கும் வளர்ப்பு மகன் ஜைது, உடன் வாழும் ஒன்றுவிட்ட இளவல் அலீ, உதவிக்கு உம்முல் அய்மன் குடும்பம், தொடர்ச்சியான வணிகம், நல்ல நண்பர்கள் என வாழ்ந்த அண்ணலார் சமுதாயம், மக்கள் நலன், அவர்களின் நிலைகுலைவு, அரபகத்தின் அச்சாணியாக விளங்கும் இறையாலயம் கஅபா பற்றியெல்லாம் சிந்தித்தார்.

அந்தச் சிந்தனையின் உச்ச நிலைதான் ஹிராக் குகையைத் தவச் சாலையாக்கியது. அண்ணலாரைத் தீர்க்கதரிசியாக்கியது; இறைத்தூதராக்கிப் பூமியைப் புரட்டிப் போட வைத்தது.

இறைவனின் உருவ வணக்கமற்ற ஆலயம் உருவ வணக்க ஆலயமாக மாறி சமுதாயத்தின் தடைக்கல்லாக சமுதாய வீதியில் பெரும் பாறையாக நின்று கொண்டிருந்தது. பாறையைப் புரட்டிப்போட இறைவன் வழங்கிய நெம்புகோல்தான் ஓரிறைக்கொள்கை.

அந்த நெம்புகோலைப் பெற்றிருந்த அண்ணலாருக்கு உதவியாக சில நண்பர்களும் உறவினர்களும் அடித்தள மக்களும் கிடைத்தார்கள். அவர்களின் எண்ணிக்கை மிகமிகக் குறைவு. அந்த எண்ணிக்கையில் அடிமைகளும், பாட்டாளிகளும், சாமான்யர்களும் இருந்தனர்.

வரலாறு யாவும் வர்க்கப் போராட்ட வரலாறுதான் என்றார் கார்ல் மார்க்ஸ். அப்படியானால் அரபுலக வரலாறும் வர்க்கப் போராட்ட வரலாறுதான். ஆனால் கார்ல் மார்க்ஸ் போன்றவர்கள் இஸ்லாத்தின் எழுச்சியை மதத்தின் எழுச்சியாகத்தான் பார்த்தார்களே தவிர வர்க்கப் போராட்டமாகப் பார்க்கவில்லை.

மகாகவி அல்லாமா இக்பால், தனது அமர காவியமான ‘ஜாவீது நாமா’வில் கூறியுள்ளதைக் கவனியுங்கள்:

திருக்குர்ஆன் என்பது என்ன? முதலாளி வர்க்கத்துக்குச் சாவுமணி; பாட்டாளிக்கு உற்ற துணைவன்.

பொதுவுடைமைவாதிகளும் நாத்திகர்களும்கூட இஸ்லாத்தை நோக்கி வருவதற்குக் காரணம் அதனுடைய சமதர்ம சிந்தனை, சமத்துவப் பார்வை, சமநீதி ஆகியவையே.

பொதுவுடைமைச் சித்தாந்தங்களைப் பேசிக் கொண்டோ நாத்திகக் கருத்துக்களைச் சொல்லிக் கொண்டோ இருப்பவர்கள், எவரும் ஒரு சமநிலைச் சமுதாயத்தைக் கட்டியெழுப்பவில்லை. உலக அளவில் ஒரு நடுநிலைச் சமுதாயத்தை உருவாக்கிக் காட்டியவர் அண்ணலாரே! முத்துகளை, மணிகளைச் சேர்த்த அண்ணலார் அவற்றைச்

சரமாக்கினார், அதுதான் சாதனை!

ஒரு காலகட்டத்தில் வாழும் பொதுவுடைமைவாதியோ நாத்திகரோ அவர்கள் கடைப்பிடிக்கும் கொள்கையை அவர்களோடே கொண்டு சென்றுவிடுகின்றனர். அவர்கள் தம் மனைவி, மக்கள், சுற்றத்தார், அக்கம்பக்கத்தினர் என எவரையும் தம் கொள்கைக்குக் கொண்டு வருவதில்லை. பொதுவுடைமைவாதியின் பிள்ளை பொல்லாத முதலாளியாகிவிடவும் நாத்திகரின் புதல்வர் பக்திப் பழமாகிவிடுவதையும் கொள்கைவாதிகளால் தடுக்க முடியவில்லை.

அண்ணலார் அந்தநிலை வராமல் தம்மைச் சார்ந்தோரை அமைப்பாக உருவாக்கியதே அரும்பெரும் பணி. இரண்டு, மூன்றுபேர் சேர்ந்தாலும் அவர்களில் ஒருவர் தலைவர். அந்த அமைப்பு தானாகவே இயக்கமாகத் தொடங்கியது. நாகரிக மக்களாக வாழ்ந்து ஓரிறையை வணங்கி வாழ்ந்தவர்கள்தான் மீண்டும் அநாகரிக மக்களாக மாறி 360 சிலைகளை வணங்கும்நிலைக்கு ஆளாகியிருந்தனர்.

அவர்களை ஓரிறையை வணங்கச் செய்ய, செய்த முயற்சிகள்தான் இஸ்லாத்தின் தொடக்கப்புள்ளி. அது புரோகிதக் கூட்டத்தைப் போராளி முகாமுக்குக் கொண்டு சென்று கொண்டிருந்தது. வணிகர்களாகவும் ஆட்டிடையர்களாகவும் தோட்டந்துரவுக்காரர்களாகவும் வேட்டைக்காரர்களாகவும் இருந்த அரபுச் சமூகத்தையும் அவர்களைச் சேர்ந்தவர்களையும் கொள்கைக் கூடாரத்தில் கொண்டுபோய் நிறுத்தியது.

அண்ணலார் மூலம் அணியானோர் கொள்கைப் பிரச்சாரம் மட்டுமே செய்து மக்காவில் எழுச்சியை உண்டாக்கிக் கொண்டிருந்தனர். அவ்வெழுச்சி மக்காவின் பெரிய மனிதர்களை, கஅபாவின் காவலர்களை அச்சப்பட வைத்தது. அதே சமயம் அவர்கள் முஸ்லிம்களின்மேல் காட்டிய வன்மம் அண்ணலார் அணியைக் காயப்படுத்தியது.

முஸ்லிம்களில் சிலர் நிம்மதியாக வாழவும் வாழ்வாதாரத்திற்காகவும் முதலில் அபிசீனியாவுக்குப் புலம்பெயர்ந்தார்கள். பின்னர் யத்ரிப் கொள்கைக் குழுவினர் வலுப்பட அடுத்த புலம்பெயர்தலைத் தம் நாட்டுக்குள்ளேயே வைத்துக் கொண்டனர்.

யத்ரிபுக்குப் புலம் பெயர்ந்தவர்களின் உச்சக்கட்டம் அண்ணலார் ஹிஜ்ரத் செய்ய வேண்டிய கட்டாயமாக உருவெடுத்தது. மாநகர் யத்ரிப்

மாநபி வந்தடைந்த நகராகி மதீனா எனப் பெயர் பெற்றது

அண்ணலாரே புலம்பெயர்ந்த பின்பும் மக்காவின் அரபுக்கள் ஓயவில்லை. அவர்கள் கருத்தெல்லாம் மதீனாவிலேயே கவிழ்ந்திருந்தது. முஸ்லிம்கள் பெருந்தொகையாகி மக்காமீது போர் தொடுத்தால் என்ன செய்வதெனப் பயந்தனர். அவர்கள் வென்று 360 சிலைகளும் அப்புறப்படுத்தப்பட்டால் நிலைமை என்னவாகும் என கவலைப்பட்டவர்கள், மதீனாவை நோக்கிச் செல்லும் வாய்ப்பை எதிர்பார்த்துக் கொண்டிருந்தனர்.

அவ்வாய்ப்பு மக்காவிலிருந்த தலைவர்களில் ஒருவரான அபூசுப்யானால் ஏற்பட்டது. அவ்வாய்ப்பைப் பயன்படுத்திக் கொண்டு இன்னொரு தலைவன் அபூஜஹ்ல் மதீனா மீது போரைத் திணித்தான்.

முதல் போரான பத்ருப் போரில் அரபுக் குறைஷித் தலைவர்களில் பலர் மாண்டனர். பத்ருப் போரில் வெற்றிபெற்ற முஸ்லிம்கள் உஹதுப் போரில் வெற்றி தோல்வி இரண்டுக்கும் இடையில் நிறுத்தப்பட்டனர். அகழிப்போரில் கிடைத்த வெற்றிதான் முஸ்லிம்களை புனிதப் பயணம் செய்ய மக்கா நோக்கி நடக்க வைத்தது.

பயணம் மக்காவைத் தொடவில்லை என்றாலும் ஹுதைபியா உடன்படிக்கைக்கு வழிவகுத்தது. அந்த உடன்படிக்கை ஏற்படுத்திய அற்புத விளைவுகள் மக்காவைப் போரிடாமலேயே கைப்பற்ற வகை செய்தன.

போர்கள், பின் உடன்படிக்கை, வெற்றி எனத் தொடர்ந்த இஸ்லாமிய வரலாறு அண்டை நாடுகளின் வரலாறுமாகி தொலைதூர நாடுகளைக்கூட உறவுகொள்ள வைத்தது.

இதற்கான மூலதனம் இறைவனின் திருக்குர்ஆன் மொழிகளும் அண்ணலாரின் வாய்மொழிகளும் என்றால் மிகையாகாது.

அண்ணலாரின் வாய்மொழிகளை தலைப்புகளிட்டுத் தொகுத்துத் தனித்தனியாகத் தந்திருந்தால் அவை பிறரையும் பேச வைக்கும் மூலதனமாகியிருக்கும்.

இஸ்லாத்தைப் பலரும் மதமாகவே எண்ணுகின்றனர். அது அகம் புறம் இரண்டையும் வழி நடத்திச் செல்லக்கூடிய மார்க்கமென அறிந்தார் இல்லை. அண்ணலாரையும் ஒரு மத நிறுவனராகவே கருதுகின்றனர். அவர் கடந்த கால சமுதாயத் தலைவர் என்பதையோ நிகழ்கால வாழ்வியலைச் செம்மையாக்கியவர் என்பதையோ வருங்கால மக்களுக்குரிய மகத்தான வழியை வகுத்துத் தந்தவர் என்பதையோ

புரிந்தார் இல்லை.

தமிழில் அண்ணலாரைப் பற்றிய வாழ்க்கை வரலாறுகள் பல வெளிவந்துள்ளன. பிரபல முஸ்லிம் எழுத்தாளரிலிருந்து பிரபலமில்லாதவர்வரை பலரும் பெரிதும் சிறிதுமாக பல நூல்களை வெளியிட்டுள்ளனர். முஸ்லிமல்லாதோரும் அண்ணலாரின் வரலாற்றைக் கவிதையாகவும் காவியமாகவும் படைத்துத் தந்துள்ளனர்.

அவர்களின் வரிசையில் நானும் அண்ணலாரின் வாழ்க்கையை நீண்ட நூலாகத் தர முனைந்துள்ளேன். நான் படித்த கேட்ட செய்திகளை வைத்து ஆராய்ந்து என் பாணியில் தந்துள்ளேன். தொகுத்துத் தந்த நிகழ்வுகளோடு சில நல்ல நிகழ்வுகளைப் பகுத்தும் அளித்துள்ளேன்.

கறுப்பு நிலாக்கால அரபுலகத்திலிருந்து காவிய நாயகர் அண்ணலாரின் முழு நிலாக்கால அரபுலகம்வரை கூறுவதற்காக நான் ஒரு நீண்ட பயணத்தை மேற்கொண்டேன். மனத்தால் பாலைவெளியிலும் பசுஞ்சோலையிலும் பயணித்தேன். நடந்தும் ஓடியும் பாலையை வலம் வந்துள்ளேன். குதிரையிலும் ஒட்டகத்திலும் பயணித்த நான் விண்மீன்களையும் தொடர்ந்துள்ளேன்.

லியோ பால்டு அஸத்தின் ‘Road to Mecca’ ஓர் உண்மைப் பயணம். என் பயணமோ மனத்தால் நடத்தப்பட்ட மகத்தான பயணம்! லியோ பால்டு அஸத்துக்கு முன்பாக கேரளக் கடற்கரையிலிருந்து ஒரு பயணம் மக்காவை அடைந்திருக்கிறது. அப்பயணம் கேரள மன்னர் பெருமான் சேரமான் பெருமாளுடையது. அண்ணலார் காலத்திலேயே அந்தப் பயணத்தில் கேரள மன்னர் எம்பெருமானைச் சந்தித்ததும் அண்ணலாரின் இறுதி ஹஜ் பயணத்துக்குச் சேர்ந்து சென்றதும் அறியக் கிடக்கிறது. அவர் மட்டும் மீண்டும் கேரளக் கடற்கரைக்கு வந்து இஸ்லாமிய அழைப்பைச் செய்திருப்பாரானால் அன்றே முழுக் கேரளமும் இஸ்லாத்தை ஏற்றிருக்கும். மன்னன் எவ்வழி குடிகள் அவ்வழியல்லவா?

சேரமான் பெருமாளிடம் அண்ணலாரைப் பற்றியும் அவர்கள் மூலம் அளிக்கப்பட்ட திருக்குர்ஆன் கருத்துகள் பற்றியும் சொன்னதுபோல் ஒவ்வொரு முஸ்லிமும் சுருக்கமாக மாற்றுமதச் சகோதரரிடம் சொல்லியிருந்தால் ‘இஸ்லாமியச் சித்திரம்’ அனைவரிடமும் தெளிவாக காணக்கிடைத்திருக்கும். அந்தப் பெருங்குறையை நீக்கினால்தான் ‘இஸ்லாம்’ எனில் சாந்தி என்பதும் அது கூறுவது ‘சரணாகதி தத்துவம்’ என்பதும் புரியும்.

அப்பணியைச் செய்யவே இந்நூல் ஆக்கப்பட்டுள்ளது. உலக சகோதரத்துவம் பேசுவோர், மாற்றுமதச் சகோதரரும் சகோதரத்துவம் பேசவும் அதைக் கடைப்பிடிக்கவும் அண்ணலாரின் வாழ்க்கையைப்போல் தம் வாழ்க்கையையும் முன்மாதிரியாக்க வேண்டும்.

ஆன்மிகத் தலைவர் முதல் அரசியல் தலைவர் வரையுள்ள பலரிடம் நாம் பின்பற்றக்கூடிய முன்மாதிரிகள் முழுமையாக இருக்காது. ஆனால் அண்ணலாரின் அக புற வாழ்க்கையில் முன்மாதிரிகள் அனைத்தும் இருக்கக் காணலாம். அவை நாம் பின்பற்றக்கூடிய முன்மாதிரிகளாக இருப்பதால் அண்ணலாரைப் பற்றித் தெரிந்துகொள்ள வேண்டியது மிகமிக அவசியமாகும்.

அந்த அவசியத்தை நிறைவு செய்யும் நூலாக இந்நூல் அமைந்திருப்பது இறைவனின் பேரருளாகும். எல்லாம் வல்ல அந்தப் பேரருள் அனைவரின்மீது பொழிய பிரார்த்தனை செய்வோம்.

பிரார்த்திப்பதோடு முக்கியமாக அண்ணலாரின் வாழ்க்கை வரலாற்றை வெளியிடும் கிழக்குப் பதிப்பகத்திற்கு நன்றிகூறி முன்னுரையை நிறைவு செய்கிறேன்.

தோழமையுடன்

தாழை மதியவன்

# 2. கறுப்பு நிலாக்காலம்

## வையம் இருண்டு கிடந்தது

தெற்கே அரபிக்கடல், மேற்கே செங்கடல், கிழக்கே பாரசீகக்கடல். இம்மூன்று கடல்களுக்கிடையே தேன்கூடாகத் தொங்கும் தீபகற்பம் அரபகம். வடக்கே சிரியா, கிழக்கே பாரசீகம், மேற்கே எகிப்தும் அபிசீனியாவும், தெற்கே அரபிக் கடலைத் தொட்டபடி இந்தியா என அரபகத்தைச் சூழ்ந்து பல்வேறு நாடுகள்.

அரபகம் உலக நாடுகளின் நடுவில் உள்ள நாடுமட்டுமல்ல, அன்றைய பல நாட்டு வணிகத்துக்கும் மையமாக இருந்த நாடு.

நடுவிலே இருக்கும் அந்த நாட்டில் ஒரு நடு நிலைச் சமுதாயம் அமைவதற்கு நடந்த நிகழ்ச்சிகளைப் பற்றிச் சொல்லும் முன்பு அதனைச் சுற்றியுள்ள நாடுகளில் இருந்த நிலைமைகளைப் பற்றிக் காண்போம்.

உலக மக்களின் மன வானங்கள் முழுதும் இருண்டு கிடந்தபோது அரபகமும் அதனைச் சுற்றியுள்ள மக்களின் மன எண்ணங்களும் இருண்டே கிடந்தன.

அரபகத்தில் சத்தியப் பேரொளிப் பிழம்பு தோன்றுவதற்கு முன் பாரசீகப் பேரரசும் ரோமப் பேரரசும் மிகுந்த வல்லமையும், பெருமையும் கொண்ட சாம்ராஜ்யங்களாகத் திகழ்ந்தன.

சாம்ராஜ்யங்கள்தான் என்றாலும் இருபெரும் ஆட்சியாளர்களின் மனங்களில் இருந்த இருளால் மக்களிடையேயும் இருள் சூழ்ந்திருந்தது. அவர்கள் கரங்களில் இருந்த வாளால் இருளைக் கிழிக்க முடியவில்லை. இதயத்தைக் கிழித்த அவர்களால் உதயத்தைத் தர முடியவில்லை.

சாம்ராஜ்யவாதிகளால் தர முடியாததையா இந்துஸ்தான் தந்துவிடும். தீப்பிழம்பிலிருந்து தீபத்தை ஏற்றலாம், தீப்பந்தங்களை ஏற்றலாம், இருட்டைக் கொண்டு என்ன செய்வது?

இருள் சூழ்ந்திருந்த எகிப்து, பாரசீகம், அபிசீனியா, இந்துஸ்தானின் தமிழகம் பற்றி இங்கே காணலாம்.

ரோம சாம்ராஜ்யம்

மிகுந்த பெருமையும் புகழும் வல்லமையும் கொண்டு விளங்கிய கிரேக்க சாம்ராஜ்யம் வீழ்ச்சியடைந்தபின் ரோம சாம்ராஜ்யம்தான் மேற்குலகைக் கட்டி ஆண்டது. கி.பி. ஏழாம் நூற்றாண்டின் இறுதியில் இந்தப் பேரரசும் வீழ்ச்சியின் இறுதிக் கட்டத்தில் இருந்தது.

சட்டமும், கட்டுப்பாடுமாக சிறப்பான ஆட்சி தந்து ராஜபாட்டையில் பயணித்த ரோமாபுரி சக்கரவர்த்திகள் காலப்போக்கில் மதுக்கோப்பைகளை மண்டியிட்டு வணங்கிக் கொண்டிருந்தார்கள். அவர்களின் தள்ளாட்டத்தில் ஆட்சியும் தள்ளாடியது. ஒழுங்கீனமும் சீர்கேடும் ஒன்றாகக் கை கோர்த்துக் கொண்டன.

ஆட்சித்தேர் பள்ளத்தில் சிக்கிக்கொண்டது. குதிரைகளுக்குக் காலொடிந்து போனது. ஆட்சியாளர்கள் குப்புற விழுந்து கிடந்தார்கள்.

எதிரிகள் எக்காளமிட்டுச் சிரித்தனர்; ஏழைகள் மேலும் ஏழைகள் ஆயினர். அச்சமும் ஆசையும் அளவுக்கதிகமாக இருந்தன. அமைதியின்மையும் ஒழுக்க வீழ்ச்சியும் எல்லை மீறிய உல்லாச வாழ்வும் எங்கும் தலைவிரித்தாடின.

சூரியன், சந்திரன், விண் மீன்கள் என இயற்கைப் படைப்புகளை வணங்கியவர்கள் தேவதைகளின் சிலைகளையும் வணங்கினர். கிறிஸ்துவத்தைத் தழுவியவர்கள் கூட ஏகத்துவத்தை விட்டு பிதா, மகன், பரிசுத்த ஆவி என திரித்துவக் கொள்கையை ஏற்று அவர்களைக் கடவுளாக்கிக் கொண்டதோடு மர்யம் (அலை)ஐக் கூட வணங்கினர்.

ஆன்மிகக் குழப்பங்கள் அவர்களைப் பல குழுக்களாகப் பிரித்தன; சண்டையிட்டுக் கொள்ள வைத்தன.

கல்லறைகளை வணங்கியவர்கள் மத குருமார்களையும் பாதிரியார்களையும் மண்டியிட்டு வணங்கத் தொடங்கினார்கள். ஆன்மிகத் தலைமையை ஏற்று நடத்திய குருமார்களே ஆங்காங்கு ஆட்சியதிகாரத்தையும் நடத்தினர். அவர்கள் சொன்ன வாய்மொழிகள் வேத வாக்காகவும் மன்னர் வாக்காகவும் இருந்தன.

துறவறம் உச்ச நிலை ஆன்மிகச் செயலாகக் கருதப்பட்டது. மண், பொன், பெண் ஆசைகளைத் துறத்தல் பெரிய இறை வணக்கமாகக் கருதப்பட்டது.

பல நூறு ஆண்டுகள் ரோமர்கள் போராடி அமைத்த அதிகார ஏகாதிபத்தியம் ஆன்மிக ஏகாதிபத்தியமாக மாறிப்போனது.

பண்டைய கிரேக்கத்தின் பெருமைமிக்க பண்பாடு உருவாக்கியிருந்த வளமையான ஆன்மிக மரபுகள் ரோமப் பேரரசின் துயரம்மிக்க வீழ்ச்சியில் புதையுண்டு போகக் காத்துக் கொண்டிருந்தன. கிறித்துவ மூடத்தனத்தின் இருட்டில் அம்மரபுகள் காணாமல் போய்க் கொண்டிருந்தன. ஐரோப்பிய மக்கள் மயக்கத்திலும் உறக்கத்திலும் தங்களை விலைமதிப்பற்ற வாழ்க்கையிலிருந்து விலக்கிக் கொண்டிருந்தனர்.

‘THE HISTORICAL ROLE OF ISLAM’ இஸ்லாத்தின் வரலாற்றுப் பாத்திரம்’ எனும் நூலில் சுதந்திரப் போராட்ட வீரரும் சிந்தனையாளரும் மனித நேயப் போராளியுமான எம்.என்.ராய் கூறுவதைக் கேளுங்கள்:

கத்தோலிக்கத் தேவாலயங்களின் சகிப்புத் தன்மையற்ற நடவடிக்கைகளால் அரேபியாவின் அண்டை நாட்டு மக்கள் கொதித்துப் போயிருந்தனர். மேஜியன் மாயாவாதிகள் மத்தியில் நிலவி வந்த மோதல்களாலும் யூதப் பழமைவாதத்தாலும், கிறிஸ்துவத்தின் குருட்டுப்பிடிவாதத்தாலும், பாரசீகம், மெசப்படோமியா, சிரியா, பாலஸ்தீன மக்களின் மதவாழ்க்கை நம்பிக்கையற்ற விதத்தில் குழம்பிப் போயிருந்தது. கடுமையான சடங்கு, சம்பிரதாயங்கள் மதத்தின் இடத்தைக் கைப்பற்றிக் கொண்டன. பாசாங்குத்தனமான சடங்கு முறைகள் பக்தியை விரட்டிவிட்டன. வறட்டுத்தனமான இறைக் கோட்பாடுகள், உண்மையான நம்பிக்கையை நெரித்துக் கொன்று விட்டன. தேவதைகள், ஞானிகள், திருத்தூதர்கள் என்ற குழப்பமான கூட்டத்தின் மத்தியில் கடவுள் காணாமல் போய்விட்டார்.

பாரசீகப் பேரரசு

அன்று அரேபியாவின் கிழக்கிலிருந்த பாரசீகத்தில் ஒரு பேரரசு அமைந்திருந்தது. அதன் மதம் மஜூஸிய்யத். அது பாரசீகத்தின் கிழக்கு எல்லையான சிந்து நதியின் மேற்குக்கரை வரை பரவியிருந்தது.

தீயைக் கடவுளாக வணங்கிய பாரசீகர்கள் அதற்காகக் கோயில்களையும் கட்டியிருந்தார்கள்.

பண்டைய சமயப் பிரிவான ‘மேஜியன்’ மாயாவாதத்தின் தாக்கத்தால் பாரசீகம் கடுமையான மூடத்தனத்தால் வளைக்கப்பட்டிருந்தது. ஈஸா (அலை)வுக்கு அறுநூறு ஆண்டுகளுக்கு முன் தோன்றிய ஜொராஸ்டரின் சமயம் வறட்டுத்தனமான கோட்பாடுகளால் பாரசீக மக்களை முடக்கிப் போட்டிருந்தது.

ஜொராஸ்டரின் சீடர்களே அசீரியர்கள். அசீரியப் பேரரசை

மஜூஸிகள் வெற்றிக் கொண்ட பின்னால் தீயை வணங்குவோர் வலிமையுடன் விளங்கினர். தோற்றவர்களின் வழிபாட்டுத் தலங்கள் அழிக்கப்பட்டன.

மேனி என்பவர் இறைவனும் சைத்தானும் சமமான ஆற்றல் பெற்றவர்கள் எனக் கூறி ஒரு மதத்தை நிறுவினார். ‘மேனிசாகிசம்’ என அழைக்கப்பட்ட அம்மதம் பாரசீகர்களைக் குழப்பத்தில் ஆழ்த்தியது.

ரோமப் பேரரசின் எதிர்ப்பை ஆயிரம் ஆண்டு காலம் சமாளித்த பாரசீகப் பேரரசு ஆன்மிகக் குழப்பங்களில் முட்டி மோதிக் கொண்டிருந்தது.

வானவியல் குறித்த விலைமதிப்பற்ற அறிவுமிக்க ‘சேபியன்’ எனும் சமயப் பிரிவினர் விண்மீன்களை வணங்கி வந்தனர். பண்டைய சமயத்தினரான இவர்கள் தீயை வணங்கிய பார்ஸிகளால் சிறுபான்மை ஆயினர்.

*சிரியா*

அரபகத்தின் தெற்கேயுள்ள யமனிலிருந்து புறப்பட்ட வர்த்தக மார்க்கம் யத்ரிப் வழியாக பாலஸ்தீன், சிரியா வரை நீண்டு சென்றது. வாசனைப் பொருள்கள் பெருமளவில் இப்பாதையில் கொண்டு செல்லப்பட்டதால் இது ‘வாசனைத் திரவியப் பாதை’ என அழைக்கப்பட்டது.

அரபகத்தின் தென் கடலோரப் பிரதேசமான ஹலரமவ்தில் தான் இந்திய தமிழக வணிகர்கள் தங்கள் ஏலம், கிராம்பு முதலிய வாசனைப் பொருள்களோடு முத்து, வைரம், மிளகு, இஞ்சி, அரிசி, பழங்கள், துணிகள், யானைத்தந்தம் போன்ற பொருள்களையும் கொண்டு சென்று விற்றனர். அவை சிரியாவரை கொண்டு செல்லப்பட்டு ஆப்பிரிக்க ஐரோப்பிய நாடுகளையும் அடைந்தன. அதேபோல் அங்கிருந்து கொண்டுவரப்பட்ட பொருள்கள் அரபிக் கடலையும் தாண்டிவந்தன.

சிரியாவில் ரோமானியரின் பைசாந்திய அரசு ஆட்சிக்கட்டிலில் இருந்தது. கி.மு. 64 முதல் 636 வரை அது அங்கு ஆண்டது. சிரியாவின் பழைய பெயர் ஷாம் தேசம்.

அந்தியோக் (ANTIOCH) எனும் நகர் அக்காலத்தில் ‘கிழக்கத்திய ஏதன்ஸ்’ எனப் புகழ் பெற்றிருந்தது. லட்சக்கணக்கான மக்கள் வாழ்ந்த அந்தப் பெரு நகர் வணிகத்துக்கும் தொழிலுக்கும் முக்கியக் கேந்திரமாக விளங்கியது.

பல்வேறு வகைப்பட்ட மக்கள் வாழ்ந்த சிரியா பைசாந்திய ஆட்சிக்குப் பின் கிறிஸ்துவத்தின் தொட்டிலாக மாறியது. புனித பால் அந்தியோக்கில் எழுப்பிய தேவாலயத்திலிருந்து புறப்பட்ட கிறிஸ்துவ அணிகளின் பயணங்கள் திரித்துவக் கொள்கையைக் கிழக்கை நோக்கிக் கொண்டு சென்றன.

கி.மு.10,000க்கு முன்பே உழவுத் தொழிலிலும் கால்நடை வளர்ப்பிலும் சிரியா முன் மாதிரி நாடாகத் திகழ்ந்திருக்கிறது. கற்களை மாற்றி ஏனங்கள் (பாத்திரங்கள்) செய்தவர்கள் சிக்கி முக்கிக் கற்களில் தீயை உண்டாக்கக் கற்றபின் உலோக ஏனங்கள் செய்திருக்கின்றனர். அதன் தொடர்ச்சியாக தொழில்கள் வளர்ந்து வந்துள்ளன.

கூம்பு வடிவ வீடுகளைக் கற்களால் கட்டிவந்த சிரியா மக்கள் அரேபியரை விட நாகரிகத்தில் பல மடங்கு முன்னேறியவர்களாக வாழ்ந்திருக்கிறார்கள்.

பூர்வீகக் குடிகளான செடர்ஸ் இன மக்களோடு எகிப்தியர்கள், சுமேரியர்கள், அசீரியன்கள், பாபிலோனியர்கள், ஹிட்டிஸ்கள் ஆகியோர் சிரியாவில் வாழக் காரணம் அந்நாடு பிற இன ஆட்சியாளர்களின் எல்லைப் புறமாக இருந்ததே!

அலெக்ஸாண்டர் சிரியாவைப் பிடித்த பின் கிரேக்கர்கள் கோலோச்சினார்கள். அண்ணலாரின் காலத்தில் சிரியா ரோமர்களால் ஆளப்பட்டுக் கொண்டிருந்தது.

சுமேர், அக்காட் போன்ற நகரங்கள் முக்கிய வணிகக் கேந்திரங்களாக இருந்திருக்கின்றன. செமிட்டிக் மொழி பேசுவோரே அதிகமாக அங்கு வாழ்ந்து வந்துள்ளனர்.

எகிப்து

‘எகிப்து மிஸ்ரு’ என அழைக்கப்பட்ட எகிப்தில் ஆதிகால மன்னர்கள் ஃபிர்அவ்ன்கள் பாரவோன்கள் (கி.மு. 26862181) என அழைக்கப்பட்டனர். இவர்கள் தங்களை சூர்யவம்சத்தினர் எனச் சொல்லிக் கொண்டனர்.

இவர்களில் ஒரு ஃபிர்அவ்ன் காலத்தில்தான் மூஸா (அலை) அழைப்புப் பணியாற்றினார்; இஸ்ரவேல் மக்களை மீட்டியெடுத்துப் புலம்பெயர வைத்தார். யூசுப் (அலை) ஆண்ட பூமியும் யாக்கூப் (அலை) அவர்தம் புத்திரர்கள் வாழ்ந்த பூமியும் எகிப்து தான். ‘நைல் நதியின் பரிசு’ என எகிப்தைக் கொண்டாடினர்.

ஃபிர்அவ்ன் காலத்தில் அவன், தானே இறைவன் என்றான். மன்னர்கள் மரணமடைந்ததும் உடல் பதப்படுத்தப்பட்டு வைக்கப்பட பிரமிடுகள் கட்டப்பட்டன. சிலை வணக்கங்களும் மண்டிக்கிடந்தன. ‘அமன்’ எனும் கடவுள் மிகவும் போற்றப்பட்டார்.

பாரவோன்களின் கல்லறைகள் புனிதத்தலமாகக் கொண்டாடப்பட்டிருக்கின்றன. உலகத்தின் முதல் பெண்ணரசியான ஹெட் செப்சூட் என்பவளுக்கு ஓர் அற்புதமான கோயிலை எழுப்பியிருந்தார்கள். பூனையைக்கூட அவர்கள் சிலையாக்கி வணங்கினர். பைசாந்தியர் ஆட்சிக் காலத்தில் (கி.பி. 284 640) பூனைக் கடவுளை வணங்க தடை உத்திரவு பிறப்பிக்கப்பட்டிருந்தது.

எகிப்தியர்கள் தங்கள் வாழ்வுக்கு ஆதாரமான நைல் நதியை 7000 ஆண்டுகளுக்கு மேலாக ஒரு கடவுளாகவே எண்ணி பூஜித்து வந்திருக்கிறார்கள். நைல் நதி பெருக்கெடுத்து வரும்போது ஆண்டுக்கு ஒரு முறை அழகிய இளம் பெண்ணை அலங்கரித்து மணப்பெண்ணாக்கி ஆற்றுக்கு தாரை வார்த்திருக்கிறார்கள். உழவர் பெருமக்களின் நன்றிக்கடனாக நதிக்கு அளிக்கப்படும் மணமகளாக வர போட்டா போட்டி நடக்குமாம். இச்செயல் ஒரு புனிதச் சடங்காகக் கருதப்பட்டது. 975 மைல் நீள நைல் நதியின் புத்திரர்கள் காப்டிக் இனத்தினர். இவர்களின் தாய் மொழி காப்டிக். மொஹஞ்சதாரோ நாகரிகத்துக்கு முன்பே புகழ்பெற்ற நாகரிகக்காரர்களான காப்டிக் மக்கள் சிலை வணக்கங்களாலேயே சீரழிந்து போனார்கள்.

இன்று புதிய கெய்ரோ என அழைக்கப்படும் அயின் சாம்ஸ் அன்று பிரபலமான தலைநகராக இருந்துது. பைபிளில் குறிப்பிடப்படும் ‘ஆன்’ எனும் நகரம் இதுதான் என தொல்பொருள் ஆராய்ச்சியாளர் கூறுகின்றனர். கி.மு. 2500இல் உச்சக் கட்டத்திலிருந்த இந்த நகரம் ‘ரீ’ எனும் சூரியக் கடவுளை வணங்கும் இடமாகப் புகழ் பெற்றிருந்தது.

பிறகு வந்த கிரேக்கர்களும் ரோமர்களும் இந்த நகரத்தை ‘சூரிய நகரம்’ எனும் பொருள்பட ‘ஹெலியோ போலிஸ்’ என அழைத்தார்கள்.

‘உம்முல் துனியா உலகத்தின் தாய்’ என அழைக்கப்பட்ட எகிப்தின் கீஜா பீட பூமியில் உள்ள மூன்று பெரிய பிரமிடுகளை அடுத்து ‘ஸ்பிங்ஸ்’ எனும் பிரமாண்டமான சிலை இருக்கிறது. 240 அடி நீளமும் 66 அடி உயரமும் கொண்ட இச்சிலை சிங்க உடலும் ராஜாளி, செம்மறியாடு, மனிதன் போன்ற ஏதோ ஒன்றின் தலையும் கொண்டிருக்கும்.

965டன் எடையுள்ள ஸ்பிங்ஸ் எகிப்தியரின் வணக்கத்துக்குரிய கடவுளாக விளங்கியது.

மூஸா (அலை) காலத்துக்கு முன்பும் பின்பும் கூட கோமாதா எகிப்தியர்களின் குலமாதாவாக வணங்கப்பட்டிருக்கிறது. பசுவைக் கடவுளாக்கிய பரம்பரையினர் இவர்கள்.

பாரவோன்கள் காலத்துக்குப் பின் எகிப்து கிரேக்கர்களாலும் ரோமர்களாலும் ஆளப்பட்டிருக்கிறது. அப்போது கிரேக்க ரோம் வணக்க வழிபாடுகள் எகிப்தை ஊடுறுவ ஐரோப்பிய பண்பாடுகள் காப்டிக் மக்களைக் கவர்ந்திருக்கிறது.

எகிப்தியர் வணங்கிய சிலைகளில் நிர்வாண நிலை இல்லை. கிரேக்க, ரோமர்களின் சிலைகள் நிர்வாணமாக இருந்தன.

எகிப்து மக்களில் மூன்றில் இரண்டு பங்கினர் கிறிஸ்துவர்களாக காலப்போக்கில் மாறினர். இதற்குக் காரணம் கி.பி. 45இல் செயின்ட் மார்க் எனும் ஈஸா (அலை) சீடர்.

கி.பி. 185 254 காலத்தில் ஒறிஜென் என்பவரும் கி.பி. 250 இல் எகிப்தில் தோன்றிய புனித அந்தோணியாரும் கிறிஸ்தவம் எகிப்தில் வேரூன்ற காரணமாவர்.

பல தெய்வ வணக்கக்காரர்களாயிருந்த ரோமர்கள் கிறிஸ்துவர்களாக மாறியபோது அவர்கள் ஆட்சி புரிந்த நாடுகளும் கிறிஸ்துவத்தை ஏற்றன.

அபிசீனியா

அரபகத்தின் மேற்கில் செங்கடலுக்கு அப்பால் பரவிக்கிடக்கும் நாடுகள் எகிப்து, சூடான், எத்தியோப்பியா, சோமாலியா ஆகிய நாடுகள். இவற்றில் எத்தியோப்பியாவின் பழைய பெயர் அபிசீனியா.

அபிசீனியா இஸ்லாமிய வரலாற்றோடு பின்னிப்பிணைந்த நாடு. தெற்கே சோமாலியாவிலிருந்து வடக்கே எகிப்துவரை இன்று இஸ்லாமே எழுச்சியோடு வீற்றிருந்தாலும் அன்று அங்கெல்லாம் பழங்குடிமக்களும் கிறிஸ்துவர்களும் வாழ்ந்தனர்.

அபிசீனியாவில் அன்று கிறிஸ்துவம் கோலோச்சிவந்தது. அந்த நாட்டின் மன்னர் நஜ்ஜாஷி எனும் கிறிஸ்துவர்.

கிறிஸ்துவர் அல்லாத அபிசீனிய மக்கள் ஹபஸிகள் என அழைக்கப்பட்டனர். புராதனகால வணக்க வழிபாடுகளைப் பேணிய

பழங்குடி மக்களில் நம்மூர் கழைக் கூத்தாடிகள் போன்றோரும் நாடோடிகளாக வாழ்ந்தனர்.

அரபகத்துக்கு தென் மேற்கே இருக்கும் அபிசீனியாவிலிருந்து ஹபஸிகள் செங்கடலைத் தாண்டியும் சென்று வித்தைகள் காட்டிப் பிழைத்தனர்.

ஏகத்துவக் கருத்தோடு தொடங்கப்பட்ட கிறிஸ்துவம் நாளடைவில் ஈஸா (அலை)வை தேவ மைந்தனாக்கிக் கொண்டாடியது. அதன்பின் தேவன், பரிசுத்த ஆவி, தேவ மைந்தன் என திரித்துவம் பேசி மக்களைக் குழப்பத்தில் ஆழ்த்தியது. இறுதியாக அன்னை மர்யத்தையும் வணங்கும்படிச் செய்தது.

அபிசீனியாவில் திரித்துவக் கொள்கையைப் பின்பற்றிய கிறிஸ்துவர்கள் வாழ்ந்தாலும் ஏகத்துவத்தை இதயத்தில் வைத்தவர்களும் வாழ்ந்தார்கள்.

அபிசீனியாவின் வடக்குப் பகுதிக்குப் பெயர் எரிடேரியா. எரிடேரியா வழியாகத்தான் கி.பி. 615இல் முஸ்லிம்கள் அபிசீனியாவுக்குப் புலம் பெயர்ந்தார்கள். அப்போது அஸாமா இப்னு அப்ஜர் எனும் கிறிஸ்துவ மன்னர் அங்கு ஆட்சி புரிந்து வந்தார். அவர் நஜ்ஜாஷி என அழைக்கப்பட்டார்.

அபிசீனியாவிலிருந்து அரபகத்துக்கு நாடோடிகளாகச் சென்றவர்கள் சிலர் என்றால் அடிமைகளாக விற்கப்பட்டிருந்தோர் பலர் இருந்தனர். இஸ்லாத்தின் முதல் பள்ளிவாசல் அழைப்பாளராக விளங்கிய பிலால் (ரலி) அடிமையாகச் சென்றவர் தான்.

ஆப்பிரிக்கக் கண்டத்தில் குறிப்பிடத்தக்க இரு நாடுகளில் ஒன்று அபிசீனியா. அங்கு 80க்கு மேற்பட்ட இனத்தினர் இன்றும் வாழ்கின்றனர். இந்நாடு மனிதக் குலத் தொட்டில் எனக் கருதப்படுகிறது. ஆர்மினியாவுக்கு அடுத்ததாக உலகின் இரண்டாவது பழைமையான கிறிஸ்துவ நாடு இது.

கி.மு. பத்தாம் நூற்றாண்டில் தோற்றுவிக்கப்பட்ட அபிசீனியாவில் கி.மு. எட்டாம் நூற்றாண்டில் தமத் ராஜ்யமும் கி.மு. முதல் நூற்றாண்டில் அக்சம் ராஜ்யமும் அமைந்திருந்தன.

அக்சம் என்னும் தலைநகரை பைபிள் ‘மவுண்ட் ஜியோன்’ எனக் குறிப்பிடுகிறது.

அபிசீனியாவின் கிறிஸ்துவ ஆட்சி அரபகத்தின் தென்பகுதியான

யெமன் பிரதேசத்தை ஆண்டிருக்கிறது. சன்ஆ எனும் பட்டணம் அதன் தலைநகராக இருக்க அப்ரஹா என்பார் ஆட்சியாளராக இருந்தார். இவர்தான் யானை முன் செல்ல குதிரைப் படை கொண்டு கஃபாவைத் தாக்கப் புறப்பட்டவர்.

இந்துஸ்தானின் தமிழகத்தில்**...**

இலங்கையில் ஆதம் மலை இருப்பதும் இலங்கைக்கும் இந்தியாவுக்கும் இடையே ஆதம்பாலம் கடலில் கிடப்பதும் தமிழ்ப் பிரதேசங்களுக்கும் ஆதம் (அலை) வகையறாவுக்கும் இருந்த தொடர்பை மெய்யாக்குவதுபோல் உள்ளது.

ஆதம் (அலை) உலகில் தம் துணைவியாரோடு இறக்கப்பட்ட இடம் லெமூரியா கண்டமென்னும் தமிழ் நிலமென்றும் அவர்கள் பேசிய மொழி தமிழ்தான் என்றும் சிலர் சொல்வது உண்மைதான்.

அண்மையில் பொறியாளர் எம்.ஆர். எம். முகம்மது அனீபா எழுதி வெளியிட்ட ‘முதன் மொழி தமிழ்’ எனும் ஆய்வு நூலில் பல சங்கதிகள் கிடைக்கின்றன. அதில் ஆங்கிலம், அரபு, ஜப்பான் என உலக மொழிகள் பலவற்றையும் தமிழ்ச் சொல்லோடு ஒப்பிட்டுள்ளமை செம்மொழி தமிழ்தான் உலகின் முதன் மொழி என்பதை நிறுவுகிறது. மேலும் சிலர் இதே கருத்தைக் கூறியுள்ளனர்.

இவை மட்டுமின்றி ஆதம் (அலை) மகன்களான ஆபில் காபில் கல்லறைகள் ராமேசுவரத்தில் காணப்படுவதும் கவனத்துக்குரியது.

எனவே, ஆதம் (அலை) வாழ்ந்த தமிழ் தேசம் ஏகத்துவத்தை (தவ்ஹீதை) ஏற்றிருந்தது உண்மையாகிறது.

ஓரிறைக் கொள்கையை ஏற்று நடந்தவர்கள் காலப்போக்கில் இயற்கையை சூரியனை, சந்திரனை வணங்கினர். என்றாலும் பலர் ஏகத்துவக் கொள்கையிலும் சிலர் வணங்காதவர்களாகவும் வாழ்ந்துள்ளனர். தொடக்க கால தமிழகத்தில் சிலை வணக்கம் என்பது கிடையவே கிடையாது. கோயில்களும் கிடையாது.

ஆரியர்கள் வந்தபின்தான் தமிழகத்தில் சிலை வணக்கம் இறக்குமதியானது. அவர்கள் சிவனோடும் பெருமாளோடும் அரசர்களை தஞ்சம் அடைந்தனர். அரசர்கள் ஆரியர்களைத் தஞ்சம் அடைந்தனர்.

அரண்மனையின் உள்ளே சிலை வைக்கப்பட்டது. அரண்மனை என்றால் கோவின் இல்லம். ஆகவே, சிலை வைக்கப்பட்ட இடம் கோயில் என அழைக்கப்பட்டது. பின்னர் கடவுள் சிலை அமைக்க

தனியிடம் தேர்ந்தெடுக்கப்பட்டாலும் பழையபடியே அது கோயிலென அழைக்கப்பட்டது.

நாகர்கோவிலில், நெல்லையில், மதுரையில், திருவரங்கத்தில், மலைக்கோட்டையில், தஞ்சையில், காஞ்சியில் பெரும் பெரும் கோயில்கள் கட்டப்பட்டன. அவற்றில் பெரிய தெய்வங்கள் சிலைகளாக நிறுத்தப்பட்டன. சிறு சிறு ஊர்களில் தேவையான அளவுக்கு கோயில்கள் அமைக்கப்பட்டன.

சிற்றூர்களில் வீரர்களுக்காக அமைக்கப்பட்ட நடுகற்கள் காலப்போக்கில் குல தெய்வங்களின் கோயில்களாக மாற்றப்பட்டன.

குல தெய்வங்கள் மட்டுமே வணங்கப்பட்ட ஊர்களில் புதிதாக சிவன், பெருமாள், அம்மன் கோயில்கள் உண்டாக்கப்பட்டன. வடக்கிலிருந்து இறக்குமதியான மகாபாரதக் கதையும் ராமாயணக் கதையும் உண்மை வரலாறு போலவே சொல்லப்பட்டதால் இரு கதைகளின் பாத்திரங்களும் தெய்வங்கள் ஆனார்கள்.

முக்கிய பாத்திரங்களான பாஞ்சாலியும் ராமனும் கிராமக் கோயில்களிலும் அமரக் காரணமானவர்கள், கதை சொல்லிகளும் கதாகாலச்சேபக்காரர்களும் ஆவர்.

கோயில்களை ஸ்தாபித்து நிலை நாட்டத் தொடங்கிய ஆரியர்களால் பிராமணீயம் உயர்வான இடத்தை அடைந்தது. ஆரியர்கள் எல்லோரும் உயர்வான பீடத்தில் வைக்கப்பட்டனர். மன்னர்கள் கூட அவர்களுக்கு பாத பூஜை செய்தனர். மன்னர்களின் மகுடங்கள் நிலைக்க ஆரியர்களின் ஆசி தேவைப்பட்டது.

ஆரியர்கள் கேட்காமலேயே விவசாய பூமிகளும் இருப்பிடங்களும் வழங்கப்பட்டன. வேலிக்கணக்கில் அல்ல, நிலங்கள், ஊர்க்கணக்கில் வழங்கப்பட்டன. பிரம்மதேசம், சதுர்வேதிமங்கலம், முன்னூற்றுமங்கலம், அறுநூற்று மங்கலம் என ஊர்கள் வழங்கப்பட்டன. சேற்றில் கால்வைக்காமலேயே அவர்களுடைய குதிர்கள் நிறைந்தன. வியர்வை சிந்தாமலேயே அவர்களுடைய இல்லக் கிழத்திகள் நகை நட்டு பூட்டினர்.

தர்பப்பைப் புல்லேந்திகள் செங்கோலேந்திகளை ஆடாமல் ஆடவைத்தனர். கோயிலும் குருக்களும் நாட்டின் கதவும் திறவுகோலும் ஆயினர்.

இந்த நிலையில் கி.மு. ஆறாம் நூற்றாண்டில் சமணம் விந்தியத்தைத் தாண்டி வந்து மதுரை நாகமலை வரை வந்தமர்ந்தது.

மகாவீரர் நிறுவிய சமணமும் அவருடைய தமிழ் நண்பர் மற்கலி என்பார் நிறுவிய ஆசீர்வகமும் தமிழகத்தின் குன்றுகளில் படுக்கைகள் அமைத்து மக்களிடையே பழைய பக்தியைப் புரட்டிப்போட்டு புதிய பாதையைக் காட்டின.

பொறுப்பார்களா, காலாதி காலமாக பக்தியின் மூலம் பொன்னையும் பொருளையும் குவித்தவர்கள். வர்ணாசிரமம் மூலம் சாதிகளையும் சனாதனத்தையும் பேணியவர்கள் சமணத்தையும் ஆசீர்வகத்தையும் தமிழகத்தில் சம்மணம் போட்டு உட்கார விடுவார்களா?

சமணத்தை ஏற்றவர்களை சங்கடப்படுத்த சதி செய்த வேதியர்கள் சூழ்ச்சி வலை விரித்தனர். ஆயிரக்கணக்கான சமணர்களை மதுரையில் கழுவேற்றும் நாடகம் நடத்தி முடிக்கப்பட்டது. ஆன்மிகவாதிகள் அராஜகவாதிகள் ஆயினர். சைவம் சைவர்களை வார்த்தெடுக்கவில்லை. அது சண்டியர்களை வார்த்தெடுத்தது.

சமணம் சாய்க்கப்பட்டபின் கி.மு. மூன்றாம் நூற்றாண்டில் தமிழகத்துக்குள் நுழைந்த பவுத்தமும் சனாதனத்தின் சண்டித்தனத்தால் திக்கு முக்காடியது.

நாகைப்பட்டினத்து பவுத்தக் கோயில் கொள்ளையடிக்கப்பட்டது. கொள்ளையடித்தவருக்கு ஆழ்வார் பட்டம். என்ன நீதி என்கிறீர்களா? இதுதான் நீதி! பக்தியென்னும் அத்தரை நெருப்பு நீராக (அஞிடிஞீ) மாற்றிய கயமைத்தனம்.

கொள்ளைக்காரராகச் செயல்பட்டவர் யார் தெரியுமா? அவர்தான் திருமங்கை ஆழ்வார். இவரைப்போல் சிலர் பவுத்தக் கோயில்களைச் சிதைத்து பவுத்தர்களைக் கொன்றொழித்தனர்.

பவுத்தத்தையும் சமணத்தையும் அழித்து சமரில் வென்றவர்கள் தமிழகத்தில் கோயில்களை அதிகமாக அமைப்பதில் வெற்றி பெற்றனர்.

சிவனும் பெருமாளும் இன்ன பிற கடவுள்களும் போதாதென்று பல்வேறு தேவதைகளையும் சிலைகளாக்கி வைத்தனர்.

இயற்கை அழகை முருகனாக உருவகப்படுத்திய தமிழர்களை ஆரியர்கள் படிப்படியாக மாற்றினர். முருகனுக்கு சிவனைத் தந்தையாக்கினர். இதுபோதாதென்று விநாயகரை அண்ணனாக்கினர்.

மகேந்திர பல்லவனின் தளபதி சாளுக்கியரை வென்றபோது வாதாபியிலிருந்து கொண்டு வந்த விநாயகர் சிலை தமிழகக்

கோயில்களில் உட்கார வைக்கப்பட்டு ‘ஆதி முதல்வன்’ ஆக்கப்பட்டது, கண்ணுக்கெதிரிலே நடந்த கட்டுக் கதைகள்!

ஆன்மிகவியல், அரசியல் ஆகிய இரண்டும் சிலர் கைகளில் இருக்க சமூகவியல் எப்படியிருக்கும்? உடன்கட்டை ஏறுதல் தமிழகத்தில் இல்லை என்றாலும் பால்ய விவாகம், விதவை ஒறுப்பு, தேவதாசிகள் எனப் பல்வேறு தீமைகள் உருவாகின.

சேர, சோழ, பாண்டிய மன்னர்களின் ஆட்சிக் காலத்தில்தான் அண்ணலார் மக்காவில் பிறந்து தம் பணியைத் தொடங்கினர் எனக் கணிக்க முடிகிறது.

சேரமான் பெருமாள் ஆட்சியை தன் மருமக்களிடம் ஒப்படைத்துவிட்டு மக்காவுக்குப் புறப்பட்டது இஸ்லாமிய வருகையின் தொடக்கத்தில்தான்.

மேற்கிலிருந்து கிழக்குவரை உலகமே இருட்டில் இருந்தபோதுதான் உலகின் நடுமையத்தில் இஸ்லாமியப் பேரொளிப் பிழம்பு எழுந்தது.

## அரபு மையம் இருண்டு கிடந்தது

அபிசீனியா, எகிப்து, பாரசீகம், சிரியா, இந்துஸ்தானின் தமிழகம் என அரபகத்தைச் சூழ்ந்துள்ள நாடுகளில் படிந்திருந்த இருளைப் பற்றி படித்த நீங்கள் இங்கே தீபகற்பத்தில் தீப்பிழம்பு எழுவதற்கு முன்னுள்ள நிலைமைகளைக் காணுங்கள். கரி பூசிக் கொண்ட அரபகத்தின் காட்சிகளைப் பாருங்கள்.

கலப்படக் கலாச்சாரம்

கலப்படப் பொருளைப்போல் காணப்பட்ட அரபக மக்களின் மூலாதாரத்தைப் பிரித்துப் பார்த்தால், அவர்கள் இபுராகீம் (அலை), இஸ்மாயீல் (அலை), நூஹ் (அலை), மூஸா (அலை), ஈஸா (அலை) போன்றவர்களின் ஏகத்துக் கொள்கைக்காரராக இருந்து அகம் மாறியவர்களாக இருப்பார்கள்.

இவர்கள் மூஸா (அலை), ஈஸா (அலை) கொள்கையைப் பேணினாலும் காலப்போக்கில் யூதர், கிறிஸ்துவர் எனும் பெயரோடு நிறம் மாறியவர்களாக இருப்பார்கள்.

குறைசியர்போல் சில இனத்தார் வழி மாறியவர்களாக இருப்பார்கள். நாட்டுப்புற அரபிகள் பல தலைமுறைகளாக சிலைவணங்கிகளாக இருப்பார்கள். இன்னும் சில இனமக்கள் இயற்கை

வணங்கிகளாக இருப்பார்கள்.

மொத்தத்தில் அரபு மக்கள் ஏகத்துவத்தை இழந்தவர்களாகவே இருந்தார்கள்; இறைவழியை மறந்தவர்களாகவே வாழ்ந்தார்கள்.

குழுக்களாக பலர்; அடிமைப் புழுக்களாக சிலர். சீறும் சிறுத்தைகளாக சிலர்; அவர்களின் பரத்தைகளாக பலர்.

அரசாட்சியும் இல்லை, அங்கே மனசாட்சியும் இல்லை. கவிதை இருந்தது; அதில் கருத்துகள் இல்லை. கதைகள் இருந்தன; அவற்றில் கருப்பொருள் இல்லை. மனிதர்கள் இருந்தனர்; அங்கு மாண்புகள் இல்லை.

குலங்களும் கோத்திரங்களும்

அரபகம் முழுவதும் அரபுமொழி பேசப்பட்டாலும் அங்கு வாழ்ந்தவர்கள் மொழியால் இணைக்கப்படவில்லை. பல்வேறு இனக்குழுக்களாக வாழ்ந்தார்கள். ஆங்காங்குள்ள குழுக்கள் தனித்தனியாக அவர்களுக்குள் ஒரு தலைவரை ஏற்றுக் கொண்டிருந்தன.

ஒரு குழு இன்னொரு குழுவோடு போர் செய்து பொருள்களைக் கொள்ளையடித்ததோடு கால்நடைகளையும் கவர்ந்து வந்தது. அதுமட்டுமல்ல, அவர்கள் பெண்களைச் சிறைசெய்து கொண்டுபோய் பெண்டாளவும் செய்தார்கள்.

இதனால்தான் அரபுக்கள் பெண்களைப் பெறுவதிலும் வளர்ப்பதிலும் தயக்கம் காட்டினார்கள். கொள்ளையடிப்பது குலத்தொழில் ஆனபோது சில குழுக்களுக்கு கொலை செய்வதும் வாடிக்கையானது.

பாரசீகத்திலும் எகிப்திலும் அபிசீனியாவிலும் மன்னராட்சி பெரும் நிலப்பரப்பை ஆண்டபோது அண்டை நாடான அரபகத்தில் அத்தகைய ஆட்சியில்லை. பொதுவான அரசியல் லட்சியம் அங்கே நடைமுறைக்கு வரவில்லை.

வீரர்கள் இருந்தார்கள்; அவர்களின் வீரம் கொள்ளையடிக்கப் பயன்பட்டது. வணிகர்கள் இருந்தார்கள்; அவர்களும் கொள்ளையருக்குப் பயந்தே வாழ்ந்தார்கள். கவிஞர்கள் இருந்தார்கள்; அவர்களின் கவிதை கள்ளைப் பற்றியும் காமத்தைப் பற்றியும் மட்டுமே பேசின. கதை சொல்லிகள் இருந்தார்கள்; அவர்கள் தேவதைகளைப் பற்றியும் மூடக்கருத்துகளைப் பற்றியும் மூச்சுவிடாமல் மொழிந்தார்கள். கலைஞர்கள் இருந்தார்கள்; அவர்கள் வயிற்றுப் பிழைப்புக்காகவே

வாழ்க்கையை அர்ப்பணித்தார்கள்.

அண்டைநாடுகளில் வளர்ந்திருந்த மதங்களைப்போல் ஒரு மதம் அரபகத்தில் அப்போது இருந்ததில்லை. குலங்களும் கோத்திரங்களுமே கோலோச்சிவந்தன.

ஹனீப்கள்

மது அருந்துவோரிடையே மதுவைக் கூட கண்ணால் பார்க்காதவர்கள், சூதாடுவோரிடையே சூதையே வெறுப்பவர்கள், சிலை வணக்கக்காரர்களிடையே சிலை வணக்கத்தை மறுப்பவர்கள், பெண்களைப் போகப் பொருளாகக் கருதியவர்களிடையே அவர்களைப் பேரருளாகக் கருதியவர்கள், மாண்புகளை மதிக்காதவர்களிடையே மானுடப்பண்புகளை உறுதியாக்கியவர்களும் இருந்தார்கள்.

யார் அவர்கள்?

பல நூற்றாண்டுகள் கடந்திருந்தாலும் இபுறாகீம் (அலை) அவர்களின் கொள்கையைப் பின்பற்றி வந்தவர்கள் அவர்கள்! எச்சமா மிச்சமா அவர்கள்? இல்லை, உலகின் உச்சநிலைக் கோட்பாட்டாளர்கள், உயர்ந்த மனிதர்கள்.

மக்காவில் வாழ்ந்த அவர்களில் மிக முக்கியமானவர்கள் உமர் பின் துபைல் உடைய மகன் சைத், நவ்பல் உடைய மகன் வர்கா, ஹாரிசுடைய மகன் உஸ்மான், ஜஹ்ஸ் உடைய மகன் உபைதா.

‘ஏகத்துவ ஆலயத்தில் ஏன் நீங்கள் சிலைகளைக் கடவுள்களாக்கிக் கொண்டீர்கள்? எப்படித்தான் நீங்கள் நரபலிகள் கொடுக்கிறீர்கள்? எங்கே இதைக் கற்றுக் கொண்டீர்கள்? ஆண்களும் பெண்களும் நிர்வாணமாக கஅபாவை வலம் வருவதை எப்போது நிறுத்துவீர்கள்!’ என இபுறாகீம் (அலை) வழிமுறையைப் பின்பற்றியவர்கள் அரபு மக்களைக் கேட்டார்கள்.

அரபுக்கள் பெண் பிறப்பை அழிக்க முயன்றபோது இபுறாகீம் (அலை) வகையறாக்கள் சிறுமிகளைப் பெற்று பேணிவளர்த்தார்கள். அவர்கள் வாழ வழிவகுத்தார்கள். ஒருவேளை பெற்றோர் வந்து கேட்டால் மறுக்காமல் அவர்களை நல்லவிதமாக ஒப்படைத்தார்கள்.

அரபு மக்களின் வழிகேட்டை உணர்ந்த இபுறாகீம் (அலை) வழிவந்தோர் சிலை வணக்கத்தையும் இணைவைத்தலையும் எதிர்த்துப் பேசினர். உண்மையான மார்க்கத்தை ஓயாது எடுத்துரைத்தனர். என்றாலும் தோல்விதான்...

நூஹ்வின் கப்பலேறிவந்தவர்கள்

நூஹ் (அலை) காலத்தில் வணங்கப்பட்ட கற்சிலைகள் பலநூறு ஆண்டுகளுக்குப்பின் மீண்டும் அரபகத்தில் ஆங்காங்கு முளைத்திருந்தன.

சிலை வணங்கிகள் எல்லாரும் பிரளய வெள்ளத்தில் அழிக்கப்பட்டுவிட்டனர். ஏகத்துவவாதிகளே கப்பலில் ஏற்றப்பட்டு காப்பாற்றப்பட்டனர். இவ்வாறான நிலையில் எப்படி பலநூறு ஆண்டுகளுக்குப்பின் அரபகத்தில் அச்சிலைகள்?

ஏகத்துவத்தை ஏற்றுக் கொண்டவர்கள் காப்பாற்றப்பட்டாலும் அவர்களின் மூளையிலே பழைய சிலைகளின் நினைவுகள் அகலாமலேயே இருந்து வந்திருக்கிறது. அக்கனவுச் சிலைகள் பரம்பரைக் கதைகளாக சொல்லப்பட்டு பல தலைமுறைகளுக்கப்பால் அவை நனவுச்சிலைகளாகி உள்ளன.

‘வத்’ என ஒரு சிலை. ‘வத்தம் அபம்’ இரு தந்தையர் எனும் அச்சிலை மல்யுத்த வீரனைப் போன்றது. அரபகத்தின் வடக்குப் பகுதியில் ‘தூமத்துல் ஜந்தல்’ எனும் இடத்தில் அச்சிலையை வைத்து பெரிய கோயிலை நிர்மாணித்திருந்தார்கள். அதை குஸாஆ கோத்திரத்தைச் சார்ந்த கிளையான பனூகலப் இப்னு வப்ரா வகையறா குல தெய்வமாகக் கும்பிட்டு வந்தார்கள்.

‘ஸுவாஃ’ என ஒரு சிலை. அழகிய மங்கையின் வடிவத்திலிருந்த அச்சிலைக்கு ‘யன்பூஃ’ பகுதியைச் சேர்ந்த ருபாத் எனும் இடத்தில் கோயில் எழுப்பியிருந்தார்கள். ஹுகைல் கோத்திரத்தார் அச்சிலையைக் குலதெய்வமாகக் கொண்டாடினார்கள்.

‘யஃகூஸ்’ என ஒரு சிலை. சீறியெழும் சிம்ம வடிவச் சிலை அது. யெமனிற்கும் ஹிஜாஸ் மாகாணத்துக்கும் இடையில் ஜுரஸ் எனும் இடத்தில் அதற்காக கலைவடிவமிக்க கோயிலைக் கட்டியிருந்தார்கள்.

தைஃ கோத்திரத்தின் அன்உம் குலத்தாரும் முராத், பனூகுதைப் குலத்தாரும் முஜ்திஹ் கோத்திரத்தின் சில கிளையாரும் தங்கள் குல தெய்வமாக சீறும் சிம்மத்தைச் சேவித்தார்கள்.

‘யஊஃக்’ என ஒரு சிலை. குதிரை வடிவத்திலிருந்த இதை ஹம்தான் பகுதியில் வாழ்ந்த ஹம்தான் கோத்திரத்தைச் சார்ந்த ஃகய்வான் பிரிவினர் குலதெய்வமாகக் கொண்டிருந்தனர்.

‘நஸ்ர்’ என ஒரு சிலை. பருந்தின் வடிவத்திலிருந்த அச்சிலை

ஹிமைர் பகுதியில் வாழ்ந்த ஹிமைர் கோத்திரத்தைச் சார்ந்த குலாஃ கிளையாரால் குல தெய்வமாக ஆக்கப்பட்டிருந்தது. பல்ஃகா எனும் இடத்தில் அமைந்த இக்கோயிலை ஆமிர் குலத்தாரும் வணங்கிவந்தனர்.

அல்வத், அல்ஸுவாஃப், அல் யஃகூஸ், அல் யஊஃக், அல் நஸ்ர் எனப் பெயர் சூட்டி வாழ்ந்த அவர்கள் நடந்துவந்த ஏகத்துவப் பாதையை முழுமையாக மறந்தே வாழ்ந்தனர்.

நூஹ் (அலை) காலத்திலிருந்த சிலை வணக்கம்தான் அரபகத்திலும் பலநூறு ஆண்டுகளுக்குப்பின் மீண்டும் தோன்றி வளர்ந்திருந்தது.

> நூஹ் கூறினார்: என் அதிபதியே! இவர்கள் என் பேச்சை நிராகரித்துவிட்டார்கள். மேலும் இவர்கள் சில(தலைவ)ர்களைப் பின்பற்றியுள்ளார்கள். அந்தத் தலைவர்களுக்குத் தங்கள் செல்வமும் பிள்ளைகளும் பேரிழப்பைத் தவிர வேறு எந்தப் பயனையும் ஏற்படுத்திக் கொடுக்கவில்லை. இவர்கள் பெரியதொரு சூழ்ச்சி வலையை விரித்துவைத்திருக்கின்றார்கள். ‘உங்களுடைய கடவுள்களை விட்டுவிடாதீர்கள். வத், ஸுவாஉ, யஃகூஸ், யஊஃக் மற்றும் நஸ்ர் ஆகியவற்றை விட்டுவிடாதீர்கள்’ என்று இவர்கள் கூறினார்கள். இவர்கள் பலரை வழி கெடுத்திருக்கின்றார்கள்.

**(திருக்குர்ஆன் 71: 2124)**

நூஹ் (அலை) பொறுமையிழந்து இதைக் கூறவில்லை, தம் அழைப்புப் பணி முற்றிலும் நம்பிக்கையற்றுப் போய்விட்டதே என்பதால் கூறினார்.

நூஹ் (அலை) மக்கள் வணங்கிய நடுகல்களும் கோயில்களும் அரபுகளாலும் வணங்கப்பட்டன. இஸ்லாத்தின் தொடக்க காலத்தில் இந்தக் கடவுள்களின் கோயில்கள் ஆங்காங்கே இருந்தன.

யூதர்கள்

கிறிஸ்தவ, இஸ்லாமிய சமுதாயங்களுக்கு முந்திய சமுதாயம் யூத சமுதாயம். அவர்கள்தான் ஏகத்துவத்தை எடுத்துரைத்திருக்க வேண்டும்; அவ்வாறு எடுத்துரைக்க வருகின்ற இறைத்தூதர்களை ஏற்றுப் போற்றியிருக்கவேண்டும்.

ஆனால், அவர்கள் கொள்கைகளைப் புறந்தள்ளியவர்களாகவும் பல்வேறு குற்றங்களைப் புரிந்தவர்களாகவும் மாறிவிட்டிருந்தனர். அவர்கள் செய்த பெருங்குற்றம் இறைத்தூதர்களைக் கொலை செய்தது.

இறைவனின் செல்லப்பிள்ளைகளெனச் சொன்னவர்கள் சொர்க்கத்தின் சொந்தக்காரர்கள் எனப் பெருமையோடு நடந்தனர். அவர்களுடைய மார்க்க அறிஞர்கள் உலகியல்வாதிகளாகவும் சந்தர்ப்பவாதிகளாகவும் இருந்தனர். அவர்கள் செல்வந்தர் களுக்கு சேவை புரிந்தும் ஆட்சியாளர்களின் அடிவருடியும் மார்க்கச் சட்டங்களை மாற்றிக்கொண்டே இருந்தனர். மன இச்சைக்கு மண்டியிட்ட அவர்கள் இறைவனை இரண்டாவது இடத்தில் வைத்தனர்.

மார்க்க அறிஞர்கள் 14 காரட் தங்கமென்றால் அவர்களைப் பின்பற்றுபவர்கள் எவ்வண்ணம் 24 காரட்டாக இருப்பார்கள்.

மார்க்க அறிஞர்களிடையே ஏற்பட்ட பிளவு யூத மக்களையும் பிளந்தது. இருவேறு அணிகளாகி சண்டையிட்டுக் கொண்டார்கள். காசு, காசு என்று அலைந்தவர்கள் வட்டித் தொழிலால் வளர்ந்தார்கள்.

தங்களுக்குள் சண்டையிட்டுக் கொண்டவர்கள் பிற சமுதாயங்களையும் சண்டையிட வைத்தார்கள்.

அவர்களிடம் செல்வம் செழித்தபோது ஒழுக்கம் ஒழிந்தது. மண்டை கனத்தபோது மாண்புகள் சிறுத்தன. பகுத்தறிவு மழுங்கியபோது பண்பாடு மறைந்தது. ஏகத்துவக் கொள்கை தள்ளாடியபோது இணைவைப்பு எட்டிப் பார்த்தது.

மூடநம்பிக்கைகள், கட்டுக்கதைகள், தாயத்துகள், கங்கணக் கட்டுகள், மாயமந்திரங்கள், பில்லி சூன்யம், பேய் பிசாசுகள் என மூஸா (அலை) வழித் தோன்றல்கள் வழிமாறி நின்றார்கள்.

அரபகத்தின் பல்வேறு இடங்களில் யூதர்கள் வசித்து வந்தார்கள். வாதில்குரா, கைபர், ஃபதக் போன்ற பிரதேசங்களில் அவர்கள் அதிகமாக வசித்து வந்தனர். யத்ரிப் நகரில் அவர்கள் அவுஸ், கஸ்ரஜ் கோத்திரத்தாரை ஆட்டிப் படைத்து வந்தனர். கல்லாப்பெட்டியை நிரப்ப அவர்கள் மக்களிடம் இல்லாததையும் பொல்லாததையும் எடுத்துரைத்தனர். பனூ கைனுகா, பனூ நளீர், பனூ குரைளா என யூதர்கள் பிரிந்து வாழ்ந்தனர்.

கேசபியன்கள் ஹானாஸ்டிஸ வாதிகள்

பண்டைய யெமன் பகுதியில் விண் மீன்களை வழிபட்ட கேசபியன்கள் வாழ்ந்தார்கள். சூரியனையும் சந்திரணையும் சிலர் வணங்கினர்.

கீழைத்தேய மாயாவாத உருவ வழிபாட்டின் ஒட்டு மதப்

பிரிவினரான ஹானாஸ்டிஸம் கூட அரபகத்தில் புழங்கியது. ஈஸா (அலை)வுக்கு இரு நூற்றாண்டுக்குப் பிறகு கீழைத்தேய நாடுகளில் தோன்றியிருந்த ஒரு சமயக் கோட்பாடு இது. தொடக்க கால கிறிஸ்துவத்தின் ஏகத்துவக் கோட்பாட்டை இது பிற சமயங்களுடன் ஒன்று சேர்த்தது; எனவே இது ஓர் ஒட்டு மதப் பிரிவு.

மேனி சாகிசம்

பிறப்பால் பாரசீகத்தைச் சேர்ந்த மேனி என்பவரால் தோற்றுவிக்கப்பட்ட சமய இயக்கம் மேனிசாகிசம். இறைவன், சாத்தான் இருவருமே அழிவற்றவர்கள், சரிசமமான ஆற்றல் பெற்றவர்கள் என்ற கோட்பாடு கொண்ட இச்சமயமும் அரபகத்தில் பரவியிருந்தது.

கிறிஸ்துவம்

ஒன்றல்ல, இரண்டல்ல, எத்தனையோ சமயப் பிரிவுகள் அரபகத்தில் செடியாகவும் கொடியாகவும் வளர்ந்தன. கிரேக்க அனுபூதியியல், கிறிஸ்துவ நற்செய்தி போன்றவையும் சுதந்திரமாக அரபக மண்ணில் தழைத்து வளர்ந்தன. இறுதியாக வைதீகக் கிறிஸ்துவத்தின் உருவ வழிபாட்டை விட எளிமையான கிறிஸ்துவ நற்செய்தியைப் பின்பற்றி வந்த பழங்குடிகள் பிரிவைச் சேர்ந்த நெஸ்டோரியன் ஜேக்கோபைட்களையும் திருச்சபையோடு முரண்பட்ட யுட்டிகியன்களையும் கத்தோலிக்க வைதீகம் விரட்டியடிக்க அவர்கள் அரபகத்துக்குள் வந்து குடியேறினர். அரபகத்தின் பல்வேறு இடங்களில் கிறிஸ்துவ மடங்களும் அவற்றில் வயது முதிர்ந்த ஞானத் தந்தைகளும் இருந்தனர்.

பழங்குடிமக்கள்

கிறிஸ்துவர்கள் ஆங்காங்கு வாழ்ந்தாலும் பண்டைய அரபுப்பழங்குடி மக்களும் நாடோடிகளும் அரபகத்தில் காலாதிகாலமாக வாழ்ந்து வந்தனர். அவர்கள் தங்கள் பழைய மதங்களிலேயே வாழ்ந்து சிலை வணக்கத்தை மேற்கொண்டிருந்தனர்.

நடுகற்கள், மரஞ்செடிகொடிகள், சூரியன், சந்திரன், நட்சத்திரங்கள், வானவர்கள், ஜின்கள் என அரபுக்கள் வணங்கிவந்த சூழலில் தாம் வணங்குபவையைவிட ஓர் உயர் கடவுள் இருப்பதாகவும் உணர்ந்திருந்தனர். அந்த உண்மையான இறைவனை அவர்கள் கடவுள்களின் கடவுள் என்றோ அனைவரையும் விட பெரிய கடவுள் என்றோ ஏற்றுக் கொண்டிருந்தனர்.

ஆனால் அன்றாட வாழ்வில் அவர்கள் பெரிய கடவுளைப் பற்றிச்

சிந்திக்கவில்லை. சின்னச் சின்ன கடவுள்களையே நம்பி வணங்கி வாழ்ந்துவந்தார்கள். குட்டிக் கடவுள்களைத் திருப்தி செய்துவிட்டால் பெரிய கடவுளைத் திருப்தி செய்ததாகிவிடும் என அவர்கள் நம்பினார்கள்.

அவர்கள் வானவர்களை இறைவனின் பெண்மக்கள் என்று கூறி தேவதைகளாக சிலை வடித்தனர். ஜின்களை இறைவனுக்கு மிகவும் நெருக்கமானவர்கள், நேசத்துக்குரியவர்கள் என நம்பி சிலை செய்து வணங்கினர். தேவதைக் கதைகளும் ஜின் கதைகளும் நாடு முழுதும் புழங்கின. அவற்றைப் பற்றிய பாடல்கள் இசையோடு பாடப்பட்டன.

சண்டைகளும் போர்களும்

குட்டிக் கடவுள்களே அரபுச் சமுதாயத்தைக் கூறுபோடும் காரணமாகின. கூறு கூறான குழுக்கள் வணக்க வழிபாடுகளில் வேறுபட்டு சீர்கெட்டு, தமக்குள் சண்டையிட்டுக்கொண்டன. சிறு காரணமிருந்தால் போதும் சண்டை தொடங்கிவிடும். அச்சண்டை வன்மத்தோடு பரம்பரை பரம்பரையாகத் தொடரும். அரும்பு மீசையில் தொடங்கிய சண்டை நரை மீசை வரை முடியாது.

சண்டைகள் எல்லாம் மதுவால் மூட்டப்பட்டன. வயிற்றில் தீ மூட்டிய மது நெஞ்சில் பகைத்தீ மூட்ட நேரமாகவில்லை. நெஞ்சத்தீ எரிந்து சண்டை மூட்ட மானுடப் பண்பாடு தீய்ந்தது.

தீயவை தீய பயத்தலால் தீயவை தீயினும் அஞ்சப்படும் எனத் தெரியாதவர்கள் தீயவற்றைப் போற்றினார்கள்.

தீய வாழ்க்கை

வட்டி வாங்கல், கொலை, கொள்ளை, திருட்டு, வழிப்பறி, வன்மம், விபச்சாரம், ரத்தம் சிந்தல் ஆகியவை அவர்களுக்குத் தீயவையாகத் தெரியவில்லை. தேவையுள்ளவையாகத் தெரிந்தன.

பெண்கள் போகப் பொருளாகத் தெரிந்தனர். கணக்கற்ற மனைவியர், மனைவியரால் பிணக்கங்கள். பிள்ளை பெறும் எந்திரமான பெண் பெற்றெடுக்கும் பிள்ளை பெண்ணாக இருந்தால் புதை குழிதான் தொட்டில்.

வெட்கம், மானமின்றி வாழ்ந்த மக்கள் ஆண்களும் பெண்களும் இறையில்லம் கஅபாவை நிர்வாணமாக வலம் வந்தார்கள்.

முதல் இறையில்லமான கஅபாவில் 360 சிலைகள் பல்வேறு உருவங்களில் இருந்தன. நாளுக்கொரு சிலையை வணங்கியவர்கள்

ஏகத்துவம் என்ன என்பதைத் தெரியாதே வாழ்ந்தனர்.

குலங்களும் கோத்திரங்களும்

சிலைகள் எத்தனையோ அதைவிட அதிகமான குலம் கோத்திரங்கள் இருந்தன. ஒரு குலத்தில் ஒன்பது கோத்திரங்கள் இருந்தன.

அப்துல்கைஸ், அஷ்அரீ, முளர், பனூதமீம், தய்யி, பனூ ஹனீஃபா, தவ்ஸ், ஹிம்யர், பனூலக்ம், பனூ பலீ, பனூ ஜுதாம், பனூ கல்ப், பனூ குளாஆ, பனூ முஸைனா, பனூ ஜுஹைனா, பனூ அசத், பனூ கத்பான், பனூ கலைப், பனூ ஆமிர், பனூ கலைம், பனூ குஸாஆ ஆகியோர் ஆங்காங்கு வாழ்ந்தனர்.

நஜ்ரான் பகுதியில் பெருமளவில் கிறிஸ்துவர்கள் வாழ்ந்துவந்தார்கள்.

குறைஷிகளே பெருமளவில் மக்காவில் வாழ்ந்துவந்தார்கள். அவ்ஸ் கஸ்ரஜ் கோத்திரத்தார் அதிகமாகவும் கிறிஸ்துவர் யூதர் குறைந்த அளவிலும் யத்ரிபில் வாழ்ந்து வந்தார்கள்.

கறுப்பு நிலாக்காலம்

உலக வரைபடத்தைப் பார்த்தால் அரபுத் தீபகற்பம் அமைந்துள்ள இடம் உலகத்தின் மையப் புள்ளியில் இருப்பது புரியும், அந்த மையப் புள்ளியை வைத்துத்தான் அன்றைய உலக வர்த்தகம் இயங்கியது.

அரபுத் தீபகற்பத்தின் தெற்குப் பகுதியான யெமன் அபிசீனியாவின் ஆளுகைக்கு உட்பட்டிருந்தாலும் அரபகம் எவரின் ஆட்சியின் கீழும் அடிமைப்பட்டுக் கிடக்கவில்லை.

மக்கா நகர் ஆட்சித் தலைநகராக விளங்காவிட்டாலும் ஆன்மிகத் தலைநகராக விளங்கியது. அரபுக்கள் பல்வேறு குலங்களாகவும் கோத்திரங்களாகவும் வாழ்ந்தாலும் பல்வேறு சிலைகளையும் சித்திரங்களையும் வணங்கினாலும் அவர்கள் எல்லாரும் மக்காவிலுள்ள கஅபாவை வலம் வருவதில் ஒன்றுபட்டிருந்தார்கள்; ஒரே மொழி பேசினார்கள். குறைஷியர்கள் ஆன்மிகத் தலைமை பீடத்தில் இருந்தார்கள்.

ஆங்காங்குள்ள குலங்களும் கோத்திரங்களும் தமக்குள் ஒரு தலைவரைத் தெரிவு செய்து கொண்டு செயல்பட்டாலும் அத்தலைவர்கள் ஆட்சியாளராக விளங்கவில்லை. ஒருவருக்கொருவர் சண்டையிட்டுக்கொண்டு பொருள்களையும் கால்நடைகளையும்

கொள்ளையடித்தனர்; மக்களைச் சிறைப்பிடித்தனர்.

ஒற்றுமை அவர்களிடையே மலரவில்லை. சண்டைக்காரர்களாகவே வாழ்ந்தார்கள்.

என்றாலும் சில குலங்கள் ஒப்பந்தங்கள் செய்துகொண்டு வாழ்ந்தனர். குறைஷியர் போன்றோர் வணிகத்திலும் கொடிகட்டிப் பறந்தார்கள். அக்காலத்திய மிகப் பெரிய சந்தையான யெமனிலும் சிரியாவிலும் அவர்கள் பெரும் வணிகர்களாகத் திகழ்ந்தார்கள்.

இரு சந்தைகளுக்கும் மையப் புள்ளியாக மக்கா இருந்தது. மக்காவிலிருந்து புறப்பட்ட ஒட்டகங்கள் யெமனுக்கும் சென்றன. சிரியாவுக்கும் சென்றன.

இந்த நீண்ட வணிகப் பாதையில் மக்கத்து வணிகர்கள் பயணிக்க குறைஷியர்கள் பாதுகாப்பு ஏற்பாடுகளைச் செய்திருந்தனர். ஆங்காங்குள்ள ஊர்களில் வாழ்ந்த அரபுக்குழுக்களோடு செய்துகொண்ட ஒப்பந்தங்கள் அதற்கு உதவின.

சிரியா, யெமனின் மிகப் பெரிய சந்தைகள் தவிர அரபகத்தில் ஆங்காங்கு சில, பெரிய சந்தைகளும் இருந்தன. அவற்றில் சில உக்காஸ், மஜின்ன, ஜில் மஜால் ஆகியவை.

சந்தைகளில் தானியங்கள், பழவகைகளோடு பல்வேறு தட்டுமுட்டுச் சாமான்களும் விற்கப்பட்டன. ஆடுமாடுகள், ஒட்டகங்கள், உயர்குதிரைகளோடு உயரமில்லாத மட்டக் குதிரைகளும் விற்கப்பட்டன.

அங்கு புறாக்கள் போன்ற பறவை வகைகளோடு ராஜாளிகளும் விற்கப்பட்டது, ஆச்சர்யப்படத்தக்கதல்ல, மனிதர்கள் விற்கப்பட்டதுதான் பேராச்சர்யம் தரும் அதிர்ச்சி தரும் சங்கதி. ஆசியர்கள், ஆப்பிரிக்கர்கள் அங்கு சர்வ சாதாரணமாக விற்கப்பட்டார்கள்.

அடிமைகள் விற்கப்பட்ட அதே சந்தையில்தான் சிலர் தம் கருத்துகளைப் பரப்பிட சொற்பொழிவுகள் ஆற்றினர். சில கவிஞர்கள் தம் கவிதைகளைப் பாடி மக்களைக் கவர்ந்தனர்.

கல்விக் கூடங்கள் இல்லாத அரபகத்தில் அறிவு சம்பந்தமான சொற்பொழிவுகளும் கவிதை பாடுதலும் இருந்தது மிக ஆச்சர்யமான செய்தி. அதேபோல் கற்றறிந்த சிலரும் ஞானத் தந்தைகளும் ஆங்காங்கு வாழ்ந்த வரலாறும் வித்தியாசமான சங்கதி.

மேலும் ஒரு வித்தியாசமான சங்கதி பெண்களிடையே இருந்த வணிகர்கள். பெண்ணென்றாலே கேவலமாக மதித்து, பிறந்த பெண் பிள்ளைகளை மிதித்த சமுதாயத்தில் பெண்கள் வணிகர்களாக இருந்ததும் ஓர் ஆச்சர்யமான செய்திதான்! வணிகத்தில் அவர்கள் நேரடியாக ஈடுபடாமல் ஆட்களை வைத்து வணிகம் செய்துள்ளார்கள். பெண்களைக் கீழ்நிலையில் வைத்தவர்களிடையே சுதந்திரமாக வாழ்ந்த பெண்களும் இருந்திருக்கிறார்கள்.

பாடலும் இசையும் அரபுக்களைக் கவர்ந்துள்ளன. எனவே பாவாணர்களும் இசைக் கலைஞர்களும் இருந்துள்ளனர். கூத்து, நடனம் போன்றவை தனிக் கலையாக வளரவில்லையென்றாலும் மணவிழாக்களில் களியாட்டங்களில் கூத்து ஆடப்பட்டுள்ளது. அமைதியான பிரதேசங்களில் வளர்ந்துள்ள கலைகள் அமளிப்பிரதேசமான அரபகத்தில் வளராதது ஆச்சர்யமில்லை. கள்ளிப்பூக்களைப் பார்க்கும் இடத்தில் பாரிஜாதப் பூக்களைப் பார்க்க முடியாதுதான்.

கலை வளராத பூமியில் வீரம் விளைந்து நின்றது. மற்போர், வில்வித்தை, வாள் சண்டை, குதிரையேற்றம் என எல்லாவிதமான வீர விளையாட்டுகளின் விளைநிலமாக அரபகம் இருந்தது.

வேட்டைப் பிரியர்களான அவர்கள் நாய்களையும் ராஜாளிகளையும் விருப்பத்துடன் வளர்த்தனர். அம்புகளை அவர்கள் வேட்டைக்கு மட்டும் பயன்படுத்தவில்லை, ஆரூடம் பார்க்கவும் பயன்படுத்தினார்கள். மந்திரவாதிகளையும் புரோகிதர்களையும் நம்பியே அவர்களின் வாழ்க்கை நடந்தது.

மனிதன் கண்டுபிடித்த மகத்தான ரசாயனப் பொருள் மது. அதை ஒவ்வொரு நாட்டினரும் வெவ்வேறு மூலப் பொருளிலிருந்து உற்பத்தி செய்திருக்கின்றனர். அரபுக்களோ பேரீச்சம் பழங்களையும் கொடி முந்திரிப்பழங்களையும் ஊறவைத்து உற்பத்தி செய்திருக்கின்றனர். அந்தப் பேரீச்சப் பழ பிரவாகம் அரபுக்களை ஆட்டிப் படைத்திருக்கிறது.

மதுவும் மாதுவும் கையில் இல்லாத அரபி சூதாட்டக்களத்தில் சொந்தம் கொண்டாடிக் கொண்டிருப்பான். கொள்ளையையும் தொழிலாகக் கொண்டவன் வட்டியைத் தொழிலாகக் கொண்டதில் ஆச்சர்யமில்லை.

பெண்டாளுவதை ஒரு கலையாகக் கொண்டிருந்தவன் பெண்களைப் போகப் பொருளாகக் கருதினான். பெண் பிறந்தால் குழி

தோண்டிப் புதைத்தவன் பெண் தேவதைகளை வணங்குவதைப் பெருமையாக எண்ணினான். பெண்களைத் துணையாகச் சேர்த்துக்கொள்ளும் வேகத்தைவிட விலக்கிக் கொள்ளும் வேகம் மிக அதிகம். பெண்களுக்கு உரிமை தராதவர்கள் கஅபா ஆலயத்தை வலம் வரும்போது தம்மைப்போல் நிர்வாணமாக வலம் வர அனுமதித்தார்கள்.

போதையிலிருப்பவனுக்குப் பொழுதுபோக என்ன வேண்டும்? ஒன்றும் வேண்டியதில்லை. போதையில் வீழாதவனுக்குப் பொழுதுபோக கதை சொல்லிகள் இருந்தார்கள். அவர்கள் இரவு நேரங்களில் வாய்வழிக் கதைகளை அழகாகவும் அருமையாகவும் சொன்னார்கள். ஆண்களும் பெண்களும் விழித்திருந்து கதைகேட்டு பரவசமடைந்தார்கள்.

360 நாட்களுக்கும் 360 கடவுள் சிலைகளை வணங்கிய அவர்களிடம் அச்சமும் ஆசையுமே மேலோங்கியிருந்தன. அச்சப்பட்டுக் கடவுள்களை வணங்கிய அவர்கள் தம் ஆசைகளை நிறைவேற்ற வேண்டி பிரார்த்தனைகள் புரிந்தார்கள்.

கடவுள்களுக்குத்தான் பயந்தார்களே தவிர நீதி, நேர்மைகளுக்குப் பயப்படவில்லை. கட்டுப்பாட்டில்லாத வாழ்க்கையில் மனம் போனபடி வாழ்ந்தார்கள். கொள்கையோ கோட்பாடோ அவர்களுக்குக் கிடையாது. கண்டதே காட்சி கொண்டதே கோலமென வாழ்ந்தார்கள்.

நாடோடிகளாக வாழ்ந்தவர்கள், ஓரிடத்தில் தங்கி வாழ்வதைப் பற்றிச் சிந்தித்ததே கிடையாது. கூடாரங்களில் தங்கி வாழ்ந்தவர்கள் வீடுகட்டி வாழ்வதைப் பற்றி எண்ணவில்லை.

நடுகல் வணக்கத்தில்தான் அவர்களின் சிலை வணக்கம் தொடங்கியிருக்கிறது. கடவுள் சிலைகள் கட்டடமின்றியே வெட்டவெளியில் நிறுத்திவைக்கப்பட்டிருந்தது. அரபகத்தின் முக்கிய ஆலயமான கஅபா கூட சுற்றுச் சுவர்களோடு தான் கூரையின்றி பல்லாண்டு காலமாக இருந்து வந்திருக்கிறது.

## 3. மக்கா கஅபா குறைஷியர்

### மக்கா கஅபா குறைஷிகள்

ஈராக்கிலுள்ள கன்ஆன் நகரிலிருந்து அந்தத் தாயும் பிள்ளையும் இறைவனின் துணையுடன் தம் பயணத்தைத் தொடங்கினர்.

அப்போது தாயாருக்கு முதிய வயது. தனயனின் வயது 13. தாய் துன்பத்தாலும் கவலையாலும் வாடி இருந்தாலும் திடகாத்திரமாகவே இருந்தார். தனயனுக்கு வயது 13 என்றாலும் இளைஞரைப் போலவே திகழ்ந்தார்.

ஈராக்கிலிருந்து அரபகத்துக்குள் நுழைந்த தாயும் தனயனும் தம் பயணத்தைத் தெற்கு நோக்கி நடத்தினர். பாலைப் பெருவெளி, ஆங்காங்கே சிறுசிறு மலைக் கிராமங்களும் பாலைவனச் சோலைகளும், மணற்குன்றுகளும், சிறுசிறு மலைக் குன்றுகளும், ஒட்டகப் பயணக்குழுக்களும், குதிரைக்காரர்களும், ஒட்டகக்காரர்களும் அவர்களை எதிர்கொண்டனர்.

அவர்கள் செல்லத் திட்டமிடப்பட்டிருந்த இடம் மக்கா எனும் பிரதேசம். அதை அடைய கன்ஆனிலிருந்து ஒட்டகத்தில் புறப்பட்டால் நாற்பது நாட்களுக்கு மேலாகிவிடும். முதிய பெண்மணியும் இளைய மகனும் மக்காவை அடைய கால்களையே நம்பியிருந்தார்கள். அவர்கள் கால்நடையாகவே பயணித்து அரபகத்தின் வடமேற்குப் பகுதிக்கு வந்தபோது ஓர் ஒட்டகப் பயணக்குழுவைச் சந்தித்தார்கள்.

அந்த ஒட்டகப் பயணிகள் மத்தியதரைக்கடலின் முகத்துவாரத்திலிருந்து பொருள்களை வாங்கிக்கொண்டு செங்கடலுக்கு கிழக்கிலுள்ள பாதையில் பயணித்து அரபகத்தின் தென்னகமான ஹலரமவுத் செல்ல வேண்டியவர்கள்.

ஒட்டகப் பயணிகளின் உதவியோடு பயணத்தைத் தொடர்ந்த தாயும் தனயனும் ஆங்காங்குள்ள குக்கிராமங்களில் தங்கிவிட நேரிட்டது.

ஒரு வர்த்தகக் குழுவிடமிருந்து பிரிந்த அவர்கள் மீண்டும் பயணிக்க

வேறொரு வர்த்தகக் குழு துணையானது.

இவ்வாறு பயணித்த அந்தத் தாயும் தனயனும் மக்காவை அடைய இரு மாதங்களாகிவிட்டன.

பக்கா என்றால் குறுநிலம். அந்தக் குறுநிலம் நான்கு பக்கமும் மலைகளால் சூழப்பட்டிருந்தது. அம்மலைகளிடையே மூன்று இடைவெளிகள்; ஒன்று வடக்கே யத்ரிப் நோக்கிச் செல்லும் பாதை, இரண்டு தெற்கே யெமன் நோக்கிச் செல்லும் பாதை, மூன்று மேற்கே செங்கடலை நோக்கிச் செல்லும் பாதை. செங்கடல் செல்ல ஐம்பது மைல் பயணிக்க வேண்டும். அங்கே முகத்துவாரத்தில் ஜித்தா உள்ளது.

யாருமற்ற பக்காவில் தங்கிய தாயும் தனயனும் ஒருவர் முகத்தை ஒருவர் பார்த்துக் கொண்டனர். பாலைப் பெருவெளியும் சூழவுள்ள மலைகளும் மொட்டைக் கட்டையாய்த் தெரிந்த வானமும் அவர்களைப் பார்த்து இரக்கப்பட்டன.

தனயனுக்குத் தாகம் எடுத்தது; தாயிடம் தனயன் கூற தாயிடம் சோகம் பிறந்தது. அவர்கள் தெற்கையும் வடக்கையும் நோக்கினார்கள். வணிகக் குழுக்கள் எவரையும் காணோம். அவர்கள் வந்திருந்தால் தண்ணீர் கிடைத்திருக்கும்; தோல்பை நீர் மெய்ப்பையை நிறைவு செய்திருக்கும்.

தனயன் அவர்கள் மரபுகளின்படி மண் தரையில் படுத்தபடி இறைவனிடம் உதவி கோரிக்கதறினார். தாயோ அருகிலுள்ள ஸபா மர்வா எனும் இரு குன்றுகளில் மாறி மாறி ஏறி நின்று இருகைகளையும் நெற்றியின்மேல் வைத்துத் தூரத்தைத் துழாவினார். யாரையும் காணோம்.

இரு குன்றுகளிடையே ஓடி ஓடிக் களைத்த தாயிடம் வானவர் ஒருவர் செய்தியொன்றைக் கொண்டு வந்து சேர்த்தார். இது ஆதியாகமம் சொல்லும் சங்கதி.

‘பயப்படாதே! பிள்ளை இருக்கும் இடத்திலிருந்தே இறைவன் பிள்ளையின் குரலைக் கேட்டான். நீ எழுந்து பிள்ளையைத் தூக்கி உன் கையினால் பிடித்துக் கொண்டுபோ. அவனை நான் ஒரு பெரிய சமூகமாக்குவேன்.’

இறைவன் ஹாஜராவின் கண்களைத் திறந்தான். அப்போது ஹாஜிரா நீரூற்று ஒன்றைக் கண்டார்.’

இப்போது தாயின் பெயரைப் புரிந்து கொண்டீர்கள்; தனயனின்

பெயர்.... இஸ்மாயில்!

யார் இவர்கள்? இங்கே அவர்கள் ஏன் வந்தார்கள்? அவர்களுடைய நோக்கம் என்ன?

கண்ஆனில் வாழ்ந்த இறைத்தூதர் இபுறாகீம் (அலை) ஓர் இரவு நேரம் இறைவனால் கூடாரத்தை விட்டு வெளியே வரும்படி அழைக்கப்பட்டார். அவரிடம் இறைவன் ‘தோழரே! விண்ணை அண்ணாந்து பாரும். அங்கிருக்கும் விண்மீன்களை உம்மால் எண்ண முடியுமாயின் எண்ணும்’ என்றான். அவர் விண்ணை கண்களைக் கசக்கிக்கொண்டு பார்த்தபோது மீண்டும் அசரீரி ஒலித்தது: உம் சந்ததியும் விண் மீன்களைப்போல் எண்ண முடியாதிருக்கும்.

இதுவும் ஆதியாகமம் கூறும் சங்கதி.

இபுறாகீமுக்கு வயது எண்பத்தைந்து, அவருடைய மனைவி ஸாராவுக்கோ எழுபத்தாறு. பிள்ளைப்பேறில்லாத அவர்களுக்கு இந்நிலையில் சந்ததி எப்படி சாத்தியம்? இறைவன் எண்ணினால் முடியும்!

கி.மு. 2160இல் பிறந்த இபுறாகீம் நபிகளார்க்கு இரு மனைவிகள். ஸாரா, ஹாஜிரா என்பது அவர்கள் பெயர்கள்.

ஸாரா, தன்னுடைய எகிப்திய அடிமைப் பெண் ஹாஜிராவைச் சககிழத்தியாக்கினார். எஜமானிஅடிமைப் பெண் தொடர்பு மாற மனைவியரிடையே மனக் கசப்புகள். இருவரிடையே இடைவெளிகள்.

ஸாராவின் கோபத்தீ ஹாஜராவைச் சுட்டது. ஹாஜரா இறைவனிடம் முறையிட்டார். இறைவனின் கருணை மழை அசரீரியாகப் பொழிந்தது.

‘உன் சந்ததியைப் பெருக்குவேன். அது எண்ண முடியாத அளவுக்குப் பெருகும். கர்ப்பவதியாக இருக்கும் உனக்கு ஆண் மகவு பிறக்கும். அதற்கு இஸ்மாயில் எனப் பெயரிடுக’ என்ற செய்தியை இபுறாகீமிடமும் ஸாராவிடமும் ஹாஜிரா மொழிந்தார். அதன்படியே பிள்ளைக் கனியமுது பிறந்தது. பிறந்த இடம் எகிப்து; பிறந்த ஆண்டு கி.மு. 2070.

இஸ்மாயிலுக்கு வயது 13 ஆனபோது சகக் கிழத்திகளிடையே பிணக்குகள் ஹாஜிராவின் வாழ்வில் இடிமின்னலோடு பெருமழை. அந்தப் பெருமழைதான் தாயையும் தனயனையும் புரட்டிப் புரட்டி உருட்டி பக்கா பாலைவெளியில் கொண்டு போய்போட்டது.

இறைவனின் எண்ணப் படி அவர்கள் பாலையில் தண்ணீரைத் தேடியது அப்போதுதான். அவர்கள் அனாதைகள்போல் தோன்றினாலும் அவர்கள் உறுதியாக அனாதைகள் அல்லர். அவர்களுக்குப் பின்னால் கருணையம் நிதியாக இறைவன் இருந்தான்.

இறைவன் மொழிந்தபடி இஸ்மாயில் பாதம்பட்ட மணல் தரையிலிருந்து பொங்கிப் பெருகிய பேரமுதமே ஜம்ஜம் நீரூற்று.

அந்த ஜம்ஜம் நீரூற்று இருந்த இடம் அன்றைக்கு வெட்டவெளியாக இருந்தபோதும் அங்கு ஒருகாலத்தில் மிகப் பெரிய சமுதாயம் வாழ்ந்திருக்கிறது; அங்கு ஒரே இறைவனைத் தொழ நிர்மாணிக்கப்பட்ட ஆலயமும் இருந்திருக்கிறது. அதற்கான ஒரே அடையாளம் பக்கா மணற் பரப்பில் மணல் துகள்களோடு கலந்து கிடந்த ஓட்டாங்கற்சிற்களே!

ஜம்ஜம் அருகிலேயே தாயும் மகனும் வாழத் தொடங்கினர். வடக்கே ஷாம் செல்வோரும் தெற்கே யெமன் செல்வோரும் அங்கே தங்கிச் சென்றனர்.

அவர்கள் செய்த உதவியும் ஆதரவும் ஜம்ஜம்மைப்போல் பொங்கியது. அவர்கள் கொடுத்த பேரீச்சை, கொடிமுந்திரி, ஜைத்தூன் விதைகள் ஜம்ஜம்மால் வளர்ந்தது.

கன்ஆனிலிருந்து இபுறாகீம் மனைவியையும் மகனையும் பார்க்க வந்து சென்றார். அருகிலிருந்தபோது ஏற்பட்ட எட்டிக்காய்கள், தூர விலகிச் சென்ற பின் கொடி முந்திரியாய் மாறின. ஸாரா ஹாஜிராவின் நலம் கேட்டார். ஸாராவிற்குப் பின்னர் பிறந்த இஸ்ஹாக் இஸ்மாயிலின் உளமானார்.

கன்ஆனிலிருந்த இபுறாகீம் பக்காவிலிருந்த உறவுக்காகப் பிரார்த்தித்தார்: இறைவா! நிச்சயமாக நான் என் சந்ததிகளை கண்ணியம் வாய்ந்த ஓர் இடத்தில் வசிக்கச் செய்துவிட்டேன். அது விவசாயமற்ற ஒரு பள்ளத்தாக்கு. மனிதர்களில் ஒரு தொகையினரின் இதயங்கள் அங்கு நோக்கட்டும். பற்பல கனிவர்க்கங்களையும் நீ அவர்களுக்கு உண்ண வழங்குவாயாக!

காலப் போக்கில் பக்கா மக்காவானது. கனிவர்க்கங்கள் விளையும் பூமியானது. மக்களில் ஒரு தொகையினர் வருகை மட்டும் தரவில்லை, வாழவும் வந்து சேர்ந்தனர்.

கன்ஆனிலிருந்த வந்திருந்த இபுறாகீமுக்கு ஒரே இறைவனுக்காக எழுப்பப்பட்ட இறையாலயம் இருந்த இடம் காட்டப்பட்டது.

‘நாம் இபுறாகீமுக்கு (கஅபா எனும்) இந்த ஆலயத்தின் இடத்தைப் பின்வரும் கட்டளையுடன் நிர்ணயம் செய்து கொடுத்த சூழலை நினைவுகூருங்கள்.’

(திருக்குர்ஆன் 22: 26)

இறைவன் குறித்துக் கொடுத்த இடத்தில் கஅபாவை புனர் நிர்மாணம் செய்த தந்தையையும் மகனையும் அரபக மக்களை புனித ஆலயத்தைத் தரிசிக்க அழைத்திடச் சொன்னான்.

‘ஹஜ் செய்திட மக்களுக்குப் பொது அறிவிப்புச் செய்வீராக! அவர்கள் வெகு தொலைவான இடங்களிலிருந்தெல்லாம் நடந்தும் ஒட்டகங்களில் பயணம் செய்தும் உம்மிடம் வரட்டும்.’

(திருக்குர்ஆன் 22: 27)

இறைவனின் கட்டளைப்படி எல்லாம் நடந்தது. தான் உதவி தேடித் தவித்தோடிய நிகழ்வை ஹாஜிரா இபுறாகீம் நபிகளாரிடம் சொன்னார். அதன் நினைவாகத்தான் ஹஜ் பயணிகள் இன்றும் ஸபா மர்வா குன்றுகளிடையே ஏழு முறை தொங்கோட்டம் ஓடுகின்றனர். புனித யாத்திரையின் ஓர் அங்கமாக இதை ஆக்கியவர் இபுறாகீம் தான்.

ஹாஜிராவும் இஸ்மாயிலும் குடியேறிய மக்காவில் தொடக்கத்தில் குடியேறியவர்கள் பெரும்பாலோர் வணிகர்களே! அந்த வணிகர்கள்தான் குறைஷி மக்கள். அவர்கள்தான் பின்னாளில் கஅபாவின் காவலர்கள் ஆனார்கள்.

இபுறாகீம் நபிகளாரின் தாய்மொழி ஹீப்ரு. ஹாஜிராவின் தாய்மொழி சிரியாக். இஸ்மாயில் நபிகளார் இருமொழிகளையும் அறிந்திருந்தார். அரபகத்தில் இருமொழிகளும் பெரும்பாலும் பயன்படாது போனபோது அவர்கள் அரபுமொழியைக் கற்றுக் கொண்டனர். இதற்குப் பேருதவியாக இருந்தவர்கள் தென் அரபகம் யெமனிலிருந்த மக்காவில் குடியேறிய ஜுர்ஹும் குலத்தவர். இவர்கள்தான் இஸ்மாயில் நபிகளாருக்கு இரண்டாவது மனைவியை அளித்தவர்கள்.

## கறை படிந்த கதை

விவசாயமற்ற பள்ளத்தாக்கில் பேரீச்சங்கனிகளும் கொடி முந்திரிகளும் விளைய ஆரம்பித்தன. இஸ்மாயிலின் ஒற்றை வீட்டைச்

சுற்றி ஓராயிரம் வீடுகள் எழுந்தன. கஅபா ஆலயத்தை மையமாகக் கொண்டு அரபகம் இயங்கியது.

நடந்தும் வாகனங்களில் பயணித்தும் நாலு திசைகளும் சங்கமித்தன. நான்கு திசைக் கடல்களிலும் அலைகளையே காண முடியும். மக்கமா நகரப் பெருங்கடலிலே தலைகளையே காணலாம்.

பெரும் பயணம் ஹஜ் ஆண்டில் ஒருமுறை என்றால் சிறுபயணம் உம்ரா ஆண்டு முழுவதும். ஏக இறைவனை வணங்க வந்தவர்கள் எல்லோருமே பெறுமதியான காணிக்கைகளோடும் அன்பளிப்புகளோடும் வந்தனர்.

இபுறாகீம் இஸ்மாயில் கட்டிய இறையில்லம் எல்லோரையும் கவர்ந்தது. ஒரே இறைவன் என்ற கொள்கை உச்சி முகர்ந்து பாராட்டப்பட்டது. இஸ்ஹாக்கின் வழிவந்தோரும் கஅபாவைத் தரிசித்தார்கள். இஸ்மாயிலின் மகளை இஸ்ஹாக்கின் மகன் மணந்ததால் மக்காவோடு இருந்த உறவு வளர்ந்தது.

காலம் உருண்டது.

இஸ்மாயிலின் சந்ததிகள் விண்மீன்களைப்போல் ஆயிரக்கணக்கில் பெருகினார்கள். அவர்கள் மக்காவை விட்டு மாநிலமெங்கும் பரவினார்கள்.

கஅபாவைத் தரிசித்துக் கொண்டிருந்தவர்கள் வெளியிடங்களில் வாழ்ந்ததால் கஅபாவிலிருந்து கற்களை எடுத்துச் சென்று பூஜித்தார்கள். அவர்கள் வாழ்ந்த பகுதியிலிருந்த பழங்குடி மக்கள் ஏற்கெனவே நடுகல் வணக்கங்களை மேற்கொண்டார்கள். அப்பழக்கம் புலம் பெயர்ந்தவர்களையும் பற்றிக்கொண்டது. கஅபா கல்லோடு காட்டு விலங்காண்டிகளின் கல்லும் கடவுளானது. கஅபாவைத் தரிசிக்க வந்தவர்கள் யெமனிலிருந்து வந்திருந்தாலும் ஜித்தாவிலிருந்து வந்திருந்தாலும் பஹ்ரைனிலிருந்து வந்திருந்தாலும் தூமத்துல் ஜந்தலிலிருந்து வந்திருந்தாலும் அவர்கள் கரங்களில் அவர்கள் பிரதேச சிலைகள் இருந்தன. அவை கஅபாவில் நிறுத்தப்பட்டன.

உருவமில்லாத ஓரிறைவனுக்காக உண்டாக்கப்பட்ட ஆலயம் உருவச் சிலைகளின் உன்னத இருப்பிடமானது. அதுவரை ஏக இறைவனை கஅபா சென்று வணங்கிய யூதர்கள் அவ்வழக்கத்தைக் கைவிட்டனர்.

இறைவனுக்கும் மனிதனுக்குமிடையில் எவரும் எதுவும் தேவையில்லை என்ற பண்பாடு இடையில் சிலைகள் தேவை என்ற

முரண்பாட்டால் காணாமல் போனது. சிலைகள் அண்மையில் வர ஏகத்தவம் சேய்மையில் சென்றது. ஈமான் என்ற நம்பிக்கை இல்லாமல் போனது. அவநம்பிக்கை ஆட்சி செய்தது. குதிரைப் பயணம் போய் பொய்க்கால் குதிரையாட்டம் வந்தது. மரணத்துக்குப் பின்னுள்ள வாழ்க்கை பற்றிய சிந்தனை அற்றுப்போய்விட்டது. சத்திய வாழ்க்கை பற்றிய எண்ணம் பட்டுப் போய்விட்டது.

அவர்கள் எண்ணங்களைப் போலவே ஜம்ஜம் நீரூற்று தூர்ந்து போனது. அதில் காணிக்கைப் பொருள்கள் பலவும் போட்டு மூடப்பட்டது.

இதைச் செய்தவர்கள் கஅபாவை நிர்வகித்த ஜுர்ஹும் கோத்திரத்தார். இவர்கள் இஸ்மாயிலின் இரண்டாவது மனைவியின் வழிவந்தோர் என்ற காரணத்தால் கஅபாவின் சாவி அவர்கள் கையில் இருந்தது. அவர்களின் கடைசி ஆட்சியாளன் முனாள்.

ஆன்மிகச் சாவிக் கொத்திலேயே அதிகாரச் சாவியும் இருந்ததால் ஜுர்ஹுமிகள் கஅபாவையும் மக்காவையும் ஆட்டிப் படைத்தனர்; அநீதிகள் பல புரிந்தனர். அவர்களை எதிர்த்த அணியின் தலைவர் பனூகுஸாஅ.

ஜுர்ஹுமிக்களை அகற்ற பிற கோத்திரத்தார் முனைந்தபோதுதான் மிக விலை உயர்ந்த காணிக்கைப் பொருள்களையெல்லாம் கண்காணாமல் செய்ய ஜம்ஜம் கிணற்றில் போட்டு மூடினார்கள். இது பதுக்கும் நடவடிக்கை மட்டுமல்ல, பழி வாங்கும் நடவடிக்கையும் ஆகும்.

ஜுர்ஹுமிகள் தங்களின் பூர்வீகப் பிரதேசமான யெமனுக்கு ஓடி மறைந்தனர். ஜம்ஜம் கிணறு மூடப்பட மறைந்தது.

மக்காவின் புறநகரக் கிணறுகள் நன்னீரைத்தர ஜம்ஜம்மின் தேவையில்லாமல் போனது. காலப்போக்கில் ஜம்ஜம்மைப் பற்றிய பேச்சும் இல்லாமல் போனது.

ஜுர்ஹுமிகள் விட்ட இடத்தை குஸாஅ கோத்திரத்தார் பெற்றனர். இஸ்மாயில் வழிவந்த இவர்களும் யெமனிலிருந்த வடக்கு நோக்கி வந்தவர்கள்தான். ஜுர்ஹுமிகளின் குற்றச் செயலால்தான் குஸாஅக்களுக்குப் பதவி கிடைத்தது.

சென்ற இடமெல்லாம் நின்று சிலையைக் கொண்டு வரும் செயலைக் குஸாஅக்களும் செய்தனர். அவர்களின் தலைவர்களில் ஒருவரான அம்ரு பின் அல்ஹை, சிரியா சென்று வரும் வழியில் முஆபிய கோத்திரத்தாரின் சிலைகளில் ஒன்றை வாங்கி வந்தார். அதன் பெயர்

ஹுபல். குஸாஅக்கள் ஹுபல் சிலையை கஅபாவின் பிரதம சிலையாக நிறுத்தி வைத்தனர்.

## யார் இந்த ஹாஷிம்?

இபுறாகீம், இஸ்மாயில் எனும் கால் வழியில் கி.பி. 400 ஆண்டுகள் நிறைவுற குறைஷிக் குலத்தில் குஸை என்பார் தோன்றினார். இவர் குஸாஅ குலத்தலைவராயிருந்த ஹுலைல் என்பாரின் மகளை மணந்தார்.

குஸை அரபு மக்களிடையே செல்வாக்கும் மரியாதையும் பெற்ற மாமனிதராகத் திகழ்ந்ததால் மாமனார் ஹுலைலின் மனங்கவர்ந்த மாப்பிள்ளையாக விளங்கினார். எனவே மாமனார் தன் பிள்ளைகளைவிட மாப்பிள்ளையை நேசித்தார்.

ஹுலைல் மரணத்துக்குப் பின் தலைமைப் பீடத்துக்கு எழுந்த பெரும் போட்டியில் பிள்ளைகளுக்கோ உறவினர்களுக்கோ கிடைக்காத பெரும்பேறு மாப்பிள்ளைக்குக் கிடைத்தது. குஸை மக்காவின் ஆட்சியாளராகவும் கஅபாவின் பாதுகாவலராகவும் தேர்வு செய்யப்பட்டார். மருமக்கள் வழி மான்மியம்.

மக்காவின் மாண்புடைய பதவியை ஏற்ற குஸை தனக்கு உதவியாகவும் பக்கபலமாகவும் இருக்க, தன் உறவினர்களை கஅபாவை ஒட்டிய பகுதிகளில் குடியேறச் செய்தார். அவரது சகோதரர் ஸுஹ்ரா, மாமனார் தையிம், மற்றுமொரு மாமனாரின் மகன் மக்ஸூம் என உறவினர் பலரும் புனிதத் தலத்தை அடுத்துக் குடியேறினர். இவர்கள் ‘பள்ளத்தாக்கு குறைஷியர்’ என அழைக்கப்பட்டனர். இவர்களைத் தவிர மக்காவின் மலையடிவாரங்களிலும் சுற்றுப் புறங்களிலும் வாழ்ந்தோர் ‘சுற்றுப் புறக் குறைஷியர்’ என அழைக்கப்பட்டனர்.

குறைஷியர்களிடம் அப்போது பெரும் பெரும் ஆட்டுக் கிடைகள் இருந்தன. அவற்றின் வருவாயிலிருந்து பெறப்பட்ட வரி மக்காவுக்கு வரும் ஏழை யாத்திரிகளின் நலன்களுக்கு உதவியது. தம் குலக்கொழுந்து தரணி ஆள்கிறார் என்ற பெருமிதம் ஒவ்வொரு குறைஷியருக்கும் இருந்தது.

இதுவரை கஅபாவின் காவலர்கள் அனைவரும் புனிதத் தலத்தைச் சூழ கூடாரங்கள் அமைத்தே வாழ்ந்து வந்தனர். குஸை ஆட்சிக்கு வந்தபின் நிரந்தரமான வீடுகளைக் கட்டிக் கொள்ளச் செய்தார்; தானும்

ஒரு மாளிகையைக் கட்டிக் கொண்டார். அதுவே அத்தாணி மண்டபமும் ஆகும். அங்கு ஆலோசனைகள் நடத்தக் கூட்டம் கூடும். அதற்குப் பெயர் ‘தாருந் நத்வா’ என்பதாகும்.

குஸைக்கு நான்கு புதல்வர்கள். அவர்கள் அப்த் அத்தார், அப்த் மனாப், ஸுஹ்ரா, தையிம் ஆகியோர். முதல் பிள்ளை மோழை, இரண்டாவது பிள்ளை காளை!

காளைக்கு மக்களிடையே நல்ல பெயர், சென்றவிடமெல்லாம் சிறப்பு. குஸைக்குப் பின் கோலோச்சும் வாய்ப்பு இவருக்கே என எல்லோரும் எண்ணினர்.

தந்தைக்கோ மூத்த மகனின் மேல்தான் பாசமும் பரிவும். திறமை குன்றியிருந்த மகனைத் திறம்பட வைக்க தலைமைப் பீடம் உதவுமென எண்ணி தந்தையார் தன்னுடைய மரணத் தறுவாயில் மணி மகுடத்தை அப்து அத்தாருக்கு அளித்தார்.

ஆனால், அப்து அத்தாருக்குப் பிறகு தலைமைப் பீடம் அப்த் மனாபின் வாரிசுக்கு வருவதற்குரிய வாய்ப்பு உருவாகியது. தந்தைக்குக் கிடைக்காமல் தவறிப்போன வாய்ப்பு தனயன் ஹாஷிமுக்குக் கிடைக்கக் கூடிய சூழல்.

இளைய தலைமுறையில் அப்து மனாபின் புதல்வர் ஹாஷிம் மக்கள் ஆதரவும் புகழும் பெற்று முன்னணியில் நின்றார். ஸுஹ்ரா, தையிம் உட்பட குஸையின் வழிவந்தோர் அனைவருமே ஹாஷிமை ஆதரித்தார்கள். இவர்கள் அக்கால வழக்கப்படி தங்கள் கைகளைச் சந்தனக் கிண்ணத்தில் தோய்த்து கஅபாவின் கற்கள்மீது பூசி ஒன்றுபட்டதற்கான உறுதிமொழி எடுத்துக் கொண்டனர்.

தையிம் மருமகன் மக்ஸூம் வழிவந்தோரும் தூரத்து உறவினர்களும் அப்து அத்தார் வாரிசுகளுக்கே தலைமைப் பீடம் வேண்டுமென கோரி நின்றனர்.

இரு சாராரும் மோதல் போக்கை மேற்கொண்டிருந்த வேளையில் சில நல்ல உள்ளங்களின் தலையீட்டால் ஒரு சமாதானமான முடிவு எடுக்கப்பட்டது.

பாதுகாப்புப் பணி அப்துத் தார் குடும்பத்தினருக்கும் குடிநீர் வழங்கலும் பொதுப் பணியும் அப்துல் மனாப் குடும்பத்தினருக்கும் பகிர்ந்தளிக்கப்பட்டது.

அப்துல் மனாபின் மூத்த மகன் ஹாஷிம் வணிகராகவும் ஆட்டுக்

கிடைகள் பல உள்ளவராகவும் விளங்கினார். செல்வமும் செல்வாக்கும் சேர்ந்திருந்த அவரிடம் கனிவும், கருணையும், தயாளமும் மிகுந்திருந்தன. ஏழைப் பங்காளராகத் திகழ்ந்த அவர் பாட்டனார் ஏற்படுத்தித் தந்த பணியை மிகச் சிறப்பாக செய்தார்.

ஹாஜிகளுக்கு உணவளிக்கும் பணியை மிக அருமையாக நிறைவேற்றிய ஹாஷிம் மக்காவில் வாழ்ந்த ஏழை எளியவர்களின் தேவைகளையும் நிறைவேற்றினார். குறையொன்றுமில்லாத நிறைவுடைய பணிகளுக்குச் சொந்தக்காரராக அவர் விளங்கினார்.

ஆன்மிக, அரசியல் துறைகளில் மட்டும் அவர் கவனம் செலுத்தவில்லை, மக்காவாசிகளின் பொருளாதார மேம்பாட்டுக்காகவும் சிந்தித்து செயலாற்றினார்.

மக்கத்து வணிகர்கள் கோடைக் காலங்களில் சிரியாவுக்கும் குளிர் காலங்களில் யெமன் நாட்டுக்கும் பயணம் செய்து வணிகம் செய்தனர். அவர்கள் அப்போது சிரியாவை ஆண்ட ரோமாபுரி ஆட்சியாளருக்கும் யெமனை ஆண்ட அபிசீனிய ஆட்சியாளருக்கும் வரி செலுத்தி வந்தனர். ஹாஷிம் இரு ஆட்சியாளர்களிடமும் பேசி வரிவிலக்குப் பெற்றுத் தந்தார்.

அப்போது யெமனிலிருந்து சிரியா வரையுள்ள பயணப் பாதையில் கொள்ளையர் பயமிருந்தது. ஹாஷிம் அப்பாதையில் பயணம் செய்து ஆங்காங்குள்ள மக்கள் குழுக்களிடம் பேசி பாதுகாப்புப் பெற்றுத் தந்தார்.

ஹாஷிம் பல்வேறு மக்கள் குழுக்களோடு பேசி வணிக, அரசியல் ஒப்பந்தங்கள் செய்து கொண்டார். இதனால் வணிகம் செய்வதற்குப் பாதுகாப்பும் வியாபார முன்னேற்றங்களும் ஏற்பட்டன.

ஹாஷிமின் இயற்பெயர் அம்ரு, ஆனால் ஹாஷிம் என்றே அழைக்கப்பட்டார். அதற்குக் காரணம் இருந்தது.

ஒருமுறை மக்காவில் கடும் பஞ்சம் நிலவியது. அப்போது ஹாஷிம் ரொட்டிகளைக் கறிக் குழம்பில் ஊறவைத்து மக்களுக்குக் கொடுத்தார். அதன் பிறகுதான் அம்ரு ஹாஷிம் ஆனார். கறிக் குழம்பில் ஊறிய ரொட்டித் துண்டுக்குப் பெயர்தான் ஹாஷிம்.

## ஹாஷிமின் மனங்கவர்ந்த மங்கை

ஒரு கோடைகாலம்

ஹாஷிம் சிரியா சென்று பொருள்களை விற்றும் வாங்கியும் மக்காவுக்குத் திரும்பிக் கொண்டிருந்தார். அவரோடு மக்கத்து வணிகர்களும் யத்ரிப் வணிகர்களும் இருந்தனர். யத்ரிப் வணிகர்களில் ஒருவர் ஒரு நங்கை கொடுத்தனுப்பிய பொருள்களை விற்று நல்ல லாபத்தோடு திரும்பியிருந்தார்.

யத்ரிபைச் சென்றடைந்தபோது அந்த நங்கையின் இல்லத்தருகே வணிகக்குழு சற்று நின்று ஓய்வெடுத்தது. வணிகக் குழுவை ஆவலோடு எதிர்பார்த்திருந்த அந்த நங்கை வீட்டைவிட்டு வெளியில் வந்தாள். தான் அனுப்பிய வணிகப் பிரதி நிதியை வரவேற்ற அந்த வணிகச் சீமாட்டி நலத்தைப் பற்றிக் கேட்டபடி கணக்குகளைப் பெற்றுக் கொண்டாள். பயண அனுபவங்களைக் கேட்ட அவள் வந்திருந்த வணிகர்களைப் பற்றியும் விசாரித்தாள்.

அவளைக் கவனித்துக் கொண்டிருந்த ஹாஷிம் அப்பெண்ணின் பேச்சின் அழகையும் புத்திக் கூர்மையையும் தனக்குள் மெச்சிக் கொண்டார். அவளின் எழிலும் தெளிவும் திறமையும் ஹாஷிமைக் கவர்ந்தன.

அந்த அழகு நிலா இல்லத்துக்குள் சென்று மறைந்தபின் ஹாஷிம் வேறொரு யத்ரிப் வணிகரிடம் அவளைப் பற்றி விசாரித்தார்.

‘அவளின் பெயர் ஸல்மா, தந்தையின் பெயர் அம்ரு.’

‘அம்ருவின் மகள் அம்ருவுக்குக் கிடைப்பாளா!’

‘என்ன சொல்கிறீர்கள்?’

‘என் பெயரும் அம்ருதான். ஸல்மாவுக்கு திருமணமாகிவிட்டதா?’

‘கஸ்ரஜ் கூட்டத்தைச் சேர்ந்த பனூ நஜ்ஜார் கிளையினைச் சேர்ந்த செல்வச் சீமாட்டி தனக்கேற்ற தலைவனைத் தேடிக் கொண்டிருக்கிறாள். சுதந்திரமான வானம்பாடி அவள். அவளுக்கேற்ற கானம் பாடியைத் தேடிக் கொண்டிருக்கிறாள்.’

‘அப்படியா? அவள் என்னை மணக்கச் சம்மதமாயின் கேட்டுச் சொல்லுங்கள்’ எனக் கூறி விடை பெற்ற ஹாஷிம் மக்கா வந்தடைந்தார்.

திருமணப் பேச்சு தொடங்கியது. ஸல்மாவைப் பெண் கேட்டு யத்ரிப் சென்றவரிடம் ஒரு நிபந்தனை விதிக்கப்பட்டது. ‘தனது விவகாரங்கள் எல்லாவற்றின் கட்டுப்பாடும் முழுக்க முழுக்க தன் கீழேயே இருக்க வேண்டும்’ என்ற ஸல்மாவின் நிபந்தனையை ஏற்றுக்கொண்ட ஹாஷிம் திருமணத்துக்குச் சம்மதித்தார். ஹாஷிமின் மக்கத்துச் செல்வாக்கை

அறிந்திருந்த ஸல்மா திருமணத்துக்குச் சம்மதித்ததில் ஆச்சர்யம் ஏதுமில்லை.

வானம்பாடிக்கும் கானம் பாடிக்கும் மணவிழா சிறப்பாக நிகழ்ந்தேறியது.

ஒருமுறை மக்காவுக்கு வந்து தங்கியிருந்தாலும் ஸல்மா யத்ரிபிலேயே முழுமையாக இருந்தார். சிரியா செல்லும் வழியில் ஹாஷிம் யத்ரிபில் தங்கி இல்லற வாழ்க்கையைத் தொடர்ந்தார். அவர்களுக்கு ஓர் ஆண் மகவு பிறக்க, அப்பிள்ளைக்கு ஷைபா எனப் பெயரிட்டனர்.

சிரியாவில் வணிகம் தொடர்ந்தது; யத்ரிபில் வாழ்க்கை கனிந்தது.

ஹாஷிமின் வணிகமும், வாழ்க்கையும் ஒருநாள் முற்றுப் பெற்றது. வடபுலத்து பாலஸ்தீன காஸாவுக்கு வணிகத்துக்காகச் சென்ற ஹாஷிம் அங்கேயே மரணமடைந்தார்.

அவருக்கு ஸல்மாவைத் தவிர வேறு மனைவிகளும் இருந்தனர். அவர்களுக்கு மூன்று புதல்வர்கள் பிறந்திருந்தனர்.

ஹாஷிமுக்கு மூன்று சகோதரர்கள் இருந்தனர். இருவர் உடன் பிறந்த சகோதரர்கள், அவர்கள் ஷம்ஸ், முத்தலிப், மூன்றாமவர் நவ்பல். இவர் உடன் பிறவாச் சகோதரர்.

முத்தலிப் மக்காவிலேயே இருந்தார். ஷம்ஸ் முதலில் யெமனிலும் பின்னர் சிரியாவிலும் வணிகம் செய்துவந்தார். நவ்பல் ஈராக்கில் வணிகம் செய்து வந்தார்.

ஷம்சும் நவ்பலும் வணிகத்திலேயே மூழ்கியிருந்ததால், இருவரும் மூத்தவர்கள் என்றாலும் ஹாஷிம் வகித்த பொறுப்பு முத்தலிபிடம் அளிக்கப்பட்டது.

கஅபாவுக்கு வரும் யாத்ரீகர்களுக்கு தண்ணீர் வழங்கும் பொறுப்பும், அவர்களுக்கு உணவு வசதியளிக்க நிதி ஆதாரத்துக்கான வரிகள் அளவிடும் பொறுப்பும் முத்தலிபைச் சார்ந்தது. அவர் அப்பணிகளை மிகத் திறமையுடன் செய்துவந்தார்.

காலம் இரபு பகல் என்று ஓடிக் கொண்டிருந்தாலும் கணக்குப் பார்த்தால் சில சமயம் அது கால் நூற்றாண்டாகக் கூட கழிந்திருக்கும்.

கஅபாவை வலம் வந்த முத்தலிபுக்கு மூச்சிரைத்தது. தனக்குப்பின் யார் கஅபா பணியைச் செய்வது, அதற்குரிய வாரிசு யார் என்ற

எண்ணம் அவரிடம் அலைமோதியது.

தன் குடும்பத்தின் இளைய சமுதாயத்தினர் ஒவ்வொருவரின் தகுதி, திறமை, அகம், புறம் எல்லாவற்றையும் கணக்கிட்டு ஓய, அண்ணன் மகன் ஷைபாவின் நினைவு வந்தது.

தொடக்க காலத்தில் ஷைபாவை ஒருமுறை பார்த்து வந்திருந்த முத்தலிப்புக்கு அவ்வப்போது யத்ரிபிலிருந்த வந்த ஷைபாவைப் பற்றிய புகழுரைகள் அவருடைய நெஞ்சுக்கு நிறைவைத் தந்தன.

ஷைபாதான் தன்னுடைய வாரிசு எனத் தீர்மானித்த முத்தலிப் தன் அண்ணன் மகனை அழைத்து வரும் நோக்கத்துடன் யத்ரிப் சென்றார்.

யத்ரிப் சென்று மதனி ஸல்மாவைச் சந்தித்த முத்தலிப் தன்னுடைய எண்ணத்தைச் சொன்னார். முதலில் ஷைபாவை மக்காவுக்கு அனுப்ப மறுத்த ஸல்மா பின்னர் தன்னுடைய மகனின் விருப்பமே தன் விருப்பம் என்றாள். மகனோ தாயாரின் விருப்பத்தைக் கேட்டார்.

ஷைபா யத்ரிபில் இருப்பது பற்றியும் மக்காவில் இருப்பது பற்றியும் தெளிவாகப் புரிந்து வைத்திருந்த முத்தலிப் அவற்றின் சாதக பாதகங்களைப் பட்டியலிட்டார்.

யத்ரிப் ஒட்டகப் பயணத்தில் 11 நாட்கள் தள்ளியிருப்பதையும் முக்கிய உறவுகளும் பாரம்பர்யத் தொடர்புகளும் மக்காவிலிருப்பதையும் கூறிய முத்தலிப் மதனியுடனும் மகனுடனும் திறமையாக வாதாடினார். ‘கஅபாவின் பாதுகாவலர்கள் என்ற உன்னதத் தகுதியில் அரேபியர் அனைவரையும்விட குறைஷியர் உயர்ந்து நிற்கின்றனர். என் அண்ணன் ஹாஷிமும் நானும் பெற்ற தலைமைத்துவம் நாளை ஷைபாவுக்குக் கிடைக்கும். புனித ஆலயத்தின் பொறுப்பு என்பது மிக மிக மகத்தானது. அதை அடைய ஷைபா என்னுடன் வர வேண்டும். மக்காவில் இருக்கும் ஷைபா எப்போது வேண்டுமானாலும் யத்ரிப் வரலாம்; யத்ரிபிலிருக்கும் தாயார் மக்கா வந்து மகனைக் காணலாம். உடன் புனித ஆலயத்தையும் தரிசிக்கலாம்’ என முத்தலிப் கூற தாயும் மகனும் ஒருவரையொருவர் பார்த்துப் புன்னகைத்தபடி சம்மதத்தைத் தெரிவித்தனர்.

செவ்வண்ண ஒட்டகம் முத்தலிபையும் ஷைபாவையும் சுமந்தபடி மக்காவுக்குப் புறப்பட்டது. ஸல்மாவின் கண்களில் பிரியாவிடையால் பிரவாகம், அது பெருமிதத்தால் விளைந்த ஆனந்தக் கண்ணீர்!

ஒட்டக முதுகின் முன்னால் முத்தலிப், பின்னால் ஷைபா. இக்காட்சியை மக்காவில் கண்டவர்கள் ஷைபாவை முத்தலிபின் அடிமை என எண்ணி, ‘அப்துல் முத்தலிப்... அப்துல் முத்தலிப்’ என

அழைக்க அப்பெயரே பின்னாளில் அந்த அறிவுமிக்கச் சிறுவனின் பெயராக மாறியது.

மக்காவில் வாழத் தொடங்கிய ஷைபா முத்தலிபின் மரணத்துக்குப்பின் கஅபாவின் பொறுப்புக்கு வந்தார்.

## மீண்டும் ஜம்ஜம்...

அரபுகள் தம் இயற்பெயரை இழந்து புதுப்பெயரைப் பெறுவதை வரலாறு முழுவதும் காணலாம். அம்ரு எனும் இயற்பெயர் கொண்ட தந்தை ஹாஷிம் ஆனதுபோல் ஷைபா எனும் இயற்பெயர் கொண்ட தனயன் அப்துல் முத்தலிப் ஆனார்.

தந்தையின் தகைமையும் தாயின் புதுமையும் பெற்ற அப்துல் முத்தலிப் குடும்பப் பாரம்பர்யப் பெருமையையும் தொழில்களையும் காப்பதில் கண்ணும் கருத்துமாக இருந்தார்.

யத்ரிபிலிருந்துகொண்டே தாயார் வணிகம் செய்தது போலவே மக்காவிலிருந்து கொண்டே வணிகக் குழுக்களை அனுப்பி யெமனிலும் சிரியாவிலும் வணிகம் செய்து வரச் செய்தார். ஆட்டுக் கிடைகளும் ஒட்டகக் கூட்டங்களும் அவர் வருவாயை அதிகரிக்க உதவின. பல்வேறு ஜாதிக் குதிரைகள் அவருடைய பண்ணைகளில் இருந்தன.

செல்வமும் செல்வாக்கும் கஅபா நிர்வாகம் தந்த மேன்மையும் அவரைச் செயலாற்றல் நிறைந்தவராகவும் சிறப்புமிக்கவராகவும் விளங்க வைத்தன.

சிறப்புமிக்க அவரிடம் மேலும் ஒரு சிறப்பு வந்து சேர்ந்தது. அந்தச் சிறப்பு மனைவியென்னும் பெயரில் வந்தது. அந்த மனைவியின் பெயர் பாத்திமா.

பாத்திமா செல்வாக்குமிக்க குறைஷிகுல நங்கை நல்லாள். மக்ஸூம் கோத்திரத்தைச் சேர்ந்த மங்கையர் திலகம். தாய்வழியில் அவர் குஸாஅவின் மகன் அப்துடைய வழிவந்தவர்.

பெருந்தன்மை, நம்பிக்கை, ஆழ்ந்த மதிநுட்பம் வாய்க்கப் பெற்ற அப்துல் முத்தலிப் மக்கத்து மக்களால் நேசிக்கப்பட்டதில் ஆச்சர்யமில்லை.

மக்கா நகர் வழங்கிய சிறப்பு பாத்திமா என்றால் மக்காவின் புறநகர்கள் வழங்கிய சிறப்புகள் மேலும் சில மனைவிகள். அக்கால அரபுகளின் பண்பாட்டின்படி ஒன்றுக்கு மேற்பட்ட மனைவிகள்,

ஒன்றுக்கு மேற்பட்ட மேலங்கிகள் போல.

இல்லற வாழ்க்கையில் மூழ்கியிருந்தபோதும் அப்துல் முத்தலிப் அதிகமாகக் காணப்பட்ட இடங்கள் கஅபாவும், அதன் சுற்றுப் புறங்களுந்தான்.

அவ்வண்ணம் காணப்பட்ட அவர் பெரும்பாலும் ஹிஜ்ர் இஸ்மாயில் எனும் மேடை அருகில் விரிக்கப்பட்ட படுக்கைச் சீலையின் மேல் சாய்ந்திருந்தார்.

ஹிஜ்ர் இஸ்மாயில் என்பது இஸ்மாயில் நபிகளாரும் அவருடைய தாயார் ஹாஜிராவும் அடக்கப்பட்ட இடமாகும். அவ்விருவரின் நினைவோடைகள் பெருக இபுறாகீம் நபிகளாரும் பொங்கிப் பிரவாகமானார்.

அப்துல் முத்தலிப் ஹிஜ்ரின் அருகில் உறங்க, அப்போது தோன்றிய கனவில் 'ஊற்றைத் தோன்றுவீராக' என ஒரு நிழல் உருவம் கூறியது. புரியாமல் விழித்த அவருக்கு அடுத்தடுத்த இரவுகளில் அவ்வூற்று அருட்கொடை, புதையல், பெரும் பேறு எனக் கூறப்பட்டது. புரியாமலேயே நின்ற அவருக்கு அதன் உண்மைப் பெயர் 'ஜம்ஜம்' என உணர்த்தப்பட்டது.

ஜம்ஜம்மைப் பற்றி மூத்த குறைஷிகளிடம் வினவினார். அவர்கள் தமக்குத் தெரிந்ததைச் சொல்லினர். தோண்டப்பட்டதும் பயன்பட்டதும் தலைப்பிறைபோல் தெரிந்தது. இருந்த இடம் தெரியவில்லை.

அடுத்தடுத்த கனவுகளில் ஜம்ஜம் கிணற்றைப் பற்றிய செய்திகள் முழு நிலவாகத் தெரிந்தது. இருந்த இடமும் காட்டப்பட்டது.

அதிகாலையில் எழுந்து சென்ற அப்துல் முத்தலிப் கனவில் குறிப்பிடப்பட்ட இடத்தை அடைந்தார்.

இரு சிறு குன்றுகள், இடையே 300 அடி தொலைவு, அவ்விரு குன்றுகள் கூட சிலைகளைப்போல் தோற்றம் தந்ததால் மிருகங்களைப் பலியிடுபவர்கள் அந்த இடைவெளியில் பலியிட்டுவந்தனர்.

அந்த இடைவெளிக்கு மேல் அண்டங்காக்காய்களும், பருந்துகளும், கழுகுகளும் பறந்தும் கீழிறங்கி நடந்தும் சென்று கொண்டிருந்தன.

இரத்தக்கறை, மிருகத்தின் சாணம், எலும்புகள், எறும்புப் புற்றுகள் நிறைந்த அப்பகுதி நம்பத்தகுந்த இடமாகத் தெரியவில்லை. என்றாலும் அவர் கஅபாவுக்கு வந்து சுற்றி, கதவின் கைப்பிடியைப் பற்றிப் பிரார்த்தித்தார்.

‘ஜம்ஜம்மைத் தோண்டவும் அதன் நன்னீரைப் பெற்று புனித யாத்ரீகர்களுக்கு வழங்கவும் இறைவா அருள் புரிக’ எனக் கூறிப் பிரார்த்தித்த அப்துல் முத்தலிப் அதற்கான ஆயத்தப் பணிகளில் ஈடுபட்டார்.

தன்னுடைய ஒரே மகன் ஹாரிஸிடம் ஜம் ஜம் பற்றிய நினைவுகளையும் கனவுகளையும் கூறிய அப்துல் முத்தலிப் இரு கடப்பாரைகளோடும் மண்வெட்டிகளோடும் மகனோடும் இரு குன்றுகளுக்கிடையிலுள்ள குறிப்பிட்ட இடத்துக்கு வந்து சேர்ந்தார்.

ஒதுக்குப்புறமான அங்கு இஸாப், நாயிலா என இரு சிலைகள் இடப்புறம் வலப்புறமாக இருந்தன. இவை கஅபாவைக் களங்கப்படுத்தியதால் கல்லாக்கப்பட்ட இரு ஜுர்ஹுமிகளின் சிலைகள் என நம்பப்பட்டதால் புறக்கணிக்கப்பட்டவையாகும்.

இச்சிலைகள் நடுவில் அப்துல் முத்தலிபும் ஹாரிசும் கடப்பாரைகளைப் பயன்படுத்தித் தோண்டும்போது ஒருவர் இருவராகக் கூடியவர் பெருங்கூட்டமாகத் திரண்டனர்.

‘பலியிடும் இடத்தில் என்ன செய்கிறீர்கள்?’ எனக்கேட்ட கூட்டத்தினர் மண்ணைத் தோண்டுவதற்கு எதிர்ப்புத் தெரிவித்தனர்.

கஅபாவின் பாதுகாவலர் என்றுகூட பார்க்கவில்லை, அப்துல் முத்தலிபின் செயலுக்கு எதிராகக் குரல் எழுப்பினர். பொறுத்துப் பார்த்த அப்துல் முத்தலிப் பொங்கியெழுந்தார். தனயனுக்கு எதிர்ப்பைச் சமாளிக்கும் படி கட்டளையிட்டார்.

ஹாரிஸ் வாய்ச்சொல் வீரர்களை நோக்கி கடப்பாரையோடு நடந்தார். கூட்டத்தில் சலசலப்பு, நடந்த ஹாரிஸ் சில அடிகள் சென்று கடப்பாரையைத் தரையில் ஊன்றி நின்றார். கூட்டம் நின்ற இடத்தில் காலடித் தடங்களே மிச்சமிருந்தன.

தந்தையும் தனயனும் தரையைத் தோண்டத் தோண்ட கடப்பாரையில் எதிரொலித்த பேரொலி நம்பிக்கையைத் தந்தது. அடுத்தடுத்த தோண்டல்களில் புதையல், அருட்கொடை, பெரும்பேறு கிடைக்கத் தொடங்கின.

கலைந்து சென்றிருந்த கூட்டம் மீண்டும் கூடியது. பயந்து சென்ற அவர்களுக்குப் பேராசை பிறந்தது.

காரணம் கண்டெடுக்கப்பட்ட நேர்ச்சைப் பொருள்கள், ஜம்ஜம்மில் ஜுர்மிகளின் தலைவன் முனாளால் மூடி மறைக்கப்பட்ட உயர்

மதிப்புள்ள பொக்கிஷம்.

கஅபாவை விட்டுவிட்டு ஓடிய ஜுர்மிகள் மீண்டும் வந்து மக்காவை ஆளும்போது தோண்டி எடுத்துக் கொள்வதற்காகவும் மக்காவின் நீராதாரம் அற்றுப் போகட்டும் என்பதற்காகவும் ஜம்ஜம்மை மூடிச்சென்றனர்.

இப்போது மதிப்புமிக்க புதையலோடு ஜம்ஜம் நீரும் கிடைக்க, மக்கத்துக் குறைஷியர் புதையலில் பங்கு கேட்டு நின்றனர்.

பல்வேறு நேர்ச்சைப் பொருள்கள், வாள்களோடு கேடயங்கள், கவசங்கள், இரு பொன் மான் சிலைகள் கிடைத்தன.

ஜம்ஜம்மில் கிடைத்த புதையலில் பங்கு கேட்டவர்களுக்கு ஹுபல் சிலை முன் அம்பிழுத்து பதில் அளிக்கப்பட்டது.

கஅபாவுக்கும் அப்துல் முத்தலிபுக்கும் பங்கு கிடைத்தன. பாடாற்றாது பங்கு கேட்டவர்களுக்கு எதுவும் கிடைக்கவில்லை.

கஅபாவுக்குக் கிடைத்த பங்கில் வாள்கள், கேடயங்கள், கவசங்கள், பொன்மான்கள் இருந்தன. பொன்மான்களை கஅபா வாயிலின் இருபக்கங்களிலும் நிறுத்தி அலங்கரித்த முத்தலிப் வாள், கேடயம், கவசங்களை உருக்கி வாசற்கதவுகள் அமைத்தார்.

தண்ணீர் வசதி செய்துதரும் தலையாய பொறுப்பு அப்துல் முத்தலிபுக்கு இருந்ததால் ஜம்ஜம் பொறுப்பும் ஸல்மாவின் புத்திசாலி மகனுக்குக் கிடைத்தது.

## ஓர் உயிர் = நூறு உயிர்கள்

ஜம்ஜம்மைத் தோண்டும்போது அப்துல் முத்தலிபுக்கு ஏற்பட்ட சங்கடம் தனக்கு ஒரே ஒரு மகன் மட்டும் இருக்கிறானே, மேலும் சிலர் இருந்தால் உதவிக்கும் எதிர்க்குரல் எழுப்புவோரைச் சமாளிக்கவும் உதவியாக இருந்திருக்குமே என்பதே!

அப்த் ஷம்ஸ் கோத்திரத் தலைவரும் தன் ஒன்றுவிட்ட சகோதரருமான உமையா பல புதல்வர்களைப் பெற்றிருந்ததும் மக்ஸூம் கோத்திரத்து முகீரா பல புதல்வர்களைப் பெற்றிருந்ததும் அப்துல் முத்தலிபுக்கு நினைவுக்கு வந்தன.

ஜம்ஜம்மைத் தோண்டும்போது ஏற்பட்ட எதிர்ப்பை தன் மகன் ஹாரிஸை வைத்தே சமாளித்துவிட்ட அப்துல் முத்தலிப் உமையாவோ

முகீராவோ ஜம்ஜம்மைத் தோண்டியிருந்தால் ஏற்படும் எதிர்ப்பைத் தம் புதல்வர்களை வைத்து எப்படி வலுவாக சமாளித்திருப்பர் என எண்ணிப் பார்த்தார்.

எவ்வளவோ செல்வமும் செல்வாக்கும் இருந்தும் பிள்ளைச் செல்வத்தில் வறியவர், தான் என எண்ணிய அப்துல் முத்தலிப் தனக்குப் பத்துப் புத்திரர்கள் வேண்டுமென இறைவனைப் பிரார்த்தித்தார். அவ்வண்ணம் பத்துப் பிள்ளைகள் பிறப்பார்களாயின் ஒரு முத்துப் பிள்ளையை இறைவனுக்காகப் பலியிடுவதாகவும் வேண்டிக்கொண்டார்.

ஹாரிஸ் தவிர மேலும் ஒன்பது ஆண் மக்கள் பிறந்தனர்.

ஹாரிஸ், அபூலஹப் முதலிய எழுவர் சுற்றுப்புறச் சிற்றூர் மனைவிகளுக்குப் பிறந்தவர்கள். ஸுபைர், அபூதாலிப், அப்துல்லா ஆகியோர் மக்கா நகரத்து மங்கை பாத்திமாவுக்குப் பிறந்தவர்கள். இவர்கள் தவிர மேலும் ஆறு பெண் மக்களைப் பெற்றவர் முத்தலிப்.

இளைய மகன் அப்துல்லா வாலிபப் பருவத்தை அடைந்தபோதுதான் அப்துல் முத்தலிபுக்கு இறைவனுக்கு கொடுத்த வாக்கை நிறைவேற்றுவதற்குரிய நேரம் வந்தது.

பலியிடுவது பற்றிச் சொன்னால் பத்துப் பேரும் புரிந்து கொள்ளும் வயதை எட்டியிருக்கவேண்டும். இப்போதுதான் அப்துல்லா அந்த நிலையை எட்டியிருந்தார். எனவே அப்துல் முத்தலிப் தன் பிரார்த்தனையை நிறைவேற்ற ஆயத்தமானார்.

பத்துப் பிள்ளைகளையும் அழைத்து வைத்துக்கொண்டு தன்னுடைய பிரார்த்தனையைப் பற்றிச் சொன்னார். பத்துப்பேரும் ரத்தம் சிந்தத் தயாரானார்கள். அவர்களை கஅபாவிலுள்ள ஹுபல் சிலை முன்பு நிறுத்தி அம்புகளில் அவர்களின் பெயர்களை எழுதிப்போட்டு பலியாள் யாரெனத் தெரிவு செய்வதென்ற முடிவோடு தந்தையும் தனயன்களும் சென்றனர்.

எந்த முடிவு எடுக்க வேண்டுமென்றாலும் அம்புகளைக் கொண்டே முடிவெடுத்த அரபுக் கலாச்சாரம் ஆதிநாள் பழக்கம். கூர்மையான அம்புகள்தான் வேட்டைக்கு உதவும், கூர்மையற்ற அம்புகள் இறை நாட்டம் காண உதவும்.

ஹுபல் முன் போட்ட அம்புகளில் ஓர் அம்பு கடைசி மகன் அப்துல்லா தான் பலியாள் எனப் பறை சாற்றியது. என்னதான் நான், நீ எனத் தலை கொடுக்க சகோதரர்கள் முன் வந்திருந்தாலும்

அப்துல்லாவின் பெயர் வந்தபோது அனைவரும் அதிர்ச்சிக்குள்ளானார்கள். அப்துல் முத்தலிபுக்கோ மார்பின் இடப்புறம் வலித்தது; வலப்புறம் வலித்தது. தலைவலி எடுத்தது; கண்களும் வலிக்க நாக்கு வறண்டது.

குறிபார்த்து முடித்த நிலையில் கஅபாவின் உள்ளும் புறமும் மக்கள் கூட்டம். அப்துல்லாவின் பெயர் வந்ததையறிந்த மக்ஸூம் கோத்திரத்தார் ‘எங்கள் செல்வங்கள் அனைத்தையும் தருகிறோம். அப்துல்லாவைப் பலியிடுவதற்குப் பதிலாக ஏதாவது ஏற்பாடு செய்யுங்கள்’ என்றனர். காரணம், அவர்கள் அன்னை பாத்திமாவின் ரத்த பந்தங்கள்.

‘மனிதப்பலி வேண்டவே வேண்டாம். ஆவிகளோடு பேசும் ஒரு பெண் மந்திரவாதி யத்ரிபில் இருக்கிறாள். அவளை அணுகி ஆலோசனை கேளுங்கள். அவளின் சொற்படி செய்யலாம்’ என ஒரு முதிய குறைஷி மொழிந்தார்.

முதியவரின் பேச்சைக் கேட்ட அப்துல் முத்தலிபும் புதல்வர்களும் மக்ஸூம் குலத்தினரும் நீண்ட நேரம் பேசி யத்ரிப் செல்வதென முடிவெடுத்தனர்.

அப்துல் முத்தலிப் அப்துல்லாஹ்வுடனும் இன்னும் ஒரு மகனுடனும் பிறந்த இடந்தேடிச் சென்றார். அவர்கள் யத்ரிப் சென்றபோது ஆவிகளோடு பேசும் பெண் கைபர் சென்றிருந்தாள்.

மூலிகையைத் தேடிச் செல்லும்போது அது மலையடிவாரத்திலேயும் கிடைக்கும். சில சமயங்களில் அது மலையுச்சியிலேதான் கிடைக்கும்.

அவர்கள் சளைக்காமல் மேலும் நூறு கல் பயணித்து குறிசொல்லும் பெண்ணைக் கண்டு விபரங்களைக் கூறினர்.

அவள் கேட்டாள்: உங்களிடையே உயிர்க்கிரயம் என்ன?

அப்துல் முத்தலிப் சொன்னார்: பத்து ஒட்டகங்கள்.

‘அப்படியானால் அப்துல்லாஹ் என ஓர் அம்பில் எழுதுங்கள். பத்து ஒட்டகங்கள் என மற்றொரு அம்பில் எழுதுங்கள். பின் அம்பிழுத்துப் பாருங்கள். பத்தென வந்தால் சரி, இல்லையேல் பத்துப் பத்து என ஒட்டகங்களைக் கூட்டிக்கொண்டே செல்லுங்கள். எல்லா அம்புகளும் அப்துல்லாஹ், அப்துல்லாஹ் எனவே வராது எப்படியும் ஓர் அம்பு ஒட்டகங்கள் எனவரும்’ என அந்த குறிசொல்லும் மனித அம்பு கூறியது.

மக்கா வந்த அவர்கள் கைபரில் மனிதச் சிலை சொன்னதை

ஹுபைல் சிலை முன் நிகழ்த்திக் காட்ட முனைந்தனர்.

முதலம்பு அப்துல்லாஹ்வின் பெயரையே முன் மொழிந்தது. இரண்டாவது அம்பும் அப்துல்லாஹ்வின் பெயரையே இயம்பியது. மூன்று, நான்கு, ஐந்து என எல்லா அம்புகளும் அப்துல்லாஹ்வையே பலியிடச் சொல்லின. நூறு ஒட்டகங்கள் என எழுதப்பட்ட அம்புதான் நூதனமாக அப்துல்லாஹ்வைத் தவிர்த்தது.

எனவே நூறு ஒட்டகங்கள் பலியிடப்பட்டன. நூறு ஒட்டகங்கள் பலியிடப்படாமல் அப்துல்லாஹ் பலியிடப்பட்டிருந்தால்....!

இறைவனின் எண்ணம் வேறாக இருக்க, ஆணிவேராகத் திகழ வேண்டிய அப்துல்லாஹ் எப்படிப் பலியிடப்பட்டிருப்பார்?

பூவுலகையே புரட்டிப் போடவேண்டிய அணு ஒன்று அப்துல்லாஹ்வுக்குள் இருக்க அவர் எப்படி பலியாளாகப் போயிருப்பார்?

ஆளுமை மிக்க ஹாஷிமுக்குள் வந்து பெண்ணரசி போன்ற ஸல்மாவுக்குள் வாழ்ந்து கஅபாவின் பாதுகாவலர் அப்துல் முத்தலிபுக்குள் வளர்ந்து மங்கையர்க்கரசியான பாத்திமாவால் பாதுகாக்கப்பட்ட அணு அப்துல்லாஹ்வாக உயிர்ப்பிறவி எடுத்தது. பின் எப்படி அந்த மகத்தான மனிதர் ஹுபல் சிலை முன் பலியாளாகப் போவார்?

கோடானுகோடி கொள்கையாளர்களை வழி நடத்திச் செல்ல வேண்டிய ஓர் அற்புத அணு அப்துல்லாஹ்வுக்குள் இருந்ததாலேயே அவர் காப்பாற்றப்பட்டார்?

இறைவனின் எண்ணமே பிரதிபலிக்கும் நூறு ஒட்டகங்களின் பலியிடும் நிகழ்ச்சி மக்காவின் வரலாற்றில் மகத்தான சேதியொன்றைச் சொல்லிக் கொண்டே இருக்கும்!

## குறைஷியரின் வம்சாவளி

இபுறாகீம் நபிகளாரின் இளைய மனைவி ஹாஜிராவின் புதல்வர் இஸ்மாயில் நபிகளார்.

இஸ்மாயில் நபிகளாரின் வம்சாவளியில் வந்த பிஹ்ர், குறைஷி என அழைக்கப்பட்டார். இவரின் வம்சாவளியினர் மக்காவில் வாழ்ந்தார்கள். இவர்கள் குறைஷிகள் என அழைக்கப்பட்டார்கள்.

குறைஷிக்கு இரு புதல்வர்கள்; அவர்கள் பெயர் காலிப், அல்ஹாரித்.

அல்ஹாரித் கோத்திரத்தில் உதித்தவரே நபித்தோழர் அபூஉபைதா. இக்கோத்திரத்துக்குப் பின் வந்த வம்சாவளியினர் பட்டியல் கிடைக்கவில்லை. ஆனால் காலிப் என்பாரின் பட்டியல் அண்ணலார் வரை கிடைக்கிறது.

காலிபின் புத்திரர் லுஅய், லுஅயின் புத்திரர்கள் ஆமிர், கஅப் என இருவர். ஆமிர் கோத்திரத்தில் பிறந்தவர்தான் ஸுஹைல். ஸுஹைலின் மகள் உம்மு குல்தூமை மணந்த நபித்தோழர் அபூஸப்ராவும் ஆமிர் குலத்தவரே!

ஸுஹைலின் சகோதரர்கள் ஹாதில், ஸாலித், ஸக்ரான் ஆகியோர். சகோதரர்கள் இஸ்லாத்தில் இணைந்தபோது ஸுஹைல் இஸ்லாத்தில் இணையவில்லை! தபூக் போருக்குப்பின்தான் ஸுஹைல் இஸ்லாத்தில் இணைந்தார்.

ஆமிரின் இளவல் கஅப் கோத்திரம் நீண்ட பட்டியலைக் கொண்டது. கஅபுக்கு மூன்று சகோதரர்கள். அவர்கள் ஹுஸைஸ், அதீ, முர்ரா ஆகியோர்.

அதீ, நபித்தோழர் உமரின் கோத்திரம்.

ஹுஸைஸின் புதல்வர் அம்ர். அம்ரின் புதல்வர்கள் ஸஹ்ம், ஜுமாஹ், அம்ர் பின் ஆஸ் ஸஹ்ம் கோத்திரத்தார்... உமைமா உத்மான் பின் மஸ்வூனின் கோத்திரம் ஜுமாஹ்.

மூவரில் முர்ராவின் வம்சாவளிதான் நீண்ட பட்டியலைக் கொண்டது.

முர்ராவுக்கு மூன்று புத்திரர்கள். அவர்களின் பெயர் கிலாப், தையிம், யகாஸா என்பதாகும்.

தையிமின் கோத்திரத்தைச் சேர்ந்தவர்களே நபித்தோழர்கள் அபூபக்கரும் தல்ஹாவும். யகாஸாவின் புத்திரர் மக்ஸும். மக்ஸுமிய கோத்திரத்தாரே நபித்தோழர்கள் அபூஸலாமா, காலித் பின் வலீத் போன்றவர்கள். அபூஜஹ்லும் மக்ஸுமியே!

கிலாப் கோத்திரத்து வம்சாவளியினர் குஸையும், ஸுஹ்ராவும்.

அண்ணலாரின் தாயார் ஆமினா, அவருடைய ஒன்றுவிட்ட சகோதரர் ஸஅத், அப்துர் ரஹ்மான் பின் அவ்ப் ஆகியோர் ஸுஹ்ரா கோத்திரத்தாரே!

மற்ற எல்லா கோத்திரங்களும் மக்காவில் கிளைப்பரப்பி நிற்க மதீனாவிலும் கிளை பரப்பிய கோத்திரம் ஸுஹ்ரா!

குஸையின் புத்திரர்கள் நான்கு பேர். அவர்கள் அப்த் அத்தார், அப்து மனாப், அப்த், அப்துல் உஸ்ஸா ஆவர்.

நபித்தோழரும் அழைப்பாளருமான முஸ்அப், அப்த் அத்தார் கோத்திரத்தைச் சேர்ந்தவர். அப்த் வம்சாவளி விரியவில்லை. அப்துல் உஸ்ஸாவுக்கு அஸத் என்பார் வாரிசாக இருந்தார். அஸத் கோத்திரக் கொழுந்துகளே அன்னை கதீஜா, வரகாஹ், ஸுபைர் பின் அல் அவ்வாம் ஆகியோர்.

அப்து மனாபின் வாரிசுப் பட்டியலே மிக நீண்டது. அப்து மனாபுக்கு நான்கு வாரிசுகள். அவர்கள் அப்து ஷம்ஸ், ஹாஷிம், அல் முத்தலிப், நவ்பல் ஆகியோர். நவ்பலின் வம்சாவளியே முத்இம்மின் கோத்திரம். உத்பான் பின் அப்பான், அபூசுப்யான் ஆகியோர் அப்து ஷம்ஸ் கோத்திரம்.

ஹாஷிமின் மகன் அப்துல் முத்தலிப்புக்குத்தான் அதிகப் பிள்ளைகள்! அல்ஹாரித், ஸுபைர், அபூதாலிப், அபூலஹப், அப்துல்லாஹ், அப்பாஸ், ஹம்ஸா என எழுவரோடு மேலும், ஆறு ஆண் மக்களோடு பெண் மக்கள் ஆறுபேர்.

பெண்மக்களின் பெயர்கள்: பர்ரா, ஆதிகா, அர்வா, உமைமா, உம்மு ஹக்கீம், ஸபிய்யா.

ஹாஷிமின் புதல்வர்களில் ஒருவரான அப்துல்லாஹ்வின் புதல்வர்தான் எம்பெருமானாகிய நம்பெருமான்.

அண்ணல் எங்கள் ஆருயிர்!

# 4. பேரொளியின் பிறப்பு

## பெருமானார் பிறந்தர்

கஅபாவின் நூறு ஒட்டகங்களின் கழுத்துகள் அறுபட்டபோது மக்கமாநகரே மகிழ்ச்சிக் கடலில் ஆழ்ந்தது. ஒவ்வொரு வீடும் மலையாள மசாலா மணத்தில் திளைத்தது.

நூறு ஒட்டகங்களின் கறியும் ஆயிரக்கணக்கான இல்லங்களில் அடுப்பேறி மணக்க மக்காவே மணத்தது. சிறுவர் இளைஞர் பெரியவர் என எல்லோரின் மனமும் இனித்தது.

அப்துல் முத்தலிபின் வீட்டிலிருந்து புறப்பட்ட ஆனந்தப் பூங்காற்று உறவினர் அண்டை வீட்டார் எனப் பரவி மக்காவையே ஓர் ஊர்வலம் வந்தது.

அப்பூங்காற்று அப்துல்லாஹ்வின் அழகைச் சொன்னது; அகத்தைச் சொன்னது; ஆளுமையைச் சொன்னது; பண்பைச் சொன்னது; பண்பாட்டைச் சொன்னது. அப்துல்லாஹ்வைப் பற்றியே எல்லோரின் இல்லங்களிலும் பேசப்பட்டது. அப்துல்லாஹ்வைப் பற்றியே பேசி ஒட்டகக்கறி ருசியைப் பற்றிப் பேச மறந்தனர்.

அப்துல்லாஹ்வை மணாளராக அடைய பல பெண்கள் ஆசைப்பட்டனர்; சில பெண்கள் ஆசையை வெளியில் சொல்லினர். அவர்களில் ஒரு மங்கை நல்லாள் குதைலா.

குதைலா, வரகா இப்னு நவ்பலின் சகோதரி. வரகா, இபுறாகீம் நபிகளாரின் வழி நடந்து பின் கிறிஸ்துவரான மெய்ஞ்ஞானி.

குதைலா தன்னை மணக்கும்படி அப்துல்லாஹ்வை நேரடியாகவே கேட்டாள். அப்துல்லாஹ்வோ தந்தை சொல்மிக்க மந்திரமில்லை எனச் சொல்விட்டார்.

தந்தையோ தன் மகன் அப்துல்லாஹ்வுக்கு யத்ரிபிலிருந்த தாயாதி உறவுகளில் பெண் பார்த்திருந்தார். அரபகத்திலுள்ள பல்வேறு நகரங்களுக்கிடையே சம்பந்தங்கள் கொள்வினை கொடுப்பினைகள்

இருந்தாலும் மக்காவுக்கும் யத்ரிபுக்கும் இருந்த உறவுகள் சிறப்புக்குரியன. அதுமட்டுமல்ல, யத்ரிபே மக்காவுக்கு அடுத்த மகத்தான நகரம். இதை வரலாறு மெய்பிக்கின்றது.

அப்துல் முத்தலிப் அப்துல்லாஹ்வுக்கு யத்ரிபிலிருந்து ஆமினா எனும் மாதர்குல திலகத்தை மனைவியாக்க முடிவு செய்தார். ஆமினாவின் தந்தை வஹ்ப். இவர் குஸாஅவின் சகோதரரான ஸுஹ்ராவின் பேரன்.

ஸுஹ்ரா கோத்திரத் தலைவராய் விளங்கிய வஹ்ப் இறந்துவிட அவரது சகோதரர் உஹைப்பின் பொறுப்பில் இருந்தார் ஆமினா. ஆமினாவைத் தன் மகன் அப்துல்லாஹ்வுக்குப் பேசி முடித்த அப்துல் முத்தலிப் உஹைப்பின் மகள் ஹாலாவைத் தனக்காகப் பெண் கேட்டார்.

அன்றைய அரபுக் கலாச்சாரத்தில் இத்தகைய திருமணங்களெல்லாம் சர்வ சாதாரணம். ஆகவே உஹைப் சம்மதிக்க ஹாலா அப்துல் முத்தலிபின் மனைவியானபோதே அப்துல்லாஹ்வுக்கு ஆமினா துணைவியானார்.

கி.பி. 569இல் அப்துல்லாஹ்வை ஆமினா மணந்தபின் மக்கா வந்த தம்பதிகளுக்கு வாழ்க்கை வசந்தமாக இருந்தது.

திருமணம் முடித்து சில கிழமைகள் கழித்து அப்துல்லா ஒரு வணிகக் குழுவுடன் சிரியா சென்றார். திரும்பும் வழியில் தன் தந்தைவழிப் பாட்டி குடியிருந்த யத்ரிப் வந்தார். மாமனார் வீடும் அங்குதானிருந்தது. அவர் பாட்டி வீட்டில் தங்கினார். பயணக் களைப்பால் ஓய்வெடுத்த அவருக்கு அது நோயால் வந்த களைப்பு எனத் தெரிவதற்கு முன்பே பெரும் பயண அழைப்பு வந்து சேர்ந்தது. அவர் மரணம் அடைந்தார்.

உயிரைக் காக்க குறி கேட்டுவந்த ஊர், ஆமினா எனும் அறிவமுதத்தை மனைவியாகத் தந்த ஊர், பாட்டி ஸல்மாவின் பாரம்பர்யம் மிக்க ஊர் அப்துல்லாஹ்வுக்கு மரணத்தை அளித்த ஊராகியது.

மகனின் மரணச் செய்தி கேட்ட அப்துல் முத்தலிப் இடிந்து போனார். மனைவி ஆமினாவோ மனத்தளவிலேயே மடிந்து போனார்.

அப்துல்லாஹ் சிரியா சென்றிருந்தபோதுதான் யெமன் நாட்டிலிருந்து அப்ரஹா கஅபாவை அழிக்க படைநடத்தி வந்து தோற்று ஓடிப்போயிருந்தான். அதைப் பற்றி தன் மகன் அப்துல்லாஹ்விடம் சொல்லிச் சிரிக்கலாம் எனக் காத்திருந்த அப்துல் முத்தலிபுக்கு அழத்தான் முடிந்தது.

கஅபாவின் புகழையும் அங்கு வரும் யாத்ரீகர்களின் வருகையையும் பின்னுக்குத் தள்ள எண்ணிய யெமனை ஆட்சி செய்த அப்ரஹா எனும் அபிசீனிய ஆளுநன் மக்காவை நோக்கிப் படை நடத்தினான்.

ஆப்பிரிக்கக் காட்டிலிருந்து பெரும் இடர்ப்பாடுகளோடு யெமன் நாட்டுக்கு யானையைக் கொண்டுவந்த அப்ரஹா ஸன்ஆ பட்டணத்தில் ஒரு பெரும் தேவாலயத்தைக் கட்டி அரபுலகம் முழுவதையும் வணங்கிட அழைத்தான். அரபுகளில் பெரும்பாலானோர் வணங்க வராததோடு யாரோ ஒருவன் அந்த தேவாலயத்தை அசிங்கப்படுத்திவிட்டான்.

இதற்குப் பழிவாங்கவும் கஅபாவை அழித்துவிட்டால் ஸன்ஆ பட்டண தேவாலயம் பெரு மதிப்பு பெறும் என்பதற்காகவும் மக்கா நோக்கி யானையுடன் ஒட்டகம், குதிரைப்படைகளை நடத்தினான்.

மக்கா சென்ற அவனை எதிர்ப்பாரில்லை. எதிர்பாராத வகையில் புறப்பட்டுவந்த ஆயிரக்கணக்கான பறவைகள் அலகுகளிலும் கால்களிலும் கொண்டு வந்த சிறு சிறு கற்கள் அவர்களை அழிவுக்குள்ளாக்கின. அவர்கள் புறமுதுகிட்டு ஓடினார்கள்.

இந்த நிகழ்வைச் சொல்லக் காத்திருந்த அப்துல் முத்தலிபுக்கு மகனின் மரணச் செய்தி ஈரல் குலையைப் பறித்தது போலானது.

ஆமினாவோ அளவற்ற துன்பத்தோடு நடைபிணமானார். அப்போது அவர் கர்ப்பமுற்றிருந்தார்.

ஓர் இளம் பெண் தன் கணவனை இழப்பதென்பது வாழ்க்கையில் ஏற்படும் துன்பங்களிலெல்லாம் பெருந்துன்பம்.

அது மருந்தாகப் புகட்டப்படும் வேப்பெண்ணெய்யைப் போன்றது. அந்தக் கசப்பான துன்பம், அதைக்குடிக்கும்போது ஏற்படும் கசப்பைவிட அதன்பின் ஏற்படும் ஏப்பங்களில் வரும் மூக்கை முட்டும் கசப்பு வீரியமானது.

ஏப்பங்கள் போன்றதுதான் ஏற்படும் நினைவுகளும், அவை ஏற்படும்போதெல்லாம் எல்லையற்ற துன்பங்கள் அலைக்கழிக்கும். ஏப்பங்களின் தொல்லை ஒரு நாளில் தீர்ந்துவிடும். ஏக்க நினைவுகளின் தொல்லைகள் வாழ்நாளெல்லாம் நீடிக்கும்.

அப்துல்லாஹ்வின் நினைவுகளோடு வாழ்ந்து கொண்டிருந்த அன்னை ஆமினா ஓர் ஆண் மகவைப் பெற்றெடுத்தார். அன்று ரபிவுல் அவ்வல் மாதம் பன்னிரண்டாம் நாள். திங்கள் கிழமை கி.பி. 571 ஏப்ரல்.

அந்த ஆண்டில் இருந்துதான் அரபுகள் யானை ஆண்டைக்

கணக்கிடத் தொடங்கினர். மக்காவை நோக்கி யானைமுன் செல்ல பெரும்படை சன்ஆவிலிருந்து வந்த காரணத்தால் அவ்வாண்டு யானை ஆண்டு ஆனது.

பேரர் பிறந்ததை அறிந்த அப்துல் முத்தலிப் பெரும் மகிழ்ச்சியடைந்தார். குழந்தை பிறந்த ஏழாம் நாள் ஒட்டகம் ஒன்றை அறுத்து குறைஷிகளுக்குப் பெரும் விருந்தளித்தார். அவ்விருந்தின் பின் பிள்ளைக் கனியமுதுக்கு ‘முஹம்மது’ எனும் பெயரிட்டார்.

## பெருமானார் வளர்ந்தர்

பிள்ளைச் செல்வம் பிறந்த ஏழாம் நாள் விருந்தில் பெயர் சூட்டப்படும்போது ஒருவர் கேட்டார்: என்ன பெயரிது? குறைஷியரிடையே இல்லாத பெயராக இருக்கிறதே! எதற்காக இப்பெயர்? இயற்பெயராக இல்லையே! ஏனிந்தப் புகழ்ப்பெயர்? பட்டப் பெயராக இருக்கிறதே!

‘பிள்ளை பிறந்தபோதே முஹம்மது எனப் பெயர் சூட்டிவிட்டேன். இப்போது விருந்துக்கு வந்தவர் அறிய பெயரை அறிவித்திருக்கிறேன். புகழுக்குரியவர், புகழப்படுபவர், எல்லோராலும் விரும்பப்படுபவர் எனப் பொருள்படும் பெயரை என் பெயரன் நிச்சயம் நிறைவேற்றுவான்’ என அப்துல் முத்தலிப் பெருமிதத்தோடு சொன்னார்.

குழந்தை பிறந்து ஏழுநாள்கள் வரை அன்னை ஆமினா பாலூட்டினார். அதன்பிறகு அப்துல்லாஹ்வின் அண்ணன் அபூலஹபின் அடிமைப் பெண் சூயிபா பாலூட்டினார்.

அக்கால வழக்கப்படி அரபு உயர் குடிப் பெண்களின் பிள்ளைகள் கிராமப்புறங்களில் வளர்க்கப்பட்டு உரிய வயதை அடைந்தவுடன் தாய்மார்களிடம் ஒப்படைக்கப்பட்டார்கள். செவிலித்தாய்மார்கள் பிள்ளைகளுக்குப் பாலூட்டியும் நல்ல பழக்க வழக்கங்களைச் சொல்லிக் கொடுத்தும் தூய தாய்மொழி அரபியைக் கற்றுக் கொடுத்தும் வளர்த்தார்கள்.

அரபுலகில் ஆங்காங்கு இத்தகைய செவிலித்தாய்மார்கள் இருந்ததுபோல் மக்காவின் தென்கிழக்குப் பகுதியில் பனூசஅத் எனும் கோத்திரத்தார் இருந்தார்கள். இவர்கள் ஹவாஸின் கோத்திரக்கிளையாவர்.

இவர்கள் குறிப்பிட்ட காலத்தில் மக்காவுக்கு வரவில்லை. அப்போது வறட்சி வாட்டி வதைத்துக் கொண்டிருந்தது. மழையே

இல்லை.

காலந்தவறி பனூசஅத் ஆண்களும் பெண்களும் வந்தனர். அவர்களுள் ஹலீமா என்பாரும் அவருடைய கணவரும் இருந்தனர். ஹலீமா அபூதுவைபா என்பாரின் மகளாவார்.

ஆமினாவின் பிள்ளைச் செல்வம் ஹலீமா கைக்கு வந்தது. அப்துல் முத்தலிப் அவர்களோடு மனந்திறந்து பேசி ஆதரித்து உணவளித்து அனுப்பி வைத்தார்.

ஆமினாவின் பங்குக்கு அப்போது இருந்தவை ஐந்து ஒட்டகங்கள், சிறியதோர் ஆட்டு மந்தை, ஓர் அடிமைப்பெண். இதிலிருந்துதான் ஆமினாவின் ஜீவனமும் நடக்க வேண்டும். செவிலித்தாய்க்கும் கொடுக்க வேண்டும்.

ஆமினாவின் அருமைக் குழந்தை பனூசஅத்களின் பிரதேசத்துக்குப் போனபின்பு வறட்சி நீங்கி மழை பொழிந்தது. தோட்டம் துரவுகள் பசுமையாகின. கால்நடைகள் நன்கு வளர்ந்தன.

பேறுபெற்ற பிள்ளை பேரன்போடு வளர்க்கப்பட்டது. தொட்டிலிலும் கரங்களிலும் வளர்த்த பிள்ளை தரையில் தவழும்போதுகூட அதை செவிலித்தாய் கீழே அதிக நேரம் விட்டு விடுவதில்லை. மார்போடும் தோளோடும் வைத்துக் குழந்தையை வளர்ப்பதில்தான் அந்தச் செவிலித்தாய்க்கு நிறைவும் மகிழ்வும் ஏற்பட்டது.

தவழ்ந்த பிள்ளை நடந்தது; ம், அம், உம் என்ற பிள்ளை உம்மா என்றது. வயது இரண்டானபோது ஹலீமா பிள்ளைச் செல்வத்தை அதனுடைய தாயாரிடம் ஒப்படைக்க மக்கா வந்தார்.

பிள்ளையைப் பார்த்த தாயாரும் பாட்டனாரும் பெருமகிழ்ச்சி அடைந்தார்கள். வாரியணைத்து முத்தமிட்டார்கள்.

செவிலித்தாய்க்கு சன்மானம் வழங்கினார்கள். சிந்தை குளிர்ந்த செவிலித்தாய் தயங்கித் தயங்கி ஏதோ கூற முயன்றார்.

அன்னை ஆமினா என்னவென்று கேட்க ஹலீமா மீண்டும் ‘தானே பிள்ளையைக் கொண்டு சென்று வளர்க்கட்டுமா?’ எனத் தன் விருப்பத்தைச் சொன்னார். அதன்படி சில காலம் பனூ சஅத் பிரதேசத்தில் வளர்ந்த பிள்ளை மீண்டும் மக்கா வந்தது.

மக்காவில் தாயாரின் அரவணைப்பிலும் பாட்டனாரின் ஆதரவிலும் வளர்ந்தார். ஒன்றுவிட்ட சகோதர சகோதரிகளும் உறவுக்

குழந்தைகளும் விளையாட்டுத் தோழர்களாக இருந்தனர்.

வயது ஆறு ஆனபோது அன்னை ஆமினாவும் அருமைப் பிள்ளையும் தம் உறவுகளைக் காண யத்ரிப் சென்றனர். ஒரு பயணக்குழு சிரியா சென்றபோது அவர்களுடன் ஆமினா ஓர் ஒட்டகத்திலும் அவருடைய அன்பு நிறைந்த அடிமை பராகாஹ்வும் சிறுவரும் மற்றொரு ஒட்டகத்திலும் பயணம் செய்து யத்ரிபை அடைந்தனர்.

அங்கு சில நாட்கள் தங்கியிருந்தவர்கள் இறந்துபோன அப்துல்லாஹ்வின் மண்ணறையைக் கண்டு தரிசித்தனர். தாயார் பழைய நினைவுகளில் மூழ்கியிருக்க தனயன் யத்ரிப் சிறுவர்களோடு பழகி விளையாடிக் கொண்டிருந்தார்.

அப்போதுதான் அவர் கஸ்ரஜ் உறவினர் ஒருவரின் தடாகத்தில் நீந்தக் கற்றுக் கொண்டார்; பிள்ளைப் பிராய உறவினர்களோடு சேர்ந்து பட்டம் விடக் கற்றுக் கொண்டார். பனூசஅத் பிரதேசத்தில் ஆடுமேய்க்கும் சிறுவர்களோடும் செம்மறியாடுகளோடும் வளர்ந்த சிறுவருக்கு அதற்கு மாற்றமான யத்ரிப் வாழ்க்கை மிகவும் பிடித்துப் போயிருந்தது.

அவர்கள் திரும்பி வரும் வழியில் காய்ச்சல் கண்ட ஆமினா மிகவும் சுகவீனமுற்றார். வரும் வழியில் அப்வா எனுமிடத்தில் மரணமடைந்தார்.

என்னே கொடுமை! உறவுகளும் தெரிந்தவர்களும் யாருமில்லாத பிரதேசத்தில் தாயார் இறக்க, சிறுவருக்கு ஏற்பட்ட துன்பம் அளவிட முடியாதது. உடன்வந்த பரகாஹ் சிறுவருக்கு ஆறுதல் மொழி கூறி தேற்றினார்.

ஆமினாவை அப்வாவிலேயே புதைத்து விட்டு சிறுவரும் பரகாவும் மக்கா திரும்பினர். இப்போது சிறுவர் பாட்டனார் அப்துல் முத்தலிபின் பொறுப்பில் வளரத் தொடங்கினார்.

சிறுவர் ஏழுவயதை எட்டியபோது பாட்டனாருக்கு எண்பது வயது. இருவரும் எப்போதும் ஒன்றாகவே காணப்பட்டார்கள். முதியவர் சிறுவருக்கு பெற்றோரைப் போலவும் ஆசானைப் போலவும் விளங்கினார்.

விளையும் பயிர் முளையிலேயே தெரியும் என்பர்; சிறுவர் அதைமெய்ப்பிப்பதுபோல் வளர்ந்தார். பாட்டனார் பல்வேறு வரலாறுகளையும் கதைகளையும் கூற பெயரனார் தன்னுடைய சந்தேகங்களைத் தயங்காது கேட்டார். சில சமயங்களில் பாட்டனார் சிறுவரிடம் ஆலோசனைகள் கூட கேட்பதுண்டு.

எட்டாவது வயதில் பாட்டனாரின் மரணத்தறுவாயில் சிறுவர் பெரிய தந்தையருள் ஒருவரான அபூதாலிபிடம் ஒப்படைக்கப்பட்டார்.

அபூதாலிபும் சிறுவரின் தந்தை அப்துல்லாஹ்வும் ஒரு தாய் மக்கள். பாட்டனாரிடம் கிடைத்து வந்த அன்பு, பாசம், ஆதரவு அனைத்தும் அபூதாலிபிடம் கிடைத்தன. தாயாரில்லாத குறையை பெரிய தாயார் பாத்திமா நிறைவு செய்தார். அவர்கள் தம் பிள்ளையைவிட மேன்மையாக சிறுவரை வளர்த்தனர்.

## மந்தை வெளியிலிருந்து சந்தை வெளிக்கு....

ஆடுமேய்ப்பவர்களுக்கு கிடைக்கும் அனுபவம் அலாதியானது. மாக்களின ஆடுகளுக்கும் மக்களினமாகிய நமக்கும் இடையிலான வித்தியாசங்களைப் புரிந்து கொள்ள அந்த அனுபவம் உதவும்.

தமிழில் ஆட்டை தகர் என்றனர். அதிலிருந்து பிறந்த சொல்தான் தகராறு. தகராறு என்றால் தகரின் ஆறு. ஆறு என்றால் வழி. ஆட்டின் வழி தகராறு. இச்சொல்லாக்கம் ஆடுகளை மேய்த்த அனுபவத்திலிருந்து கிடைத்தது. ஆடுகள் இரண்டு எதிரெதிரே வரும்போது விலகி வழிகொடுக்காது; இரு ஆடுகளுமே வழிவிடாத நிலையில் மோதல் ஏற்படும்; இரண்டுமே தலைகளால் முட்டிக் கொள்ளும். இதையே தமிழர் தகராறு எனக் குறிப்பிட ஆரம்பித்தனர்.

இதுபோன்ற பல்வேறு அனுபவங்கள் ஆடுமேய்த்தலில் கிடைக்கும்.

செம்மறியாடுகள் வெள்ளாடுகளைவிட அறிவு குறைந்தவை. மேயும் செம்மறியாடுகள் எதிரில் சிறு கால்வாய் வருமாயின் அவை அதைத் தாண்டாது நிற்கும். இதற்காகவே இடையர்கள் செம்மறியாடுகளிடையே இரு வெள்ளாடுகளை மந்தையில் சேர்த்திருப்பார்கள். வெள்ளாடுகள் கால்வாயைத் தாண்டிவிடும். அதைப் பார்த்துச் செம்மறியாடுகளும் தாண்டும்.

ஆடுகளை மேய்ப்பவர்கள் இயற்கை அறிவை அதிகமாகப் பெற்றிருப்பர். காடு கழனிகள், தோட்டந்துரவுகள் போன்றவற்றில் அறிவுகளைப் பெற்றிருப்பதைப்போல விண்வெளியைப் பற்றிய அறிவுகளையும் அதிகம் பெற்றிருப்பர்.

மாக்களை மேய்க்கும் திறமை பெற்றவர்கள் மக்களை மேய்க்கும் திறமையில் வலுவானவர்களாக இருப்பார்கள் என்பதாலோ, இறைத்தூதர்களில் பலர் நல்ல மேய்ப்பர்களாக இருந்திருக்கிறார்கள்.

இபுறாகீம் நபிகளாரிடமிருந்து ஈஸா நபி வரை பலரும் ஆடு மேய்த்தலைத் தொழிலாகக் கொண்டவர்களே! அவர்களைப் போலவே சிறுவர் முஹம்மதும் ஆடு மேய்ப்பதைத் தொழிலாகக் கொண்டார்.

கற்பதற்குக் கல்விச் சாலைகள் இல்லாத குறையை காடும் காற்றுவெளியும் நிறைவு செய்தன. அவை திறந்தவெளிப் பல்கலைக் கழகங்கள்.

குருவிகள், புறாக்கள், பருந்துகள், ராஜாளிகள், கழுகுகள், முயல்கள், மான்கள் எல்லாம் ஆடு மேய்க்கும் சிறுவர்களுக்குப் பாடம் சொல்லிக் கொடுத்தன.

இவ்வாறு பாடங்களைக் கற்றபடியே சிறுவர் முஹம்மது ஆடுகளை மேய்த்தார். ஆட்டிடையரின் குரலும் கோலும் ஆடுகளை மேய்க்கும் அற்புதப் பொருள்கள்.

நூறு ஆடுகள் இருந்தாலும் அவற்றின் அடையாளத்தை இடையர் அறிவர். ஆடொன்று காணாமல் போய்விட்டால் அந்த ஆடு எதுவென்பதைக் கண்டு கொள்ளும் ஆற்றல் அவர்களுக்கு இருந்தது.

முஹம்மது எனும் சிறுவர் இளைஞராகிக் கொண்டிருந்தார். அப்போது அவருக்கு மக்காவைச் சுற்றியுள்ள மலைகள், குன்றுகள், தோட்டந்துரவுகள், மேய்ச்சல் காடுகள் எல்லாமே தெரிந்திருந்தன.

இயற்கையின் தொடர்பும் ஆடு மேய்த்தலும் தொடக்கக் கல்வியென்றால் மேற்படிப்பு ஊர்களைக் கடந்த வணிகம்.

முஹம்மதெனும் சிறுவர் இளைஞராகியிருந்தார். பெரிய தந்தை அபூதாலிப் செய்துவந்த வணிகத்துக்குத் தானும் துணையாக இருப்பதென்று எண்ணம் கொண்டார்.

அவர் தம்முடைய எண்ணத்தைத் தந்தையிடம் சொல்ல மகனை தந்தை வணிகத்துக்காக சிரியாவுக்குச் சென்றபோது உடன் அழைத்துச் சென்றார். மேற்படிப்பு ஆரம்பமானது, புதிய புதிய அனுபவங்கள் கிடைத்தன.

மக்காவிலிருந்து சிரியாவுக்குச் செல்ல இரு பாதைகள் இருந்தன. ஒரு பாதை மக்காவிலிருந்து நேர் வடக்காகச் செல்லும். அந்தப் பாதை யத்ரிப் சென்று வாதி அல்குராஅ, பனூ குதாஅ பிரதேசம் வழியாக சிரியா செல்லும். இன்னொரு பாதை செங்கடலை ஒட்டி அமைந்தது. அது யத்ரிபைத் தொடாமல் பனூ ஜுஹைனா வழியாக பனூ பலி பிரதேசம் சென்று சிரியாவை அடையும். முதல் பாதையிலேயே

பெரும்பாலான பயணங்கள் நடந்தன. இரண்டாவது பாதையில் பயணம் செய்ய 100 மைல்களை அதிகம் கடக்க வேண்டும். மக்காவிலிருந்து செங்கடல் பாதையை அடைய 50 மைல்கள், பின் வடக்கே பயணித்து வட கிழக்கில் சிரியாவை அடைய 50 மைல்கள் என 100 மைல்கள்.

அபூதாலிபும் அருமைப் புதல்வரும் பயணித்த வணிகக் குழு முதல் பாதையிலேயே நேர் வடக்காகச் சென்றது. அக்குழு யத்ரிப் செல்லும்வரை பயணித்த பாதை ஏற்கெனவே முஹம்மத் அறிந்திருந்த பாதைதான். வாதி குராஅவிலிருந்து தொடர்ந்த சிரியாவுக்கான பாதை புதிய பயணிக்குப் புதுமையாகத் தெரிந்தது.

பயணம் செய்தும் தங்கியும் உண்டும் உறங்கியும் நாற்பது நாட்களுக்கும் மேலாகச் சென்றவர்கள் சிரியாவை அடைந்தனர். கொண்டு சென்ற பொருள்களை விற்றவர்கள் கொள் முதல் செய்தனர்.

அங்கு பல்வேறு ஆசிய முகங்களோடு சில கறுப்பு வெள்ளை முகங்களும் தென்பட்டன. பல்வேறு கலாச்சாரங்களைக் கொண்ட மக்கள் வணிகம் செய்வதற்காக குழுமியிருந்தார்கள். ஒட்டகங்களே அதிகமாகத் தெரிந்தன. குதிரைகள் சிலவும் காணப்பட்டன.

புதிய பயணிக்குப் பல புதிய அனுபவங்கள் கிடைத்தன. சிரித்த முகம், சிரிக்காத முகம், கருத்த முகம், கனத்த முகம், சிறுத்த முகம், சிந்தனையைத் தேக்கிய முகம், ஆசை முகம், அழகு முகம் என பல்வேறு முகங்களின் தரிசனம் அங்கே கிடைத்தன.

மனிதரில் இத்தனை முகங்களா? இத்தனை நிறங்களா?

சிரியாவில் வணிகத்தை முடித்து மக்கா திரும்பிக் கொண்டிருந்தபோது அபூதாலிப் குழுவினர் புஸ்ரா எனும் ஊருக்கருகிலுள்ள கிறிஸ்துவ மடலாயத்தைக் கடந்தனர்.

அப்போது வணிகக் குழுவினரோடு திரும்பி வந்துகொண்டிருந்த புதிய பயணிக்கு மடாலயம் அருகிலுள்ள மரக்கூட்டத்தின் கீழ் தங்கியிருந்தபோது நடந்த நிகழ்வு நினைவுக்கு வந்தது.

அப்பயணத்தில் எப்போதும் இல்லாத முறையில் மடாலயத் தலைவர் பஹீரா வணிகக் குழுவினருக்கு விருந்தளித்தார். அவ்விருந்தில் அனைவரும் கலந்து கொள்ள புதிய பயணி பொருள்களுக்குக் காவலாய் விடப்பட்டார்.

விருந்துண்ண அனைவரும் வருகை தந்திருக்க ஒருவர் மட்டும் மரத்தடியில் இருப்பதைக் கண்ட பஹீரா அவரையும் அழைத்துவரச்

செய்தார்.

புதிய பயணி வந்தார், விருந்துண்டார். அவரை உற்றுக் கவனித்த பஹீரா புதிய பயணியான இளைஞரைப் பற்றி விசாரித்தார்.

விசாரித்தபின் சொன்னார்: இந்த இளைஞருக்குள் திறமைகள் பொதிந்து கிடக்கின்றன. அறிவொளி வீசும் இவருடைய கண்கள் வருங்காலத்தில் அரபுலக இருளைப் போக்கும். இவரைக் கண்ணும் கருத்துமாக வளர்த்துக் காப்பாற்றுங்கள்.

பஹீரா, அப்போது சொன்னது புதிய பயணிக்கு இப்போது நினைவுக்கு வந்தது.

‘சிரியாவின் சந்தையில் பார்த்த நூற்றுக்கணக்கானவர்கள், மக்காவில் இருக்கின்ற ஆயிரக்கணக்கானவர்களிலிருந்து தான் மட்டும் வித்தியாசமானவனா!’ என எண்ணியபடி புதிய பயணி புஸ்ராவைக் கடந்தார்.

மனிதரில் புதிய பயணிக்கு என்ன முகம்? என்ன நிறம்?

## முயற்சிகளும் பயிற்சிகளும்

சிரியாவிலிருந்து திரும்பியவுடன் இளைஞர் முஹம்மது ஆட்டுக் கிடைகளைக் கண்காணிக்கவும் ஒட்டகங்களை மேய்க்கவும் தொடங்கினர்.

வானத்தைப் படுத்துக் கொண்டு பார்ப்பதிலும் வெட்டவெளியில் அமர்ந்துகொண்டு தொடுவானத்தைக் காண்பதிலும் இளைஞருக்கு அதிகப் பிரியம். அதுவும் மாலைநேர மேற்குத் திசையைப் பார்ப்பதில் ஆர்வம் அதிகம். அரபகத்தில் அந்திச் சூரியன் மிகமிக அவசரமாகத் தன் நடையைக்கட்டும் அழகு அடடா! அது அழகின் சிரிப்பு.

பெரிய தந்தை அபூதாலிப் ஏற்பாட்டால் சிறிய தந்தையர் அப்பாஸ், ஹம்ஸா போல வீரராக இளைஞருக்கு போராயுதங்களைப் பயன்படுத்தப் பயிற்சியளிக்கப்பட்டது. வாள்வீச்சில் வல்லவராய்த் திகழ்ந்தார். இளைஞர் வில்வித்தையில் சிறந்து விளங்கினார். குறிபார்த்து எதையும் வீழ்த்துவதற்கு அவருடைய பார்வைத்திறன் மிகவும் உதவியது. நட்சத்திரங்களைக் கண்டு அவற்றை அடையாளம் காட்டுவதில் அவர் வல்லவராயிருந்தார். பயணங்களில் திசையறிய நட்சத்திரங்களே உதவின.

தொடக்கத்தில் பெரிய தந்தை உதவியோடு ஒட்டகத்தின் மேலேறிய

இளைஞர் தானாகவே ஏறியமர்ந்தார். பின் போர்கலையைக் கற்றபோது குதிரையேற்றத்திலும் கவனம் செலுத்தினார். அரபகத்தில் ஆடுமேய்த்தலையும் வணிகத்தையும் மட்டும் கற்றிருந்தால் போதாது; போர்புரியவும் கற்றிருந்தால்தான் முழு அரபியாக முடியும்.

போர்க்கலை கற்றால் மட்டும் போதாது; போரைக் காண வேண்டும்; போரில் கலந்து கொள்ளவும் வேண்டும் என எண்ணிய அபூதாலிபும் ஸுபைரும் தம் தம்பி மகனை ஒரு போருக்குக் கூட்டிச் சென்றனர்.

இப்போர் நஜ்தின் ஹவாஸின்களது ஆமிர் கோத்திரத்தாருக்கும் கைபரைச் சேர்ந்த கினானா கோத்திரத்தாருக்கும் நடந்தது. புனிதமிழந்த யுத்தங்களில் ஒன்று இது. வம்புச் சண்டைக்குப் பதிலாக எழுந்த யுத்தம் என்றால் மிகையாகாது.

கினானா கோத்திரத்தைச் சேர்ந்த வம்பன் ஒருவன் கபடமான முறையில் நஜ்தைச் சேர்ந்த ஆமிர் கோத்திரத்தவர் ஒருவரைக் கொலை செய்துவிட்டான். பின்னர் அந்த வம்பன் கைபர் பிரதேசத்துக்கு வந்து ஒரு பாதுகாப்பான கோட்டைக்குள் புகுந்துகொண்டான். அவனைப் பழிவாங்கப் புறப்பட்டு வந்த ஆமிர் கோத்திரத்தார் கினானாவை முற்றுகையிட்டனர்.

கினானா கோத்திரத்தார் குறைஷியருக்கு வேண்டியவர் என்பதால் அநியாயக்காரர்களின் பக்கம் நின்றனர். பண்டைய அரபுகள் நீதி பார்க்க மாட்டார்கள், சாதியையே பார்ப்பார்கள் என்பதற்கு இந்தப் போர் ஓர் எடுத்துக்காட்டு.

நான்காண்டுகள் இப்பழிவாங்கும் போர் தொடர்ந்தது. அவ்வப்போது நடந்த போரில் பெரிய தந்தையரோடு இளைஞரும் கலந்துகொண்டார். இளைஞர் நேரடியாக போர் செய்யாவிட்டாலும் எதிரிகளின் அம்புகளில் குறிதவறி வீழ்ந்தவற்றை எடுத்துப் பெரிய தந்தையரிடம் கொடுத்தார்.

பின்னர் தொடர்ந்து நடந்த ஒரு போர், ஃபிஜார் யுத்தம். குறைஷிக் குலத்தாருக்கும் கைஸ் குலத்தாருக்கும் நடந்த இப்போரில் மாறி மாறி வெற்றிகள் கிடைத்தன. குறைஷியரும் அவரைச் சார்ந்தோரும் தோல்வியுறும் நிலையில் இளைஞர் வில்லெறிய அனுமதிக்கப்பட்டார். அப்போரில் அவருடைய வீரமும் திறமையும் வெளிப்பட்டன. இறுதியில் இருகுலங்களும் சமாதானம் செய்துகொண்டன.

இத்தகைய போர்களுக்குப் பின் குறைஷியர் சிந்திக்கத்

தொடங்கினர். ஓர் அரபியர் பாதிக்கப்பட்டால் அவரும் அவரைச் சார்ந்தோருமே அலைய வேண்டியுள்ளது. சண்டைகள் செய்ய வேண்டியுள்ளது. ரோமர்களின் ஆட்சியிலுள்ள சிரியாவிலும் அண்டைய நாடான அபிசீனியாவிலும் இதற்கான முறையான அமைப்புகள் உள்ளன. அதைப்போல் நாமும் செய்தால் என்ற எண்ணம் ஏற்பட சில குறைஷியர் சிரியா சென்று நீதி பரிபாலனம் பற்றித் தெரிந்து வந்தனர்.

இதன் பின்னர் நடந்த ஒரு நிகழ்ச்சி, சிந்தனையில் மலர்ந்த அமைப்பைச் செயல்வடிவாக்கும் உந்துதலைத் தந்தது. அந்த அமைப்புதான் ‘ஹில்ஃபுல் ஃபுளூல்’ என்பதாகும்.

ஹில்ஃபுல் ஃபுளூல் அமைக்க இன்னொரு நிகழ்ச்சியும் காரணமாகியிருந்தது.

யெமனின் துறைமுகமான ஸாபித்திலிருந்து வந்த ஒரு வணிகர் பெருமதிப்புமிக்க பொருள்களை ஸஹ்ம் கோத்திரத்தார் ஒருவருக்கு விற்பனை செய்தார். வாங்கியவர் விற்றவருக்கு பொருளுக்குரிய தொகையைக் கொடுக்காமல் ஏமாற்றிவந்தார்.

தொலைவிலிருந்து வந்தவர் மக்காவில் எவ்விதத் தொடர்புமில்லாதவர் என்ற தைரியத்தில் ஸஹ்மி, ஸாபித் வணிகரை ஏமாளியாக்க முயன்றார். ஸாபித்காரர் ஸஹ்மியிடமிருந்து தொகையைப் பெறாமல் விடுவதில்லையென்ற உறுதியோடு பலமுறை கேட்டுப் பார்த்தார். இறுதியில் அரபுக்களின் வழக்கப்படி அபூகுபைஸ் குன்றின் மீதேறி நின்று நீதிகேட்டார். குறைஷிக் கூட்டத்தார் குன்றைச் சூழ்ந்துவிட்டனர்.

கோத்திரப் பிரிவினைகள் இருந்தாலும் ஒன்றாகிவிடும் குறைஷியர் ஸஹ்மியின் பிரச்னையில் ஒன்று சேரவில்லை. உடனடியாக ஸஹ்ம் கோத்திரத்தோடு ஒப்பந்தம் செய்து கொள்ளாதவர்கள் பாதிக்கப்பட்டவருக்கு உதவ முன்வந்தனர். அடுத்து, நீதியைப் பார்க்காது சாதியைப் பார்த்துக்கொண்டிருந்த பலரும் நீதியைப் பாதுகாக்க ஒன்று சேர்ந்தனர்.

‘மக்கமா நகரில் யார் யாருக்கு அநீதி இழைத்தாலும் குறைஷியர் சமுதாயம் மொத்தமும் சேர்ந்து நீதிக்காகப் போராடும். குறைஷிக் குலத்தவராயினும் பிறராயினும் பாதிக்கப்பட்டவர்களின் பக்கமே மக்கமா நகரம் நிற்கும்’ என்ற தீர்மானம் அப்துல்லாஹ் இப்னு ஜுத்ஆனுடைய இல்லத்தில் நிறைவேறியது. ஜுத்ஆன் தையிம் வம்சத் தலைவர்.

ஜுத்ஆனின் ஒன்றுவிட்ட சகோதரர் அபூகுஹாபா தன் மகனுடன் அங்கு வந்திருந்தார். அந்த மகன்தான் பின் நாளைய அபூபக்கர் சித்தீக். அண்ணலாரின் உயிர்த்தோழர்.

அந்தக் கூட்டத்துக்கு ஹாஷிம் வம்சத்து ஸுபைர் தன் தம்பி மகனுடன் வந்திருந்தார். அந்தத் தம்பி மகன்தான் முஹம்மது எனும் இளைஞர்.

ஜுத்ஆனின் இல்லத்துக் குறைஷிகளின் தீர்மானத்துக்குப் பின் ஸஹ்மீ தனது கடனைச் செலுத்தப் பலவந்தப்படுத்தப்பட்டார்.

‘ஹில்ஃபுல் புளூல்’ அமைக்கப்பட்டு அறிவிக்கப்பட்ட தீர்மானங்கள் ஐந்து.

அமைதியையும் பாதுகாப்பையும் மக்காவில் நிலைநாட்டல், மக்கா வரும் பயணிகளைப் பாதுகாத்தல், ஏழை எளியவரைப் பேணுதல், குற்றமற்றவர் பாதிக்கப்பட்டோரை ஆதரித்தல், அக்கிரமக்காரனை நகரை விட்டு அகற்றுதல் என ஐந்தையும் தன்னுடைய தீர்மானங்களாக அறிவித்தது ஹில்ஃபுல் புளூல்.

அண்ணலாரின் வாழ்வில் இவ்வமைப்பு ஒரு மாதிரி இயக்கமாகும். தொட்டில் மரம் போன்ஸாய் போன்றதாகும். வருங்காலத்தில் இஸ்லாம் என்னும் மிகப் பெரிய ஆலமர இயக்கத்தைக் கட்டுவிக்க மாதிரியாக அமைந்தது தான் ஹில்ஃபுல் புளூல். பிற்காலத்தில் அண்ணலார் ஹில்ஃபுல் புளூல் இயற்றிய தீர்மானத்தைப் பற்றி நினைவு கூரும்போது ‘இந்த ஒப்பந்தத்துக்குப் பதிலாக பத்து சிவப்பு ஒட்டகங்கள் தந்தாலும் வாங்கிக் கொண்டிருக்க மாட்டேன். அத்தகைய ஒப்பந்தத்துக்கு இன்று கூட எவர் அழைத்தாலும் அதற்கு உடன்படத் தயாராக உள்ளேன்’ எனக் கூறினர்.

## 5. அகமும் புறமும்

### கதீஜாவின் கைத்தலம் பற்றினார்

இளைஞர் சிறந்த வணிகராகியிருந்தார்.

பெரிய தந்தை அபூதாலிபுவுக்கு துணையாகச் சென்ற மகன் தனது இருபத்தைந்தாவது வயதில் வணிகத்தில் தந்தைக்கு இணையாக விளங்கினார். பத்தாண்டுக்கும் மேலான சிரியா அனுபவத்தில் வணிக இலக்கணத்தைக் கற்றுத் தேர்ந்திருந்தார்.

அபூதாலிபுவுக்கு மகனை வணிகத்தில் மேலும் சிறந்து விளங்கச் செய்யவேண்டும் என்கிற ஆசை வந்தது. அதற்காக மக்கமா நகரில் குலத்தாலும் வணிகத்தாலும் சிறந்து விளங்கிய செல்வச் சீமாட்டியைச் சந்திக்க சென்றார்.

அந்தச் சீமாட்டியின் பெயர் கதீஜா. அஸத் கோத்திரத்து குவைலித் என்பாரின் மகள். வரகா இப்னு நவ்பலின் ஒன்றுவிட்ட சகோதரி. ஹாஷிமின் வம்சாவளியைச் சேர்ந்தவர்.

இரு கணவன்களை அடைந்திருந்த கதீஜா அப்போது கைம்பெண்ணாக இருந்தார். அபூதாலிபு கதீஜாவிடம் சென்று தன் எண்ணத்தைச் சொன்னார். கதீஜாவுக்கும் ஒரு நல்லதோர் வணிகச் செயலர் தேவைப்பட்டதால் அபூதாலிப் சொன்னதை அவர் ஏற்றுக் கொண்டார்.

அடுத்த சில நாட்களில் புறப்பட்ட கதீஜாவின் வணிகக் குழுவின் தலைவராக அண்ணலார் புறப்பட்டார். உடன் துணைப் பணியாளராக மைஸரா என்பார் சென்றார்.

பயணங்கள் தொடர்ந்தன.

கொள்முதல், விற்றுமுதல் எல்லாமே லாபத்தைத் தந்தன. நல்லதோர் முதலாளி, நல்லதோர் செயலாளர், நல்லதோர் பணியாளர். எல்லாமே நலமாக நடந்தன.

பயணத்தில் ஒரு நாள்.

வழக்கம்போல் புஸ்ராவுக்கு அருகிலுள்ள கிறிஸ்துவ மடாலயத்தின் அண்மையிலுள்ள மரக் கூட்டங்களிடையில் வணிகக் குழு தங்கியது. வழக்கம்போல் மக்கத்து வணிகக் குழுக்கள் தங்கும் இடம் அதுதான். சில ஆண்டுகளுக்கு முன் பெரிய தந்தையுடன் பயணித்தபோது அங்கு பஹீரா என்னும் துறவியிருந்தார். காலம் மாற அங்க நெஸ்டோர் என்னும் துறவி பதவியிலிருந்தார்.

மடத்தை விட்டு வெளியே வந்த நெஸ்டோர் மைஸராவை அழைத்து ‘உங்கள் குழுவின் தலைவர் யார்?’ எனக் கேட்க, மைஸரா விரலை நீட்டி அண்ணலாரை அடையாளம் காட்டினார்.

‘அவர் பெயரென்ன?’ எனத் துறவி கேட்க ‘அவர் பெயர் முஹம்மது, குறைஷிக் குலத்தவர். அவர்கள் வகையறாதான் கஅபாவின் பாதுகாவலர்கள்’ என மைஸரா கூறினார்.

‘அவரை சென்றமுறையும் பார்த்து அவதானித்தேன். இப்போதும் அவரை நன்கு கவனித்தேன். அவர் அரபுகளிடையே வந்துள்ள இறைத் தூதரென உறுதியாக நம்புகிறேன். அதற்குச் சில அடையாளங்கள் அவரிடம் இருக்கின்றன’ என நெஸ்டோர் சொன்னார்.

மைஸரா ஆச்சர்யப்படவில்லை. அவர் அண்ணலாரோடு பழகியதில் பல வித்தியாசமான பழக்க வழக்கங்களை அறிந்திருந்தார். மக்கத்து மனிதர்களிடையே அண்ணலார் அதிசயமானவர் என்பதைப் புரிந்திருந்தார்.

சிரியாவின் சந்தையில் விற்றுக் கிடைத்த நல்ல லாபத்தையும் முதலையும் கொண்டு பெருமளவில் பொருள்களை வாங்கிக் கொண்டு மக்கமா நகர் திரும்பினர்.

வழக்கத்தை விட அதிக லாபம் கிடைத்திருப்பதை அறிந்த கதீஜா அண்ணலாருடன் நீண்ட நேரம் பேசிக்கொண்டிருந்தார்.

அண்ணலாரின் இளமையும் கம்பீரமும் நேர்மையும் அருள் நிரம்பிய தோற்றமும் கதீஜாவின் உள்ளத்தைக் கவர்ந்தன.

அண்ணலார் விடைபெற்றுச் சென்றபின் மைஸரா வந்து, துறவி நெஸ்டோர் சொன்னதை கதீஜாவிடம் கூறினார்.

ஒருவரை, முகத்தைப் பார்த்தும் பேச்சைப் பார்த்தும் செயலைப் பார்த்தும் மதிப்பிடலாம். மூன்றைப் பார்த்தும் மதிப்பிட்ட கதீஜாவுக்கு அண்ணலார் பொருத்தமானவராகத் தெரிந்தார். ஒன்றே ஒன்றுதான் வித்தியாசப்படுகிறது, அது வயசு. அண்ணலாருக்கு வயது

இருபத்தைந்து; அன்னைக்கோ வயது நாற்பது.

வயதைப் பற்றிச் சிந்தித்த கதீஜா அதைப் பற்றிக் கவலைப்படாமல் தன்னுடைய தோழி நபீஸாவிடம் கலந்தாலோசித்தார். தன் தோழிக்குத் திருமண ஆசை வந்ததைப் பற்றிப் பெரிதும் மகிழ்ந்த நபீஸா அடுத்தடுத்த பணிகளில் இறங்கினார்.

அண்ணலாரைச் சந்தித்த நபீஸா ‘ஏன் இன்னும் நீங்கள் மணம் முடிக்கவில்லை?’ எனக் கேட்க ‘அதற்குப் போதிய வசதி வர வேண்டாமா?’ என அண்ணலார் எதிர்க் கேள்வி கேட்டார்.

‘தேவையானவற்றையெல்லாம் தந்து செல்வம், மதிப்பு, மரியாதை அனைத்தும் நிறைந்த மங்கை நல்லாள் கிடைத்தால் மணக்கச் சம்மதமா?’

‘அம்மங்கை நல்லாள் யார்?’

இரண்டு கேள்விகளுக்கும் பதிலாக இரண்டு கேள்விகள். மூன்றாவதாக நபீஸா மொழிந்தது தான் உரிய பதிலாக இருந்தது.

‘கதீஜா’ என்ற பதிலுக்கு ‘நடக்கக் கூடிய செயலா அது?’ என்ற கேள்வி எழுந்தது.

‘நான் நடத்தி வைக்கிறேன்’ என்ற நபீஸாவிடம் அண்ணலார் தம் பெரிய தந்தை அபூதாலிபுடன் ஆலோசனை செய்வதாக மொழிந்தார்.

அபூதாலிப் தம் சகோதரர் ஹம்ஸாவை அண்ணலார் கதீஜா திருமணம் நடத்திட ஆவன செய்யும்படிக் கேட்டுக் கொண்டார்.

ஹம்ஸாவை கதீஜாவின் திருமணம் தொடர்பாக ஆவன செய்யும்படிச் சொல்ல காரணமிருந்தது. ஹம்ஸாவின் உடன்பிறந்த சகோதரி ஸபிய்யா அண்மையில்தான் கதீஜாவின் சகோதரர் அவ்வாம் என்பவரை மணந்திருந்தார்.

எனவே ஹம்ஸா அண்ணலாருடன் சென்று கதீஜாவின் மாமனார் அம்ருவிடம் திருமணம் சம்பந்தமாகப் பேசினார். இருபது பெண் ஒட்டகங்களைப் பரிசமாக அளித்து அண்ணலார் கதீஜாவை மனைவியாகப் பெற்றார்.

## நல்ல குடும்பம் பல்கலைக் கழகம்

‘அவர்களுக்கிடையே உளப்பூர்வமான பிணைப்பை ஏற்படுத்தியவனும் அவனே! ... அல்லாஹ் அவர்களின் உள்ளங்களைப்

பிணைத்தான். திண்ணமாக அவன் வலிமை மிக்கவனும் நுண்ணறிவாளனுமாவான்.’

(திருக்குர்ஆன் 8: 63)

அந்த நுண்ணறிவாளன் எந்தெந்த உள்ளங்களைப் பிணைக்க நினைத்தானோ அதன்படியே பிணைத்தான். அவன் யார் யாரை ஒன்றாகச் சேர்க்க நினைத்தானோ அவர்களை ஒன்றாகச் சேர்த்தான்.

செல்வச் சீமாட்டியை ஒரு செயல் வீரர் மணப்பதற்குரிய காரணங்களை அவனே அறிந்திருந்தான். எந்த நதியை எந்தக் கடலில் சேர்ப்பதென்ற முடிவை அவனே நன்கறிந்திருந்தான்.

அண்ணலாரும் கதிஜா பிராட்டியாரும் வாழ்ந்தும் வாழ்ந்து காட்டியும் இலக்கியமாகவும் இலக்கணமாகவும் மாறினர்.

இல்லறம் இனித்தது. இருவருக்கிடையேயான ஈர்ப்பும் ஈடுபாடும் புரிந்துணர்வும் இல்லறத்தை நல்லறமாக்கியது. கனிந்த அன்பும் உடன்படும் உறவும் இருவரையும் ஒன்றாக்கியது. விட்டுக் கொடுத்தலும் பண்பாட்டின் மேல் விருப்பங்கொள்ளுதலும் அவர்களைச் சீரிய வழியில் நடத்தின. பிராட்டியாரின் பேராதரவும் பெருமதிப்பும் அண்ணலாரைப் பெரிதும் கவர்ந்தன.

வணிகத் தலைவியாகவும் வணிகச் செயலாளராகவும் கொண்ட தொடர்புகளில் கண்ட உண்மைகள் யாவும் இல்லறத்துக்குப்பின்பும் மெய்ப்பிக்கப்பட்டன. இல்லறத் தலைவியாகவும் இல்லறத் தலைவராகவும் விளங்கிய அவர்களின் கனவுகள் மெய்ப்படத் தொடங்கின.

பெரிய தந்தையார் வீட்டை விட்டு மனைவியும் துணைவியுமான கதிஜா பிராட்டியாரின் இல்லத்தையே தம் இல்லமாகக் கொண்ட அண்ணலாருக்கு ஆறு குழந்தைகள் பிறந்தன. அவர்களுள் இருவர் ஆண்கள். மூத்த ஆண் குழந்தையின் பெயர் காஸிம். இந்தக் காஸிமின் பெயரால்தான் அண்ணலார் அபுல் காஸிம் காஸிமின் தந்தை என அழைக்கப்பட்டார். காஸிம் இரண்டு வயதை அடையும் முன்னரே காலமாகிவிட்டார். இரண்டாவது குழந்தை ஸைனப் என்ற புதல்வி, அவருக்குப் பின்னால் வந்தவர்கள் மூவரும் பெண்கள். ருகையா, உம்மு குல்தூம், பாத்திமா ஆகியோர் அவர்கள். இறுதியாக பிறந்த மகனுக்கு அண்ணார் தம் தந்தையின் நினைவாக அப்துல்லா எனப் பெயரிட்டனர். அவரும் குறுகிய காலமே வாழ்ந்தார்.

அண்ணலார் தம் திருமண நாளன்றே தந்தையார் தாயாருக்கு அளித்த அடிமைப்பெண் பரகாவை விடுதலை செய்திருந்தார். பரகாஹ் யத்ரிப்வாசி ஒருவரை மணந்து அய்மன் எனும் மகனை ஈன்றெடுத்தார். அதற்குப் பிறகு பரகாஹ் உம்மு அய்மன் என அழைக்கப்பட்டார்.

உம்மு அய்மன் விதவையானாரோ அல்லது விவாக விலக்குப் பெற்றாரோ தெரியவில்லை. அவர் அண்ணலார் குடும்ப உறுப்பினர் போலவே புழங்கினார். ஒருவகையில் அவர் அண்ணலாரின் மூன்றாவது அன்னை!

உம்மு அய்மன் விடுதலை பெற்ற அன்றே அண்ணலாருக்கு கதிஜா பிராட்டியார் வழங்கிய அடிமை ஜைத் எனும் பதினைந்து வயது இளைஞர் பலவகைகளில் உதவியாக இருந்தார். அவரை அண்ணலார் விடுதலை செய்து மகனாக ஏற்றுக்கொண்டார்.

ஜைதும், பெரியதந்தை அபூதாலிபிடம் பெற்று வளர்த்த அலீயும் அண்ணலாருக்கு ஆண் பிள்ளை இல்லாத குறையைப் போக்கினார்கள்.

அண்ணலாரின் வீட்டுக்கு அடிக்கடி வருபவர் ஸபிய்யா. இவர் அண்ணலாரின் மாமியும் கதீஜா பிராட்டியாரின் மச்சியுமாவார். ஸபிய்யா பிராட்டியாரின் சகோதரரை மணந்திருந்தார். ஸபிய்யாவுடன் அவருடைய புதல்வர் ஸுபைரும் பணிப்பெண் ஸல்மாவும் காணப்படுவர். இந்த ஸல்மாதான் கதிஜாவின் பேறு காலங்களில் பிரசவம் பார்த்தவர்.

ஸபிய்யாவைப் போலவே மற்ற நான்கு அண்ணலாரின் மாமிமார்களும் அவர்களின் மக்களும் அண்ணலாரிடம் பேரன்பு கொண்டிருந்தார்கள். அவர்களில் முக்கியமானவர்கள் மாமியார் உமைமாவின் பிள்ளைச் செல்வங்கள்.

உமைமாவின் கணவர் வட அரபகத்தைச் சேர்ந்த அஸத் கோத்திரத்தின் ஜஹ்ஸ். மக்காவில் வாழ்ந்த ஜஹ்ஸ், ஷம்ஸ் கோத்திரத்தின் உமையாக் கிளையின் ஹர்ப் என்பாரின் குழுவில் ஒருவராக இருந்தார். உமைமாவின் மூத்த புதல்வர் அப்துல்லாஹ் அண்ணலாருக்கு இளையவராக இருந்தும் நெருங்கிய தோழராகத் திகழ்ந்தார். தோழரின் தங்கை ஸைனபும், மற்றொரு மாமியார் பர்ராவின் மகன் அபூ ஸலாமாவும் அண்ணலாரின் பேரன்பைப் பெற்ற பெருமையுடையோர்.

அண்ணலாரின் செவிலித்தாய் ஹலீமா எப்போதாவது ஒருமுறை கதிஜா பிராட்டியாரின் இல்லம் வருவார். ஒரு வறட்சிக் காலத்தில்

ஹலீமாவின் மந்தைகள் மிகவும் குறைந்து போயின. அப்போது மக்கா வந்த ஹலீமாவுக்குப் பிராட்டியார் நாற்பது செம்மறியாடுகளையும் ஒரு ஹவ்தா ஒட்டகத்தையும் அன்பளிப்பாக வழங்கினார்.

அண்ணலாரின் ரத்த பந்தங்களிடையே மட்டுமல்ல, துணைவியாரின் உறவிலும் அண்ணலாருக்கு அன்பர்கள் இருந்தனர். அவர்களில் முக்கியமானவர் பிராட்டியாரின் சகோதரி ஹாலாவும் அவருடைய புதல்வர் அபுல் ஆஸும் ஆவர்.

கதீஜா பிராட்டியாரின் சொந்த மகனைப் போலவே வளர்ந்த அபுல் ஆஸுக்கு மணமகள் தேடியபோது அண்ணலாருடன் கலந்து பேசிய பிராட்டியார் தங்களுடைய புதல்வி ஸைனபைக் கொடுக்க முன்வந்தனர். அதன்பின் உரிய காலம் வர அபுல் ஆஸ் ஸைனப் திருமணம் சிறப்பாக நடந்தேறியது.

அப்போது ஹாஷிம் முத்தலிப் வம்சத்தினர் சிறிது ஒளி மங்கியிருந்தனர். அந்தச் சூழலில் அண்ணலாரின் சிறப்பான வாழ்க்கை, வருங்காலங்களில் இழந்த புகழை மீட்டுத்தரும் எனும் நம்பிக்கை ஹாஷிம், முத்தலிப் கோத்திரத்தாரிடம் பிறந்தது. அந்த நம்பிக்கையில் மொத்தக் குறைஷியர்களும் பங்கு பெற விழைந்தனர். ‘அல்அமீன்’ என அண்ணலாரை அழைத்த குறைஷியர்கள் தங்கள் குலக்கொழுந்தைக் கொண்டாடினர்.

இவ்வாறான சூழலில் பெருஞ்செல்வந்தராக விளங்கிய அண்ணலாரின் பெரிய தந்தை அபூலஹப் தன் மகன்களுக்குப் பெண் கேட்டு கதீஜா பிராட்டியாரின் இல்லத்துக்கு வந்தார். அண்ணலார் சம்மதிக்க ருகையாவையும் உம்மு குல்தூமையும் உத்பாவுக்கும் உதைபாவுக்கும் மணம் செய்து வைத்தனர்.

## கஅபா புனர் நிர்மாணம்!

அண்ணலார் காலத்திலிருந்த கஅபா கட்டடத்தின் மறுநிர்மாண வயது 2700. சிதைந்தும் சிதிலமும் அடைந்து வந்த அந்த இறையாலயத்தை உடைத்துப் புதுப்பிக்க எவருக்கும் துணிவு வரவில்லை.

மக்காவின் நாலு பக்கங்களிலும் மலைகள் இருந்ததால் சூறாவளிக்கோ சுழன்றடித்த புயலுக்கோ கட்டடம் சேதமடைந்தாலும் முழுவதுமாக இடிந்து விழவில்லை.

அதன் சுவர்கள் ஓராள் உயரத்தில் இருந்தன. எவரும் முயன்று ஏறிக்

குதித்தால் உள்ளேயுள்ள பொருள்களைக் கொள்ளையிட்டு விடலாம். கூரைகளில்லாத கட்டடத்தில் நடுவிலிருந்த 360 சிலைகளையும் சூரியனும் சந்திரனும் பார்த்துக்கொண்டே இருந்தன.

பெருமழை பெய்தால் போதும் சிலைகள் நீருக்குள் மூழ்கிவிடும். அரபுகளைக் காக்கும் சிலைகளை குறைஷிகள்தான் காப்பாற்றவேண்டும்.

ஒருமுறை பெய்த மழையில் சுவர்கள் சோககீதம் பாடின. விரிசல் கண்ட அவை விழுந்துவிடக் காத்துக் கொண்டிருந்தன. கறும் பச்சை பூத்து காலக் கணக்கைக் கூறி நின்றன.

அதன் அடித்தளம் ஆட்டம் கண்டுவிட்டது. மறுமழை பெய்தால் குட்டிச் சுவர்களாகிவிடும்.

இது மக்காவாசிகளின் மனங்களை வாடச் செய்தது. கஅபாவை வைத்தே இயங்கிக் கொண்டிருந்த குறைஷிகளை கவலைப்பட வைத்தது.

கஅபாதான் மக்காவை வாழச் செய்துகொண்டிருந்தது. நாடெங்கிலும் இருந்துவரும் பக்திமான்கள் வரவில்லை என்றால் மக்கா இருண்டுவிடும். அதன் வாழ்வும் வசதியும் சுருங்கிவிடும். கஅபாவில் நடந்துகொண்டிருந்த புரோகிதத் தொழில் முற்றிலுமாக அழிந்துவிடும். கஅபாவின் காவலர்கள் என்ற கௌரவமும் மரியாதையும் காணாமல் போய்விடும். எனவே, மக்காவாசிகள் கஅபாவை நிலை நிறுத்த எண்ணி அதற்கான ஆக்க வேலைகளில் ஈடுபட்டார்கள்.

கஅபாவின் பாதுகாவல், நிர்வாகம் போன்றவற்றைக் கையில் வைத்திருந்தவர்கள் ஒன்று கூடி கஅபாவை இடித்துக் கட்டுவதா, இடிக்காமலேயே செப்பம் செய்வதா என ஆலோசனை செய்தனர்.

இறைவனின் இல்லமான கஅபாவை புதிதாகவே கட்டிவிட அனைவரும் முடிவெடுத்தனர். அதற்கான கற்கள், பசுஞ்சுதை, மரம் ஆகியவற்றை எங்கிருந்து கொண்டு வருவது? கற்களைப் பொருத்தவும் கட்டடத்தை எழுப்பவும் கல்தச்சர்களை எங்கிருந்து அழைப்பது? தூண்களின் மரங்களை நிறுத்தவும் கூரையை அமைக்கவும் எங்கிருந்து மரத் தச்சர்களைக் கொண்டு வருவது எனத் திட்டமிட்டுக்கொண்டிருந்த வேளையில் அவர்களுக்கு இறைவன் தோன்றாத் துணையாக வந்து நின்றான்.

எகிப்திலிருந்து மரப்பலகைகளோடும் கட்டடச் சாமான்களோடும் அபிசீனியாவுக்குப் புறப்பட்ட சரக்குக் கப்பல் ஜித்தா முகத்துவாரத்துக்கு

மேற்கே கடலுக்குள் மூழ்கப் பார்த்தது. கப்பலின் மீகாமன் கப்பலை ஜித்தா கடற்கரைக்கு எப்படியோ நகர்த்திக் கொண்டு வந்துவிட்டார். கப்பலில் இருந்த கட்டடச் சாமான்கள் கரைக்குக் கொண்டு வந்து குவிக்கப்பட்டன.

அக்கப்பல் ஒரு ரோமாபுரிக்காரருடையது. அவர் சரக்குகளை அபிசீனியா கொண்டு செல்ல வேறொரு கப்பலைத் தேடிக்கொண்டிருந்தார்.

இச்செய்தி மக்காவாசிகளை எட்டியது, அவர்கள் உடனே ஜித்தாவுக்கு சிலரை அனுப்பி கட்டடச் சாமான்களைக் கேட்டு விலை பேச ஆவன செய்தனர்.

ரோமாபுரிக்காரர் இறையாலயப் பணிக்குக் கட்டடச் சாமான்களைத்தர சம்மதித்தார். அப்போது அக்கப்பலில் வந்தவர்களில் ஒரு கட்டடக் கலைஞரும் இருந்தார். அவருடைய பெயர் பாகூம்.

கட்டடப் பொருள்களை வாங்கிய குறைஷிகள் கட்டடக் கலைஞர் பாகூமையும் கட்டடப் பணிக்காக மக்காவுக்கு அழைத்து வந்தனர்.

கஅபாவை இடித்துவிட்டே புதிய கட்டடம் கட்டிடும் திட்டத்தைப் பாகூமும் ஏற்றுக் கொண்டார். பாகூமின் உதவிக்கு சுஹைல் என்ற மக்கத்துத் தச்சுக் கலைஞரும் சேர்க்கப்பட்டார்.

கட்டடப் பணியைத் தொடங்க பழைய கட்டடம் இடிக்கப்படவேண்டும். கட்டடத்தை இடித்தால் கடுந்துன்பம் வருமோ என அனைவரும் அச்சப்பட்டனர். அவர்களுக்கு யெமனிலிருந்து கஅபாவைத் தரைமட்டமாக்க வந்த அப்ரஹாவைப் பற்றிய எண்ணம் நிழலாடியது.

இந்நிலையில் வலீத்பின் முகைரா என்ற மனவலிமையும் உடல் வலிமையும் கொண்ட குறைஷி தூண்கள், சுவர்கள் என கட்டடத்தின் பாகங்களை உடைக்க மற்றவர்களுக்கும் துணிவு வந்தது. அனைவரும் சேர்ந்து சிலைகளை மட்டும் விட்டுவிட்டு கஅபாவைத் தரைமட்டமாக்கினார்கள்.

மக்காவுக்கு அருகிலிருந்த மலையிலிருந்தும் கற்கள் கொண்டுவரப்பட்டு கட்டடப்பணி தொடங்கியது. சுவர்கள் எழுப்பப்பட்டன; தூண்கள் நிறுத்தப்பட்டன. இப்பணியில் கட்டடத் தொழிலாளர்களாக குறைஷிகள் பலரும் பங்கேற்றனர். அதில் அண்ணலாரும் அவருடைய குடும்பத்தார் பலரும் கலந்து கொண்டனர்.

கஅபாவின் பழைய கட்டடத்தின் கிழக்குப் பகுதியில் ஒரு கறுப்புக் கல் இருந்தது. அக்கல்லுக்குப் பெயர்கூட உண்டு. அதன் பெயர் ஹஜருல் அஸ்வத். காலங்காலமாக அரபுமக்கள் அதைப் புனிதக் கல்லாகக் கருதி வந்தனர். இஸ்லாத்திலும் அதற்குத் தனியிடம் உண்டு. கஅபாவை வலம் வரும்போது ஒவ்வொரு சுற்றின்போதும் அக்கல்லிலிருந்துதான் கணக்குத் தொடங்கும். அதை முத்தமிடவும் செய்கின்றனர்.

சுவர்கள் மறுபடியும் எழுப்பப்பட்டவுடன் அக்கல்லை எடுத்துவைப்பதில் போட்டா போட்டி ஏற்பட்டது. எல்லாக் கோத்திரத்தாரும் எமக்குத்தான் உரிமையுண்டு எனப் பொழுது போக்காகக் கூறியது போராட்டமாக மாறியது.

ஐந்து நாட்கள் வரை கல்லை எடுத்துப் பதிப்பதில் ஏற்பட்ட காலதாமதம் தொடர்ந்தது.

பல கோத்திரங்களும் வாயால் பேசிக்கொண்டிருக்க இரு கோத்திரங்கள் ரத்தக் கோப்பையில் கை நனைத்து ஒப்பந்தம் செய்து கொண்டுவிட்டன.

பனூ அப்துத்தார், பனூ அதிய்யா எனும் இரு புகழ் பெற்ற கோத்திரத்தார் தமக்குள் ஓர் ஒப்பந்தம் செய்துகொண்டனர். இரு கோத்திரத்தாருள் ஒருவருக்கே புனிதக் கல்லை எடுத்துப் பொருத்தும் உரிமை கிடைக்க வேண்டும் என்பதே அந்த ஒப்பந்தம்.

குழப்பமும் கொந்தளிப்பும் அதிகரித்து வாள்கள் பேசிக்கொள்ளவிருந்த சூழலில் அனுபவமிக்க முதியவரான அபூ உமைய்யாபின் மகீரா என்பவர் குறிக்கிட்டுப் பேசினார்.

‘அமைதியோடு நான் சொல்வதைக் கேட்டு அதன்படி நாளைக்காலை செயல்படுங்கள். நாளை வைகறையில் கஅபாவின் ‘பாவுஸ்ஸஃபா’ வழியாக எவர் நுழைகிறாரோ அவரே இப்பிரச்னைக்குத் தீர்வு கூறட்டும்’ என்றார்.

கஅபாவின் வாயில்களில் ஸஃபா மலைப் பக்கமுள்ள வாயில் ‘பாபுஸ் ஸஃபா’.

முதியவரின் இந்த ஆலோசனையை குறைஷிகள் அனைவரும் ஏற்றுக்கொண்டு மறுநாள் காலை பாபுஸ் ஸஃபா வாயிலைப் பார்த்துக் கொண்டு நின்றனர்.

அப்போது அங்கே ஓர் உருவம் உள் நுழைவது தெரிந்தது. யார்

அந்த உருவத்துக்குச் சொந்தக்காரர்?

உற்றுப் பார்த்தவர்களுக்கு அவ்வுருவம் ‘அல் அமீன்’ போலத் தெரிந்தது.

சிறிது நேரத்தில் ‘அல் அமீன், அல் அமீன்’ எனப் பெருங்குரலோசையாக ஒலித்தது.

யாரந்த அல் அமீன்?

மக்கத்து மக்களின் நம்பிக்கை நட்சத்திரமாக விளங்கிய அண்ணலார்தான் அந்த அல் அமீன்! சில நாட்களாக மக்காவை விட்டு வெளியூர் சென்றிருந்துவிட்டு அண்ணலார் அன்றுதான் வந்திருந்தார். அவர்களிடம் ‘ஹஜருல் அஸ்வத்’ சம்பந்தமான பிரச்னையை எடுத்துக் கூறிய மக்கள் ஒரு நல்ல தீர்ப்பை வேண்டி நின்றனர்.

அண்ணலார் புனிதக் கல்லைத் தூக்கி வைக்கத்தக்க ஒரு கனமான போர்வையைக் கொண்டுவரச் சொன்னார். கொண்டுவரப்பட்ட போர்வையை விரித்து அதன் மேல் அனைவரையும் அழைத்துத் தூக்கி வைக்கக் கேட்டுக் கொண்டார்.

புனிதக் கல் போர்வைமேல் தூக்கிவைக்கப்பட்டவுடன் அனைத்துக் கோத்திரத் தலைவரையும் போர்வையின் முனைகளைப் பிடிக்கச் செய்து கல்லைப் பதிக்கும் இடத்துக்குக் கொண்டு வரச் செய்தார்.

அக்கல்லை அண்ணலார் எடுத்து அதன் பதிக்கும் இடத்தில் வைக்கப் பிரச்னைக்கு முடிவு கிடைத்தது. மகிழ்ச்சிப் பெருவெள்ளம் மடை திறந்த வெள்ளமாகப் பாய்ந்தது.

அண்ணலார் செய்த அற்புத ஏற்பாட்டைக் கண்டு அனைவரும் மன நிறைவு பெற்றனர். தொடர்ந்து கட்டட வேலை கனகச்சிதமாக நடந்தது.

தூண்களில் கூரைகள் அமைக்கப்பட்டன. நுழைவுவாயில் எழிலோடு அமைக்கப்பட்டு பிரமாண்டமான ஹுபைல் சிலை நிறுத்தப்பட்டது.

அண்ணலாருக்கு அப்போது அகவை முப்பந்தைந்து. அன்று கண்ணியமிக்க அண்ணலாருக்கு குறைஷிகள் அளித்த மதிப்பும் மரியாதையும் அளவிட முடியாதது.

## வணிக வாழ்வினிலே...

அண்ணலார் அகவை பனிரெண்டில் வணிக வாழ்வைத்

தொடங்கினர். பெரிய தந்தை அபூதாலிபோடு தொடங்கிய வணிகப் பயணம் பத்தாண்டுகளுக்கு மேலாகத் தொடர்ந்தது. அவர்கள் சிரியா சென்றே பொருள்களை விற்று அங்கே கிடைத்த பொருள்களை வாங்கித் திரும்பினார். அவர்கள் தெற்கே சென்று யெமன் நாட்டில் வணிகம் செய்ததாகத் தெரியவில்லை.

யெமனிலிருந்து பிற வணிகர்கள் கொண்டுவந்த பொருள்கள் மக்காவில் விற்கப் பட்டுள்ளன. யெமன் சந்தைக்கு வந்த பொருள்களில் மலையாளத்து மிளகு, ஏலம், கிராம்பு போன்ற பொருள்களும் தமிழகத்திலிருந்து வந்த முத்து, பவளம், கைத்தறி ஆடை போன்றவைகளும் இருந்தன. அவையெல்லாம் மக்காவைக் கடந்து சிரியா வரை கொண்டு செல்லப்பட்டன.

யெமனிலிருந்து சிரியா செல்வதற்கு நீண்ட நாள்கள் பிடிக்கும் என்பதால் யெமனியர்கள் கொண்டு வந்த பொருள்களை மக்காவிலேயே விற்று விடுவதுண்டு; சிலர் தான் சிரியா வரை சென்று வந்தனர்.

மக்காவைச் சேர்ந்த வணிகக் குழுக்கள் கோடையில் ஒருமுறை மட்டுமே சிரியா சென்று வந்தன. அண்ணலார் பத்துக்கும் மேற்பட்ட பயணங்களை மேற்கொண்டிருந்தார்.

வழியில் தங்குமிடங்கள், வழியில் வாழும் சிற்றூர் மக்கள், பெரு நகரங்கள், சிரியாவுக்கு வரும் அரபக வணிகர்கள், அயல் நாட்டு வணிகர்கள் என அனைவரையும் தெரிந்து வைத்திருந்த நல்ல அனுபவசாலியாக அண்ணலார் விளங்கினார்.

சிரியாவின் சந்தையில் தமிழகத்துக் கைத்தறித் துணிகள் கிடைத்ததுபோல் எகிப்தின் செடியில் கிடைத்த நாரிலிருந்து நெய்த லினன் துணிகள் கிடைத்தன. பருத்தி லினனைப் பின்னுக்குத் தள்ள புது வரவாக அப்போதுதான் சீனத்திலிருந்து பட்டுத்துணிகள் வந்திருந்தன.

'சீனம் சென்றாகிலும் கல்வி கற்கும்படி' அண்ணலார் சொன்னதற்குக் காரணமிருந்தது. அப்போதுதான் சீனர்கள் கல்வியிலும் கைத்தொழிலும் முன்னணி இடத்தைப் பெற்றுக் கொண்டிருந்தார்கள்.

அண்ணலாருக்கு வயது இருபத்திமூன்று ஆனபோதுதான் கதிஜா பிராட்டியாரின் வணிகச் செயலாளராகப் பணியாற்றும் வாய்ப்புக் கிடைத்தது. பெரிய தந்தையாரின் உதவியாளராகச் சென்றாலும் அண்ணலார் வணிகப் பெரும் புள்ளியாக விளங்கினார். கதிஜா பிராட்டியாரின் செயலாளராகச் சேர்ந்தபின் அண்ணலார் வணிகத் தலைவராகிட மைஸரா என்பார் உதவியாளராக விளங்கினார்.

பெரியதந்தையாரோடு சென்று வணிகம் செய்தபோது பொறுப்புகள் குறைவு. மைஸராவோடு சென்று வணிகம் செய்தபோது பொறுப்புகள் அதிகரித்தன.

பயணங்கள் மனிதர்களைப் பண்படுத்துவதுபோல் வேறு செயல்கள் முழுமையாகப் பண்படுத்துவதில்லை. உலகக் கல்வியைக் கற்றுக்கொள்ள வணிகப் பயணங்களும் வணிகச் சந்தைகளும் அதிக அளவில் உதவுகின்றன. ஒரு நல்ல வணிகர் முழு மனிதராகத் திகழ்வதற்கு வணிகச் சந்தை உறவுகளே காரணம்.

பாலை வெளியும் மலையும் குன்றும் அவற்றின் அடிவாரங்களும் கேணிகளும் தோட்டந்துரவுகளும் ஆங்காங்கே காணப்படும் மனிதர்களின் செயல்பாடுகளும் மௌனமாக எத்தனையோ சங்கதிகளை கற்றுத் தருகின்றன.

ஆடுகள் மாடுகளிலிருந்து குதிரைகள் ஒட்டகங்கள் வரை மனிதர்களுக்கு அறிவிக்கும் சங்கதிகள் ஒன்றல்ல, இரண்டல்ல.

‘மூச்சிறைக்கப் பாய்ந்து ஓடுகின்றவை (குதிரைகள்)மீது சத்தியமாக! பின்னர் குளம்புகளிலிருந்து தீப்பொறியை எழுப்புகின்ற மேலும் அதிகாலையில் பாய்ந்து தாக்குதல் நடத்தி அதனால் புழுதியினைக் கிளப்பி மேலும் ஏதேனும் கூட்டத்தின் நடுவில் நுழைந்துவிடுகின்ற குதிரைகள்மீது சத்தியமாக.’ எனத் ..............(திருக்குர்ஆன் 100:15) குறிப்பிடுவது நினைவு கூரத்தக்கது.

குதிரைகள் விரைவான பயணத்துக்கும் போர்களுக்குமே பயன்படும். செம்மையான பாதைகளிருப்பின் குதிரை வண்டிகள் வணிகத்துக்குப் பயன்பட்டிருக்கும். எங்கும் பொடிமணலே நிரம்பியிருந்த பாலை வெளியில் வணிகத்துக்கு அன்று பயன்பட்டவை ஒட்டகங்களே.

சிறு கூடாரம் போலவே இருக்கும் ஒட்டகம் பாலைவனச் சூழலுக்கேற்பப் படைக்கப்பட்டிருப்பதைப் பார்த்தால் அதிசயமாக இருக்கும். அதன் கால்களிலிருந்து தலைவரையுள்ள அமைப்புகள் மனிதரை ஆச்சர்யப்பட வைக்கும். மண்ணுக்குள் புதைந்துவிடாதபடி அமைந்துள்ள குளம்படிகள், நீண்ட கால்கள், இருக்கையமைக்கப் பயன்படும் முதுகு, பாலைன மணற் காற்றிலிருந்து பாதுகாக்கக்கூடிய பெரிய இமைகள், அதிகமான காற்றைச் சுவாசிக்கும் பெரிய மூக்கும் வாயும், உண்டு உண்டு சேர்க்கும் கொழுப்பை உணவில்லாதபோது பாவிக்கும் அமைப்பு என அதன் சிறப்புகளைச் சொல்லிக்கொண்டே

செல்லலாம்.

அதன் மேல் ஏறி அமர்ந்தால் ஒரு சிறு குன்றின் மேலேறிய திருப்தி; குன்றோ அசையாது; அசையும் குன்றுதான் ஒட்டகம். அதன்மேல் அமர்ந்து விட்டால் விண்ணை உரசிக்கொண்டு செல்வதுபோல் இருக்கும்; வானம் வசப்பட்டதுபோல் இருக்கும்; உயர்த்தப்பட்டுள்ள வானத்தைத் தொட்டுவிடத் தோன்றும்.

ஆங்காங்கு ஊன்றப்பட்டதுபோல் நிற்கும் மலைகள் ஒட்டகத்தின் ஓட்டத்தில் கூடவே ஓடிவரும். விரிக்கப்பட்டுள்ள பூமியை வேகமாகக் கடக்கும்போது அதன் வித்தகம் புரிவதுபோல் தோன்றும்.

ஒட்டகப் பயணத்தில் ஏற்படும் அனுபவங்கள் வித்தியாசமானவை. அது பாலைப் பெருவெளியில் பயணம் செய்யும்போது சீறும் காற்று மணலை வாரியிறைத்து பள்ளத்தை மேடாகவும் மேட்டைப் பள்ளமாகவும் மாற்றும் அதிசயம் நடக்கும். அப்போது ஒட்டகம் ஓடினாலோ நின்றாலோ அடிக்கும் மணற்காற்று அதன் நான்கு கால்களையும் கட்டிப் போட்டுவிடும். அடிக்கும் காற்றில் பறக்கும் மலைத்துகள்கள் மணல் மேடாகி கால்களை மணலுக்குள் புதைத்துவிடும். நகர முடியாது, கத்திக் கத்தியே சாக வேண்டியதுதான். ஆனால் மணற் புயலடிக்கும்போது ஒட்டகம் நான்கு கால்களையும் மடித்துக்கொண்டு தரையில் அமர்ந்துவிடும். அடிக்கும் காற்றில் சேரும் மணல் துகள்கள் ஒட்டகத்தை மேல் நோக்கித் தூக்கிக் கொள்ளும்.

அடிக்கும் மணற்புயலின்போது ஒட்டகத்தை உட்காரச் சொல்லிக் கற்றுக் கொடுத்தது யார்?

இதைப் பற்றி திருக்குர்ஆன் மொழிவதைக் கேளுங்கள்:

> ஒட்டகங்களை இவர்கள் பார்க்கவில்லையா? அவை எவ்வாறு படைக்கப்பட்டுள்ளன என்று! மேலும் வானத்தை பார்க்கவில்லையா? அது எவ்வாறு உயர்த்தப்பட்டுள்ளது என்று! மேலும் மலைகளைப் பர்க்கவில்லையா? அவை எவ்ாறு ஊன்றப்பட்டுள்ளன என்று! மேலும் பூமியைப் பார்க்கவில்லையா? அது எவ்வாறு விரிக்கப்பட்டுள்ளது என்று!

(திருக்குர்ஆன் 88: 1720)

ஒட்டகத்தோடு பயணம் சென்ற அண்ணலார் ஒட்டகம், வானம், மலைகள், பூமி மக்கள் என அனைத்தையும் பற்றிச் சிந்தித்தார்.

தமது முப்பத்தைந்தாம் வயதில் கஅபாவின் நிர்மாணப் பணிகளில் பங்கெடுத்த அண்ணலார் அதன்பின் வணிகப் பயணத்தைக் குறைத்துக்கொண்டு மக்காவிலேயே வாழ்ந்தார். வணிகம் செய்ய பிறரை அனுப்பி வைத்தார். ஒட்டக, ஆட்டுத் தொகுதிகளை மேற்பார்வையிட்டார்.

அக்கால கட்டத்தில் அண்ணலார் அதிகமாகச் சிந்திக்கத் தொடங்கினார். தனித்திருந்து இறைவனை வணங்கினார். ஹிரா குகை நோக்கிச் சென்றார்.

# 6. அழைப்பியல் ஆரம்பம்

## ஹிராக்குகையும் மனக்குகையும்

மனிதனின் முதல் இல்லம் குகைதான். அதன்பின் மரங்களின் அடியில் வாழ தேவையான ஏற்பாடுகளைச் செய்துகொண்டான். நாளடைவில் மேலும் சிந்தித்து கீற்று, காய்ந்த நாணற் புற்களைக் கொண்டு குடிசையமைத்துக் கொண்டான். பின் கூடார வாழ்வு, மண் மதில் வாழ்வு, கல் மதில் வாழ்வு என மாறி, கூட கோபுரங்களில் ஏறி உட்கார்ந்து கொண்டான்.

குகை மனிதனின் வாழ்க்கை வரலாற்றில் மறக்க முடியாத ஒன்று. அதைப்போல் ஹிராக்குகை முஸ்லிம்களின் வரலாற்றில் மறக்க முடியாத ஒன்று.

அண்ணலார் இயல்பிலேயே சிலை வணக்கத்தைத் தவிர்த்தும் ஏகத்துவத்தை ஏற்றும் இருந்தவர். இத்தகைய இயல்பினர் ஆங்காங்கு வாழ்ந்தனர். எவரும் ஒன்று சேரவில்லை, இயக்கமாகவில்லை.

ஏக இறைவன் அண்ணலாரின் மூலம் ஓரிறைக் கொள்கைக்காகவே ஓர் இயக்கத்தை அமைக்க நாட்டங் கொண்டான். அதற்கான ஏற்பாடுகளை அவனே செய்தான்.

ஞானத்தேடலைத் தொடங்கிய அண்ணலார் சுற்றிலுமிருந்த மனிதக் கூட்டத்தை விட்டு விலகி தனித்திருந்து சிந்திக்க ஓரிடத்தைத் தேர்ந்தெடுத்தார். அந்த இடம் மக்காவிலிருந்து இரண்டு கல் தொலைவிலிருந்தது. அது ஜபலுந்நூர் எனும் மலையிலுள்ள ஹிராக்குகை.

எவரின் இடையூறும் இல்லாத ஏகாந்த சூழல்; காற்றையும் கம்மியான ஒளியையும் தவிர அங்கே நுழைபவர் எவருமில்லை.

அண்ணலார் தேவையான உணவுகளோடு சென்று இரவு பகல் பாராமல் ஹிராக்குகையைத் தவச்சாலையாக்கினார். சில சமயம் பட்டினியோடும் தேடுதல் தொடரும். தேடுதலில் மாற்றம் தேடி வீடு செல்லும் அண்ணலார் உணவுண்டு மீண்டும் வந்து ஹிராக் குகையில்

ஒளிப்பிழம்பைத் தேடி தவமிருந்தார். அண்ணலார் வீடு திரும்பாதபோது அன்னையார் தேவையான உணவுப் பொருள்களை அனுப்புவார்.

மனிதனிலிருந்து பிரபஞ்சம்வரை எழுந்த பல கேள்விகளுக்குப் பதில்களைத் தேடியே அண்ணலார் இருள் சூழ்ந்த குகையில் காத்திருந்தார்.

சத்தியத்தையும் அசத்தியத்தையும் எடை போட்டுப் பார்க்கும் மகத்தான சந்தர்ப்பத்தைப் பயன்படுத்திக்கொண்ட அண்ணலார் சத்தியத்தை மார்போடு அணைத்துக் கொண்டு, அசத்தியத்தைப் புறமுதுகிடச் செய்தார்.

ஒரு மாதமல்ல, இருமாதமல்ல, பல மாதங்கள் அவரது தேடல் தொடர்ந்தது. ரமழான் மாதத்தின் மொத்த நாட்களும் அண்ணலார் ஹிராக்குகையை விட்டு வெளியே வரவில்லை.

வீட்டுக்கு வரும் அண்ணலாரை அன்னையார் மிக விருப்பத்தோடு உபசரிப்பார்; சுக சேதிகள் கேட்பார். அண்ணலாரும் அருமைத் துணைவியாரிடம் தனித்திருந்து கிடைத்த அனுபவங்களைக் கதைபோல் மொழிவர். பேரன்போடு பேசும் பிள்ளைகள் ஹிராக்குகை பற்றிக் கேட்பார்கள். அங்கு செல்ல ஆசைப்படுவார்கள். அண்ணலார் அவர்களை ஹிராக்குகைக்கு வரும்படி அழைப்பார்.

மனைவி மக்களோடு அளவளாவிக் கொண்டிருந்துவிட்டு அண்ணலார் மீண்டும் ஹிராக்குகைக்குச் செல்வார்.

இந்நிகழ்வுகள் தொடர்ந்தன.

அண்ணலார் நாற்பது வயதை நிறைவு செய்திருந்த தருணம். அப்போது கனவின் மூலம் பல சத்தியச் செய்திகள் கிடைக்கத் தொடங்கின.

உலகப் பகட்டுகள் எல்லாம் ஒருநாள் அழிந்துவிடும். இன்பங்களும் சுகங்களும் நிலையானவை அல்ல. வள வாழ்வு மாறி வறுமையும் வரலாம்; வறுமையெல்லாம் மாறி வளவாழ்வும் வரலாம். வசந்த காலமும் நிலைத்த ஒன்றல்ல; இலையுதிர் காலமும் என்றுமே நிலைப்பதில்லை.

கனவில் மட்டுமல்ல, நனவில் கூட சில உண்மைகள் தெரிந்தன.

அரபுலகின் ஆங்காங்குள்ள சிலை வணக்கங்களும் பழம்பெரும் இறையாலயமான கஅபாவில் குவிந்து கிடக்கும் கற்சிலைகளும் நேர்வழியைவிட்டு அசத்திய வழியில் மக்களை வீழ்த்தியிருப்பதைப் பற்றி எண்ணிய அண்ணலார் மீளவழி என்ன எனச் சிந்திக்கலானார்.

‘அல்லாஹ் ஒருவனே, அவனைத்தவிர வணக்கத்துக்குரியவன் எவருமில்லை. அவனுக்கு இணையும் கிடையாது; துணையும் கிடையாது. ஆட்சியும், அதிகாரமும் அவனுக்கே உரியன. மனிதர்கள் அவனுக்குக் கீழ்ப்படிய வேண்டியவர்களே! வானமும் பூமியும் அவனுடைய ஆணைக்கு உட்பட்டவையே! அவனே அவரவர் செயல்களுக்கு உரிய கூலியைக் கொடுப்பவன். தினையளவு நன்மை செய்தாலும் மன நிறைவடையும் கூலி கிடைக்கும். அதேபோல் தீவினைக்கும் தண்டனை கிடைக்காமல் போகாது. தீதும் நன்றும் பிறர் தர வாரா. மறுமை நாளில் அனைத்தும் அவன் கண்முன் கொண்டுவரப்படும்’ என கனவில் கிடைத்த புதையல் மதிப்பற்றவை.

பால பாடங்களில் கிடைக்காத புரிதல் உயர் பள்ளிப் பாடங்களில் கிடைப்பதுபோல் ஞான பாடத்தில் அண்ணலார் ஞானபீடம் கிடைக்கப் பெற்றார். பாலை வெளியில் முளைத்த சிறு செடி ஆலமரமாக வளர ஆரம்பித்திருந்தது. அது ஆலமரமல்ல, ஞானமரம்.

மரம் பூத்தது; காய்த்தது; கனிந்தது, மாதங்கள் உருண்டன.

அது ரமழான் மாதம்.

ஹிராக்குகையில் வழக்கம்போல் அண்ணலார் உலகத் தொடர்புகளை மறந்து சிந்தித்துக் கொண்டும் வணங்கிக்கொண்டும் இருந்தார்.

இல்லத்தார் வந்தனர்; அண்ணலாருக்கு உணவும் நீரும் அளித்தனர். உறவோர் வந்தனர்; பேரீச்சம் பழங்களும் கொடி முந்திரிகளும் கொடுத்தனர்; உரையாடி மகிழ்ந்தனர். ஏழை எளியோர் வந்தனர்; இன்முகங்காட்டிப் பேசிக்கொண்டிருந்த அண்ணலார் சுக சேதி கேட்டார்.

இல்லத்தாருக்கு அறிவுரைகள் வழங்கிய அண்ணலார், உறவோருக்கு அறவுரைகள் வழங்கிய அண்ணலார் ஏழை எளியவர்க்குப் பழங்களும் கைப் பொருளும் அளித்தார்.

வந்தவர்களெல்லாம் சென்றுவிட குகைக்குள் இருள் படரத் தொடங்கியது; அண்ணலாரின் உள்ளத்துள் அருள் படரத் தொடங்கியது. பேரோசையெல்லாம் அடங்கிவிட உள்ளத்துள் ஓரோசை மட்டும் ஒலித்துக்கொண்டேயிருந்தது. கனத்த இரவோடு தனித்து உறவாடிக்கொண்டிருந்த காற்று கண்ணாமூச்சி ஆடியது. அண்ணலாரின் உள்ளமோ உலக மாந்தரின் கண்மூடிப் பழக்கங்களையெல்லாம் மண்மூடிப் போகச் செய்யும் வழிமுறையை

நாடியது.

ரமழானின் பல நாட்கள் கழிந்தன. கடைசிப் பத்தில் ஒரு நாள்.

அண்ணலார் குகையில் ஓய்வெடுத்துக் கொண்டிருந்தபோது திடீரென ஒரு வானவர் தோன்றி ‘இக்ரஃ ஓதுவீராக’ என உரைத்தார்.

ஒளி வெள்ளமாகத் தோன்றிய உருவத்தைக் கண்டு திகைத்த அண்ணலார் ‘எனக்கு ஓதத் தெரியாதே!’ என்றார். அண்ணலாரை நெருங்கிய வானவர் கட்டிப் பிடித்து கைகளால் இறுக்கி வைத்திருந்துவிட்டுப் பின் விட்டுவிட்டார். அப்போது அண்ணலாருக்கு ஏற்பட்டது வலியல்ல, பேரானந்தம்; பிடித்துத் தழுவியபோது அண்ணலாருக்கு ஏற்பட்டது பிடிபடா பேரின்பம்.

மறுபடியும் வானவர் ‘ஓதுவீராக’ என்றார். ‘ஓதத் தெரியாதவன் நான்’ எனப் பதில் கூறிய அண்ணலார் மனத்தில் வானவர் மீண்டும் இறுக்கிப் பிடிப்பாரோ என்ற அச்சமும் இறுக்கிப் பிடிக்க மாட்டாரா என்ற எதிர்பார்ப்பும் ஒரு கலவையாக ஏற்பட்டது.

பேரானந்தத்தையும் பேரின்பத்தையும் அனுபவித்துக் கொண்டிருந்த அண்ணலாரை மீண்டும் கட்டித் தழுவி ‘ஓதுவீராக’ என வானவர் மூன்றாம் முறையாகக் கூறினார்.

‘எதை நான் ஓதுவது?’ எனக் கேட்ட அண்ணலாருக்கு உடலெல்லாம் புல்லரித்தது. உலகில் இதுவரை எவருக்கும் கிடைக்காத வானவரின் தழுவலில் வசந்தத்தின் வருகையைச் சந்தித்த அண்ணலாரின் மனத்துக்கு சுகந்தம் கிடைத்தது.

> ‘ஓதுவீராக (நபியே!) படைத்த உம் இறைவனின் திருப்பெயர் கொண்டு! (உறைந்த) இரத்தக் கட்டியிலிருந்து மனிதனை அவன் படைத்தான். ஓதுவீராக! மேலும், உம் இறைவன் எத்தகைய மாபெரும் அருட்கொடையாளன் எனில், அவனே எழுது கோலின் மூலம் கற்றுக் கொடுத்தான். மனிதனுக்கு அவன் அறியாதிருந்தவற்றையெல்லாம் கற்றுக் கொடுத்தான்.’

(திருக்குர்ஆன் 96: 1 5)

வானவர் சொல்லிக் கொடுக்க அண்ணலார் ஓதினார். கல்லில் செதுக்கப்பட்ட எழுத்துக்களைப்போல் அவ்வசனங்கள் அண்ணலாரின் இதயத்தில் பதிந்தன.

எதிர்பார்க்கப்படாமல் கிடைத்த சந்திப்பு, சந்தித்தவர் வழங்கிய

வசனங்கள், அண்ணலாரைப் பெரும் ஆச்சர்யத்துள் ஆழ்த்தின. நிமிர்ந்து பார்த்த அண்ணலாரைச் சுற்றி பேரொளியே சூழ்ந்திருந்தது. இருளாகக் கிடந்த குகைக்குள் பேரொளி!

வந்தவர் யார்? வழங்கிய வசனங்கள் யாருடையவை? வந்தவர் எங்கே? எனக் கேள்விகள் அடுக்கடுக்காய் எழுந்தபோது வந்தவரைக் காணோம்.

குகையைவிட்டு வேகமாக வெளியில் வந்த அண்ணலார் வந்து சென்றவரைத் தேடினார். கைகால்கள் நடுங்கின. கண்கள் கலங்கின.

நாலா திக்கும் சென்று பார்த்தார்; நடந்தது கனவா அல்லது நனவா? கண்களை அலைய விட்ட அண்ணலார் எங்கும் எவரையும் காணாமல் சஞ்சலம் அடைந்தார்.

## வரகா சொன்ன வருங்காலம்!

ஹிராக்குகையிலிருந்து வெளியே வந்த அண்ணலார் ‘ஓதுவீராக’ என உரைக்கச் செய்து சென்றவரைத் தேடினார். அப்போது காணாமல் போன குகைக்கு வந்த புதியவர் மீண்டும் ஒளிப்பிழம்பாகத் தோன்றி ‘முஹம்மதே! நான்தான் இறைவன் உம்மிடம் அனுப்பிய வானவர் ஜிப்ரீல். நீர் அல்லாஹ்வின் தூதர் ஆவீர்’ எனப் பிரகடனம் செய்தார்.

அப்போது அண்ணலார் பிரகடனம் வந்த விண்ணை நிமிர்ந்து பார்த்தார். அடிவானத்திலிருந்து நடுவானம்வரை ஒளி பாய்ச்சப்பட்டிருந்தது. ஒளி வெள்ளத்தின் இடையே வானவர் வியாபித்திருந்தார். அதுமட்டுமல்ல, வானவர் தம்மைச் சுற்றியுள்ள நாலா புறமும் நிற்பதாகத் தோன்ற அண்ணலார் முன்னும் பின்னும் திரும்பிப் பார்த்தார். பார்த்த இடத்திலெல்லாம் வானவர் பளிச்செனத் தெரிந்தார்.

அப்போதைய தனிமை அண்ணலாரை வாட்டி எடுத்தது. தம்முடன் எவரும் இல்லையே என்ற கவலை அதிகமானது. ஆச்சரியத்தில் மூழ்கிய அண்ணலாரின் உடலெங்கும் அதிர்வலைகள்... அந்தப் பனி பொழிந்த இரவிலும் முகமெங்கும் வியர்வைத் துளிகள்.

வானவர் மறைய அண்ணலார், தம் இயல்பு நிலைக்குத் திரும்பினார். உடல் அதிர்வுகள் ஓய்ந்திட்டாலும் மனத்தின் அதிர்வுகள் ஓயவில்லை.

ஹிராக்குகைக்கருகில் நின்றிருந்த அண்ணலாருக்கு எங்கு

செல்வதெனத் தோன்றவில்லை. மீண்டும் ஹிராக்குகைக்குள் செல்வதா தம் இல்லத்துக்குச் செல்வதா என எண்ணிய அண்ணலார் பேராறுதல் தேவைப்பட்டதால் இல்லத்துக்கே சென்றார்.

இல்லத்துக்குச் சென்ற அண்ணலார் ஓர் ஆசனத்தில் அமர்ந்தபடி 'என்னைப் போர்த்துங்கள், என்னைப் போர்த்துங்கள்' என்றார்.

கேள்விகள் கேட்டுப் பழக்கப்படாத கதிஜா பிராட்டியார் எதைப் பற்றியும் கேட்காமல் அண்ணலாரைப் போர்வையால் போர்த்தினார். நெற்றியில் கைவைத்துப் பார்த்தார்.

போர்வை தந்த கதகதப்பில் அண்ணலார் கோர்வையாக ஹிராக்குகையில் நடந்ததையும் குகைக்கு வெளியில் கண்டதையும் கூறினார்.

'யாருக்கும் நடக்காத இந்நிகழ்ச்சி எனக்குப் புதிராகவே உள்ளது. வந்தவர் சொன்ன செய்திகளும் புதிதாகவே இருக்கிறது. எதற்கும் கவலைப்படாதீர்கள். நாளைக் காலை என்னுடைய மூத்த சகோதரர் வரகாவைக் கண்டு இதைப் பற்றிக் கூறலாம்' என்ற பிராட்டியார் பொழுது விடிந்த பின் வரகாவிடம் சென்றார்.

வரகாஹ் இப்னு நவ்பல் பிராட்டியாரின் ஒன்றுவிட்ட சகோதரர். புருவமெல்லாம் நரைத்திருந்த தாடிக்கார பெரியார். வயது அதிகமாகியிருந்ததால் கண்பார்வை இழந்திருந்தார். கண்கள் நன்றாக இருந்த காலத்திலேயே ஞான சூர்யனைக் கண்டவர். ஆதியாகமங்கள் அனைத்தையும் படித்திருந்த அவர் தொடக்கத்தில் இபுறாகீம் நபிகளாரின் வழி சென்று பின் ஈஸா நபிகளாரின் கிறிஸ்துவத்தைத் தழுவியவர்.

இன்ஜீலை ஆழமாகக் கற்ற அவர் அதை அரபியில் மொழிபெயர்த்திருந்தார்.

கதிஜா பிராட்டியார் மொழிந்த ஹிராக்குகை சங்கதியைக் கேட்ட வரகாஹ் தம் தாடியை நீவி வலக்கையை மேலே தூக்கி 'வரகாவின் உயிர் யாருடைய கையில் இருக்கின்றதோ அவன்மீது சத்தியமாக, முஹம்மதிடம் வந்தவர் தேவனின் தூதரே! அன்று மூஸாவிடம் வந்தவரும் இதே தூதரே! முஹம்மது இனி இறைவனின் தூதர்! இதில் கவலைப்பட என்ன இருக்கிறது? அவர் பணி தொடரட்டும்' என வாழ்த்துக் கூறி அனுப்பினார்.

அண்ணலாரிடம் வந்த பிராட்டியார் வரகாஹ் மொழிந்ததைக் கூறினார். அகிலங்களின் அதிபதியாகிய அல்லாஹ் அண்ணலாரின்மீது

மரியாதை அளித்து மதிப்பை உயர்த்தியுள்ள செய்தி குழப்பத்தைத் தீர்ப்பதாக இருந்தது. அண்ணலாரை வரகாஹ் சந்திக்க விரும்பியதைக் கூறிய பிராட்டியார் அன்றே ஈமான் கொண்டார்.

வரலாற்றில் கணவரின் கருத்தோடு ஒத்திணைந்து அவர் கொண்ட கொள்கையைத் தானும் ஏற்றுத் தடம் பதித்தோரும் இருந்துள்ளனர்; தடம் மாறியோரும் இருந்துள்ளனர்.

இபுறாகீம், மூஸா போன்ற பல நபிமார்களின் துணைவியர் கணவர் வழிநடக்க நூஹ், லூத் போன்ற சில நபிமார்களின் மனைவியர் கணவரின் பாதையில் செல்லாமல் இருந்த வரலாறு உண்டு.

அண்ணலாரின் துணைவியார் முதலிடத்தைப் பிடித்ததால்தான் அவர் இஸ்லாத்தின் முதல் மனுஷியாக இன்றும் திகழ்கிறார். கணவரின் கொள்கையைப் பின்பற்றாமல் ஒரு மனைவி இருந்தால் அக்கொள்கையைச் சொல்பவர் வீர்யமற்றவராகிவிடுவார்.

வீரமும் விவேகமும் மிக்க அண்ணலாரின் முதல் வெற்றியே கதிஜா பிராட்டியார் முஸ்லிமானதுதான்.

கதிஜா பிராட்டியார் வரகாவிடம் சென்று ஆலோசனை கேட்டு மீண்ட பின்பும் அண்ணலார் ஹிராக்குகை இருப்பைத் தொடர்ந்தார். முதல் நாள் வானவர் வந்து சென்றது நெஞ்சில் நிழலாடியது. வானவர் மொழிந்த வசனங்கள் நெஞ்சில் பசுமரத்தாணிபோல் பதிந்ததால் நாக்கு அந்த வசனங்களைத் திரும்பத்திரும்ப உச்சரித்தது.

முதன் முதலில் ஹிராக்குகை சென்ற அண்ணலார் அங்கு இருக்க வேண்டிய நாட்களை வரையறுத்துக் சென்றிருந்தார். அந்த நாட்கள் முடிவுற்றதும் அண்ணலார் குகையினின்றும் வெளியாகி நேராக கஅபாவுக்கு சென்றார்.

கஅபாவை வலம் வந்த அண்ணலார் பின் பள்ளிவாசலில் அமர்ந்திருந்தபோது அங்கு பெரியார் வரகாவைச் சந்தித்தார்; அவருக்கு முகமன் கூறி தாம் யாரென்று தெரிவித்தார்.

பெரியார் வரகாஹ் அண்ணலாருக்கு சோபனம் கூறி அன்றொருநாள் ஹிராக்குகையில் நடந்தவற்றைத் திரும்பவும் கேட்டுத் தெரிந்துகொண்டார்.

அண்ணலாருக்குக் கிடைத்துள்ள நபித்துவத்தைப் பற்றிய செய்தியை உறுதி செய்த வரகாஹ் ‘நீர் வருங்காலத்தில் அழைப்புப் பணியாற்றும்போது பொய்யர் எனப்படுவீர்கள். துன்பப்படுவீர்கள்;

துரத்தப்படுவீர்கள்; தொலைதூரம் போய்விட்டாலும் உம்மீது போர்ப்படை வந்து தாக்கும். அப்போது நானிருந்தால் நிச்சயமாக இறைவனுடைய மார்க்கத்துக்குத் துணைநிற்பேன். இதை இறைவன் நன்கறிவான்’ என்றவர் அண்ணலாரை அருகில் அழைத்து நெற்றியில் முத்தமிட்டார்.

வரகாவின் சொல் ஆதரவும் கதிஜா பிராட்டியாரின் செயல் ஆதரவும் அண்ணலாரின் உள்ளத்தைப் பல மடங்கு வலுவாக்கின. அதே சமயம் சத்திய அழைப்பை எவ்வாறு மக்களிடம் கொண்டு செல்வது என்ற சுமை அண்ணலாரை அழுத்தியது.

ஏகத்துவத்தை எடுத்துரைக்க வேண்டிய இடம் சிலைகளால் சூழப்பட்டுள்ளது. மக்களோ வழி கெட்டுத் திரிகிறார்கள். அசத்தியக் கருத்துகளைக் கூறி அஞ்ஞான இருட்டில் கிடக்கிறார்கள். தீமைகளே அவர்களுக்கு நன்மையாகத் தெரிகின்றன. ஏக இறைவனைப் பற்றிய எண்ணம் சிறிது கூட கிடையாது. கள்ளைக் குடிப்பதையும் கள்ளச் செயல் புரிவதையும் கடமையாகக் கருதுகிறார்கள். கற்பு நெறி ஆணிடமும் இல்லை, பெண்ணிடமும் இல்லை. வருபவரெல்லாம் பயன்படுத்தும் ஜமாபந்தி மைக்கூடு போல பெண்கள் ஆனதால் பெண்டாளுதலை சண்டாளர்கள் பெருமையோடு பேணி நடந்தார்கள்.

இந்நிலையில் எவ்வண்ணம் ஏகத்துவத்தை எடுத்துரைப்பது? பாலையில் எப்படி பாரிஜாதத்தைப் பயிரிடுவது?

சிந்திக்க சிந்திக்க அண்ணலாரைக் கவலை வந்து சூழ்ந்தது. அதே சமயம் வானவர் மீண்டும் வந்து தூதுச் செய்தியை வழங்காதது மேலும் துன்பத்தைத் தந்தது.

அண்ணலாரின் மலர் முகம் வாடியது. கதிஜா பிராட்டியார் ஆறுதலைக் கூறி நம்பிக்கையை ஊட்டினார் என்றாலும் பிராட்டியாரும் பெருங்கவலைப்பட்டார்.

## கைவிடாத இறைவன்!

வானவர் ஜிப்ரீல் மீண்டும் செய்தி கொண்டு வரவில்லை என்ற கவலை அண்ணலாரை வாட்டியது. அண்ணலார் மீண்டும் ஹிராக்குகை இருப்பைத் தொடர்ந்தார். இரவு பகலாக இறைவனை இறைஞ்சினார்.

‘இறைவா! என்மீது அருளைப் பொழிந்த இறைவா! என்னிடம் ஏன் நீ வானவர் ஜிப்ரீலை அனுப்பவில்லை? என்னை ஏன் நீ கைவிட்டாய்’ என அண்ணலார் வாய்திறந்து கேட்டார்.

பிரார்த்தனை தொடர்ந்தது. பிரார்த்தனைக்கான பதில் கிடைக்காததால் உள்ளத்துள் சோகம் படர்ந்தது. கண் துஞ்சவில்லை; உணவு உண்ண மனம் விரும்பவில்லை.

குகையைவிட்டு வெளியேறி மலையடிவாரத்துக்கு வந்தார். சில சமயம் மலையுச்சிக்கும் சென்றார். விண்ணை நோக்கி உயர்ந்த தலை வலியெடுக்க மண்ணை நோக்கிக் கவிழ்ந்தது.

வணக்கங்களும் வேண்டுதல்களும் ஹிராக்குகையில் தொடர்ந்த வேளையில் ஒரு நாள் வானவர்க்கோன் தோன்றி ‘முஹம்மதே! உம்முடைய கவலை நியாயமானதே! உண்மையில் நீர் இறைத்தூதரே! கவலையைவிட்டு கர்த்தனைப் பற்றி கருத்தில் இருத்துவீர்’ என்ற ஆறுதல் மொழி அண்ணலாரின் அலைபாயும் நெஞ்சை அல்லாஹ்விடம் ஆற்றுப் படுத்தியது.

ஹிராக்குகையைவிட்டு வெளியே வந்து மனக்குகையில் ஒளிப்பிழம்பை ஏற்றிய அண்ணலார் ஒருநாள் வீதியில் சென்று கொண்டிருந்தார். அப்போது விண்ணிலிருந்து ஒரு குரல் அண்ணலாரை விளித்தது; பெயர் சொல்லி அழைத்தது.

அண்ணலார் தலையை உயர்த்தி விண்ணைப் பார்த்தார். அங்கே வானவர்க்கோன்! வானவரைப் பார்த்தவுடன் அன்றொருநாள் ஹிராக்குகையில் ஏற்பட்ட ஆனந்தம் கலந்த நடுக்கம் அண்ணலாரைச் சூழ்ந்தது. இச்சந்திப்புக்குப் பின்தான் அண்ணலாருக்கு ஆறுதல் கிடைத்தது, அகத்தில் அமைதி ஏற்பட்டது.

அமைதி தவழ்ந்த உள்ளத்தோடு வீட்டுக்கு வந்த அண்ணலார் முன்பைப்போல் ‘என்னைப் போர்த்துங்கள்; என்னைப் போர்த்துங்கள்’ என்றார். கதிஜா பிராட்டியார் அண்ணலாரைப் போர்வையால் போர்த்தினார். வானவரைச் சந்தித்ததைப் பற்றிக் கூறிய அண்ணலாரின் இதயத்தை ஆறுதல் மொழி கூறி பிராட்டியார் வார்த்தையால் போர்த்தினார். அப்போது வானவர்க்கோன் ஜிப்ரீல் இறைச் செய்தி கொண்டுவந்தார்.

> ‘போர்த்திக் கொண்டு படுத்திருப்பவரே! எழுந்து எச்சரிக்கை செய்வீராக! மேலும், உம் இறைவனின் மேன்மையைப் பிரகடனப்படுத்துவீராக! மேலும் உம் ஆடைகளைத் தூய்மையாக்குவீராக! அசுத்தத்திலிருந்து விலகியிருப்பீராக!

(திருக்குர்ஆன் 74: 15)

இச்செய்தி வந்தபிறகு இதயத்தில் மந்த மாருதம் வீசியது. தன்னம்பிக்கை வந்தது. இறை நம்பிக்கை எல்லாம் தரும் என்று நன்னம்பிக்கை பிறந்தது. இதய நந்தவனத்தில் புத்துணர்ச்சிப் பூக்கள் பூத்தன. இளவேனிற் காலம் எதிரில் வருகிறது என்பதை இறைவசனங்கள் கட்டியங் கூறின.

இறைச் செய்தியைக் கேட்ட கதிஜா பிராட்டியாரின் கவலையெல்லாம் தீர்ந்தன. அவர்கள் மனத்தில் மனோரஞ்சிதம் பூத்தன.

போர்த்திக்கொண்டு படுத்திருந்த அண்ணலாரை எழுப்பி இறைச் செய்தியைச் சொன்ன வானவர்க்கோன் அடுத்தடுத்தும் தூதுத்துவச் செய்திகளைக் கொண்டு வந்து சேர்த்தார்.

‘உம் இறைவனின் மேன்மையைப் பிரகடனப்படுத்துவீராக!’ என்ற இறையாணையைத் தொடர்ந்து தம்மீது சுமத்தப்பட்ட கடமையைச் செய்ய அண்ணலார் ஆயத்தமானார்.

இறைவனின் மேன்மையை அண்ணலார் பிரகடனப்படுத்தியபோது அண்ணலார் மொழிந்தவை ஆங்காங்குள்ள குறைஷியரைக் கோபப்படவைத்தன. ‘மூதாதையர் மொழிந்தவற்றுக்கும் பின்பற்றும் வழிமுறைக்கும் எதிராக முஹம்மது போர் தொடுக்கப் புறப்பட்டுவிட்டாரா?’ என்று கேள்வி எங்கும் எழுந்தது. கஅபாவை வலம் வந்த அக்கேள்வி மக்காவின் எல்லைகளையும் கடந்து சென்று கொண்டிருந்தது.

‘ஓதுவீராக’ என்ற வசனத்தில் தொடங்கி இறைவனின் மேன்மையைப் பிரகடனப்படுத்தச் சொன்னதைத் தொடர்ந்து அவ்வப்போது வந்த தூதுச் செய்திகள் யாவும் செவிவழி புகுந்து நா வழி பிறந்து நாலுதிக்கிலும் சென்று கொண்டிருந்தன. அண்ணலாரும் கண்டவரிடமும் வழியில் நின்றவரிடமும் இறைவனின் அழைப்புச் செய்தியைச் சேர்த்தபடியாக இருந்தார்.

இந்நிலையில் வானவர்க்கோனின் வருகை தடைப்பட்டது. வந்த செய்தி நின்ற செய்தியாகிட, இதைக் கேள்விப்பட்ட குறைஷியர் கேலி செய்யத் தொடங்கினர்.

‘என்ன நபி இவர்? இந்த நபியிடம் அவ்வப்போது வானவர் வந்து சேதி சொன்னாராம். அவற்றையெல்லாம் இவர் நம்மிடம் சொன்னாராம். இப்போதோ எந்தச் செய்தியும் இல்லையாம். என்ன வேடிக்கை இது!’ என குறைஷிகள் ஏகடியம் பேசினார்கள்.

இறைமறுப்பாளர்களின் கேலியும் கிண்டலும் அண்ணலாரின்

மனத்தைச் சிதைத்தன.

‘இறைவன் என்மேல் கோபப்பட நியாயமில்லையே! ஏன் தூதுச் செய்தி வருவது தடைப்பட்டது?’ என எண்ணிய அண்ணலார் தம்மைத் தேற்றிக்கொண்டார். கைத்தலம் பற்றிய கதிஜா பிராட்டியார் அவ்வப்போது அண்ணலாரின் மனத்தலம் பற்றி கவலையைப் போக்கினார்.

அப்போது ஒருநாள் இறைச் செய்தியோடு வானவர்க்கோன் வந்தார்.

> ‘ஒளிமிக்க பகலின்மீது சத்தியமாக! மேலும், இரவின்மீது சத்தியமாக அது அமைதியாக வந்தடையும்போது! (நபியே!) உம் இறைவன் உம்மை ஒருபோதும் கைவிடவில்லை. கோபம் கொள்ளவும் இல்லை. மேலும், திண்ணமாக பிந்தைய காலகட்டம் முந்தைய காலத்தைவிட உமக்கு மிகவும் சிறந்ததாயிருக்கும். மேலும் விரைவில் உம் இறைவன் நீர் திருப்தியடைந்துவிடும் அளவுக்கு உமக்கு வழங்குவான். அவன் உம்மை அநாதையாகக் காணவில்லையா? பிறகு, புகலிடம் தந்தான் அல்லவா! மேலும் அவன் உம்மை வழியறியாதவராகக் கண்டான்; பிறகு நேர் வழி காட்டினான். மேலும், அவன் உம்மை ஏழையாகக் கண்டான்; பிறகு செல்வராக ஆக்கினான். ஆகவே, நீர் அநாதைகளிடம் கடுமையாக நடந்து கொள்ளாதீர். மேலும் யாசகம் கேட்பவரை விரட்டாதீர்.’

(திருக்குர்ஆன் 93: 1 10)

திருக்குர்ஆன் தொடக்கம் முதல் இறுதிவரை அண்ணலாரை வழி நடத்தியதில் முழுப்பங்கு வகித்ததை வரலாறு மெய்ப்பித்துள்ளது. அண்ணலாரின் வாழ்வியலைச் செம்மைப்படுத்தியதின் மூலம் வாழ்ந்த சமுதாயத்தையும் வருங்கால சமுதாயத்தையும் அது வழிநடத்த ஆற்றலுடையது என்பது நிதர்சனமாகியுள்ளது.

முந்தைய காலகட்டத்தையும் பிந்தைய காலகட்டத்தையும் கண்முன் கொண்டுவந்த திருக்குர்ஆன் வருங்காலத்தைப் பற்றிக் கூறி அது வசந்த காலமாகயிருக்கும் என வாக்குறுதி அளிக்கிறது.

அன்பும் ஆறுதலும் பொங்கிப் பெருகிட அமைதி கிடைக்கப்பெற்ற அண்ணலார் இறைவன் வழங்கிய அருட்கொடைகளை எண்ணி எண்ணி உள்ளம் பூரித்தார்.

ஒளிமிக்க பகலின்மீதும் அமைதி தவழும் இரவின்மீதும் சத்தியம்

செய்த இறைவன் தொடர்ந்து வானவர்க்கோனை அண்ணலாரிடம் அனுப்பி தூதுத்துவத்தைத் தொடர்ந்தான். கட்டளைகளைக் கொண்டுவந்த வானவர்க்கோன் அண்ணலாருக்குச் செயல்முறை விளக்கங்களையும் சொல்லிக் கொடுத்தார்.

ஒருநாள் மக்காவின் மலையடிவாரத்திலிருந்த அண்ணலாரிடம் தொழுகையைப் பற்றிக் கூறிய வானவர்க்கோன் ஒளு உடற்சுத்தி பற்றியும் தொழுவது எவ்வாறு என்றும் எடுத்துரைத்தார். அண்ணலார் வானவர்க்கோன் எடுத்துரைத்துச் செய்து காட்டியபடி செய்தார்.

அண்ணலார் பிராட்டியாரிடம் ஒளு, தொழுகை பற்றி எடுத்துரைக்க இருவரும் ஒன்றாக நின்று தொழுகையை நிறைவேற்றினர்.

# 7. வைரத்தைச் சுற்றி முத்துகள்

## வைரத்தைச் சுற்றிப் பதிக்கப்பட்ட முத்துகள்!

அண்ணலாரும் கதிஜா பிராட்டியாரும் தொழுவதைக் கண்ட அலீ (ரலி)க்குப் பெரும் வியப்பு. அவர்கள் கைகளைக் கட்டி நிற்பதும் தேவகானம்போல் திருக்குர்ஆனை அண்ணலார் ஓதுவதும் காதுகளைத் தொட்டுக் குனிவதும் பின் நிமிர்வதும் பின்னர் தரைமேல் தலைசாய்த்துத் தொழுவதும் அலீக்கும் புதிய காட்சியாகத் தெரிந்தது.

தம்முடைய பெரிய தந்தையாரிடமிருந்து பெற்று மகனைப் போலவே வளர்த்து வந்த அலீக்கு அண்ணலாரிடம் அளவு கடந்த பாசமும் நேசமும் இருந்தது. அண்ணலாரின் அடியொற்றியே நடந்துவந்த அலீ தலைவருக்கேற்ற வருங்காலத் தளபதி என்பதில் ஐயமேதுமில்லை.

அண்ணலாரும் பிராட்டியாரும் தொழுததையும் செவிக்கு அமுதமாக சிந்தையைக்கவரும் வண்ணம் திருக்குர்ஆன் ஒலித்ததையும் கேட்ட அலீ அவர்கள் தொழுகையை நிறைவேற்றியபின் ‘இது என்ன!’ எனக் கேட்டார்.

‘இது அல்லாஹ்வை வணங்குவதற்குரிய செயல். இதையே நமக்கு முன் வந்து சென்றுள்ள இறைத் தூதர்களெல்லாம் செய்துள்ளார்கள். இது இறைவனைக் காண்பதற்குரிய வாயில்’ என அண்ணலார் மொழிந்தார்.

‘இது எனக்குப் புதிய அனுபவமாக இருக்கிறது. இதை யார் கற்றுக் கொடுத்தது!’ என அலீ வினவினார்.

‘அல்லாஹ் என்னை நபியாக ஆக்கியுள்ளான். என்மீது அவனுடைய வேதத்தை இறக்கியுள்ளான். அந்த வேத வசனங்கள் மூலம் நான் மக்களிடம் நன்மையை ஏவி தீமையை அகற்ற வேண்டும். சத்தியத்தைக் கூறி அசத்தியத்தை வேரறுக்க வேண்டும். வழிகேட்டில் வாழும் மக்களைத் திருத்தி நல்ல வழிமுறையைக் காட்ட வேண்டும். அவற்றுக்கெல்லாம் அடிப்படையாக இறைவன் ஒருவனையே

அனைவரும் வணங்க வேண்டும். அந்த வணக்கச் செயல்பாடுதான் நாங்கள் மேற்கொண்ட தொழுகை’ என அண்ணலார் விளக்கமாகக் கூறினார்.

‘இது நல்ல வழிமுறையாகத் தானே தெரிகிறது? இதை நானும் பின்பற்றலாமா! நீங்கள் தொழுதது போல நானும் தொழலாமா?’ என அலீ கேட்டார்.

‘ஓ! தாராளமாக தொழலாம். இறைவன் ஒருவன். அவனுக்கு யாரும் இணையில்லை. எங்கும் நிறைந்த அவனுக்கு உருவமில்லை. அவனை மட்டுமே வணங்கவேண்டும். அவனுக்காகவே ஆதியில் எழுப்பப்பட்ட கஅபாவில் இன்று நூற்றுக்கணக்கான சிலைகள் நிறுவப்பட்டுவிட்டன. லாத், உஸ்ஸா போன்ற சிலைகளை வணங்குவதைவிட்டும் ஓரிறைவனையே வணங்க வேண்டும்’ என அண்ணலார் அலீக்குக் கூற அன்புத் துணைவியாருக்கு அடுத்தபடியாக அன்புத்தம்பி இஸ்லாத்தைத் தழுவினார்.

அலீயோடு அண்ணலாரின் இல்லத்தில் வாழ்ந்த அடிமையாகக் கிடைக்கப் பெற்று விடுதலையளிக்கப்பட்ட ஜைது மூன்றாவதாக இஸ்லாத்தைத் தழுவினார்.

அலீயும் ஜைதும் இளைய சமுதாயத்தினர்; அடுத்து நான்காவதாக இஸ்லாத்துக்கு வந்த வலிய சமுதாயத்தினர் அபூபக்கர் (ரலி). அண்ணலாரிடமிருந்த உண்மை, தூய்மை, அன்பு ஆகியவற்றால் கவரப்பட்டிருந்த அபூபக்கர் தகுதிகள் பலபெற்ற அருமைத்தோழர்.

அடிக்கடிச் சந்தித்து வந்த உயிர்த் தோழரிடம் அண்ணலார் ஓதிக் காட்டிய திருக்குர்ஆன் வசனங்கள் தோழரை இஸ்லாத்தின் துணையாக்கின.

‘என் பெற்றோர்களைத் தங்களுக்கு அர்ப்பணிக்கிறேன். தாங்கள் மொழிந்தவையெல்லாம் உண்மைகளே! உண்மையே பேசும் உங்களிடம் உறுதிமொழி (பைஅத்) எடுத்துக்கொள்கிறேன். அல்லாஹ் ஒருவனைத் தவிர வணங்குவதற்கு உரியவன் வேறு யாருமில்லை என்றும் தாங்களே அல்லாஹ்வின் தூதர் என்றும் சாட்சி கூறுகிறேன்’ என அபூபக்கரின் நாவிலிருந்து ஒலித்த குரல் கஅபாவில் எதிரொலித்தது.

கஅபாவில் எதிரொலிக்கும் முன்பு அந்தக் குரல் கதிஜா பிராட்டியாரிடம் எதிரொலித்தது. அண்ணலாரின் உயிர்த் தோழர் இஸ்லாத்தில் சங்கமித்தது பிராட்டியாரைப் பெரும் மகிழ்ச்சியடைய

வைத்தது. முகத்திரை அணிந்திருந்த பிராட்டியார் வெளியில் வந்து ‘அபூ கஹாபின் அருமைக் குமாரரே! நீங்கள் பெரும் பேறு பெற்றதற்கு என் வாழ்த்துகள். உங்களுக்கு நேர்வழி காட்டிய இறைவனுக்கு நன்றி செலுத்துகிறேன்’ எனப் பாராட்டினார்.

இறைவனுக்கு நன்றி கூறிய அண்ணலார் அபூபக்கரை மார்போடு அணைத்து தம் மனநிறைவை வெளிக்காட்டினார். இருவர் கண்களிலும் ஆனந்தக் கண்ணீர்!

அபூபக்கர் இஸ்லாத்தைத் தழுவியவுடன் அண்ணலாருக்கு அழைப்புக்கான களம் மிக விரிவாகத் தெரிந்தது.

இரக்க உள்ளமும் இயல்பிலேயே அமைதியும் வாய்க்கப்பட்ட அபூபக்கர் செல்வமும் செல்வாக்கும் மிக்கவர். உயர்குல குறைஷியரான அவருக்குக் கிடைத்த கண்ணியமும் கௌரவமும் மிக அதிகம். சமுதாயத்தின் பல பிரச்னைகளைத் தீர்த்த அவர் சொல்லும் செயலும் ஒத்தவராகத் திகழ்ந்தார். எப்போதும் அவருடன் ஒரு கூட்டம் இருக்கும். திறமையும் திறந்த மனமும் பெற்ற அவர் தேவையானவர்களுக்கு செலவு செய்வதில் முன்னோடியாக இருந்தார். அவருடைய குடும்ப, தோழமை, சமுதாய, வணிக வட்டம் மிகப் பெரியவை. அவரால் முதன் முதலில் அவருடைய தோழமை வட்டம் இஸ்லாத்தை ஏற்றது.

தோழமை வட்டத்தைச் சேர்ந்த அபூஉபைதா பின் ஜர்ரா, அப்துல் ரஹ்மான் பின் அவ்ஃப், உஸ்மான் இப்னு அஃப்பான், ஸுபைர் இப்னுல் அவ்வாம், ஸஃதுப்னு பின் அபீ வக்காஸ், தல்ஹாபின் அபீதுல்லாஹ் ஆகியோர் அபூபக்கரால் இஸ்லாத்துக்குள் நுழைந்தனர்.

இவர்களில் அபூ உபைதாவும் அப்துல் ரஹ்மானும் முதலில் இஸ்லாத்தைத் தழுவியவர்கள். அபூ உபைதா பனூ அல்ஹாரித் கோத்திரத்து அல்ஜர்ராவின் மகன். அப்துல் ரஹ்மான் அண்ணலாரின் தூரத்து உறவினரான அவ்ஃப் என்பாரின் மகன். இவரது இயற்பெயர் அப்த் அம்ர்அம்ரின் அடிமை என்பதாகும். இப்பெயரை அண்ணலார்தான் அப்துல் ரஹ்மான் அளவற்ற அருளாளரின் அடிமை என மாற்றினார்.

இஸ்லாத்தைத் தழுவுங்கள் என்ற பகிரங்கமான அழைப்பு மக்களைச் சென்றடையுமுன்பே விருப்பமுடைய தோழர்களும் தோழியரும் அண்ணலாரிடம் சென்று உறுதிமொழி எடுத்து சன்மார்க்கத்தில் இணைந்தனர். அவர்களில் பலர் இளைஞர்கள், குறிப்பாக அடித்தட்டு மக்கள்.

இளைஞர்களில் பலரும் அண்ணலாரின் நெருங்கிய உறவினர்கள். பெரிய தந்தை அபூதாலிபின் மகனும் உடன் பிறவாச் சகோதரருமான ஜாபர், மாமி ஸபிய்யாவின் மகன் ஸுபைர், மாமி உமைமாவின் புதல்வர்களான அப்துல்லாஹ் இப்னு ஜஹ்ஷ் உபைத்துல்லாஹ், மற்றுமொரு மாமி பர்ராவின் மகன் அபூஸலாமா ஆகியோர். இவர்கள் எல்லோரும் தந்தை வழிச் சொந்தக்காரர்கள்.

ஸுஹ்ரா கோத்திரத்தின் அபூவக்காஸின் மகன் ஸஅத், அவரது இளைய சகோதரர் உமைர் ஆகியோரும் இஸ்லாத்தைத் தழுவினர். இவர்களிருவரும் அண்ணலாரின் தாய்வழிச் சொந்தக்காரர்கள்.

அண்ணலாரின் உறவினரில் இளையோர் இஸ்லாத்தைத் தழுவி நிற்க மூத்தோர் விலகியே நின்றனர். பெரிய தந்தை அபூலஹப் தன் இருமகன்களை அண்ணலாரின் மகள்களுக்கு மணம் முடித்துக் கொடுத்திருந்தும் ஏகத்துவத்துக்கு எதிராகவே நின்றார். அண்ணலார் தம்மையும் ஏமாற்றி சமுதாயத்தையும் ஏமாற்றுவதாகப் பகிரங்கமாகவே கூறிவந்தார். அபூதாலிப் அலீயையும் ஜாபரையும் இஸ்லாத்தில் இணைய சம்மதித்திருந்தாலும் ஏகத்துவ வாயிலில் அவர் நுழைய சம்மதிக்கவில்லை. சிறிய தந்தையர்களான அப்பாசும் ஹம்ஸாவும் அண்ணலாருடன் பாசத்துடன் நடந்து கொண்டாலும் இஸ்லாத்தின் மேல் நேசம் கொள்ளவில்லை.

இஸ்லாத்தைத் தொடக்க காலத்தில் தழுவிய மகத்தான மனிதர்களில் ஒருவர் அர்கம் பின் அப்துல் மனாப்.

அண்ணலாரின் மாமிகளில் ஒருவரான பர்ராவின் மகன் அபூ ஸலாமா ஏற்கெனவே இஸ்லாத்தை ஏற்றிருந்தார். மக்ஸூம் கோத்திரத்தினரான அபூ ஸலாமாவின் ஒன்றுவிட்ட சகோதரர்தான் அர்கம். அர்கம் அபூ ஸலாமா இருவரின் பாட்டனார்கள் உடன் பிறந்த சகோதரர்களாவர்.

அபூ ஸலாமாவின் மூலம் இஸ்லாத்தைப் பற்றி அறிந்திருந்த அர்கம் ஒருநாள் காலை அண்ணலாரைச் சந்தித்து ‘இலாஹிலாஹ இல்லல்லாஹு முஹம்மதுர் ரசூலுல்லாஹ் இறைவன் ஒருவன், அவனுடைய தூதர் முஹம்மது (ஸல்)’ எனக் கூறி உறுதிமொழி ஏற்றார்.

அர்கம் இஸ்லாத்தை ஏற்றதோடு நிற்காமல் தன்னுடைய ஸபா குன்றுக்கு அருகிலிருந்த பெரிய வீட்டையும் இஸ்லாமியப் பணிக்காக வழங்கினார். செல்வந்தரும் துணிச்சல்காரருமான அர்கமின் இல்லம் இஸ்லாத்தின் முதல் கேந்திரமாக மாறியது.

பிறர் அறிந்து கொள்வார்களோ தடையேதும் சொல்வார்களோ என்ற பயமேதும் இன்றி முஸ்லிம்கள் ஒன்று கூடவும் கூட்டாகத் தொழவும் ஓர் அருமையான முகாம் கிடைத்தது.

அபூபக்கருக்கு அடுத்து அர்கம் இஸ்லாமியப் பணியை விரிவாக்க பெரும் துணையாக இருந்தார்.

அண்ணலார் எனும் வைரத்தைச் சுற்றிப் பதிக்கப்பட்ட முத்துக்கள் அருமையும் பெருமையும் உடையவை!

## பெருமானாரும் பெரிய தந்தையும்!

கதீஜா பிராட்டியார், அலீ, ஜைத் எனப் பரவிய இஸ்லாம் தோழர் அபூபக்கர், அபூபக்கரின் நண்பர்கள் எனப் பெருகி உறவோர் வட்டத்தைப் பெருக்கியது. அண்ணலாரின் புதல்விகளும் அபூபக்கரின் புதல்விகளும் இஸ்லாத்தை ஏற்க நெடும்புனல் பயணம் நீண்டது.

இஸ்லாம் வெளிப்படையாகப் பறைசாற்றப்படவில்லை. அண்ணலாருக்கும் வெளிப்படையாகப் பறைசாற்ற ஆணை வரவில்லை. கை குலுக்க வந்தவர்களோடு கை குலுக்கினார். கைகளைத் தேடி ஓடவில்லை. சத்தியத்தை நாடி வந்தவர்களுக்கு சத்திய இஸ்லாத்தை அறிமுகப்படுத்தினார். நன் மார்க்கத்தைத் தேடி வந்தவர்களிடம் சன் மார்க்கச் செய்தியைச் சமர்ப்பித்தார்.

சிலை வணங்கியாக இருந்த குறைஷியருக்கு அண்ணலாரின் அறிவிப்புகள் வேம்பாகக் கசந்தது. சத்திய செய்திகள் குறைஷிகளுக்கு எட்டிக் காயாக இருந்தன. அண்ணலாரிடம் உறுதி மொழி ஏற்றவர்களை ஏகடியப் பார்வை பார்த்தனர்; இழி மொழி கூறி ஏசினர்.

முஸ்லிம்கள் தம் அடையாளத்தைக் காட்டிக்கொள்ளாமல் கமுக்கமாகச் செயல்பட்டனர். அவர்கள் கலந்து பேச வேண்டுமென்றாலோ திருக்குர்ஆனின் வசனங்களை ஓதவோ மனனம் செய்யவோ வேண்டியிருந்தாலோ மக்காவுக்கு வெளியே சென்றுவிடுவார்கள். தொழுகைகளை புறநகர்க் குகைகளிலோ தோட்டந்துரவுகளிலோ வைத்துக் கொள்வார்கள். எவ்விதத் தொல்லையும் இல்லாமல் அவர்கள் மார்க்கப் பணிகளைத் தொடர்வார்கள். பழையவர்கள் புதியவர்களுக்குத் தொழுகைகளைக் கற்றுக் கொடுப்பதோடு திருக்குர்ஆன் வசனங்களையும் நபிமொழிகளையும் சொல்லிக் கொடுப்பார்கள்.

பழைய சமுதாயத்தைப் புதிய சமுதாயமாக மாற்றும் யுகப்புரட்சி

கமுக்கமாக நடந்து கொண்டிருந்தது. அதற்கான போராளிகள் அமைதியாக உருவாக்கப்பட்டிருந்தார்கள்.

ஏதோ ஒரு புதிய மார்க்கத்தைச் சிலர் பின்பற்றுகிறார்கள் என்றும் அவர்கள் பயந்து கொண்டு மக்காவுக்கு வெளியே போய் தொழுகிறார்கள் என்றும் அண்ணலார் அறிவிக்கும் வேதவரிகளைக் கற்றுச் செயல்படுகிறார்கள் என்றும் தெரிந்துகொண்ட குறைஷிகள் புதிய மார்க்கத்தைக் கண்டு எள்ளளவும் பயப்படவில்லை. ஏளனம் செய்த அவர்கள் புயல் காற்றுப்பட்ட தீபமாக இஸ்லாம் அணைந்துவிடும் என எண்ணினர்.

சிலரோ அண்ணலாரைக் கடுமையாக விமர்சித்தனர். ‘காலாதிகாலமாக நாம் பின்பற்றும் கஅபா வணக்கங்கள் மூடப்பழக்க வழக்கமாம், மனத்திலுள்ள அழுக்குகளைக் களைந்துவிட்டோம் என்பதற்கு அடையாளமாக உடலிலுள்ள ஆடைகளைக் களைந்து தெய்வச்சிலைகளைச் சுற்றிவருவது அநாகரிகமாம், நம்முடைய மூதாதையர்கள் முட்டாள்களாம். சிலைகளை வணங்குவது மனநோயின் அடையாளமாம்’ என்று சிலர் மூக்கு முட்ட குடித்துவிட்டு நாக்குக்கு காரம் பூசினர்.

‘தாய் தந்தை இல்லாத அநாதை, பாட்டனார் பெரிய தந்தை இல்லையெனில் எங்கேயோ ஓடிப் போயிருக்க வேண்டியவர், கதிஜாவை மணக்கவில்லையெனில் முகவரி தெரியாமல் ஆகியிருக்க வேண்டியவர் பாரம்பர்யமிக்க எங்களை எதிர்ப்பதா, எங்கள் மூதாதையர்களைப் பழிப்பதா, எங்கள் தெய்வங்களையும் தேவதைகளையும் மறுப்பதா?’ எனச் சிலர் கண்டனக் கணைகளை ஏவினார்கள்.

‘ஏதாவதொன்றை எதிர்பார்த்து நம் தெய்வங்களைப் பழிக்கிறாரா? குறைஷி சமுதாயத்தை எதிர்க்கப் புதிய மார்க்கத்தைக் கையில் எடுத்துள்ளாரா? இல்லை, ஏதாவது பேய் பிசாசுகளின் பாதிப்பால் உளறுகிறாரா? மனநோயால் பாதிக்கப்பட்டதால் ஏதேதோ சொல்லிப் பிதற்றுகிறாரா?’ என ஆராய்ச்சி செய்தவர்கள் மணல் காற்றுப்பட்டு மண்டையில் படிந்த மணல் துகள்களைத் தட்டிவிடுவதுபோல் புதிய மார்க்கக் கருத்துகளைத் தட்டிவிட்டார்கள்.

சிலர் அண்ணலாரின் வாய்மொழி மெய்யானதா என அறிந்துகொள்ள முஸ்லிம்களோடு பேசிப்பார்த்தனர். பேசியவர்களில் ஒரு சிலர் வேதமொழிகளைத் தூதர் மொழி என்றனர்; ஒரு சிலர் முஸ்லிம்களோடு விதண்டாவாதம் புரிந்தனர்; ஒரு சிலர் சொல்லுக்குப்

பதில் தராது மல்லுக்கு நின்றனர்; மிகச் சிலர் இஸ்லாத்தைத் தழுவினர்.

அபூதாலிப் அண்ணலாரிடமே நேரடியாக புதிய மார்க்கத்தைப் பற்றிக் கேட்டார். அவரோடு அப்போது இளைய மகன் ஜாபரும் இருந்தார்.

அண்ணலார் பெரிய தந்தையிடம் 'நம்முடைய முப்பாட்டன் இபுறாகீம் நபிகளார் மொழிந்ததையே நானும் கூறுகிறேன். இது அல்லாஹ்வுடைய மார்க்கம், கஅபா ஒரே இறைவனுக்காக கட்டப்பட்ட இறையாலயம். இன்று அங்குள்ளவையெல்லாம் இபுறாகீம் நபிகளாரின் வழித் தோன்றல்களாகிய நமக்கு மிகவும் அந்நியமானவை. நான் அல்லாஹ்வின் தூதராக அனுப்பப்பட்டுள்ளேன்' என மொழிந்தார்.

மௌனமாகக் கேட்டுக்கொண்டிருந்த பெரிய தந்தையும் வளர்ப்புத் தந்தையுமான அபூதாலிபிடம் 'உலகில் என்னை வளர்த்து ஆளாக்கிய நீங்கள்தான் எனக்கு உவப்பானவர்களில் முதல் மனிதர். நான் நன்றி பாராட்ட வேண்டியவர்களில் தலை சிறந்தவர். எனக்குக் கிடைத்திருக்கும் பெரும்பேறு உங்களுக்கும் கிடைக்க வேண்டும். நீங்கள் உடனடியாக இஸ்லாத்தை ஏற்க வேண்டியதில்லை; ஆற அமர நன்கு யோசித்த பின்பே ஏற்கலாம்' எனக் கூறினார்.

'ஹாஷிம் குலக் கொழுந்தே, அபுல் காஸிமே! நம் மூதாதையர்களின் மார்க்கத்தை நான் விட்டுவிட முடியாத நிலையில் இருக்கிறேன். ஆயினும் என்னுடைய முழு ஆதரவும் உனக்கு உண்டு. உனக்கு ஏதாவது தீங்கு வருமென்றால் நான் கையைக் கட்டிக்கொண்டு இருந்துவிட மாட்டேன்' என அபூதாலிப் உறுதியோடு கூறினார்.

சிறிது நேரம் அங்கே அமைதி நிலவியது. அபூதாலிப் அங்கிருந்த தன் மகன் அலீயிடம் 'அலீ! நீ உன் சகோதரரின் மார்க்கத்தில் இருப்பது எனக்கு மகிழ்ச்சியைத் தருகிறது. ஆனால், நீ அதைப் புரிந்து கொண்டிருக்கிறாயா?' எனக் கேட்டார்.

'ஏக இறைவன் அல்லாஹ் ஒருவனே! அவனுடைய தூதர் முஹம்மது (ஸல்), அல்லாஹ்வையும் அல்லாஹ்வின் தூதர் மொழிவதையும் நம்புகிறேன். தொழுகையை நிறைவேற்றுகிறேன். தீனை நிலை நாட்டவே வாழ்க்கையை அர்ப்பணிக்கிறேன்' என அலீ மொழிந்ததைக் கேட்ட தந்தையார் மன நிறைவடைந்தார்.

உடனே, அவர் தன் இளைய மகன் ஜாபரிடமும் அண்ணன்கள் வழியைப் பின்பற்றச் சொன்னார். ஜாபர் சிறிது நேரம் கூட தாமதிக்காமல் இஸ்லாத்தைத் தழுவினார்.

அபூதாலிப் இஸ்லாத்தை ஏன் ஏற்கவில்லை? இரு புதல்வர்களை இஸ்லாத்தில் இணைய சம்மதித்த தந்தை எதற்காக இஸ்லாத்தைப் புறந்தள்ளினார்? அதே சமயம் தன் பிள்ளைகளுக்கு ஆபத்தென்றால் கிளர்ந்தெழுவதாக உறுதியளித்துள்ளாரே, அது சாத்தியமா?

குறைஷிகளுக்கும் முஸ்லிம்களுக்கும் மோதல் உருவானால் அவர் எவ்வாறு செயல்படுவார்? அவர் மூதாதையர்களின் அணியில் நிற்பாரா? முற்போக்காளர்களின் அணியில் சேருவாரா? காலம்தான் இதற்குப் பதில் சொல்லும்.

அதன்பின் முஸ்லிம்களை குறைஷிகள் மிக வலுவோடு எதிர்த்தார்கள். தொழுவதைப் பார்த்தால் போதும் குறைஷிகள் கொந்தளிக்க ஆரம்பித்தார்கள். முஸ்லிம்களைக் கிள்ளுக் கீரையாக நினைத்தார்கள்.

குறைஷிகளின் தொல்லைகளிலிருந்து விலகிக்கொள்ள மலைப் பொதும்புகளுக்குச் சென்று தொழுத முஸ்லிம்களை வம்புக்கிழுத்தனர்.

ஒருமுறை குறைஷிகள் வரைமுறையின்றி கிண்டல் செய்தபோது முஸ்லிம்கள் பொறுமையிழந்தனர். இருசாராரின் வாய்ச் சண்டை கைச்சண்டையானது. ஸஃதுப்னு அபீ வக்காஸ் எனும் முஸ்லிம் தோழர் அடித்ததில் ஒரு குறைஷியின் மண்டை உடைந்தது.

இம்மோதலைத் தொடர்ந்து அண்ணலார் இறைநிராகரிப்பாளர்களிடமிருந்து விலகியே இருந்தார். முஸ்லிம்கள் அனைவரையும் விலகியே இருக்கும்படி பணித்தார். அவர்கள் அனைவருக்கும் ஸஃபா மலையருகே இருந்த அர்கமின் பெரிய வீடு சாந்தி நிலையம் ஆனது.

நபித்துவம் கிடைத்து மூன்றாண்டுகள் முடிந்திருந்தன. பெரும்பாலான குறைஷியர்களிடையே புதிய மார்க்கம் தானாகவே அறிமுகமாகியிருந்தது. அவர்களில் நேர்வழி பெற்றோர் சீர்வழியில் வந்தனர். சிலர் பலராகினர். ஒருவரிசை பலவரிசையாகி அர்கம் இல்லத்தில் கூடிய அவை நிறைவரிசையானது.

இந்நிலையில் இஸ்லாமிய அழைப்பை எல்லோருக்கும் தெரியுமாறு விடுக்க இறையாணை வந்தது.

> ‘உமக்குக் கட்டளையிடப்படுகின்றவற்றை வெளிப்படையாகக் கூறிவிடும். மேலும் இணை வைப்போரைச் சிறிதும் பொருள்படுத்தாதீர். (உம்மை) ஏளனம் செய்கின்ற இந்த மக்களைக் கவனித்துக்கொள்ள உமக்காக நாமே போதுமாக இருக்கின்றோம்.

அல்லாஹ்வுடன் மற்றவர்களையும் கடவுளாக்குகின்றவர்கள் விரைவில் அறிந்து கொள்ளத்தான் போகிறார்கள்.’

(திருக்குர்ஆன் 15: 9496)

## அண்ணலார் விடுத்த அழைப்பு...

‘உம்முடைய மிக நெருங்கிய உறவினர்களை எச்சரிக்கை செய்யுங்கள். மேலும், நம்பிக்கையாளர்களில் யார் உம்மைப் பின்பற்றிக் கொண்டிருக்கிறார்களோ அவர்களிடம் பணிவாய் நடந்துகொள்ளும்! அவர்கள் உமக்குக் கீழ்ப்படியாது மாறு செய்தால் ‘நீங்கள் செய்யும் செயல்களுக்கு நான் பொறுப்பாளியல்லன்’ என்று அவர்களிடம் கூறிவிடும். மேலும், வல்லமை மிக்கவனும் பெரும் கருணையாளனுமாகிய இறைவனையே முழுமையாகச் சார்ந்திரும், அவன் எத்தகையவனெனில், நீர் எழும்போது உம்மைப் பார்க்கிறான். மேலும், தலை குனிந்து வணங்குவோர்களிடையே உம் அசைவையும் பார்க்கிறான். திண்ணமாக, அவன் யாவற்றையும் செவியேற்பவனாகவும் நன்கறிபவனாகவும் இருக்கின்றான்.’

(திருக்குர்ஆன் 26: 214 220)

ஊருக்கு உபதேசம் செய்வதற்குமுன் உறவோருக்கு உபதேசம் செய்வதுதானே முறை! எனவே, இறைவன் உறவுகளிடம் இஸ்லாமிய அழைப்பை விடுக்கச் சொல்லி ஆணையிட்டான்.

ஆணையிட்ட இறைவன் அண்ணலாருக்குரிய அடுத்தடுத்தப் பணிகளையும் அழுத்தந்திருத்தமாகக் கூறுகிறான். உம்மைப் பின்பற்றுபவர்களிடம் பணிவாகவும், கனிவாகவும் நடக்கச் சொல்கிறான். அவர்கள் கீழ்ப்படியாவிட்டால் ஏற்படும் விளைவுகளுக்கு நீங்களே பொறுப்பு எனக் கூறிட ஆணையிடுகிறான். செய்ய வேண்டியவற்றைக் கூறிவிட்டு தன்னையே சார்ந்திருக்கும்படி இறைவனே கூறுகிறான்.

இறைவனின் ஆணைகளைச் செவியேற்ற அண்ணலார் முதலாணையை நிறைவேற்ற அணியமானார். அலீயை அழைத்து உறவோரைக் கூப்பிடும்படியும் ஒரு விருந்துக்கு ஏற்பாடு செய்யும்படியும் அண்ணலார் கூறினார்.

தாய் வழிச் சொந்தங்கள் அதிகமிலர்; தந்தை வழிச் சொந்தங்களே அதிகமிருந்தனர். ஒருவர் பாக்கியில்லாமல் அழைக்கப்பட்டனர். பெரிய தந்தையர், சிறிய தந்தையர், மாமிமார்கள், அவர்கள் குடும்பங்கள், ஒன்றுவிட்ட தந்தையர், அத்தந்தையர் வழி மாமிமார்கள், அவர்களின் சகோதரர்கள் என ஒரு பெருங்கூட்டமே விருந்துக்கு வந்தது.

பெரிய தந்தையருள் ஒருவரான அபூலஹப்பை அழைக்க வேண்டாமென மாமிமார்கள் கூறியும் அண்ணலார் அழைத்தார். உறவைக் கூட்டி அழைப்பை விடுக்கும்படி இறைவன் ஆணையிட்டிருக்கும்போது பெரிய தந்தையும் சம்பந்தியுமான அபூலஹபை அழைக்காமல் இருப்பது எப்படி? அவரை இறைவன் விலக்கச் சொல்லவில்லையே!

அபூலஹபை அழைக்கக்கூடாதென மாமிமார்களே கூறுவதற்குக் காரணமிருந்தது! அவர் அழுக்காறு, அவா, வெகுளி, இன்னாச் சொல் இவை நான்குக்கும் சொந்தக்காரர். செல்வந்தரான அவர் அண்ணலாரின் வளர்ச்சியை விரும்பாதவர்; எச்சூழலிலும் அண்ணலாரை எதிரியாக நினைப்பவர்.

விருந்து முடிந்தபின் அண்ணலார் எழுந்து இஸ்லாமிய அழைப்பினைச் சமர்ப்பித்திட எண்ணிய வேளையில் அழையா பேச்சாளியாக அபூலஹப் எழுந்து செவிகளைக் கிழிக்கும் செய்திகளைச் சொன்னார்.

‘முஹம்மதே! நீ இங்கே என்ன பேசப் போகிறாய் என்பது எனக்கு நன்றாகவே தெரியும். சொந்தங்களும் பந்தங்களும் கூடியுள்ள இந்தக் கூட்டத்தில் எங்களுக்குப் பிடித்தமானவற்றைப் பற்றி மட்டும் பேசு. நீ ஏதோ ஒரு புதிய மார்க்கத்தைப் பற்றிச் சொல்லி வருகிறாயாம். இறைவன் ஒருவன் என்கிறாயாம். மூதாதையர்களின் மார்க்கத்தைப் பழிக்கிறாயாம். கஅபாவிலுள்ள தெய்வங்களையும் தேவதைகளையும் கல்லெனச் சொல்கிறாயாம்! இவையெல்லாம் கவைக்குதவாத வீண்பேச்சு. இந்தத் தேவையற்ற பேச்சுக்களையெல்லாம் விட்டுவிடு, இல்லையேல் ஒருநாள் அரபுலகம் முழுவதுமாகச் சேர்ந்து உன்னைக் கொல்ல வரும். அப்போது உன்னைச் சேர்ந்த நாங்களும் பாதிக்கப்படுவோம்’ என அபூலஹப் பேரறிஞரைப்போல் பேசினார்.

‘உறவினர் அனைவரிடமும் அல்லாஹ்வின் தூதைக் கூறலாம். சிலை வணக்கத்தைத் தவிர்த்து ஒரே இறைவனை வணங்கச் செய்யலாம். தீமைகளைவிட்டு விலக்கலாம். நன்மைகளின் பால் ஏவலாம்’ என எண்ணியிருந்த அண்ணலாருக்கு அபூலஹபின் பேச்சு

ஏமாற்றம் தருவதாக அமைந்தது.

அண்ணலாருக்கு அறிவுரை கூறிய அபூலஹப் உறவினருக்கு எச்சரிக்கை விடுத்தார். 'இரத்த பந்த உறவுகளே நீங்களெல்லாம் ரத்தம் சிந்தக் கூடாது என்பதற்காகவே இங்கு நான் பேச எழுந்தேன். என் தம்பி மகனின் செயலுக்கு அணை போடவே நான் உங்கள் முன் நின்று கொண்டிருக்கிறேன். நீங்கள் எல்லோரும் சேர்ந்து முஹம்மதுக்குக் கடிவாளம் போட்டுவிடுங்கள். இல்லையேல் எல்லோரும் சேர்ந்து வீட்டுக்குள் அடைத்து வைத்து விடுங்கள். மற்றவர்கள் வந்து நம் உறவுக்காரரின் மேல் கைவைக்கும் முன்பு நாம் எச்சரிக்கையாக நடந்துகொள்ளவேண்டும். பிறர் வந்து மக்காவுக்குள் மோதலை உருவாக்கினால் நீங்களும் உங்கள் குலம் கோத்திரங்களும் இழிவுக்காளாகிவிட நேரும்' என அபூலஹப் பேசிக் கொண்டே சென்றார்.

உறவினர் பலரும் 'இந்த மனிதர் எப்போதும் இப்படித்தான்!' என முணுமுணுத்தபோது அண்ணலார் சங்கடப்பட்டார்.

அதே சமயம் மாமிமார்கள் அபூலஹபைத் திட்டத் தொடங்கினர். அவர்களில் மாமி ஸபிய்யா எழுந்து 'வயிற்றுக்கு உணவில்லாதபோதுதான் செவிக்கு உணவு வேண்டும். வயிறு நிரம்பிவிட்டது, செவிக்கெதற்கு உணவு? செவிக்கு சேதியைத்தான் சொல்லலாம். செருக்கைக் கொண்டு சேர்க்கலாமா! அதுவும் விருந்து கொடுத்தவர்தான் அவர் விடுக்க வேண்டிய சேதியை விடுக்கலாம். விருந்துண்ண வந்தவர் எழுந்து விருந்து கொடுத்தவரை விமர்சிக்கலாமா? இறைவனின் மேலாணை! அப்துல் முத்தலிபின் சந்ததியில் ஒரு நபி வருவார் என ஆதியாகமங்களைப் படித்தவர்கள் சொல்லி வந்தனர். அந்த நபி முஹம்மதே' என உரைத்தபோது அபூலஹப் உரத்த குரலில் கத்தத் தொடங்கினார்.

'வீட்டுக்குள்ளிருந்து ரொட்டி தட்டிக்கொண்டிருக்கும் உனக்கு உலக நடப்புத் தெரியுமா? காலாதி காலமாக வணங்கி வரும் தெய்வங்களை அவமதித்தால் அரபுகள் சும்மா இருக்கமாட்டார்கள். முஹம்மதை மட்டும் அழித்தொழிக்க முற்படமாட்டார்கள். நம்முடைய கோத்திரத்தாரையே கொலை செய்து கூறுபோட்டுவிடுவார்கள்! உங்களுக்கெல்லாம் அறிவில்லையா? நீங்களெல்லாம் மூளையைக் கழட்டி வைத்துவிட்டா வந்துள்ளீர்கள்!' என அபூலஹப் கேட்டபோது அபூதாலிபு கோபத்தால் கொந்தளித்தார்.

'அப்துல் முத்தலிபின் பிள்ளைகள் பேசக் கூடிய பேச்சா இது?

முஹம்மது நம் பிள்ளை; அவர் நம்மை நம்பி நடந்தவர்; பிறர் நம்ப நடந்தவர். அவர் ஒருபோதும் பொய் சொல்ல மாட்டார். நம்மில் எவரும் அவரை வாய்மையற்றவர் எனச் சொல்லத் தயாரில்லை. ஆனால் அவர் சொல்லும் புதிய மார்க்கத்தோடுதான் சிலர் முரண்படுகிறார்கள். அபூலஹப் முரண்படலாம். நானும் நம் மூதாதையரின் மார்க்கத்தை விடத்தயாரில்லை. அதற்காக முஹம்மதை அவருக்கு எதிராகக் கிளம்பும் எவரிடமும் சிறைப்பட விடமாட்டேன்; சிறு சிராய்ப்புக்கூட அவர் மேனியில் விழ சம்மதிக்க மாட்டேன்' என்ற அபூதாலிபின் சிம்மக் குரல் கேட்டு அபூலஹப் எனும் சிறு நரி இடத்தைக் காலி பண்ணியது.

நாற்பதுக்கு மேற்பட்ட விருந்தினர்கள் அன்று அண்ணலாரின் பேச்சைக் கேட்கும் வாய்ப்பை இழந்தனர். குள்ள நரி அபூலஹபின் குழப்பமில்லாத ஒரு கூட்டத்தை மறு நாளே அண்ணலார் ஏற்பாடு செய்தார்.

அடுத்த நாள் உறவினர்களோடு ஆதரவாளர்களும் நடுநிலையாளர்களும் கலந்து கொண்டனர். அண்ணலார் ஓர் அருமையான அழைப்பை அழகாக விடுத்தார்.

'அப்துல் முத்தலிபின் மக்களே! நான் உங்களிடம் சமர்ப்பிக்கின்ற மார்க்கம் ஒரு புதுமார்க்கமாகத் தெரியலாம். ஆனால் இது பழைய மார்க்கம்தான். இபுறாகீம், இஸ்மாயில் என்ற கஅபாவின் காவலர்கள் அன்று நம் மூதாதையர்களுக்கு சமர்ப்பித்த பழைய மார்க்கம்தான் இது. இதைவிட ஒரு சிறந்த மார்க்கத்தை எந்த அரபியும் கொண்டுவர முடியாது. இது இறைவனின் இனிய மார்க்கம். இது இம்மையிலும் மறுமையிலும் சுகத்தைத் தரும் புனித மார்க்கம். இறைவன் என்னை தன்னுடைய தூதராக அறிவித்துள்ளான். என்னுடைய வேலை உங்களையெல்லாம் அந்த ஏக இறைவனுடைய பாதையில் அழைத்துச் செல்வதே. நான் உங்களுடைய உறவினன். நீங்கள் என்னுடைய உறவினர். நாளை இஸ்லாத்தின் பாதையில் செல்வதன் மூலம் அரபுகள் அனைவரும் சகோதரர்களாவர். அதன்பின் உலகோர் அனைவரையும் இஸ்லாத்தால் சகோதரர்களாக்குவோம். அதன் மூலம் உலக சகோதரத்துவம் மலரும்' என அண்ணலார் உரைக்க அமைதி நிலவியது.

அண்ணலாரின் ஆதரவாளர்களான தந்தையர் அபூதாலிப், அப்பாஸ், ஹம்ஸா மூவரும் அருமைப் புதல்வர் பேசியதைக் கேட்டுக் கொண்டிருந்தனர்.

அப்பாஸின் மனைவி உம்முல் பத்லோ தயக்கமின்றி இஸ்லாத்தைத் தழுவினார். அவர் தன்னுடன் பிறந்த சகோதரி மைமுனா, உடன்

பிறவாச் சகோதரிகளான ஸல்மா, அஸ்மா ஆகியோரையும் இஸ்லாத்தைத் தழுவச் செய்தார்.

உம்முல் பத்ல் வீட்டில்தான் அபூதாலிபின் இளைய மகன் ஜாபர் வளர்ந்து வந்தார். ஜாபர் அஸ்மாவை மணந்தார். ஸல்மாவை அண்ணலாரின் சிறிய தந்தை ஹம்ஸா மணந்து கொண்டார். ஒரு செடியில் பூத்த மலர்கள் அவர்கள், பச்சை ரோஜாக்கள்.

இந்தச் சூழலில்தான் அண்ணலாரிடமிருந்து விடுதலைபெற்ற உம்முல் ஐய்மன் இஸ்லாத்தைத் தழுவினார். விருந்துக்கு வந்த பலரில் பெண்களே இஸ்லாத்தை ஏற்றனர்.

## 8. மலைப்பிரசங்கம்

### மலைப்பிரசங்கம்!

மக்கமாநகருக்கு அருகாமையில் உள்ளது ஸபா குன்று

அக்காலத்தில் மக்களிடம் தகவல்களையோ செய்திகளையோ கொண்டு சேர்க்க விரும்புவர்கள் ஸபா குன்றின் உச்சியிலேறி ‘யா ஸபாஹா, யா ஸபாஹா’, என உரத்துக் குரல் எழுப்புவார்கள்.

அவர்கள் அப்போது முழு நிர்வாணமாகக் காட்சி தருவார்கள். பொய்யற்ற முழு உண்மைச் செய்தியைச் சொல்வதற்காக ஆடையற்ற அவர்கள் மலை மேடையைப் பயன்படுத்துவார்கள்.

அவ்வாறு உரத்துக் குரல் எழுப்பப்பட்டால் ஸபா மலையடிவாரத்தை நோக்கிப் பெருங்கூட்டம் சென்று உயரே நிற்கும் மனிதர் விடுக்கும் உரத்தக் குரல் செய்தியைப் பெற்றுக் கொள்ளும். இதனை ‘நசீருன் உர்யான்’ என்று அன்று குறிப்பிட்டனர்.

அரபுகள் காலாதிகாலமாகக் கடைப்பிடித்து வந்த நிர்வாணக் கோலத்தைப் பின்பற்றாமல் அண்ணலார் ஸபா குன்றின் மேல் ஏறி நின்று உரத்துக் குரல் எழுப்பினார்.

‘யா ஸபாஹா, யா ஸபாஹா... மக்காவாசிகளே! மக்காவாசிகளே! என்னருமை குறைஷி குல சகோதரர்களே! அனைவரும் இங்கே வாருங்கள்... தாமதிக்காமல் அனைவரும் இங்கே வாருங்கள். உங்களை நோக்கி பெரும் அபாயம் வந்து கொண்டிருக்கிறது’ என அண்ணலார் உரத்த குரலில் கூறினார்.

‘யார் இந்நேரத்தில் ஸபா குன்றில்? எதற்காக குன்றில் ஏறி குரல் கொடுக்கிறார்? என்ன சேதியாக இருக்கும்?’ என எண்ணியபடியே மக்கள் குன்றை நோக்கி நடந்தனர். ஒருவர் இருவராக வந்தவர்கள் பெரும் கூட்டமாகி விட்டனர்.

கூடிநின்றவர்கள் குன்றின் மேல் அண்ணலார் நிற்பதைக் கண்டு ஒருவருக்கொருவர் கிசு கிசுத்துக் கொண்டனர். அண்ணலார் என்ன

சொல்லப் போகிறார் என்பதை அறிய அவர்கள் ஆவலுடன் நின்றனர்.

‘இந்தக் குன்றுக்கு அப்பாலிலிருந்து ஒரு பெரும்படை உங்களைத் தாக்க வருகிறது என நான் கூறினால் நீங்களெல்லாம் நம்புவீர்கள் அல்லவா!’ என அண்ணலார் கேட்க ‘நம்புவோம்... நம்புவோம்’ என ஒத்தகுரலில் அங்கிருந்தோர் அனைவரும் உரத்துக் கூறினர்.

‘கட்டாயம் நம்புவீர்களா!’ என அண்ணலார் மீண்டும் கேட்டார்.

‘கட்டாயம் நம்புவோம். நீர் பொய் கூறும் மனிதரில்லையே!’

‘அன்புச் சகோதரர்களே! இப்போது உங்கள் முன் ஒரு பேருண்மையைக் கூறப் போகிறேன். மலையின் மற்றொரு பக்கத்தைப் பார்த்து அங்கு வரும் பெரும் படையைப் பற்றி எச்சரிப்பதுபோல் உங்களை இப்போது எச்சரிக்கிறேன். எதிரிப்படைகளைப்போல் உங்களைச் சூழ்ந்துள்ள அசத்தியம், தீமைகள், அஞ்ஞானங்கள், பாவங்கள் அனைத்தையும் ஏகத்துவத்தைக் கொண்டு எதிர்கொள்ளுங்கள். அல்லாஹ்வின் கோபத்துக்கு அஞ்சுங்கள். நரக நெருப்பிலிருந்து உங்களைக் காப்பாற்றிக் கொள்ளுங்கள். நரக நெருப்பிலிருந்து தப்பிக்க ஒரே வழிதான் உள்ளது. அது அல்லாஹ் ஒருவனே என ஏற்றுக்கொள்வதுதான். இலாஹிலாஹ இல்லல்லாஹ் முஹம்மதுர் ரசூலுல்லாஹ் எனும் உறுதிமொழி உங்களை மேலான மனிதராக்கும்’ என அண்ணலார் மொழிந்ததைக் கேட்டு கூட்டத்துக்குள் சலசலப்பு.

அப்போது அந்தக் கூட்டத்தில் அபூலஹப் இருந்தார். அண்ணலார் மொழிந்ததைக் கேட்டுவிட்டு அந்த நரகவாசி சும்மாயிருப்பாரா?

‘வேலை வெட்டியில்லாதவர்களா நாங்கள்? வெட்டிப் பேச்சுப் பேச உனக்கு ஸபா குன்றுதானா கிடைத்தது? இதற்குத்தானா ஸபா குன்றைத் துணையாக்கிக் கொண்டாய்? நீயும் உன் அல்லாஹ்வும் நாசமாகப்போ!’ என்ற அபூலஹப் ஏசிக்கொண்டே கூட்டத்தைக் கலைத்தார்.

அண்ணலாரின் வழியில் அபூலஹப் தடைக் கல்லைப் போடுவது இது இரண்டாவது முறை. முதன் முதலாக உறவோருக்கு ஏற்பாடு செய்திருந்த விருந்தில் அண்ணலார் இறைவனின் அழைப்பை எடுத்துரைக்க வேண்டிய தருணத்தில் அபூலஹப் அதிகப் பிரசங்கியானார். மீண்டும் ஸபா குன்றில் நின்று அண்ணலார் சாந்தி மார்க்கத்தைப் பற்றிச் சொல்லிக் கொண்டிருந்தபோது நல்வாய்ப்பை நாசமாக்கினார்.

செல்வச் சீமானாக விளங்கிய அபூலஹப் தன்னுடைய குடும்பத்தில் ஒருவர் செல்வச் சீமாட்டியை மணந்து வளர்ந்து வருவதைப் பிடிக்காதவர். செல்வமும் செல்வாக்கும் பெற்றிருக்கும் தம்பிமகன் நாளை இறைத்தூதர் என்ற தகுதியில் மக்கள் தலைவராக மாறிவிட்டால் தன்னை விடப் பல மடங்கு உயர்ந்து விடுவாரே என வாடியவர். தன் பெண்டு, தன் பிள்ளை என வாழ்ந்த அபூலஹப் அப்துல் முத்தலிபின் சொந்த பந்தங்களை புறந்தள்ளியவர். இறுதிவரை தீயவழியிலேயே வாழ இதயத்தில் முத்திரை குத்தப்பட்டவர்.

இதயத்தில் முத்திரை குத்தப்பட்டவரைப் பற்றி இறுதி முத்திரைப் பதிக்கப்பட்டவராக வந்திருந்த அண்ணலார் கவலைப்படவில்லை. நச்சுச் செடியை மாற்ற முடியாது என்ற உண்மை தெரிந்த அண்ணலார் அபூலஹபை மாற்ற எம்முயற்சியும் எடுக்கவில்லை.

அவ்வப்போது வந்த இறையாணைகளை ஏற்றுச் செயல்பட ஏற்றம் பெறத் தொடங்கியது இஸ்லாமிய இயக்கம். அது அண்ணலாரின் வீட்டிலும் அன்புத் தோழர் அர்கமின் வீட்டிலும் பயிற்சிப் பட்டறைகளைக் கண்டது.

அழைப்பு, அறவுரை, தொழுகை, அணி சேர்தல் என இயக்கம் பேரியக்கமாகும் சாத்தியக்கூறுகள் தென்பட்டன. தொழுகை அணிவகுப்பு கூட போர்ப் படையின் அணிவகுப்புப் போலிருக்கவே எதிரிகள் புண்பட்டனர்.

ஒரு நாள் அண்ணலார் கஅபாவுக்குள் சென்றபோது எங்கிருந்தோ வந்திருந்த அரபுகளும் மக்கா குறைஷிகளும் சிலைகளைச் சேவித்துக் கொண்டிருந்தனர். சில ஆண், பெண்களும் எவ்விதக் கூச்சமுமின்றி நிர்வாணமாக கஅபாவை வலம் வந்து கொண்டிருந்தனர்.

‘கோடி கொடுத்தாலும் கிடைக்காத ஏகத்துவக் கொள்கையை விட்டு எப்படி நீங்கள் சிலை வணங்கிகள் ஆனீர்கள். மறைவாகப் படுத்திருக்கும்போதுகூட ஆடையை முழுமையாக அகற்ற வேண்டிய நிலை இல்லாதபோது எப்படி நீங்கள் பொதுவிடத்தில் நிர்வாணமாகச் சுற்றி வருகிறீர்கள். இவற்றையெல்லாம் உங்களுக்குக் கற்றுக் கொடுத்தது யார்? நம்முடைய முப்பாட்டன் இபுறாகீம் தானே கஅபாவை நிர்மாணித்தார்? அவர்தானே சிலையோ சித்திரமோ இல்லாத புனித ஆலயத்தை வழிபடச் செய்தார்? எப்படி நீங்கள் கஅபாவை சிலைகளும் சித்திரங்களும் நிறைந்திருக்கும் காட்சிக் கூடமாக்கினீர்கள்? உங்களில் ஒருவருக்குமா ஏக இறைவனின் நினைவு வரவில்லை. நீங்கள் சிலைகளை வணங்கியே காலத்தைக்

கடத்துவதற்குக் காரணம் என்ன?' என அண்ணலார் கஅபாவில் வணங்கிக் கொண்டிருந்தவர்களைக் கேட்க, எவரும் பதில் சொல்லவில்லை; கோபம் கொண்ட அவர்கள் தமக்குள் கூடிக் கூடிப் பேசினார்கள்.

சிறிது நேரத்தில் அவர்கள் அண்ணலாரை ஏசத் தொடங்கினார்கள்; எதிர்வாதம் செய்து பேசத் தொடங்கினார்கள். வாய்ச் சண்டை வளர்ந்தது; கைச் சண்டை வரும் போலிருந்தது.

'ஆத்திரப்பட்டுப் பயனில்லை. நீங்கள் அல்லாஹ்வை மட்டும் வணங்குங்கள். அவன் உங்களை விரும்புவான்' என அண்ணலார் ஆறுதல் சொன்னாலும் அவர்கள் கோபம் அடங்கவில்லை; அவர்கள் சாபமிட்டார்கள்.

## அந்த ஒரு சொற்றொடர்!

கஅபா ஆலயம் ஒரே இறைவனை மட்டும் வணங்கக் கட்டப்பட்ட ஆலயம்தான். காலப்போக்கில் அங்கு சிலைகளும் சித்திரங்களும் குவிக்கப்பட்டபின் அது ஆன்மிக பீடமாக மட்டுமல்ல, அதிகார பீடமாகவும் மாறியது.

ஆளும் வர்க்கமில்லாத மக்காவில் கஅபாவை நிர்வகித்தவர்களே ஆள்வோராக மாறினர். கஅபாவை வைத்து மக்கா மட்டும் இயங்கவில்லை, அரபு மாநிலமே இயங்கியது.

வடக்கிலிருந்தும் தெற்கிலிருந்தும் வந்த அரபுகள் கஅபாவை வணங்குவதோடு நிற்கவில்லை, அங்கிருந்து எடுத்த கல்லைக் கொண்டு தம் ஊர்களிலும் கோயில் நிறுவி கஅபாவின் கிளையைத் தொடங்கினார்கள். மேற்கிலிருந்தும் கிழக்கிலிருந்தும் மக்கா வந்தவர்கள் சில கற்களைக் கொண்டுவந்து கஅபாவில் வைத்ததோடு மக்காவிலிருந்து எடுத்துச் சென்ற கற்களைக் கொண்டும் புனிதம் தேடினார்கள்.

அரபுலகம் முழுதும் ஆங்காங்கே எத்தனையோ குலங்களும் கோத்திரங்களும் இருந்தாலும் குறைஷிகளை உயர்வானவர்களாக மதிக்க கஅபாவே காரணம். அவர்கள் கஅபாவின் புரோகிதர்களாக இருந்த பேற்றால் அரபுகளின் தலைமக்களாக விளங்கினார்கள்.

முதன் முதலில் ஜுர்ஹுமிகள் கஅபாவின் காவலராக விளங்கினர். அவர்கள் காலப் போக்கில் சத்தியத்தைச் சாய்த்தும் நீதியின் கழுத்தை நெரித்தும் வாழ்ந்ததால் குஸாஅக்களால் விரட்டியடிக்கப்பட்டனர்.

பின்னர் குஸாஅக்கள் குற்றவாளிகளாக்கப்பட்டு குறைஷிகளால் அப்புறப்படுத்தப்பட்டனர்.

இப்போது குறைஷிகளை யார் அப்புறப்படுத்துவது? கஅபா களங்கப்படுத்தப்படுவதைக் கண்டும் காணாமல் இருக்கும் குறைஷிகளை யார் விரட்டியடிப்பது?

அண்ணலாரின் பிரச்சாரம் வெற்றி பெறுமானால் கஅபா முஸ்லிம்களின் கரங்களுக்குப் போகலாம்! வெற்றி பெறாவிடில் குறைஷியரின் அதிகாரம் மக்காவைச் சுற்றியுள்ள யாராவது ஓர் இனத்துக்குப் போகலாம்.

குறைஷிகள் கஅபாவை இழக்கச் சம்மதிப்பார்களா? உயர் குடிகளாகிவிட்ட அவர்கள் பாரம்பர்யப் பெருமையை விட்டுவிடச் சம்மதிப்பார்களா?

கஅபாவின் காணிக்கைகளும் கஅபாவுக்கு வரும் பயணிகளால் நடக்கும் வணிகங்களும் இல்லையெனில் மக்கா வறண்டுவிடும். புனிதத்தலத்தை வைத்துத்தானே புகழும் பொருளாதாரமும்!

புகழையும் பொருளாதாரத்தையும் இழக்க அண்ணலார் காரணமாகிவிடுவாரோ என்பதாலேயே குறைஷிகள் அண்ணலாரை எதிர்த்தனர்; அற்புதப் பேரொளியை வாயால் ஊதி அணைக்க முயன்றனர்.

புகழும் பொருளாதாரமும் நிலைக்க வேண்டுமானால் சிலைகள் கஅபாவில் நின்றபடி இருக்க வேண்டும்; கோரிக்கைகளோடு காணிக்கைகளும் நேர்ச்சைகளும் என்றென்றும் குவியவேண்டும்.

குறைஷிகளுக்குப் பதில் யார் வந்தாலும் பரவாயில்லை, சிலைகள் நிலைத்திருக்கும். அண்ணலார் வந்துவிட்டால் சிலைகள் தகர்ந்துவிடும்.

எனவே, அண்ணலார் பழைய பண்பாட்டைப் பேண வேண்டும்; இஸ்லாம் எனும் புதிய பண்பாட்டைத் தூக்கி எறிய வேண்டும்.

இதற்கு என்ன வழி? குறைஷிகள் அண்ணலாரின் பெரிய தந்தை அபூதாலிபைச் சந்தித்து அவருடைய வளர்ப்பு மகனை அடக்கி வைக்க வேண்டுமெனக் கூறிட ஒரு குழுவை அமைத்தனர்.

அக்குழுவில் முக்கியமானவராக ஹர்புடைய மகன் அபூசுப்யான் இருந்தார். இவர் அண்ணலாரின் வம்சாவளியைச் சேர்ந்தவர். அப்துல் முத்தலிபின் தந்தை ஹாஷிமின் உடன் பிறந்த சகோதரர்கள் அப்து ஷம்ஸ், அப்து முத்தலிப் ஆவர். இவர்களில் ஷம்ஸின் புதல்வர் ஹர்பு;

ஹர்பின் புதல்வர் அபூசுப்யான். எதிரணியினர் வேறு யாருமில்லை, எல்லோரும் ரத்தபந்த உறவுகளே!

அபூசுப்யானோடு ரபீஆவின் மகன் உத்பா, முகீராவுடைய மகன் வலீது, வாயிலுடைய மகன் ஆஸ், ஹிஷாமுடைய மகன் அம்ரு ஆகியோர் அபூதாலிபைச் சந்திக்கச் சென்றனர்.

ஹிஷாமுடைய மகன் அம்ருதான் பிற்காலத்தில் அபூஜஹ்ல் அறிவீனத்தின் தந்தையென அழைக்கப் பெற்றவர், இஸ்லாத்தின் மாபெரும் எதிரி.

‘முஹம்மது குறைஷிகளைப் பற்றிக் குறையொன்றும் சொல்லக்கூடாது. அவர்கள் கொண்டாடும் மார்க்கத்தைப் பற்றியோ, கும்பிடும் தேவதைகளைப் பற்றியோ விமர்சிக்கவே கூடாது. அதுபோல முஹம்மதுவின் புதிய மார்க்கத்தைப் பற்றியோ வணங்கும் அல்லாஹ்வைப் பற்றியோ குறைஷிகள் குறை சொல்லமாட்டார்கள்!’ என்ற முடிவோடு குறைஷிகளின் குழு அபூதாலிபைச் சந்தித்தது.

அபூதாலிப், அவர்களிடம் ‘ஆகட்டும் பார்க்கலாம்’ எனச் சொல்லி அனுப்பிவைத்தார்.

அண்ணலாரோ இறைவனின் ஆணைகளைச் செயல்படுத்தும் வழிமுறைகளைச் செய்தார். இணைவைப்பதிலுள்ள தீங்குகளை எடுத்துரைத்தார்; சிலை வணக்கத்தால் ஏற்படும் சீர்கேடுகளைப் பட்டியலிட்டுக் கூறினார். ஏகத்துவம் தரும் ஏற்றங்களையும் அதனால் உலக வாழ்வில் கிடைக்கும் மாற்றங்களையும் தொகுத்துரைத்தார்.

முஸ்லிம்களின் எழுச்சியையும் வளர்ச்சியையும் கண்டு குறைஷிகள் அஞ்சினார்கள். முஸ்லிம் சமுதாயம் குறைஷிகளைவிட அதிகமாகிவிட்டால் ஏற்படும் விளைவுகளைப் பற்றி எண்ணத் தவறவில்லை. கஅபாவிலுள்ள சிலைகள் அகற்றப்பட்டுவிட்டால் என்ன நடக்கும் எனக் கணக்குப் போட்டார்கள். அதை வணங்க வரும் வெளியூர் மக்கள் வரமாட்டார்களே எனக் கலங்கினார்கள். பிற மக்கள் வருகையின்றி வணிகம் குறைந்து போனால் வாழ்க்கை பிரச்னையாகிவிடுமே எனப் பயந்தார்கள். முஸ்லிம்களின் கொள்கைப்படி கட்டுப்பாடுகள் வந்துவிட்டால் சுகபோகமாக வாழ முடியாதே என கைபிசைந்து நின்றார்கள். மது, மாது, சூது என வாழும் சுதந்திரமான வாழ்க்கை தொலைந்து போகுமே என வருத்தப்பட்டார்கள். நாளை வருத்தப்பட்டு பாரஞ்சுமப்பதைப் பற்றி எண்ணி எண்ணி அழாமல் அழுதார்கள்.

பொங்கிப் பெருகிவரும் ஜீவநதியை மணலை அள்ளிப் போட்டுத் தடுக்க முயன்றவர்கள் அது இயலாமல் போக பாறாங்கற்களைக் கொண்டு அணை போட முயன்றார்கள்.

மீண்டும் அபூதாலிபிடம் வந்த குறைஷிகள் ‘பெருமதிப்புக்குரியவரே! பெரியவரே! உங்கள் மகன் நம் தெய்வங்களைத் திட்டுவதை நிறுத்தவேண்டும்; நம் மூதாதையர்களை ஏசுவதை நீங்கள்தான் தடுக்க வேண்டும். இல்லையேல் நீங்கள் எங்களுக்கும் அவருக்குமிடையே நிற்பதை விலக்கிக்கொள்ள வேண்டும். யார் வணக்கத்துக்குரியவர்? அல்லாஹ்வென்னும் ஒருவனா? நம் மூதாதையர்களின் நூற்றுக்கணக்கான தேவதைகளா? அதை நாங்களும் அவரும் நேரடியாகவே முடிவு செய்துகொள்வோம்’ என இறுதி எச்சரிக்கை விடுத்தனர்.

அபூதாலிப் அண்ணலாரை அழைத்துவரச் செய்தார். அண்ணலார் வந்தவுடன் அபூதாலிப் குறைஷிகளின் கோரிக்கையைச் சொன்னார்.

‘அன்புத் தந்தையே! நான் மேற்கொண்டிருக்கும் செயல் எனக்கு மட்டுமல்ல, எல்லோருக்கும் பயனளிக்கும் செயல்! அதை நான் விட்டுவிட வேண்டுமா? அதைச் செய்யாமல் நான் இவர்களுக்குக் கட்டுப்பட வேண்டுமா?’ எனக் கேட்டார்.

‘உம்முடைய பயனளிக்கும் செயல், இவர்களுக்குப் பகையை மூட்டும் செயலாக இருக்கிறதே!’

‘எது பகையை மூட்டும் செயல்! வாயைத் திறந்து ஒரே ஒரு சொற்றொடரைச் சொல்வதா பகையை மூட்டிவிடும்?’ என அண்ணலார் கேட்க ‘அந்த ஒரே ஒரு சொற்றொடர்தான் என்ன?’ என அபூஜஹ்ல் வினவினார்.

‘அந்த ஒரே ஒரு சொற்றொடரை இவர்கள் சொன்னால் போதும், இவர்களிடம் அரபு நாடு முழுவதும் அடிபணிந்துவிடும், உலகமே ஓடோடி வந்து உறவு கொண்டாடும்!’

‘அந்த ஒரே ஒரு சொற்றொடரால் நம் பிணக்குகள் தீருமென்றால் இப்போதே அதைச் சொல்கிறோம்’ என்ற அபூசுப்யானிடம் ‘லா இலாஹ இல்லல்லாஹு வணக்கத்துக்குரியவன் அல்லாஹ்வைத் தவிர வேறில்லை என மொழிந்தால் போதும்’ என அண்ணலார் மொழிந்தார்.

‘அது தானே பிரச்னை! அங்கேதானே சிக்கல் ஆரம்பமாகிறது. அந்தச் சொற்றொடரை வைத்துத்தானே நீர் மக்களைச் சூதாட்டம் ஆடுகிறீர்’ என்றார் அபூஜஹ்ல்.

‘நான் சூதாடுகிறேன் எனச் சொல்லாதீர். போராடுகிறேன்; உங்களைப் போன்றோர்களுடன் வாதாடுகிறேன்’ என்றார் அண்ணலார்.

‘பேச்சை வைத்தே வென்றுவிடலாம் என எண்ணாதீர்; திண்ணைப் பேச்சு தெருவோடு போய்விடும்; அம்பலம் ஏறாது’ என்றார் உத்பா.

‘நான் பேசுவதெல்லாம் என் பேச்சல்ல, இறைவனுடைய பேச்சு. அப்பேச்சுகள் எல்லாம் அர்ஸ் எனும் பேரம்பலத்திலிருந்து வந்து திண்ணைகளில் ஒலிப்பவை. அவை சத்திய வாக்குகள், என்றும் வெல்லக்கூடியவை’ என்ற அண்ணலாரின் உறுதியைக் கண்டு குறைஷிப் பிரமுகர்கள் வீண் தர்க்கம் புரிந்தனர்; குதர்க்கம் பேசினர்.

‘எவ்வளவோ சொல்லிவிட்டோம். நீர் திருந்துவதாகத் தெரியவில்லை. உபைல் உம்மைப் பார்த்துக் கொள்ளும்’ எனச் சொன்னவர்கள் அண்ணலாரின் மேல் சாபமிட்டுக் கொண்டே சென்றனர்!

## கதிரையும் மதியையும் கைகளில் தருவரோ?

நல்லவர்கள், மனசாட்சி உள்ளவர்கள், நசுக்கப்பட்டவர்கள், உரிமை பறிக்கப்பட்டவர்கள், நடுநிலையாளர்கள், நாணயமிக்கவர்கள் என மக்காவில் வாழ்ந்த நன் மக்கள் இஸ்லாத்தை இதயத்தில் ஏற்பதில் முன்னணியில் நின்றார்கள்.

சிலை வணக்கத்தைவிட்டு ஏகத்துவத்தை ஏற்று ஓரிறைவனை வணங்குபவர்கள் புதிய சமுதாயமாக உருவாகிக் கொண்டிருந்தார்கள். புதிய சமுதாயத்தை குறைஷிகள் எதிரிச் சமுதாயமாக மட்டும் கருதவில்லை. அதை ஓர் அச்சுறுத்தலாகவே கருதினர். ஆன்மிகக் கருத்துகளைத்தானே சொல்கிறார்கள். சொல்லிவிட்டுப் போகட்டுமே என அவர்கள் வாளாயிருக்கவில்லை. அவர்களைப் போர்வாளாக எண்ணி கேடயங்களையும் வாள்களையும் தேடினார்கள்.

அண்ணலாரை கஅபாவுக்கு அழைத்து ஏகத்துவம் பற்றி விளக்கம் கேட்டவர்கள் அதை மறுத்துரைத்துப் பேசியும் பணியாததால் ஆசை வார்த்தைகள் கூறினார்கள். செல்வம், மதிப்பு, மரியாதை, புகழ், ஆட்சி, அதிகாரம் ஆகிய அனைத்தையும் தருவதாகச் சொன்னார்கள். அண்ணலார் ஏகத்துவத்தைக் கைவிட ஒப்புக்கொள்ளவில்லை.

ஒருவன் திமிரோடும் கிண்டலோடும் ‘உமக்கு மூளைக் கோளாறா! இல்லை பேய் பிசாசுகள் பிடித்து ஆட்டுகிறதா? சொல்லும்,

வைத்தியரையோ மாந்த்ரீகரையோ அழைத்துவரச் செய்யலாம்’ எனக் கூறினான்.

‘அமைதியான சமுதாயத்தில் குழப்பத்தை உண்டாக்கிவிட்டீர். கஅபாவின் தெய்வங்களையும் தேவதைகளையும் களங்கப்படுத்திவிட்டீர். பாரம்பர்யப் பழக்கவழக்கங்களின் மேல் மண்ணை வாரித் தூற்றுகிறீர். மூதாதையர்களின் செயல்களை முட்டாள்தனம் எனச் சொல்லுகிறீர். தந்தையையும் தனயனையும் அண்ணனையும் தம்பியையும் மாமனையும் மருமகனையும் மச்சானையும் மைத்துனனையும் எதிரிகளாக்கிவிட்டீர்’ என அபூஜஹ்ல் பெரியதொரு பட்டியலிட்டார்.

உட்கார்ந்திருந்தவர் ஒன்றைச் சொன்னார்; நின்றிருந்தவர் வேறொன்றைச் சொன்னார். வந்தவர் ஒரு கருத்தைச் சொன்னார். எழுந்து நின்றவர் வேறொரு கருத்தைச் சொன்னார். அங்கே ஆளாளுக்கு ஒவ்வொரு கருத்தைச் சொல்ல அண்ணலார் அங்கிருந்து வெளியேற எண்ணினார். அங்கு அனல் காற்று வீசியது.

‘அல்லாஹ்வாம், அப்துல் ரகீமாம், அப்துல் ரகுமானாம் என கடவுளுக்குப் பல பெயர்களைக் கூறும் இவர் கடவுள் ஒன்றெனக் கூறுகிறார். பெயருக்கு ஒருவராகப் பல பேர் இருக்க வேண்டாமா? அதுதானே சரி! கடவுளுக்குப் பல பேர் இருக்கும்போது கடவுளும் பலராகத்தானே இருப்பர். அதைத்தான் நம் மூதாதையர் கஅபாவில் நிலைநாட்டியுள்ளனர்’ என அபூசுப்யான் சொன்னபோது அண்ணலார் பதில் கூறவில்லை.

அண்ணலாரின் வம்சாவளி வரிசையில் அபூசுப்யான் பங்காளியாக நேர் எதிர்க் கோட்டில் இருந்தவர். செவிலித்தாய் ஹலீமாவிடமே இவரும் பால் குடித்தவர்.

‘யமாமாவிலுள்ள யாரோ ஒருவர் ரஹ்மான் பற்றிக் கூறியதைக் கேட்டு எங்களை நீர் குழப்புகிறீர்’ என்றார் உத்பா இப்னு ரபீஆ.

‘என்னுடைய இறைவன் எனக்கு ஆணையிட்டதை அவனுடைய மக்களுக்கு எடுத்துக் கூறுகிறேன். இதில் என்ன தவறு! இப்பணியினின்றும் நான் ஓயப் போவதில்லை. நீங்கள் எனக்குத் தருவதாகச் சொல்லும் எதுவும் தேவையில்லை. அதற்காக ஆசைப்படுபவன் நானல்லன். நான் அல்லாஹ்வின் தூதராக அனுப்பப்பட்டுள்ளேன். அவன் சொல்வதைத்தான் கேட்பேன்; அவன் சொல்வதைத்தான் செய்வேன். அதைவிட்டு நீங்கள் என்னைத் திசை

திருப்பிவிட முடியாது.' என அண்ணலார் மிகவும் உறுதியாகவும் இறைவன் மேல் ஆணையிட்டும் கூறினார்.

'நீர் திருந்துவதாகத் தெரியவில்லை. பெரிய பிசாசுதான் பிடித்துள்ளது' என அபூஜஹ்ல் கூறிட அண்ணலார் கஅபாவை விட்டு வெளியேறினார்.

கொதித்துப் போயிருந்த குறைஷிகள் அண்ணலாரின் செயல்பாட்டை எவ்வாறு தடை செய்வதென ஆலோசித்தனர். இறுதியில் அண்ணலாரைக் கொலை செய்துவிடுவதென்று முடிவெடுத்த அவர்களின் முன் அப்துல் முத்தலிபின் வாரிசுகளின் எதிர்ப்பை எண்ணி அஞ்சினர். ஓர் உயிரைப் பறித்தால் ஒன்றுக்கு மேற்பட்ட உயிர்கள் பறிக்கப்படலாம் என்ற பயத்தில் கொலை செய்யும் எண்ணத்தைத் தவிர்த்தனர்.

என்ன செய்வதென்று முடிவெடுக்க முடியாத அவர்கள் ஓர் இளைஞரைக் கொண்டு சென்று அபூதாலிபிடம் ஒப்படைத்துவிட்டு அந்த இளைஞருக்குப் பதிலாக அண்ணலாரைக் கேட்டுப் பெற்று உயிரைப் போக்கிட முனைந்தனர்.

அதற்காக அவர்கள் அபூதாலிபிடம் ஓர் இளைஞரோடு சென்று தம் எண்ணத்தைக் கூறினர். அபூதாலிபோ குறைஷிகளின் கொலை வெறித் திட்டத்தைக் கேட்டு குமுறினார்.

'யாரிடம் யாரைப் பற்றிக் கூறுகிறீர்கள்? முஹம்மது என் பெற்ற மகனைவிட எனக்கு மிகவும் உவப்பானவர். என் உயிரினும் மேலானவர். என் ஈரல் குலை அவர்! அவரைக் கொல்ல என்னைத் துணைக்கு அழைக்கிறீர்களா! என்ன துணிச்சல்? எங்கிருந்து வந்தது இந்தத் துணிச்சல்? என் நெஞ்சைப் பிளக்க என்னிடமே சம்மதம் கேட்கிறீர்களா? நீங்களெல்லாம் பெரிய மனிதர்களா? மூளையைக் கழட்டி வைத்துவிட்டு வந்திருக்கும் உங்கள் செயலில் வேகமிருக்கிறதே தவிர, நிதானம் இல்லையே!' என அபூதாலிப் குறைஷிகளைச் சாடினார்.

'சபைகளிலும் முரண்பாடு, சமுதாயத்திலும் முரண்பாடு, கஅபாவிலும் முரண்பாடு, கண்ட நின்ற இடங்களிலெல்லாம் முரண்பாடு! இதைத் தீர்ப்பதற்கு என்ன வழி?' என அபூஜஹ்ல்தான் கேட்டார்.

'நீங்களும் வணிகர்கள், நானும் வணிகன். பலவித வணிகங்கள் செய்துவிட்டோம். இப்போது புதிய வணிகம் செய்யக் கற்றுத் தருகிறீர்களா? யார் வீட்டுப் பிள்ளையையோ எனக்குத் தந்து உயிர்

வாழவைப்பீர்களாம்! என் பிள்ளையை எங்கோ அழைத்துச் சென்று உயிரைப் போக்குவீர்களாம்! பண்ட மாற்றத்தில் கூட நியாயம் இருக்குமே! இங்கேயோ அநியாயம்! இறைவன்மீது ஆணையாகச் சொல்கிறேன். உங்கள் எண்ணம் ஒருக்காலும் நடக்கவே நடக்காது' என்ற அபூதாலிப் பொங்குமாங் கடலாகத் தெரிந்தார்.

'அப்படியானால் என்ன செய்யச் சொல்கிறீர்கள்!'

'நீங்களே சொல்லுங்கள்!'

'உங்களோடும் உங்கள் பிள்ளை முஹம்மதோடும் போர்ப் பிரகடனம் செய்வோம். வாழ்வா சாவா பார்த்துவிடுவோம்!'

'செய்வதை செய்துகொள்ளுங்கள்' என அபூதாலிப் சொல்லிவிட்டாரே தவிர குறைஷிகளின் முரட்டுக்குணம் அவரைப் பல்வேறு விதமாக யோசிக்க வைத்தது.

அன்பு மகன், அருமை மகனை அநியாயக்காரர்களின் கையில் ஒப்படைப்பதா? இல்லை அருமை மகனை ஆதரித்து நின்று தீவிரமாகப் போராடி வீர மரணம் அடைவதா? முதல் முடிவு வரலாற்றில் அபூதாலிபைக் கோழையாக பதிவு செய்யும். இரண்டாவது முடிவோ அவரை மாவீரனாகப் பதிவு செய்யும்.

அபூதாலிப் இரண்டாவது முடிவை ஏற்கத் தயாராகி அண்ணலாரை அழைத்துவரச் செய்தார். அண்ணலார் பெரிய தந்தையிடம் வந்து குறைஷிகள் பேசிச் சென்ற விபரங்களைக் கேட்டுத் தெரிந்துகொண்டார்.

குறைஷியரின் எச்சரிக்கையையும் சபதத்தையும் எடுத்துக் கூறிய அபூதாலிப் 'என் உவப்புக்குரிய குலக் கொழுந்தே! இன்று நான் என்றுமில்லாத பெருஞ்சுமையுடன் நிற்கிறேன். அச்சுமையை இறக்கி வைக்க வேண்டியது உன் பொறுப்பு!' எனக் கூறியபோது இறைவனையே முழுமையாக தஞ்சமடைந்துவிட்ட அண்ணலார் புன்னகை பூத்தார்.

இறைவனுடைய அழைப்பு ஒருபுறம், தந்தையாரின் வேண்டுகோள் மறுபுறம்; இறைவனுடைய வல்லாண்மை ஒருபுறம், குறைஷிகளின் கயமை மறுபுறம்; சத்தியப் பேரொளி ஒருபுறம், சண்டியர்களின் அந்தகார இருட்டு மறுபுறம்! அண்ணலார் எப்பக்கம் நடைபயில்வார் என்பதை வரலாறு அறிந்திருந்தது. அண்ணலார் வலப்பக்கம் செல்வரா இடப் பக்கம் செல்வரா என்பதைப் புதிய சமுதாயமும் புரிந்திருந்தது.

அண்ணலார் இறைவனின் தீர்ப்பைத் தம் தீர்ப்பாகப் பிரகடனம் செய்தார். வரலாற்றில் இத்தகைய தீர்ப்பைச் சொன்னவர் யாருமில்லை; வரலாற்றில் இத்தகைய சொல் ஆளுமையைப் பயன்படுத்தியவர் யாருமில்லை.

‘இறைவனின்மீது ஆணையாக! இறைமறுப்பாளர்கள் என் வலக்கரத்தில் சுட்டெரிக்கும் சூரியனையும் இடக்கரத்தில் இருள் மண்டிக் கிடக்கும் சந்திரனையும் கொண்டுவந்து கொடுத்தாலும் என் லட்சியப் பணியை விடமாட்டேன். ஒன்று பணி முடிப்பேன். இல்லையேல் உயிர் விடுவேன்’ என மொழிந்த அண்ணலாரின் உறுதி அபூதாலிபையும் ஆட்கொண்டது.

‘எவர் வருவார் நம்வழியில், அவரை உரிய முறையில் சந்திப்போம். என்ன செய்வர் நம்மை, அதையும் பார்த்துவிடுவோம். கைலாகு கொடுத்தால் கைலாகு கொடுப்போம்; கையை முறிக்க நினைத்தால் அவரின் ஒவ்வொரு எலும்பையும் உடைப்போம்’ என்ற அபூதாலிபின் எழுச்சி அண்ணலாரை மகிழச் செய்தது. அவர் தம் குடும்ப உறுப்பினர்கள் அனைவரையும் அண்ணலாருக்கு உதவும்படிக் கேட்டுக்கொண்டார்.

குறைஷிகளுக்குக் குளிர்க் காய்ச்சல் வந்தது!

## 9. மூன்று கேள்விகள்

### முகப்பார்வையற்றவரும் அகப் பார்வையற்றவரும்!

வலீது பின் முஹைரா

இஸ்லாத்தை முழுவீச்சுடன் எதிர்த்த அபூஜஹ்லின் மாமனார்; செல்வமும் செல்வாக்கும் பெற்றவர்; மக்ஸூம் கோத்திரத் தலைவர்; குறைஷிக் குலத் தலைவர்களின் ஆலோசகர். கோத்திரங்கள் பலவாகவும் குலம் ஒன்றாகவும் விளங்கிய நிலையில் இவர் குலக் கொழுந்து.

அபூபக்கர், அர்கம் போன்ற செல்வமும் செல்வாக்கும் மிக்கவர்கள் இஸ்லாத்தில் இணைந்திருந்தனர். அப்துல் ரஹ்மான், ஹம்ஸா போன்ற பலமிக்கவர்கள் ஏகத்துவத்தை ஏற்றுக் கொண்டவர்களாயிருந்தனர். இந்நிலையில் செல்வாக்கும் பலமும் மிக்க வலீது இஸ்லாத்தில் இணைந்துவிட்டால் இயக்கம் மேலும் வலுப்படுமே என அண்ணலார் எண்ணினார்.

அடிமைகளும் அடிமைகளாக இருந்து விடுதலை பெற்றவர்களும் குறைஷி இளைஞர்களும் இளம் யுவதிகளும் மக்காவை அடுத்திருந்த சிற்றூர்களின் குறைஷிகளுமே அதிகமிருந்த நிலையில் வலீதின் வருகை இஸ்லாத்துக்கு வல்லமை தரும் என அண்ணலார் எண்ணியது நல்லதுதான்! ஆனால் இறைவன் எண்ண வேண்டுமே!

கோத்திரத் தலைவர் மட்டுமல்ல வலீது; அவர் வாள்வீச்சும் வாய்வீச்சும் வாய்க்கப்பெற்றவர்; செய்திகளை செவியேற்பதிலும் செய்திகளுக்கு பதில் சொல்வதிலும் சமர்த்தர், செயல் வீரர்.

ஒரு நாள் அண்ணலார் வலீதைச் சந்தித்து இஸ்லாத்தைப் பற்றி எடுத்துரைத்தார்; வலீது கேள்விகள் எழுப்ப அண்ணலார் பதிலுரைத்தார்.

உரையாடல் உச்சக் கட்டத்தை அடைந்து கொண்டிருந்தபோது அவ்வழியாகச் சென்று கொண்டிருந்த ஒரு பார்வையிழந்த மனிதர் அண்ணலாரின் குரல் கேட்டு நின்றுவிட்டார். முகக்கண் இல்லாத அவர்

அண்மையில்தான் அகக்கண் பெற்றிருந்தார், இஸ்லாத்தை ஏற்றிருந்தார். அவரின் பெயர் அப்துல்லாஹ் பின் உம்மி மக்தூம். இப்னு உம்மி மக்தூம் கதிஜா பிராட்டியாரின் அத்தை மகன்.

அந்தப் பார்வையற்ற தோழர் அண்ணலாரிடம் சில வசனங்களைக் குறிப்பிட்டு ஓதிக் காட்டும்படிச் சொன்னார். அண்ணலார் அவரிடம் நாளையோ நாளை மறுநாளோ ஓதிக் காட்டுவதாகக் கூறினார். அவர் விடாப்பிடியாக அண்ணலாரை ஓதிக் காட்டும்படிச் சொன்னார்.

இதனால் அண்ணலார் வலீது உரையாடல் தடைப்பட்டது. அண்ணலார் கடுமையான கோபம் அடைந்தார். அகத்தின் வெப்பத்தை முகம் காட்டியது. அண்ணலாரின் இந்நிலைமையைக் கண்டு இறைவன் இறக்கிய வசனங்கள்தான் ‘அபஸ’ அத்தியாயத்தின் ஆரம்ப வசனங்கள்.

> ‘முகம் சுளித்தார்; மேலும் புறக்கணித்தார், அந்தப் பார்வையிழந்தவர் அவரிடம் வந்ததற்காக! அவர் சீர்திருந்தக் கூடும் அல்லது அறிவுரைக்குச் செவி சாய்க்கக் கூடும்; அந்த அறிவுரை அவருக்குப் பயனளித்திருக்கும் என்பது பற்றி உமக்குத் தெரியுமா? என்ன? எவன் அலட்சியம் செய்கின்றானோ அவன் பக்கம் நீர் கவனம் செலுத்துகின்றீர், அவன் திருந்தாவிட்டால் அதற்கு நீர் பொறுப்பாளியா, என்ன?’

(திருக்குர்ஆன் 80: 17)

இறைவன் குறிப்பிட்ட அலட்சியம் செய்த மனிதனாகிய வலீது, பின்னர் ‘நான் மக்கள் தலைவனாக இருக்கிறேன். எனக்கல்லவா இறைவன் தன்னுடைய வசனங்களை தூதைச் சொல்லியிருக்க வேண்டும். அல்லது அண்டையிலுள்ள தகீபின் அதிபதி மஸ்வூதுக்கு சொல்லியிருக்க வேண்டும். இவ்விரு ஊர்களின் தலைவர்களுக்கு இறைவசனங்கள் இறக்கப்படாமல் முஹம்மதுக்கல்லவா இறக்கப்பட்டுள்ளது’ எனக்கூற இதைப் பற்றியும் திருக்குர்ஆன் குறிப்பிட்டுள்ளது.

> ‘இவர்கள் கூறுகின்றனர்: ‘இந்தக் குர்ஆன் இவ்விரு ஊர்களிலுமுள்ள பெரிய மனிதர்களில் எவரேனும் ஒருவர்மீது இறக்கியருளப்படவில்லை,’ என்ன இவர்கள் உம் இறைவனிடம் அருட்கொடையைப் பங்கிடுகின்றார்களா?’

(திருக்குர்ஆன் 43: 3132)

திருக்குர்ஆனின் வசனங்களில் பெரும்பாலானவை அண்ணலாரின் வாழ்க்கை நிகழ்வுகளைப் பிரதிபலிப்பவை. அண்ணலார் அழைத்ததைக் குறிப்பிட்டு வலீது கூறியதைப் பற்றித் திருக்குர்ஆன் இங்கே விமர்சிப்பதைப் பார்க்கலாம்.

அண்ணலாரிடம் திருக்குர்ஆன் வசனங்களை ஓதச் சொல்லிக் கேட்ட இப்னு உம்மி மக்தூம் புதிய முஸ்லிம், கதிஜா பிராட்டியாரின் அத்தை மகன், பார்வையற்றவர்.

வலீது பின் முஹைரா இஸ்லாத்தின் செய்தியைக் கேட்கத் தயங்கிய மனிதர், ஏகத்துவத்தை ஏற்காத குறைஷி, தலைமைத்துவத்தால் தலைக்கனம் மிக்கவர்.

இப்னு உம்மி மக்தூமையும் வலீதையும் இஸ்லாமியத் தராசில் வைத்து எடை போட்டால் முதல்வரே முக்கியமானவர் ஆவார். ஆனால் அன்று அண்ணலார் வலீதுக்கு முக்கியத்துவம் கொடுத்தார். காரணம், இஸ்லாமிய அழைப்பை ஏற்கமாட்டாரா, ஒருவேளை ஏற்கலாம் என்ற ஆர்வம். இப்னு உம்மி மக்தூமிடம் அப்போதைய இக்கட்டைப் பிறகு சொல்லிச் சமாதானம் கூறிக்கொள்ளலாம் என்ற நம்பிக்கை.

இந்த நிலையில்தான் இறைவன் ‘அபஸ’ வசனங்களை அருளினான். அவ்வசனங்களின் கண்டனங்கள் இறைநிராகரிப்பாளர்க்குரியவையே. சத்தியத்தைத் தேடி வருபவரின் கோரிக்கைக்குச் செவி சாய்க்காமல் அசத்தியத்தைவிட்டு அகலவே விரும்பாத மனிதரிடம் இஸ்லாத்தைப் பற்றிய செய்தியைச் சேர்ப்பது முக்கியமல்ல என்பது இதன் மூலம் தெரிகிறது.

> ‘(நபியே!) நீர் விரும்புகின்றவருக்கு நேர்வழி காட்டிட உம்மால் முடியாது. ஆயினும், அல்லாஹ் தான் நாடுவோருக்கு வழிகாட்டுதலை அளிக்கின்றான். மேலும், வழிகாட்டுதலைப் பெறக் கூடியவர்களை அவன் நன்கறிகின்றான்.’

(திருக்குர்ஆன் 28: 56)

## அபூஜஹ்லின் ஆதங்கமும் நள்ருவின் சதுரங்கமும்!

ஒருநாள் குறைஷிகள் மூவர் தமக்குள் பேசிக்கொண்டிருந்தனர். அந்த மூவர் அபூஜஹ்ல், அபூசுப்யான், அக்னஸ்.

அக்னஸ் அபூசுப்யானிடம் ‘முஹம்மது இறைவசனம் என்று கூறுபவற்றை நீர் கேட்டிருக்கிறீரா?’ எனக் கேட்டார்.

‘கேட்பதற்கு இனிமையாக இருக்கிறது. அது ஏதோ ஒருவகைப் பாட்டு போலவும் தெரிகிறது. ஆனால் அதன் அர்த்தம் தெரியவில்லை. ஆழ்ந்து சிந்தித்தால் அதன் பொருள் புரிவதுபோல் தோன்றுகிறது. மேலும் தொடர்ந்து சிந்தித்தால் ஒன்றும் புரியாமல் போய்விடுகிறது’ என அபூசுப்யான் சொன்னார்.

‘இறைவன்மீது ஆணையாக! முஹம்மது கூறுவதெல்லாம் புதிராகவே தெரிகிறது! புதிருக்கு விடை கிடைக்கும், இது புரியாத புதிர்’ என்ற அக்னஸ் அபூஜஹ்லின் முகத்தைப் பார்த்தார்.

எதிலும் முந்திக் கொண்டு பேசும் அபூஜஹ்ல் இருவரின் பேச்சுக்களையும் கேட்டுக் கொண்டிருந்துவிட்டு ‘குஸையின் வம்சாவளியைப் பார்த்தால் முஹம்மதும் நானும் இரு இணைகோடுகளில் வருவோம். இப்போதோ எதிர் கோடுகளில் உள்ளோம். ஆன்மிகத்தில், அன்றாட வாழ்க்கையில், வணிகத்தில், வீரத்தில், செயல்பாடுகளில், பயணங்களில் அனைத்திலும் எங்கள் வம்சமும் அவருடைய வம்சமும் சரிசமமாகப் பங்காற்றியுள்ளன. ஒருவரை ஒருவர் விஞ்சியதில் நாங்கள் வலது சாரி என்றால், அவர்கள் இடது சாரி. இரு குதிரைகள் பூட்டிய வண்டியைப்போல் எங்கள் பயணம் தொடர்ந்தது. இப்போதோ ஒரு கோட்டில் நிற்கும் பந்தயக் குதிரைகளாக நாங்கள் நிற்கிறோம். அவர்கள் முந்திவிடுவார்களோ என்ற அச்சத்தில் நாங்கள் இருக்கிறோம். அதற்குக் காரணம் முஹம்மதுவின் நபித்துவப் பிரகடனம். எங்களுக்கும் வேதவரிகள் கிடைத்திருக்குமானால் அவர்களுக்கு நாங்கள் சரி சமமாகியிருப்போம். சரிசமமாகப் பயணம் தொடராததற்குக் காரணமாகியிருப்பது நபித்துவப் பிரகடனமே! எனவே அதை எதிர்ப்பதே என்னுடைய கொள்கை; அதற்காக நான் என்ன வேண்டுமென்றாலும் செய்வேன்; அவர் தலையைக் கூட கொய்வேன்’ எனச் சூளுரைத்தார்.

அபூஜஹ்ல் மட்டுமல்ல, குறைஷிகள் பலரும் அண்ணலாரின் வேதத்தை உள்ளுக்குள் நம்பினாலும் வெளியில் பலத்த எதிர்ப்பைக் காட்டினார்கள். அவர்களுக்குள் புகைந்து கொண்டிருந்த பகைமை காட்டுத் தீயாக எரிந்தது. கயமை கருக் கொண்டால் கருணையா பிறக்கும்? எட்டிக்காய் விதைக்க மாங்காயா கிடைக்கும்?

அப்போது மக்கமாநகரில் ஓர் ‘எட்டிக்காய்ப் பேச்சாளர்’ இருந்தார். அவர் பெயர் நள்ரு இப்னு ஹாரிஸ். அவர் தன்னை இஸ்லாத்துக்கு எதிராகச் செயல்பட படைக்கப்பட்டவன் எனக் கூறிக்கொண்டார். தன் நாக்கு அண்ணலாரைப் பற்றி அவதூறு கூறப் படைக்கப்பட்டது எனப்

பிரகடனம் செய்தார். சொன்னபடி செய்தார்; ஆனால் அவருடைய செயல் படுத்திருக்கும் மலையைக் கடப்பாரை கொண்டு புரட்டியது போலானது!

நெம்பு கோல்தான் நாக்கு!

யெமன் நாட்டு ஹீரா நகருக்குச் சென்ற 'நாவரசு' நள்ரு பாரசீகர்களின் கதைகளைக் கேட்டறிந்தார். பாரசீக மன்னர்கள், பாரசீக மக்களின் வணக்க வழிபாடு, பழக்க வழக்கங்கள், பண்பாடு பற்றியெல்லாம் ஆழமாகத் தெரிந்துகொண்டார். அங்கிருந்த அறிஞர்கள், கல்வியாளர்களோடு நட்பு கொண்டு பல்வேறு துறை அறிவுகளைப் பெற்றுக் கொண்டார்.

உடுத்திய ஆடைகளோடு யெமன் நாட்டுக்குச் சென்ற நள்ரு 'மூட்டை முடிச்சு'களுடன் மக்கா வந்து சேர்ந்தார்.

மக்கா வந்த நள்ரு தன் மூட்டை முடிச்சுகளை அவிழ்க்கத் தொடங்கினார்.

அண்ணலார் மக்காவின் முக்கிய இடங்களுக்குச் சென்று இஸ்லாத்தின் அழைப்பை எடுத்துரைத்தார். இறைநம்பிக்கை, ஏகத்துவம், தொழுகை, இம்மை மறுமை, நன்மை தீமை, மெய்ஞ்ஞானம் அஞ்ஞானம், கடந்த கால வரலாறு, அழிக்கப்பட்ட அக்கிரமக்காரச் சமுதாயங்கள் பற்றியெல்லாம் அண்ணலார் மக்களிடம் தொகுத்துரைத்தார்.

அண்ணலார் எங்கெங்கு சென்று அழைப்பியல் பணியைச் செய்தாரோ அங்கெல்லாம் சென்று நள்ரு கதையளக்க ஆரம்பித்தார். பாரசீகத்தின் பழைய வரலாறு, அதன் பழைய மதங்கள், அதன் அகம் புறங்கள் பற்றியெல்லாம் சொல்லோவியங்கள் வடித்தார். நள்ருவின் நாவன்மையால் அவை உயிரோவியங்களாகின.

கதைகேட்டு மயங்கி நின்ற மக்களிடம் 'அன்புக்குரியவர்களே! அருமைச் சகோதரர்களே! நான் முஹம்மதைவிட நன்றாகப் பேசுவேன். அவர் சொல்லாததையெல்லாம் எனக்குச் சொல்லத் தெரியும். அவர் கதையளக்கிறார்; நான் உண்மையைச் சொல்கிறேன். சொர்க்கம் நரகம் என்றெல்லாம் சொல்லி மிரட்டமாட்டேன்; நல்ல செய்திகளை மட்டுமே சொல்லி உங்களை மகிழ்விப்பேன்' எனச் சொல்லி நள்ரு நல்ல பெயர் எடுப்பார்.

மக்கள் குழம்பிப் போய்விடுவர். அண்ணலார் மொழிவது சரியா, நள்ரு நவில்வது சரியா என மக்கள் ஒரு முடிவுக்கு வராமல் தவிப்பர்.

உண்மையாளர் யார்? பொய்யர் யார்? என்பதைப் புரிந்துகொள்ளாமல் மக்கள் தவித்தபோது நள்ரு பெருமகிழ்ச்சியடைந்தார். பெருமையோடு மக்காவை வலம் வந்தார்.

நள்ருவின் பேச்சைக் கேட்டு குறைஷிகள் குதூகலம் அடைந்தனர். நள்ருவைச் சுற்றி ஒரு தனிக்கூட்டம் சேர்ந்தது. அவர் போகுமிடமெல்லாம் அக்கூட்டம் சென்று முன்வரிசையில் அமர்ந்து கொண்டது. நள்ரு பேசப் பேச ஆரவாரம் செய்தது.

இந்த நள்ரு தான் அபூமுஆத்தின் மகன் உக்பாவை அழைத்துக்கொண்டு யத்ரிப் சென்று யூத ராபி (யூத மதகுரு)களிடம் அண்ணலாரின் நபித்துவம் பற்றி விளக்கம் கேட்டவர்.

## மூன்று கேள்விகள்

கஅபாவில் வணக்கங்கள், சிரியா யெமனில் வணிகங்கள், தோட்டந்துரவுகளில் விவசாய வேலைகள், ஆடு மேய்த்தல், ஒட்டக வளர்ப்பு, வேட்டை, பொழுதுபோக்க மதுவும் சூதும் என வாழ்ந்து பழகிய குறைஷிகளுக்கு அண்ணலாரின் ஏகத்துவக் குரல் பெரும் பிரச்னையாகிப் போனது.

அண்ணலார் கூறி வந்தவை அனைத்தும் பொய்யெனக் குறைஷிகள் வாதிட்டு அக்கருத்துக்களைப் புறந்தள்ளியபோதும் இஸ்லாத்தைப் பற்றிய பரப்புரை தொடர்ந்தது. மனசாட்சியுள்ளோரும் மனந்திறந்து வைத்தோரும் அதில் இணைந்து கொண்டேயிருந்தனர்.

இந்நிலையில் அண்ணலார் கூறிவருபவை உண்மையாக இருக்குமோ, இல்லை பொய்தானோ என அறிய ஆவலாக இருந்தனர். ஆன்மிக அறிவில் மிகக் குறைந்தவர்களான குறைஷிகள் அண்ணலார் கூறுபவை பற்றித் தெளிவாக அறிய முயன்றனர்.

அதற்காக அவர்கள் வேதாகமங்களிலும் இறைத்தூதர்கள் பற்றிய ஞானங்களிலும் துறை போகிய யூத மத குருக்களைக் கண்டு பேச விழைந்தனர்.

அத்தகையோர் அப்போது மக்காவில் இல்லை; அவர்கள் யத்ரிபில் இருந்தனர். அவர்களை நாடி குறைஷிப் பிரமுகர்கள் இருவர் சென்றனர். அவர்களின் பெயர்கள் நள்ரு இப்னு ஹாரிஸ், உக்பா இப்னு முஆத்.

யூத மத குருக்களைச் சந்தித்த குறைஷிப் பிரமுகர்கள் அண்ணலாரின் கூற்றைப் பற்றிக் கூறி அல்லாஹ்வைப் பற்றியும்

கேள்விகளை முன் வைத்தனர்.

குறைஷிப் பிரமுகர்கள் மொழிந்தவற்றைக் கேட்டு வியப்பில் ஆழ்ந்த ராபிகள் அண்ணலாரிடம் மூன்று கேள்விகளைக் கேட்கும்படியும் அதற்குக் கிடைக்கும் பதில்களைப் பொறுத்து உண்மை தெரியவரும் என்றும் கூறி அனுப்பினர்.

‘மூன்று கேள்விகளும் எவருக்கும் விடைதெரியா கேள்விகளாகும். ஒன்றுக்குப் பதில் தெரிந்தாலும் இரண்டு கேள்விகளுக்குப் பதில் தெரியாது; இரண்டுக்கு பதில் கிடைத்தாலும் மூன்றாவது கேள்விக்கு நிச்சயம் பதில் தெரியாது. மூன்றுக்கும் பதில் தெரிந்துவிட்டால் அப்பதிலைச் சொல்பவர் இறைத்தூதர்தான். அவரைப் பின்பற்றியே ஆக வேண்டும்’ என்றனர் ராபிகள்.

முதல் கேள்வி: முன்னொரு காலத்தில் தம் மக்களைப் பிரிந்து சென்ற இளைஞர்கள் யார்? அவர்களின் வரலாறு என்ன?

இரண்டாவது கேள்வி: உலகின் கிழக்கு மேற்கு திசைகளை எட்டிய தொலை தூரப் பயணியின் நன் மாராயங்கள் எவை?

மூன்றாவது கேள்வி: ஆன்மா என்றால் என்ன?

மூன்று கேள்விகளையும் மனங்களில் சுமந்து வந்த இரு குறைஷிகள் மக்கா குறைஷிகளிடம் இறக்கி வைத்தனர். அக்கேள்விகளை அவர்கள் அண்ணலாரின் மனத்தில் ஏற்றி வைத்தனர்.

‘மூன்று கேள்விகளுக்கும் நாளை பதில் கூறுவேன்’ எனச் சொல்லிச் சென்ற அண்ணலார் பதிலைத் தேடவில்லை. வானவர் வருகையை நாடி நின்றார்.

வானவர் வரவில்லை; எந்தச் சேதியும் தரவில்லை. கேள்விகள் மூன்றும் பதிலுக்காக ஏங்கின; வினாக் குறிகளைப் புள்ளிகள் தாங்கின.

பதினைந்து நாட்களுக்குப் பின் தான் பதில் கிடைக்கும் சூழல் உருவானது. வானவர் வருகை நிழல் தரும் தருவானது.

> ‘வானவர் கூறினார்: எந்தச் செயலைக் குறித்தும் ‘நாளை நான் அதைச் செய்து விடுவேன்’ என்று ஒருபோதும் கூறாதீர். (உம்மால் எதுவும் செய்திட முடியாது) அல்லாஹ் நாடினால் அன்றி! ஆனால் மறந்து அவ்வாறு கூறிவிடுவீராயின், உடனே தம் இறைவனை நினைவு கூர்ந்து ‘இவ்விஷயத்தில் இதைவிட நேர்மைக்கு நெருக்கமானவற்றின் பக்கம் என் இறைவன் எனக்கு வழி காட்டக் கூடும் என நான் நினைக்கிறேன் என்று கூறும். அவர்கள் தங்கள்

குகையில் முன்னூறு ஆண்டுகள் தங்கியிருந்தார்கள். (சிலர் காலத்தைக் கணிப்பதில்) ஒன்பது ஆண்டுகளை அதிகமாக்கினார்கள்.'

(திருக்குர்ஆன் 18: 23 25)

கி.பி. மூன்றாம் நூற்றாண்டின் நடுவில் சில இளைஞர்கள் ஒரே இறைவனை வணங்கி வந்தனர். அவர்களின் சமுதாயமோ சிலைகளை வணங்கி வந்தது. அச்சமுதாயத்தினர் இளைஞர்களைத் துன்புறுத்தவே அவர்கள் தப்பித்து குகையில் அடைக்கலமடைந்தனர். குகைத் தோழர்களெனக் கூறப்படும் அவர்கள் அங்கு முன்னூறு ஆண்டுகள் நித்திரையில் ஆழ்ந்து கிடந்தனர்.

இதைப் பற்றி திருக்குர்ஆன் மிகவும் விரிவாக அல் கஹ்ஃப் அத்தியாயத்தில் பதினெட்டு வசனங்களில் கூறுகிறது. (திருக்குர்ஆன் 18:926)

இரண்டாவது கேள்விக்கான பதிலையும் வானவரே கொண்டுவந்தார். அந்தத் தொலைதூரப் பயணியின் பெயர் துல்கர்னைன் அவரைப் பற்றி திருக்குர்ஆன் கூறுகிறது:

'திண்ணமாக நாம் அவருக்கு பூமியில் ஆட்சியதிகாரத்தை அளித்திருந்தோம். மேலும், அவருக்கு எல்லாவிதமான சாதனங்களையும் வாய்ப்புகளையும் வழங்கியிருந்தோம். அவர் (ஒரு முக்கியமான பணிக்காக முதலில் மேற்கு நோக்கிப்) புறப்பட்டார். சூரியன் மறையும் எல்லையை அடைந்தபோது... அங்கு அவர் ஒரு சமுதாயத்தார் வாழ்வதைக் கண்டார்.... மீண்டும் அவர் (மற்றொரு முக்கிமான பணிக்காகப்) புறப்பட்டார். சூரியன் உதயமாகும் எல்லையை அவர் அடைந்துவிட்டார். அப்போது அது ஒரு சமுதாயத்தார்மீது உதிப்பதைக் கண்டார்.'

(திருக்குர்ஆன் 18: 84 90)

மூன்றாவது கேள்வி ஆன்மா என்றால் என்ன என்பதாகும். மனித சிந்தனை ஆன்மாவை விளங்கிக் கொள்ளும் வல்லமை படைத்ததல்ல. ஆன்மாவின் நிலைமை மனிதனது சிந்தையையும் விஞ்சியதாக உள்ளது என்பதை இறைவசனங்களே உறுதிப்படுத்துகின்றன.

ஆன்மா பற்றியும் வானவரே பதிலை எடுத்து வந்தார். திருக்குர்ஆன் கூறுகிறது:

‘ரூஹ்’ பற்றி இவர்கள் உம்மிடம் வினவுகிறார்கள். கூறுவீராக: ரூஹ் என் இறைவனின் கட்டளையால் வருகிறது. ஆனால், உங்களுக்கு மிகக் குறைவாகவே ஞானம் வழங்கப்பட்டுள்ளது. (ஆகவே அதன் நுட்பங்களை நீங்கள் அறிந்து கொள்ள முடியாது).

(திருக்குர்ஆன் 17: 85)

யூத ராபிகள் கேட்ட கேள்விகளுக்குப் பதிலாக இறைவசனங்களைச் சமர்ப்பித்த அண்ணலார் குறைஷிகள் இனியாவது நேர்வழியைப் பின் பற்றுவார்கள் என எதிர் பார்த்தார்.

குரங்குகள் மரம் ஏறாமல் இருக்குமா? சிரங்குகள் சொரியப்படாமலிருக்குமா? குறைஷிகள் குதர்க்கம் பேசாமல் இருப்பார்களா?

ஆகமங்களில் புதைந்துள்ள செய்திகளை, அரபுலகம் அறியாத செய்திகளைக் கூறியும் அஞ்ஞானிகள் மெய்ஞ்ஞானத்தை ஏறெடுத்தும் பார்க்கவில்லை; ஏகத்துவத்தை இதயத்திலும் சேர்க்கவில்லை!

நள்ரு நயவஞ்சகமாய்ப் பேசினார்: முஹம்மதைப்போல் என்னாலும் இறைவனைப் பற்றிக் கூறமுடியும்.

உக்பா ஒரு மாதிரியாய்ப் பேசினார்: வியாபார வாழ்வை முடித்து வீட்டிலிருப்பர் வீண் விவகாரங்களைப் பேசுகிறார். சமுதாயத்தை சண்டை போட வைக்கிறார்.

அபூஜஹ்ல் கூறினார்: முஹம்மதுடைய பேச்சைக் கேட்டு முதுகு காட்டாதீர்கள். அவரை நம்முடைய லாத்தும் உஸ்ஸாவும் பார்த்துக் கொள்ளும்!

## கள்ளரும் கவிஞரும்!

அபூபக்கர், அர்கம் போன்ற பெரும் புள்ளிகள் அண்ணலாரை ஆதரித்து வந்த நிலையில் அபூதாலிபின் ஆதரவு முழக்கம் கஅபாவின் கதவுகளைத் தட்டியது; மக்காவின் தெருவெங்கும் ஒலித்து ஜபலுன் நூர் மலையிலும் எதிரொலித்தது.

அதே சமயம் குறைஷிகள் அண்ணலாரையும் இஸ்லாத்தையும் பின்னுக்குத்தள்ள திட்டங்கள் தீட்டினர். அவர்கள் தனிமையிலும் சபையிலும் அண்ணலாரை வீழ்ந்த கங்கணம் கட்டிக்கொண்டிருந்தனர்.

புனித யாத்திரைக்கான காலம் நெருங்கிக்கொண்டிருந்தது.

மக்காவை நோக்கி நான்கு திசைகளிலிருந்தும் நூற்றுக்கணக்கான யாத்திரிகர்கள் வருவர். அப்போது யாத்திரிகர்களிடம் அண்ணலார் தம் கொள்கைகளை எடுத்துரைத்தால் என்ன செய்வது? என்பதே குறைஷிகளின் பெரும் கவலையாக இருந்தது.

சிலைக் கோட்டமான கஅபாவிலிருந்து சிலைகளுக்கெதிரான கலகக் குரல்! சிலைக் கோட்டத்தின் பாதுகாவலர்களின் குடும்பத்திலிருந்தே சிலைகளை உடைத்த இபுறாகீம் நபிகளாரின் பழைய குரல்! புரோகிதர்களின் வீடுகளைச் சுற்றி புரோகிதத்துக்கு எதிரான புரட்சிக் குரல்!

குறைஷிகள் கதிகலங்கிப் போனார்கள். கலகக் குரலை கட்டுப்படுத்துவது எப்படி? அல்லாஹ்வின் குரல் ஒலிக்கும் தொண்டையை நெரிப்பதெப்படி? புதிதாகக் கிளம்பியிருக்கும் புரட்சிக்குரலை காணாமல் ஆக்குவது எப்படி?

பிரச்சாரத்துக்கு எதிரான பிரச்சாரம்தான் தற்போதையே நிலைமைகளில் பயன்படும் என நம்பிய குறைஷிகள் அண்ணலாரைப் பற்றி அவதூறு சொல்ல ஆயத்தமானார்கள்.

ஒருவர் அண்ணலாரைக் குறிகாரர் என்றார்; இன்னொருவர் பிசாசு பிடித்தவர் என்றார்; மூன்றாமவர் பேய்பிடித்த கவிஞர் என்றார்; நான்காமவர் மந்திரக்காரர் என்றார். இவர்களின் பேச்சுகளைக் கேட்டபடி ஆலோசனை நடத்திக் கொண்டிருந்த குறைஷிக்குல பிரமுகர் வலீது இப்னு முகீராவுக்கு மந்திரக்காரர் எனும் உருவகம் பிடித்திருந்தது.

‘அவரை மந்திரக்காரரென சாதாரணமாக சொல்லிவிட முடியாது. அவர் மந்திரக்காரர் செய்வதைவிட மிகப் பயங்கரமான செயல்களை செய்துவருகிறார். எனவே அவரைப் பயங்கரமான மந்திரவாதி எனச் சொல்லலாம். அவர் எந்தவிதமான மந்திரச் செயல்களைச் செய்துள்ளார் என்பதை புனிதப் பயணம் வருவோரிடையே பரப்புங்கள். அவர் தந்தையையும் மகனையும், அண்ணனையும் தம்பியையும், அக்காவையும், தங்கையையும், மனைவியையும், கணவனையும் அல்லாஹ்வின் பெயரைச் சொல்லிப் பிரித்துவிட்ட செயல் பயங்கரமான மந்திரச் செயல் அல்லவா?’ எனக் கூற புனித யாத்திரிகர்களிடம் பயங்கர மாந்திரிகர் எனச் சொல்ல முடிவானது.

இத்தகைய பிரச்சாரம் சில சமயம் நல்வினையையும் கொடுப்பதுண்டு; எதிர் வினையையும் கொடுப்பதுண்டு. சனாதனக்காரர்களின் பிரச்சாரம் சமூக நீதியை உச்சிக்குக் கொண்டு

வந்த வரலாறு உண்டு.

அண்ணலாரைப் பற்றிய பிரச்சாரம் தடுப்பதற்குப் பதிலாக ‘அந்தப் பயங்கரவாதி’யைத் தேடுதலுக்குரிய முன்னுரையாக அமைந்தது. ‘யாரந்த முஹம்மது?’ என்ற கேள்வி புனிதப் பயணிகளிடம் சென்றடைந்து அரபகம் முழுவதும் பரவியது. அரபகம் முழுமையும் பயணம் செய்யாமலேயே பரப்புரை செய்யாமலேயே அண்ணலார் அறியப்பட்டார். அண்ணலார் மொழிந்த கருத்துகள் சிரியாவின் சந்தையிலும் யெமனின் அங்காடி வீதிகளிலும் பேசப்பட்டன.

குறைஷிகளின் பயங்கர மந்திரவாதியென்னும் அடைமொழியைக் கேட்ட உனைஸ் என்பார் அம்மொழியை அரபகத்தின் வடமேற்குப் பகுதிக்குக் கொண்டு சென்று எதிரொலித்தார். அவர் செங்கடலை அடுத்திருந்த பனூ கிபார் கோத்திரக்காரர். பனூ கிபார்களில் பெரும்பாலோர் வழிப்பறிக் கொள்ளைக்காரர்கள்.

உனைஸ் மக்காவில் கேட்ட அண்ணலாரைப் பற்றிய தகவலை தன்னுடைய சகோதரர் அபூதர் கிபாரியிடம் கூறினார். கொள்ளைக்காரர் என்றாலும் அபூதர் ஓரிறைக் கொள்கைக்காரர். சிலைவணக்கத்தைச் சீண்டாதவர். அவருக்கு அண்ணலாரைக் காண வேண்டுமென்ற ஆவல் அதிகமானது. மக்காவுக்குப் புறப்பட்டார்.

அண்ணலாரைச் சந்தித்த அபூதர் இஸ்லாத்தின் கொள்கைகளால் கவரப்பட்டார். தான் போற்றிப் பேணிக் கொண்டிருந்த ஏகத்துவத்தின் மூலத்தை அறிந்துகொண்ட அபூதர் அப்போதே இஸ்லாத்தைத் தழுவினார்.

அபூதர், கொள்ளையைத் தொழிலாகக் கொண்ட கோத்திரத்தார் என அறிந்த அண்ணலார் நன்மை தீமை, சத்தியம் அசத்தியம், விதித்தது விலக்கியது என இருவேறு பண்புகளைப் பற்றிக் கூற அபூதர் சத்தியப் பாதையில் லட்சியப் பயணம் மேற்கொள்ளத் தீர்மானித்தார்.

வழிப்பறிக் கொள்ளையரான அபூதர் வழிமுறை தெரிந்தபின் கொள்ளையிடுவதிலிருந்து விலகிட முயன்றார். முடியவில்லை. ஆனால் கொள்ளையிடுவதற்கு ஒரு வரைமுறை கண்டார். சிரியா சென்று வரும் குறைஷியர்களின் பொருள்களை மட்டும் கொள்ளையிட்டார். அந்த வரைமுறைக்குள்ளும் ஒரு புது முறையைக் கையாண்டார். கொள்ளையிடப்பட்ட பொருள்களுக்குச் சொந்தக்காரரான குறைஷியர் ஏகத்துவத்தை ஏற்று நபிவழி நடக்க முன்வந்தால் பொருள்கள் திரும்பக் கிடைக்கும் என்பதே அந்த புதுமுறை.

அபூதர் இஸ்லாத்தைத் தழுவியதன் மூலம் செங்கடலை ஒட்டிவாழ்ந்த மக்கள் வாழ்க்கையில் பல மாற்றங்கள் ஏற்பட்டன. காலப்போக்கில் பனூகிபார்களில் பலர் இஸ்லாத்தைத் தழுவினர்.

அடுத்து ஒரு நிகழ்ச்சி

செங்கடலின் ஓரம் பனூ தவ்ஸ் கோத்திரத்தார் வாழ்ந்தனர். இவர்களில் செல்வமும் செல்வாக்குமிக்க துபைல் என்பார் மக்காவுக்கு வந்தார். இவர் ஒரு நல்ல கவிஞரும் கூட.

கஅபாவுக்கு வந்த அவரைச் சந்தித்த குறைஷிகள் பயங்கரமான மந்திரவாதியைப் பற்றியும் அவரைக் காண்பதையும் அவரோடு பேசுவதையும் தவிர்க்கும்படியும் கேட்டுக் கொண்டனர். அவரோடு பேசினால் மனம் மாறிவிடும் என்றும் குடும்பத்தைப் பிரிய நேரிடும் என்றும் பயமுறுத்தினர்.

துபைல் கஅபாவுக்குள் நுழைந்தபோது அண்ணலார் யெமனிய மூலைக்கும் கற்பாறைக்குமிடையில் பைத்துல் முகத்தஸ்ஸை முன்னோக்கித் தொழுது கொண்டிருந்தார். கஅபாவில் சிலைகள் நிறைந்திருக்க அதன் தெற்குச் சுவர் ஓரம் வெட்டவெளி. அங்குதான் அண்ணலார் நின்று தொழுது கொண்டிருந்தார்.

துபைலுக்கு அண்ணலாரை அடையாளம் காட்டிய ஒரு குறைஷி எச்சரித்து உள்ளே அனுப்பினார். துபைலின் கால்களோ அண்ணலாரை நோக்கி நடந்தன. அண்ணலார் திருக்குர்ஆனை ஓதிக் கொண்டிருந்தார். அதைக் கேட்கக் கூடாதென துபைல் காதுகளை மூட நினைத்தாலும் முடியவில்லை, அக்குரல் தேனாகப் பாய்ந்தது.

ஒரு பக்கம் அண்ணலாருடன் உரையாட ஆசை, மறுபக்கம் குறைஷியரின் எச்சரிக்கை. இரண்டுக்குமிடையில் தவித்த துபைல் அண்ணலார் கஅபாவை விட்டுச் சென்றபின் பட்டத்தைத் தொடரும் நூலைப்போல் பின் தொடர்ந்தார்.

அண்ணலாரைச் சந்தித்த துபைல் கேட்ட கேள்விகளுக்கு தகுந்த பதில்கள் கிடைத்தன. அப்பதில்கள் துபைலை இஸ்லாமியராக்கியது. அடுத்து, அவருடைய தந்தையையும் மனைவியையும் சாந்தி மார்க்கம் தழுவிக்கொண்டது. காலப்போக்கில் தவ்ஸ் கோத்திரத்தில் பலர் இஸ்லாத்தைத் தழுவினர்.

# 10. அபூஜஹ்லும் ஹம்ஸாவும்

## அபூஜஹ்லும் ஹம்ஸாவும்

இறை நேசர்கள் ஒருபக்கம் பெருகிக் கொண்டிருந்தாலும் மறுபக்கம் இறைநிராகரிப்பாளர்களின் எதிர்ப்புகள் பெருகிக் கொண்டிருந்தன.

ஒருநாள் இறைநிராகரிப்பாளர்கள் கஅபாவின் அருகிலுள்ள ஹிஜ்ரின் மேல் அமர்ந்தபடி சப்தமிட்டுப் பேசிக்கொண்டிருந்தனர். அப்போது அண்ணலார் கஅபாவின் கிழக்கு மூலைக்குச் சென்று ஹஜருல் அஸ்வத் புனிதக் கல்லை முத்தமிட்டுவிட்டு வழக்கம்போல் வலம் வரத் தொடங்கினார். முதல் முறையாக வலம் வந்து ஹிஜ்ரினருகில் வரும்போது குறைஷிகள் அண்ணலாரைப் பற்றி அவதூறு பேசினர். இரண்டாவது முறையாக வலம் வந்த போதும் அது தொடர்ந்தது. மூன்றாவது முறையாக அண்ணலார் வந்தபோதும் ஏசினர்; ஏகடியம் பேசினர்.

அண்ணலார் நின்று நிதானித்து ‘குறைஷியரே! என்னாலும் பேச முடியும்! இறைவனின்மீது ஆணையிட்டுச் சொல்கிறேன். நான் உங்களுக்கு அழிவையே கொண்டு வந்திருக்கிறேன்’ எனச் சொன்னவுடன் குறைஷிகள் அதிர்ச்சி அடைந்தார்கள்.

குறைஷித் தலைவர்களில் ஒருவரான அபூதாலிபின் பாதுகாப்பும் ஆதரவும் இருந்தும் இறைநிராகரிப்பாளர்கள் அண்ணலாரைப் பற்றிப் பேசக் காரணம், தாம் அழிக்கப்பட்டுவிடுமோ என்ற பயம்! அந்தப் பயத்தை நினைவூட்டுவதுபோல் அண்ணலார் மொழிந்தது அவர்களுக்கு அஸ்தமனக் காலத்தை நினைவூட்டியது.

வாயடைத்துப் போன அவர்கள் அசையாமல் உட்கார்ந்திருந்தார்கள். ஒருவர் மட்டும் ‘அபுல் காஸிமே! உமது வழியில் செல்வீராக’ என்றார்.

அண்ணலார் அங்கிருந்து சென்றுவிட அவர்கள் அண்ணலார் மொழிந்த அழிவைப் பற்றிப் பேசி ‘யார் யாருக்கு அழிவைக் கொண்டுவருவது? அவருக்கு நாங்கள் அழிவைக் கொண்டு வரத்தான்

போகிறோம்’ என்று பேசி கூச்சல் போட்டனர்.

இந்நிகழ்வைப் பற்றிக் கேள்விப்பட்ட அபூஜஹ்ல் அண்ணலாரின் மேல் ஆத்திரப்பட்டார். அபுல்ஹகம் எனப் பெயர் சூட்டப்பட்டவர் அபூஜஹ்ல் அறிவீனத்தின் தந்தை என அழைக்கப்பட சரியான காரணமிருந்தது. அப்பெயர் என்றென்றும் குறிப்பிடப்படக் காரணம் முரட்டு அறிவீனமே!

முரட்டு அறிவீனமும் முரண்பாடும் கொண்ட அவர் அண்ணலாரைப் பழிவாங்கத் துடித்துக்கொண்டிருந்தார். செல்வமும் ஆடம்பரமும் மிக்க அவர் எதற்கும் தயங்காதவர். அடுத்தவரைத் துன்புறுத்திப் பார்ப்பதில் ஆர்வம் மிக்கவர். அண்ணலாரை வெறுத்தவர்; இஸ்லாத்தின் எதிரி!

புனித யாத்ரீகர்கள் மக்காவுக்கு வந்தபோது வழியில் நின்று அண்ணலாரைப் பயங்கரமான மந்திரவாதி எனச் சொல்லி விமர்சித்தவர். ஏழை எளியவர்களையும் பாதுகாப்பற்ற முஸ்லிம்களையும் இம்சித்தவர்.

அன்றொரு நாள்

அண்ணலார் கஅபாவுக்கு வெளியே ஸபா வாயிலின் அருகே அமர்ந்திருந்தார். இந்த வாயிலின் வழியாகவே அருகிலுள்ள ஸபா குன்றுக்கும் ஏறத்தாழ 1350 அடிகள் தூரமுள்ள மர்வா குன்றுக்கும் யாத்ரீகர்கள் ஏழு முறை ஓடுவது பண்டு தொட்ட பழக்கம். ஸபா குன்றின் அடியிலுள்ள பாறையிலிருந்தே ஓட்டம் தொடங்கும். அப்பாறையின் அருகில்தான் அண்ணலார் அமர்ந்திருந்தார். அவ்வழியாக வந்த அறிவீனத்தின் தந்தை அண்ணலாரைப் பார்த்து மிகக் கீழ்த்தரமான வார்த்தைகளால் இகழ்ந்துரைத்தார். அண்ணலார் பதில் பேசவில்லை; அமைதியுடன் வீற்றிருந்தார். என்றாலும் இழிமொழிகள் அண்ணலாரைக் காயப்படுத்தியதை முகமாற்றம் காட்டியது.

இந்நிகழ்வைக் கண்ட ஒரு பெண்மணி கொதித்துப் போனார். அப்பெண்மணி தையிம் கோத்திரத்தைச் சேர்ந்தவர்; அபூபக்கரின் உறவினர். அவர் அபூஜஹ்லின் மேல் கோபப்பட்டு அண்ணலாரின் சிறிய தந்தை ஹம்ஸாவிடம் இதைப் பற்றிக் கூறி கண்கலங்கினார்.

அப்பெண்மணியிடம் அபூஜஹ்ல் எப்பக்கம் சென்றார் எனக் கேட்டுத் தெரிந்து கொண்டு ஹம்ஸா கஅபாக்குள் வந்தார். அங்கு அபூஜஹ்ல் அண்ணலாரைச் சிறுமைப்படுத்தியதைப் பெருமையுடன் கூறி கதைத்துக் கொண்டிருந்தார்.

திடகாத்திரமாகவும் பிறர் மேல் அன்பு செலுத்துபவராகவும் தீரமுள்ளவராகவும் விளங்கிய ஹம்ஸா வேட்டைக்குச் சென்று திரும்பும்போதுதான் அபூஜஹ்லின் அடாவடித்தனம் தெரியவந்தது. அவர் கையில் வில்லோடும் தோளில் அம்புறாத் தூணியோடும் காணப்பட்டார்.

ஹம்ஸா நேராக அபூஜஹ்லிடம் சென்று கையில் வைத்திருந்த வில்லால் முதுகில் பலமாகத் தாக்கிவிட்டு எச்சரித்தார்.

'ஹிஷாமின் மகனே! உன்னை எச்சரிக்கிறேன். முஹம்மதை நீ நோகச் செய்தால் உன்னை நான் சாகச் செய்வேன். வளைந்த வில்லால் அடித்ததால் தப்பித்தாய்! சினந்து நான் அம்பெடுத்துப் பூட்டியிருந்தால் அழிந்து போயிருப்பாய்! உன்னால் முடிந்தால் என்னை அடி, பார்க்கலாம். உன்னுடைய வாயடியும் வம்படியும் உன்னை மண்ணடிக்குள் புதைத்துவிடும்! எச்சரிக்கை! இன்றுமுதல் நானும் ஒரு முஸ்லிம். லாஹிலாஹ இல்லல்லாஹு முஹம்மதுர் ரசூலுல்லாஹ் என இங்கேயே கலிமா சஹாதத் கூறுகிறேன்' என ஹம்ஸா சொன்னபோது அபூஜஹ்ல் சிங்கத்தின் காலில் மிதிபட்டுக் கிடந்த சிறுநரிபோல் காணப்பட்டார்.

அப்போது அங்கிருந்த அபூஜஹ்லின் சொந்தக் கோத்திரக்காரர்களான மக்ஸூமிகள் ஹம்ஸாவை எதிர்க்க எழுந்தனர். அவர்களை அடக்கிய அபூஜஹ்ல் 'நான் முஹம்மதை ஏசியதற்கும் ஹம்ஸா என்னைப் பற்றிப் பேசியதற்கும் சரியாகிவிட்டது. பிரச்னையை இத்தோடு விடுங்கள்; பெரிதாக்க வேண்டாம்' என்றார்.

சிலிர்த்தெழுந்து வந்த சிங்கம் கஅபாவை விட்டு வெளியேறியது.

## குடும்பப் பிரிவினைகள்

அபூதாலிபுடைய மகன்கள் ஜாபரும் அலீயும் இஸ்லாத்தைத் தழுவியிருக்க மற்ற இரு மகன்களான தாலிபும் அகீலும் தந்தையைப்போல் மூதாதையரின் மார்க்கத்திலேயே வாழ்ந்தனர்.

அபூலஹப் அண்ணலாரோடு வன்மம் கொண்டு இஸ்லாமிய எதிர்ப்பில் முன்னணி வகித்தார். அவருடைய மனைவி உம்மு ஜமீலும் கணவரோடு சேர்ந்து வெறுப்பை உமிழ்ந்தார். அதன் உச்சக்கட்டமாக தங்களுடைய மகன்களை வற்புறுத்தி அண்ணலாரின் மகள்களான ருகையாவையும் உம்மு குல்தூமையும் மணவிலக்குச் செய்ய வைத்தனர்.

அண்ணலாருக்கு ஏற்பட்ட நெருக்கடியை இறைவன் குறைத்தான்.

மணவிலக்குச் செய்யப்பட்ட ருகையாவை உம்மு ஜமீலின் ஒன்றுவிட்ட சகோதரர் உத்மான் இப்னு அப்பான் மணந்து கொண்டார். உம்மான் பெருஞ்செல்வந்தரும் உமையாக் கோத்திர முக்கிய புள்ளியும் ஆவார்.

அண்ணலாரின் மாமிமார்களில் ஒருவரான அர்வா இஸ்லாத்தைத் தழுவியது எதிர்பாராத நிகழ்ச்சி. இதற்குக் காரணம் பதினைந்தே வயதான அர்வாவின் மகன் துலைப். அர்கமின் இல்லம் சென்று இஸ்லாத்தை ஏற்றிருந்த துலைப் தாயாருக்கு வழிகாட்டியானார்.

கதீஜா பிராட்டியாரின் ஒன்றுவிட்ட சகோதரர் நவ்பல் இஸ்லாத்தின் முக்கிய எதிரி. ஆனால் அவருடைய புதல்வர் அஸ்வத் இஸ்லாத்தின் காதலர்.

கதீஜா பிராட்டியாரின் சகோதரர் மகனும் அண்ணலாரின் மகளார் ஸைனபை மணந்தவரான அபுல் ஆஸ் இஸ்லாத்தின் பக்கம் வரவில்லை. ஸைனப் இஸ்லாத்தைத் தழுவியிருந்தார். அபுல் ஆஸைச் சேர்ந்தவர்கள் ஸைனபை விவாக விலக்குச் செய்யக் கேட்டும் அவர் மனைவியை விலக்காமலேயே வாழ்ந்தார்.

கதீஜா பிராட்டியாரின் மற்றுமொரு சகோதரர் ஹிஷாமின் மகன் ஹக்கீம், சிலை வணக்கத்தை விட்டு விலகாமலேயே வாழ்ந்தார். ஆனால் அவருடைய சகோதரர் காலித் இஸ்லாத்தில் இணைந்தார்.

அண்ணலாருடைய பெரிய தந்தையும் அப்துல் முத்தலிபின் தலைமகனுமான ஹாரிஸுடைய மகன்தான் அபூசுப்யான். இவர் இஸ்லாத்துக்கு எதிராகச் செய்த செயல்களின் பட்டியல் நீண்டது. இவருடைய மனைவி கணவனுக்கேற்ற காரிகை. பேரிகை கொட்டிப்பாடுவதில் வல்லி.

அபூபக்கரைப் பின்பற்றி அவருடைய மனைவி உம்மூரூமான், மகன் அப்துல்லாஹ், மகள் அஸ்மா ஆகியோர் இஸ்லாத்தைத் தழுவினர். அவருடைய இன்னொரு மகன் அப்துல் கஅபா, கஅபா சிலைகளை விட்டுவிட்டு வரவில்லை. ஆயிஷா இஸ்லாத்தினுள் பிறந்தவராவார்.

அண்ணலாரின் மாமிமார்களில் ஒருவரான ஆதிகாவின் புதல்வர் அப்துல்லாஹ் இஸ்லாத்தை எதிர்த்தார். அப்துல்லாஹ்வின் சகோதரர் ஸுஹைர் நடுநிலைமை வகித்தார்.

ஆதிகாவுக்கு சகக்கிழத்தியாக மற்றுமொரு ஆதிகா இருந்தார். இந்த இரண்டாம் ஆதிகாவுக்கு ஹிந்த் என்ற மகளிருந்தார். ஹிந்தை மக்ஸூம் கோத்திர இளைஞர் அபூஸலாமா மணந்துகொண்டார். இந்தத் தம்பதியர் இஸ்லாத்தில் இணைந்து ஏற்றம் பெற்றனர். அபூஸலாமா

அண்ணலாரின் மாமி பர்ராவின் புதல்வராவார்.

பர்ரா தன் முதல் கணவர் இறந்துவிட ஆமிர் கோத்திரப் பிரமுகர் ஒருவரை மணந்து ஓர் ஆண்மகனைப் பெற்றெடுத்தார். அந்த மகனின் பெயர் அபூஸப்ரா. அபூஸப்ரா ஆமிர் கோத்திரத் தலைவர் ஸுஹைரின் புத்திரி உம்மு குல்தூமை மணந்துகொண்டார்.

தாயார் பர்ரா இஸ்லாத்தைத் தழுவாத நிலையில் புதல்வர் அபூஸப்ரா, அண்ணன் அபூஸலாமைப் பின்தொடர்ந்து இஸ்லாத்தில் இணைந்தார். இதற்குக் காரணம் அவருடைய தந்தையாரின் இரண்டாம் மனைவி மைமூனா.

மைமூனா ஆமிர் கோத்திரத்தாருக்கு இஸ்லாத்தை அறிமுகப்படுத்துவதில் பெரும் பங்காற்றினார். அவரின் சகோதரிகள் மூவரும்கூட அண்ணலாரிடம் உறுதி மொழி ஏற்றவர்கள். அவர்கள் அப்பாஸ், ஹம்ஸா, ஜாபர் ஆகியோரை மணந்தவர்கள்.

ஆமிர் கோத்திரத் தலைவர் ஸுஹைலுக்கு ஸஹ்லா எனும் இன்னொரு புதல்வியிருந்தார். ஸஹ்லா ஷம்ஸிய கோத்திரத் தலைவர் உத்பாவின் மகன் அபூஹுதைபாவை மணம் புரிந்திருந்தார்.

அப்போது மிகப் பலம் பெற்றுக்கொண்டிருந்த ஆமிர் கோத்திரமும் அபூஸுப்யானின் வம்ச முன்னோர்களான ஷம்ஸிய கோத்திரமும் சம்பந்தம் செய்துகொண்டது நன்மை பயக்கும் என நம்பப்பட்டது.

அந்த நன்மைகளில் ஒன்று இஸ்லாமிய வசந்தம் கிடைத்தது. அந்த வசந்தத்தை ஸஹ்லாவும் அபூஹுதைபாவும் சேர்ந்தே பெற்றனர்.

ஸுஹைல் வசந்தத்தின் வாசலைக்கூட எட்ட நினைக்காத நிலையில் அவருடைய சகோதரர்கள் ஹாதிப், ஸாலித், ஸக்ரான் மூவரும் வசந்த மண்டபத்துக்குள் வந்தனர். இதைவிட முத்தாய்ப்பாக ஸுஹைலின் புத்திரர் அப்துல்லா இஸ்லாத்தைத் தழுவினார்.

ஆமிர் கோத்திரத்தார் இஸ்லாத்தைத் தழுவியதுபோல் ஷம்ஸிய கோத்திரத்தாரும் இஸ்லாத்தைத் தழுவினர். அதன் ஓர் அங்கம்தான் அபூஹுதைபாவின் இஸ்லாமிய நுழைவு. அபூஹுதைபாவைப்போல் எளிதாக இஸ்லாத்தில் நுழைய முடியாது துன்பப்பட்டார் காலித். இவர் தன் தந்தையால் ஓர் அறையில் அடைக்கப்பட்டு மூன்று நாள் கழித்துத் தப்பித்து ஓடி இஸ்லாத்தை ஏற்றவர்.

ஷம்ஸ் கோத்திர உமையாக் கிளையைச் சேர்ந்தவர்தான் அண்ணலாரின் மகளை மணந்து கொண்ட உத்மான் எனும் சீமான்.

இவரின் இஸ்லாமிய நுழைவை அடுத்து ஷம்ஸ் கோத்திரத்தாருடன் கூட்டு ஒப்பந்தங்கள் செய்திருந்த பனூ அஸத் பின் குஸைமாக்களில் பதினான்கு பேர் இஸ்லாத்தை ஏற்றனர்.

உமையாக் கிளையின் தலைவர் அபூஸுஃப்யானின் புதல்வி உம்மு ஹபீபா கணவருடன் இஸ்லாத்தைத் தழுவினார். கணவரின் பெயர் உபைத்துல்லாஹ் இப்னு ஜஹ்ஷ்.

ஆமிர் கோத்திர, ஷம்ஸ் கோத்திர வரலாறுகள் இவ்வாறிருக்க அதீ கோத்திர வரலாற்றுச் செய்தி உமருல் கத்தாப்வரை நீண்டு செல்கிறது.

அதீ கோத்திரத்தின் முக்கிய பிரமுகர் நுபைல். இவருக்கு இரு மனைவியர்; இரு மனைவியருக்கும் அம்ர், கத்தாப் என இரு புதல்வர்கள். நுபைல் இறந்தபின் கத்தாபின் தாய் தன் சக கிழத்தி பெற்ற அம்ரை மணந்து கொண்டார். அம்ருவின் மூலம் ஸைது என்பார் பிறந்தார்.

ஸைது ஆதி மார்க்கமான இபுறாகீம் நபிகளாரின் மார்க்கத்தைப் பின்பற்றியவர், வரகா இப்னு நவ்பலைப்போல. சிலை வணக்கத்தை ஏற்காத ஸைதை அண்ணன் கத்தாப் கண்டித்தார்; அவரை மக்காவிலிருந்தும் விரட்டித் தண்டித்தார்.

ஸைது ஏக தெய்வத்தை வணங்கியவர்; கத்தாப் பல தெய்வங்களையும் வணங்கியவர். இந்த கத்தாபின் மகன்தான் உமர்; ஸைதின் மகன் சயீது, முந்தைய தலைமுறையின் பகை பிந்தைய தலைமுறையில் காணப்படவில்லை. சயீதோடு அன்பு பாராட்டிய உமர் தன் தங்கை பாத்திமாவை அவருக்குத் துணைவியாக்கினார்.

தந்தை ஸைதின் உள்ளுணர்வுகள் சயீதை எட்டியிருந்தன போலும், அவர் தன் மனைவியோடு இஸ்லாத்தை ஏற்றார். கத்தாபின் மகன் உமர் தன் தந்தையைப்போல் சிலை வணங்கியாக இருந்தார்.

உமரின் தாயார் அபூஜஹ்லின் தங்கையாவார். உமரின் மனைவி ஸைனப் ஜுமாஹ் கோத்திரத்து மஸ்ஊனின் மகளாவார். ஸைனபின் சகோதரர் உத்மான். உத்மானும் அவரது இரு சகோதரர்களும் சகோதரி ஸைனபும் ஏற்கனவே ஏக தெய்வத்தைப் போற்றியதால் இஸ்லாத்தை ஏற்றிருந்தனர்.

உத்மானின் குடும்பத்தார் தம் கோத்திரத் தலைவரான உமையா இப்னு கலாபுடன் ஒன்றுவிட்ட சகோதர பந்தம் கொண்டவர்கள். உமையாவின் குடும்பமே இஸ்லாத்துக்கு எதிரானது. அண்ணலாரை வன்மையாகக் கண்டித்த குடும்பம் அது.

உமையாவின் சகோதரர் உபை என்பவர்தான் அண்ணலாரிடம் மனித எலும்புத் துண்டைக் கொண்டுவந்து உடைத்துத் தூளாக்கி முகத்துக்கு நேராக ஊதி ‘இதற்கு இறைவன் உயிர் கொடுப்பான் எனக் கூறுகிறீரா, இது சாத்தியமா! இதற்குப் பதில் கூறும் சத்தியமாக!’ எனக் கூறியவர்.

‘இறைவன்மீது சத்தியம் செய்து கூறுகிறேன். இது சாத்தியமே! இந்த எலும்புக்குரியவரை மட்டுமல்ல, நீர் இறந்து மண்ணில் புதைத்து மக்கிய பின்னரும் நீர் இப்போது இருப்பதுபோலவே எழுப்பப்படுவீர்’ என்று அண்ணலார் அமைதியோடு கூறினார்.

இந்நிகழ்வைப் பற்றி திருக்குர்ஆன் கூறுவது ஒரு சீரிய செய்தியாகும்.

> ‘அவன் நமக்கு உவமையைப் பொருத்துகின்றான். ஆனால் தான் படைக்கப்பட்ட விதத்தை மறந்து விடுகின்றான். மக்கிப்போய்விட்ட நிலையிலுள்ள இந்த எலும்புகளை உயிர்ப்பிப்பவர் யார் என்று அவன் கேட்கின்றான். அவனிடம் கூறுங்கள்: எவன் முதலில் அவற்றைப் படைத்தானோ அவனே அவற்றை உயிர்ப்பிப்பான். மேலும் அவன் படைப்பு நுட்பம் ஒவ்வொன்றையும் நன்கறிந்தவன்.’

(திருக்குர்ஆன் 36: 78 79)

## தூதனுப்பித் தோற்று...

கேலி பேசினர், கிண்டல் செய்தனர், ஏசிப் பார்த்தனர், அவதூறு பேசிப்பார்த்தனர், அபூதாலிபிடம் கோரிக்கைவிடுத்தனர், அவரிடமே எச்சரிக்கை செய்தனர். அடுத்த கட்டமாக, தூதுவிட்டனர்.

அப்த் ஷம்ஸ் கோத்திரத் தலைவர்களில் ஒருவரான உத்பா இப்னு ராபியா மொழிந்த ஆலோசனைக்கு செவி சாய்த்த குறைஷியர் அவரையே தூதனுப்பினர்.

உத்பா அண்ணலாரிடம் பேசிப் பார்ப்பதற்கு ஆலோசனை சொன்ன காரணம் ரத்த பந்தமே. உத்பா அப்த் ஷம்ஸின் பேரனாவார்; அண்ணலார் அப்த் ஷம்ஸின் சகோதரர் ஹாஷிமின் மூன்றாம் தலைமுறையில் வருவர். இந்த உறவு உத்பாவை உந்தித் தள்ளியது.

அப்போது அண்ணலார் பள்ளிவாசலுக்குள் இருப்பதாக செய்தி கிடைத்தது. உடனே உத்பா பள்ளிவாசலுக்குள் சென்று

அண்ணலாரிடம் தன்னுடைய கருத்தைச் சொன்னார்.

‘என்னருமைச் சகோதரன் மகனே! நீர் சாமான்யரல்லர், உம்முடைய பரம்பரை என்னுடைய பரம்பரையே! நம் பரம்பரை குறைஷிக் குலத்துக்குள் அடங்கும். நீர் இன்று குறைஷிகளைக் கேவலமாகப் பேசிவருகிறீர். அவர்களின் மூதாதையர்களை முட்டாள்கள் என்கிறீர். உம்முடைய பேச்சால் சமுதாயம் ரெண்டுபட்டு வருகிறது’ என்றார் உத்பா.

உத்பாவின் பேச்சைக் கேட்ட அண்ணலார் அவரிடம் ‘இப்போது நான் உங்களுக்குப் பதில் சொல்லப்போவதில்லை. அண்மையில் இறைவன் அருளிய திருவசனங்களை ஓதிக்காட்டுகிறேன். அதற்குப் பிறகு என்னிடம் பேசுங்கள்’ என்ற அண்ணலார் திருக்குர்ஆன் வசனங்களைத் தென்றலில் தவழவிட்டார்.

> ‘எவர் அல்லாஹ்வின் பக்கம் அழைத்தாரோ, நற்செயல் புரிந்தாரோ, மேலும் நான் முஸ்லிம் (இறைவனுக்கு முற்றிலும் கீழ்ப்படிந்தவன்) என்று கூறினாரோ அவரைவிட அழகிய வார்த்தை கூறுபவர்கள் யார் இருக்கிறார்?’
>
> ‘நன்மையும் தீமையும் சமமாகமாட்டா, மிகச் சிறந்த நன்மையைக் கொண்டு நீர் தீமையைத் தடுப்பீராக! உம்முடன் கடும் பகைமை கொண்டிருந்தவர்கூட உற்ற நண்பராக ஆகிவிடுவதைக் காண்பீர். பொறுமை கொள்வோரைத் தவிர வேறெவர்க்கும் இந்தக் குணம் வாய்க்கப் பெறுவதில்லை. பெரும் பேறு பெற்றவர்களைத் தவிர வேறெவர்க்கும் இந்த உயர் தகுதி கிட்டுவதில்லை.’

(திருக்குர்ஆன் 41: 33 35)

ஹாமீம் அஸ்ஸஜ்தாவின் வசனங்களை ஓதிக் காட்டிய அண்ணலார் ‘என்னருமைத் தந்தையே! இந்த வசனங்களா சமுதாயத்தை ரெண்டாக்கிவிடும்? இறைவனுக்கு முற்றிலும் கீழ்ப்படியச் சொல்லி மனிதனை மாமனிதனாக்கும் இவ்வசனங்களா குறைஷிகளைத் துண்டாக்கிவிடும்?’ எனக் கேட்க பூ மழையாகப் பொழிந்த வசனங்களைக் கொண்டு உத்பா மன அழுக்கைக் கழுவிக்கொண்டுவிட்டார். அவரால் பதில் பேச முடியவில்லை. கண்களை மூடியிருந்த அவர் அண்ணலாரிடம் தொடர்ந்து வசனங்களை ஓதும்படி கையால் சைகை செய்தார். அண்ணலார் அடுத்தடுத்த திருவசனங்களை ஓதினார்.

‘இந்த இரவும் பகலும் சூரியனும் சந்திரனும் அல்லாஹ்வின் சான்றுக்குள் உள்ளவையாகும். நீங்கள் சூரியனுக்கும் சந்திரனுக்கும் சிரம் பணியாதீர்கள். மாறாக அவற்றைப் படைத்த இறைவனுக்கு தலை வணங்குங்கள், உண்மையில் அவனையே வணங்குபவர்களாக இருந்தால்’ (41: 37) என ஓதிய அண்ணலார் நிலத்தில் தலைசாய்த்து இறைவனைத் தொழுதார்.

திருக்குர்ஆன் வசனங்களோடு இரண்டறக் கலந்துவிட்ட உத்பா அண்ணலார் ஓதி முடித்த பின்பு கண்திறந்து பார்த்தார். அண்ணலார் புன்னகைத்தபடி நின்றார்.

வானத்திலிருந்து தரைக்கு வந்த உத்பா அண்ணலாரின் கரங்களைப் பற்றிக் கொண்டார். ‘அருமை மகனே! அருமை மகனே! நீர் மொழிவதெல்லாம் உண்மையே! அவை சமுதாயத்தை ரெண்டாக்கும் கருத்துகள் அல்ல, ஒன்றாக்கும் கருத்துகள்! வருங்காலம் கொண்டாடப்போகும் கருத்துகள்; தீமைகள் அனைத்தையும் துண்டாக்கும் கருத்துகள்’ என உத்பா நா தழுதழுக்கக் கூறினார்.

இருளைக் கொண்டுவந்த உத்பா அருளைக் கொண்டு சென்றார். அவர் முகம் மலர்ந்திருந்தது; கண்களில் பேரொளி!

குறைஷியரிடம் திரும்பி வந்து சேர்ந்த உத்பாவிடம் ‘என்ன சேதி? என்ன சொன்னார் அந்த மந்திரக்காரர்?’ என்ற கேள்விகள் கேட்கப்பட்டன.

‘அன்புச் சகோதரர்களே! அவரை விட்டுவிடுங்கள். அவரை அவர் வழியில் செல்லவிட்டு நீங்கள் உங்கள் வேலைகளைப் பாருங்கள். அவர் மந்திரவாதியுமல்லர், தந்திரவாதியுமல்லர். அவர் மனிதருள் மாமனிதர்தான்! நான் கேட்ட கேள்விகளுக்கு அவர் பதில் சொல்லவில்லை. திருக்குர்ஆனே பதில் சொல்லியது’ என்ற உத்பாவைப் பார்த்து குறைஷிகள் குறை கூறினர். அவருக்கு அண்ணலார் சூன்யம் செய்துவிட்டதாகக் கதை கட்டினர்.

‘அவர் சொன்ன பதில் என்னவெனக் கேட்டால் குர்ஆன் பேசியது, குர்ஆனே பதில் கூறியது’ என்கிறார். என்ன இது புதிராக இருக்கிறது?’ என்ற குறைஷிகளிடம் உத்பா மீண்டும் ‘அவரை அவர் வழியில் விட்டுவிடுங்கள். அவரை அவருடைய இறைவன் கைவிட்டால் அரபுலக மக்கள் அவரை அழித்துவிடுவார்கள். அப்போது அவரை அழிக்கக் கூடிய வேலை உங்களுக்கு இருக்காது. அவரை அவருடைய இறைவன் காப்பாற்றினால் அவருடைய புகழ் அரபுலகம் முழுவதையும் வெல்லும்.

அப்போது நீங்களெல்லாம் அப்புகழுக்குப் பங்காளியாகிவிடுவீர்கள்' என்றார். உடனே உத்பாவை குறைஷிகள் கிண்டல் செய்தனர்.

உத்பாவின் தூது தோற்றபின் குறைஷிகள் அண்ணலாரை கஅபாவுக்கு அழைத்துவரச் செய்தனர். திசை மாறிப் பறந்த பறவைகள் திசை திரும்பி வந்துவிட விரும்புகின்றன போலும் என எண்ணிய அண்ணலார் குறைஷிகளின் கோரிக்கையை ஏற்று கஅபாவுக்குள் சென்றார்.

அவர்கள் பழைய பல்லவியையே பாடினர். அண்ணலார் ஏகத்துவக் கருத்துக்களைக் கூறினார். பழைய பல்லவியைப் பாடிய குறைஷிகள் புதிதாக குதர்க்கம் பேசினர்.

'மக்காவைச் சுற்றியுள்ள மலைகளைத் தரைமட்டமாக்கிச் சமப்படுத்தி சிரியாவிலும் பாரசீகத்திலும் ஓடும் நதிகளைப்போல இங்கேயும் உம் அல்லாஹ் மகாநதியை ஓடச் செய்யட்டும்; அப்போது உம்மையும் உம் அல்லாஹ்வையும் நம்புகிறோம்! நம்முடைய முன்னோர் குஸையை மீண்டும் உயிர்ப்பிக்கச் சொல்லும்; அவர் மீண்டும் வருவாரானால் அப்போது உம்மையும் உம் அல்லாஹ்வையும் நம்புகிறோம்! பொன்னும் வெள்ளியும் அம்பாரமாக உம் வீட்டில் நிறையட்டும். அப்போது உம்மையும் உம் அல்லாஹ்வையும் நம்புகிறோம்! தோட்டந்துரவுகள், மாடமாளிகைகளை உமக்காகக் கேளும். அவை கிடைப்பின் அப்போது உம்மையும் உம் அல்லாஹ்வையும் நம்புகிறோம்' என குறைஷிகள் கூறினர்.

'நதியைக் கொண்டுவரவோ இறந்தவரை மீண்டும் உயிர்ப்பிக்கவோ, பொன் வெள்ளி, தோட்டந்துரவு, மாடமாளிகைகள் கேட்டுப் பெறவோ நான் அனுப்பப்படவில்லை. அல்லாஹ் ஒருவனெனக்கூறவும் சிலை வணக்கச் சீரழிவை எச்சரிக்கவும் தீனை நிலைநாட்டவும் அனுப்பப்பட்டவன் நான்' என அண்ணலார் தம்மீது விதிக்கப்பட்ட கடமையைப் பற்றிக் கூறினார்.

'அளவிலாக் கருணையுள்ளவன் (ரஹ்மான்) இந்தக் குர்ஆனைக் கற்றுத் தந்தான்' (55: 1) என்ற வசனத்திலுள்ள 'ரஹ்மான்' எனும் இறைவனின் பெயரைச் சொல்லி அந்த ரஹ்மான் யாரென்று கேட்டு குறைஷிகள் அண்ணலாரிடம் வாதம் புரிந்தனர்.

ரஹ்மான் எனும் சொல் அளவிலாக் கருணையுள்ளவன் எனும் பொருளைத் தருவது. அரபகத்தில் அச்சொல் புழக்கத்தில் இல்லாமலிருந்தது. புதிதாக அச்சொல்லை இறைவன் பயன்படுத்த,

குறைஷிகள் பொருள் புரியாமல் அப்பெயர் யாரோ ஒருவருடையது என எண்ணத் தொடங்கினர். அதனால்தான் அவர்கள் ரஹ்மான் என்பார் யமாமிலிருந்து கொண்டு அண்ணலாருக்குப் பாடம்படித்துக் கொடுப்பதாகக் கதை கட்டினர்.

‘ரஹ்மான் என்பது அளவிலாக் கருணையுள்ள இறைவனே!’ என அண்ணலார் கூறியும் குறைஷிகள் ஏற்க மறுத்தனர்.

‘இறைவனையும் வானவர்களையும் அழைத்து வந்து காட்டும் வரை உம்மை நம்ப மாட்டோம்’ என்றனர் சிலர்.

‘ஓர் ஏணியை எடுத்து வைத்து நீர் சுவர்க்கம் சென்று வந்தாலும் நான் நம்பப்போவதில்லை’ என்றார் மக்ஸூம் கோத்திரத்து அபூஉமையாவின் மகன் அப்துல்லாஹ்.

இந்த அப்துல்லாஹ் யார் தெரியுமா? இவர் அபூஜஹ்லின் ஒன்றுவிட்ட சகோதரர் மட்டுமல்ல, அண்ணலாரின் மாமி ஆதிகாவின் அருமைப் புதல்வர்!

## தோழர்கள் அடைந்த தொல்லைகள்!

தொடக்கத்தில் இஸ்லாத்தில் இணைந்தவர்களில் பெரும்பாலோர் அடித்தட்டு மக்களே! அடிமைகள், ஏழை எளியவர்கள், ஏதிலிகள் (எதுவுமே இல்லாதவர்கள்), தொழிலாளிகள் ஆகியோர் அண்ணலாரின் கரம்பற்றி ஏகத்துவத்தை இதயத்தில் பதித்தனர்.

இஸ்லாத்தை எதிர்க்கத் தொடங்கியவர்கள் அண்ணலாரிடம் பல்வேறு தளத்தில் மோதியும் வெற்றி பெற முடியவில்லை. இச்சூழலில் அவர்கள் அடித்தட்டு மக்கள் மேல் பாய்ந்தார்கள்.

அடித்தும் உதைத்தும் இன்னும் பல்வேறுவிதமாக தண்டிக்கவும் செய்த குறைஷியர்கள் மற்ற குலத்தவர்களோடும் ஒப்பந்தம் செய்துகொண்டு தீவினைகள் செய்தார்கள்.

புதிதாக இஸ்லாத்தைத் தழுவியவர்களில் மேல் தட்டு மக்களை விட்டுவிட்டு கீழ்த்தட்டு மக்களோடு கீழ்த்தரமாக நடந்துகொண்டார்கள். மனிதாபிமானம் சிறிதுமின்றி மக்களை மாக்களாக நடத்தினார்கள்.

புதிய மார்க்கத்தைத் தழுவியவர்கள் பழைய மார்க்கத்துக்கு மீண்டும் வரும்வரை தொல்லை கொடுத்தார்கள். விடாப் பிடியாக மிக உறுதியாக இஸ்லாத்தைப் பிடித்துக் கொண்டவர்களை விலங்குபோட்டு வதைத்தார்கள். அடித்தனர், உதைத்தனர், பட்டினி போட்டனர்,

வெயிலில் நிற்க வைத்தனர், சுடு மணலில் படுக்க வைத்தனர், அறையில் அடைத்து வைத்தனர், தூக்கமிழக்கச் செய்தனர், இரும்புக் கம்பிகளைக் காய்ச்சி சூடுபோட்டனர், நீரில் மூழ்க வைத்தனர்.

அரசமைப்பு இல்லாத ஊரில் தட்டிக் கேட்க நாதியில்லை; பணமும் பலமும் இருந்தால் ஒருவர் தனியாட்சி நடத்திக்கொள்ளலாம்.

வன்முறையால் சில முஸ்லிம்கள் வாடிப் போயினர்; அதனால் அவர்கள் மதம் மாறிப் போயினர். சிலர் உடல் வாடிப் போயினர்; ஆனால் அவர்கள் மனம் மாறிப் போகவில்லை. சிலர் ஆறாத புண்பட்டுப் போயினர் என்ற போதும் பண்பட்டுவிட்டனர். சிலர் பழைய மதத்தை மீண்டும் பற்றியதாகக் கூறி நடித்தனர்; ஆனால் உள்ளுக்குள் முஸ்லிம்களாக இருந்து சிரித்தனர்; சில மன உறுதிகொண்டவர்கள் அடித்தவர்களை எதிர்த்தனர்; அடிபட்டும் உதைபட்டும் ஆர்த்தெழுந்த அவர்கள் சிங்கம்போல் கர்ஜித்தனர்.

மன உறுதி கொண்டவர்களில் ஒருவர் யாஸிர். அவர் மட்டுமா மன உறுதி கொண்டிருந்தார்? அவருடனிருந்த மனைவி ஸுமைய்யா, புதல்வர் அம்மார் ஆகிய இருவரும்கூட மன உறுதியுடன் இருந்தனர்.

மக்காவிலிருந்த ஏழை மக்களில் முதன் முதலாக இஸ்லாத்தைத் தழுவிய இவர்கள் அபூஜஹ்லின் வதை முகாமில் இருந்தனர். சாட்டையைக் கையிலெடுத்து சட்டதிட்டம் இல்லாத பூமியில் அபூஜஹ்ல் ஆடிய ஆட்டம் கொஞ்சநஞ்சமல்ல. நஞ்சு நெஞ்சினன் அபூஜஹ்ல் செய்த கொடுமையால் யாஸிர் புண்பட்டார்.

புண்பட்ட கணவனின் நிலைமையைப் பார்த்துப் பொறுக்க முடியாத ஸுமைய்யா அபூஜஹ்லைக் கேட்கக்கூடாத கேள்விகளைக் கேட்டார். அபூஜஹ்லை எதிர்த்துப் பேசினார். கோபங்கொண்ட அபூஜஹ்ல் கையிலிருந்த ஈட்டியால் குத்த அந்தப் புனிதவதி உயிரிழந்தார். இஸ்லாத்தின் முதல் உயிர்த் தியாகி ஷஹீத் ஸுமைய்யா! அடுத்து யாஸிர் உயிரிழந்தார்.

பெற்ற பிள்ளையின் கண் முன்னாலேயே பெற்றோரின் உயிர் பறிப்பு! புதல்வர் அம்மார் பொறுத்துக்கொண்டார். பேரிழப்புகளுக்கு முன் அவர் பெற்றிருந்த இஸ்லாம் அவரைப் பொறுமைகொள்ள வைத்தது.

பெற்றோரின் இழப்பைக் கூறி பிள்ளையை மாற்ற நினைத்த அபூஜஹ்ல் அம்மாரின் மேனியில் இரும்புக் கவசத்தை மாட்டி வெயிலில் நிறுத்தினார்; சுடுமணலில் படுக்க வைத்து அம்மாரை வருத்தினார்.

அவர் மூர்ச்சையான பின்னரே அடிப்பதை நிறுத்தினார். ஆனால் அம்மார் இறைநம்பிக்கையை இழக்கவில்லை; இஸ்லாத்தைத் துறக்கவில்லை!

அம்மார் போலவே அடிபட்டும் உதைபட்டும் ஈமானோடு இருந்தவர் கப்பாப். இவர் உம்மு அம்மார் எனும் பெண்மணிக்கு அடிமையாக இருந்தார். கப்பாப் முஸ்லிமானதைப் பொறுக்காத அந்தக் காதகி கம்பியைச் சூடாக்கி தலையில் சூடு போட்டாள்; உடலில் கோடு போட்டாள். ஒருநாள் கப்பாபை காய்ந்த மரத்திலேற்றி நிற்கவைத்து அடிமரத்தில் தீ மூட்டினாள். விநோதப் பிறவியான உம்மு அம்மார் வித்தியாசமான முறையில் தொல்லைகள் கொடுத்தாள்.

அபிசீனியாவைச் சேர்ந்த கறுப்பு மனிதர் பிலால். இவர் உமையா என்பாரிடம் அடிமையாக இருந்தார்.

கறுப்பு பிலால் உள்ளத்தை வெள்ளையாக்க இஸ்லாத்தை ஏற்றபோது உமையா உறுமினார்; உணவும் தண்ணீரும் தரமறுத்தார். கொதிக்கும் பாறைமேல் படுக்கச் செய்து பாறாங்கல்லை மார்புமேல் ஏற்றினார்; கேவலமான சொற்களால் தூற்றினார்.

உமையாவில் சொற்களைப் பற்றிக் கவலைப்படாத பிலால் ஒரே ஒரு சொல்லை மட்டும் ஓயாது கூறினார். ‘அஹதுன்... அஹதுன் அவன் ஒருவன்... அவன் ஒருவன்’ என ஏக இறைவனைப் போற்றினார்.

வதைபடும் பிலாலைப்பற்றி அறிந்த அபூபக்கர் உமையாவிடம் சென்று ‘உமையா! உனக்கு இறையச்சம் இல்லையா? ஏன் இந்த அப்பாவியை வதைக்கிறாய்’ எனக் கேட்டார்.

‘இவன் கெட நீர்தானே காரணம், எனவே நீயே இவனைக் காப்பாற்று!’ என்றார் உமையா.

‘பண்டமாற்று போல ஆள்மாற்று செய்து கொள்ளலாமா? என்னிடம் உம்மைப் போன்ற சிலை வணங்கி ஒருவர் உள்ளார். அவரை நீர் எடுத்துக்கொண்டு இவரை நீர் என்னிடம் ஒப்படைக்கச் சம்மதமா?’ என அபூபக்கர் கேட்க ஆள்மாற்று நடந்தது.

அபூபக்கர் பிலாலை மட்டுமல்ல, அடிமைகள் பலரை பணம் கொடுத்துமீட்டு அவர்கள் இதயங்களில் இஸ்லாமிய கீதத்தை மீட்டியவர்.

பிலாலை மீட்பதற்கு முன்பே அபூபக்கர் ஆறு பேரை மீட்டெடுத்திருந்தார்.

அவர்களில் ஒருவர் ஆமிர் இப்னு புஹைரா, ஆன்ம வலிமை பெற்ற ஆட்டிடையரான ஆமிர் ஆரம்பகால முஸ்லிம்களில் ஒருவர். ஆமிரை விடுவித்த அபூபக்கர் அவரைத் தம் மந்தைகளைக் கவனிக்கும்படிச் செய்தார்.

உமரின் அடிமைப் பெண்களில் இருவர் இஸ்லாத்தை ஏற்றிருந்தனர். அவர்களின் பெயர் லபனிய்யா, சுபைரா. உமர் அவர்களைப் பார்த்துச் சீறினார்; இஸ்லாத்தை விட்டுவிடும்படிக் கூறினார். இதையறிந்த அபூபக்கர் பணம் கொடுத்து அப்பெண்களை விடுவித்தார்.

அபூபக்கரின் மானுட விடுதலைக்கான செயலையும் மனிதர்களின் விடுதலைக்கான பணிகளையும் கண்ட அவருடைய தந்தை ‘மகனே! மகத்தான கடமைகளைச் செய்யும் நீ இதுவரை பலவீனமானவர்களின் விடுதலைக்கு உதவினாய். இனி, நீ வீரமும் வலிமையும் கொண்ட அடிமைகளையும் விடுதலை செய்! அவர்களின் பலம் உங்களுடைய இயக்கத்துக்கு உதவும்’ எனக் கூறினார்.

‘இறைவனைத் திருப்திப்படுத்தவே நான் பாடுபடுகிறேன்’ என்றார் அபூபக்கர்.

அபூபக்கர் உண்மையில் இறைவனைத் திருப்திப்படுத்தவே பாடுபட்டார். இறைமறை திருக்குர்ஆன் அவரைப் பற்றிக் கூறுகிறது.

‘அவரோ தூய நிலை அடையும் பொருட்டு தம் செல்வத்தை வழங்குகின்றார். கைமாறு செய்யும் அளவுக்கு எவருக்கும் அவர் நன்றிக்கடன் படவில்லை. ஆனாலும், அவர் உயர்வு மிக்க தம் இறைவனின் திருப்தியைப் பெறுவதற்காகவே இதைச் செய்கின்றார். மேலும் (அவரைக் குறித்து) அவசியம் அவன் திருப்தியடைவான்.’ (திருக்குர்ஆன் 92:1821)

## 11. மாவீரர் உமர்

### புலம்பெயர்தல்!

இஸ்லாத்தைத் தழுவிய ஒரே காரணத்துக்காகவே முஸ்லிம்கள் பல்வேறுவிதமான துன்பங்களை அனுபவித்தார்கள். குறைஷிகள் முஸ்லிம்களை அற்பப்புழுவைப் பார்ப்பதுபோல் பார்த்தார்கள்; கேலியும் கிண்டலும் செய்தார்கள். கேவலமாகப் பேசினார்கள். கீழ்த்தரமாக நடத்தினார்கள்.

அடிமைகள் என்றால் அவர்களை சுடுமணலில் படுக்கவைத்தார்கள்; தீயால் சுட்டார்கள். ஏழை எளியவர்கள் என்றால் அச்சுறுத்தினார்கள்; அடாத செயல் புரிந்தார்கள். உறவினர்கள் என்றால் மறுத்துப் பேசினார்கள்; உறவை அறுத்துப் பேசினார்கள். பழகியோர் என்றால் பகைத்துப் பேசினார்கள்; பண்பாடு மறந்து பேசினார்கள். தூரத்து உறவுகள் என்றால் அவர்களைத் தொலைத்துவிடுவதாகக் கூறினார்கள். அவர்களைத் தூரத்தில் நிறுத்தினார்கள்.

அன்றாட செயல்பாடுகளில் விவகாரங்களில் வியாபாரங்களில் குறைஷிகள் முஸ்லிம்களுக்குத் தொடர்ந்து துன்பங்கள் விளைத்தனர். சிலரின் கழுத்துகளில் துண்டைப்போட்டு முறுக்கினர்.

காலை மிதித்தவர்கள் கழுத்தில் துண்டுபோட்டு முறுக்கியது முஸ்லிம்களுக்குத் தன்மானப் பிரச்னையானது. வாழும் இடமா வாழ்க்கைக்கு உயிரோட்டமான ஏகத்துவமா? எது வேண்டும்? என்ற கேள்விக்குப் பதில் தேடியபோது அண்ணலாரின் ஆணை கிடைத்தது.

நபித்துவத்தின் ஐந்தாம் ஆண்டில் யானை ஆண்டு 45. கி.பி. 616இல் மக்காவிலிருந்து அபிசீனியாவுக்கு முஸ்லிம்களின் முதல் அணி சென்றது. அதில் பதினோரு ஆண்களும் நான்கு பெண்களும் இருந்தனர்.

கமுக்கமாக நடந்த புலம்பெயர்தல் எப்படியோ குறைஷிகளுக்கு எட்டிவிட்டது. பதினைந்து பேரையும் துரத்திக்கொண்டு குறைஷியர் சிலர் சென்றனர். புலம் பெயர்ந்து செல்பவர்கள் செல்லட்டுமே என்ற எண்ணம் சிலை வணங்கிகளுக்கு வரவில்லை. ஏகத்துவக் கொள்கையும்

ஏகத்துவக்காரர்களும் பெரும் அச்சுறுத்தலாகிப் போயினர். எனவே அவர்களை விரட்டிப் பிடிக்க வேகம் காட்டினர். செங்கடல் நோக்கிப் பயணம் சென்றனர்.

மக்காவிலிருந்து கால் நடையாகப் புறப்பட்ட பதினைந்து முஸ்லிம்களும் மேற்கே நடந்து ஷுஐபா எனும் செங்கடல் துறைமுகத்தை அடைந்தனர். அப்போது அபிசீனியா செல்லும் பாய்மரக்கப்பல் தயாராக நின்றது.

கப்பலில் ஏறி முஸ்லிம்கள் கடல் பரப்புக்குள் சென்றபின்னர் குறைஷியரின் ஏவலர்கள் ஷுஐபா பட்டினத்துக்குள் நுழைந்தனர். பாய்மரக்கப்பலின் முகட்டைக்கூட பார்க்க முடியாத குறைஷியர் தலைகளைத் தொங்க போட்டுக்கொண்டு மக்கா திரும்பினர்.

சென்ற இடத்தில் சிரமமின்றி வாழும் செய்தியறிந்த முஸ்லிம்களின் இரண்டாவது மூன்றாவது அணிகள் அபிசீனியா சென்றடைந்தன. குறைஷியர்களால் புலம் பெயர்ந்து சென்ற முஸ்லிம்களின் காலடித் தடத்தைக்கூட பார்க்க முடியவில்லை.

குறைஷியரில் 83 ஆண்களும், 11 பெண்களும் குறைஷியல்லாதோரில் 7 பேரும் அபிசீனியாவில் அப்போது இருந்தனர். எஞ்சிய 40 முஸ்லிம்கள் அண்ணலாருடன் மக்காவில் உறைந்தனர்.

101 முஸ்லிம்கள் புலம் பெயர்ந்திருந்தனர். இவர்கள் மக்காவிலிருந்த பல்வேறு கோத்திரங்களைச் சேர்ந்தவர்கள். எனவே கோத்திரங்கள் ஒஷிவொன்றும் தம் உறவினைப் பிரிந்திருந்தது. எதிர்பாராத இப்பிரிவால் சிலருக்கு இஸ்லாத்தின் பால் வெறுப்பேற்பட்டது. சிலருடைய உள்ளத்தில் இந்நிகழ்ச்சி இஸ்லாத்தைத் தழுவக்கூடிய தாக்கத்தை ஏற்படுத்தியது. உமரு (ரலி)க்கோ முஸ்லிம்களின் புலம் பெயர்தல் நிம்மதியைத் தந்தது. ஆறாவதாக முளைத்த விரல் அகற்றப்பட்டது போலிருந்தது.

‘இதுவரை நூற்றுக்கணக்கில் அபிசீனியா சென்றவர்கள் இருநூறு, முன்னூறு எனப் பெருகி ஆயிரக்கணக்கில் ஆகிவிட்டால்... அவர்களும் அவர்களுக்கு உதவும் பலரும் ஒன்று சேர்ந்து மக்காவுக்குள் நுழைந்து யுத்தம் தொடங்கிவிட்டால்....’ என எண்ணிய குறைஷியர்கள் ‘முளையிலேயே கிள்ள’ ஆலோசனை சபையில் கூடினார்கள்.

இதுவரை அபிசீனியா சென்றவர்களை மக்காவுக்குத் திரும்பக் கொண்டு வருவதாக முடிவு செய்தவர்கள் அதற்கான ஏற்பாடுகளைச்

செய்தனர்.

அபூஜஹ்லின் தாய்வழிச் சகோதரர் அப்துல்லாஹ் பின் அபீரபிஆவும் அம்ர் பின் ஆஸும் தூதர்களாகச் செல்ல தெரிவு செய்யப்பட்டனர். அபிசீனியாவுக்கு தூதர்களாகச் சென்ற அவர்களிடம் அங்குள்ள மன்னருக்கு வழங்க உயர்ந்த அன்பளிப்புப் பொருள்கள் கொடுத்தனுப்பப்பட்டன.

அபிசீனியா சென்ற அவர்கள் முதலில் அரசரின் அத்தாணி மண்டபப் பிரமுகர்களையும் கிறிஸ்துவ மார்க்க அறிஞர்களையும் சந்தித்தனர். அவர்களிடம் மக்காவில் பரவிவரும் இஸ்லாத்தைப் பற்றி இல்லாததையும் பொல்லாததையும் கூறினர். அவர்களை வசப்படுத்த உயரிய பொருள்களை அன்பளிப்பாக வழங்கினர்.

அரசவைப் பிரமுகர்களையும் ஆன்மிகத் தந்தைகளையும் வசப்படுத்திய குறைஷிப் பிரமுகர்கள் இருவரும் நஜ்ஜாஷி மன்னரின் அவைக்குச் சென்று இஸ்லாத்தை தீமை என்றும் இஸ்லாமியர்களைத் தீயவர்கள் என்றும் உருவகப்படுத்தினர். மன்னருக்கு பொன்மணியும் வைரமணியும் அன்பளிப்பாக அளித்தனர்.

அரசவைப் பிரதிநிதிகள் குறைஷிப் பிரமுகர்களின் வேண்டுகோளுக்குத் துணையாக நின்றனர். எப்படியும் முஸ்லிம்களை அபிசீனியாவிலிருந்து விரட்டுவதற்கு தயாராக நின்றனர்.

‘அந்நியருக்கு இங்கே இடமில்லை. அவர்களை அகற்றிவிடுவதுதான் அனைவருக்கும் நல்லது’ எனத் தலைமை அமைச்சர் கூறினார்.

‘அவர்களை நம்நாட்டிலிருந்து அகற்றுவதற்கு முன் அவர்களைப் பற்றி அவர்களிடமே கேட்டுவிட்டால் என்ன? ஒரு தரப்பு வாதத்தைக் கேட்டுவிட்டு எதிர்தரப்பாளரைத் தண்டிப்பது எப்படி நியாயமாகும்? வந்தவர்கள் என்றாலும் அவர்களும் மனிதர்கள்தான்! அரபகத்தைச் சுற்றி பல நாடுகள் உள்ளன. ஆனால் அவர்கள் எங்கும் செல்லவில்லை. நம்மிடம் அவர்கள் தஞ்சம்தேடி வந்திருக்கிறார்கள். நம்பி வந்த அவர்களுக்கு நான் நம்பிக்கைத் துரோகம் செய்யமாட்டேன். குறைஷிகள் கூறும் குற்றச் சாட்டுகளுக்கு புலம் பெயர்ந்து வந்தவர்கள் என்ன கூறுகிறார்கள் எனப் பார்ப்போம்! பெறுமதியான பதில் வந்தால் பெற்றுக் கொள்வோம். அவர்கள் குறுமதியுடன் பதில் சொன்னால் குற்றவாளிக் கூண்டிலே ஏற்றி அவர்களைக் கொலைக் களத்துக்குக் கொண்டு செல்வோம்’ என நஜ்ஜாஷி தெளிவாகக் கூறினார்.

அரசரின் பதிலைக் கேட்ட குறைஷித் தூதர்கள் அரைத்ததையே அரைத்தனர். அவர்களின் பேச்சைப் பொருட்படுத்தாத மன்னர் நஜ்ஜாஷி அண்ணலாரின் ஆட்களை அழைத்துவரச் சொன்னார்.

நூற்றுக்கணக்கில் திரண்டுவந்த முஸ்லிம்களில் முக்கியமானோர் அரண்மனைக்குள் வர ஜாஃபர் பின் அபீதாலிப் (ரலி) மன்னர் முன் சென்றார்.

மன்னர் நஜ்ஜாஷி கேட்ட கேள்விகளுக்கெல்லாம் ஜாஃபர் உறுதியோடும் தெளிவோடும் பதில்களைச் சொன்னார்.

அஞ்ஞான காலத்து அரபுகளின் நிலைமைகள், அண்ணலாரின் வருகை, இஸ்லாத்தின் அறிவுரைகள், முஸ்லிம்களின்மீது குறைஷிகள் புரிந்த அட்டூழியங்கள் ஆகியவை பற்றிய சங்கதிகள் அப்பதில்களில் இருந்தன.

‘உங்களுடைய இறைத்தூதருக்கு இறைவனிடமிருந்து வேதம் இறங்கியதாகக் கூறினீர்களே, அதிலுள்ள வசனங்களில் ஏதாவது ஒன்றை ஓதிக்காட்ட முடியுமா?’ என மன்னர் ஜாஃபரைக் கேட்டார்.

உடனே ஜாஃபர் நாவில் திருக்குர்ஆனின் ‘மர்யம்’ அத்தியாயத்தின் வசனங்கள் தவழத் தொடங்கின. யஹ்யா, மர்யம், ஈஸா என பாத்திரங்கள் உயிரோவியமாயின.

மன்னருக்கு பல நூற்றாண்டுகளுக்கு முந்தைய காட்சிகள் உண்மை நிகழ்வுகளைப்போல் தோன்றின. அவர் இதயம் உருகியது; கண்ணீர் கசிந்தது.

அன்று யூதர்கள் செய்த கொடுமைகளும் ஈஸா (அலை) சிலுவையில் அறையப்பட்ட நிலைமைகளும் மன்னரின் கண்முன் வந்தன. யூதர்கள் இடத்தில் குறைஷிகளும் கிறிஸ்துவர்கள் இடத்தில் முஸ்லிம்களும் நின்றனர்.

‘நீங்கள் கூறிய வசனங்களும் ஈஸா (அலை) கூறிய உரைகளும் ஒரே ஊற்றிலிருந்து உற்பத்தியானவையே! இறைவன்மீது ஆணையாக, உங்களைப் பொல்லாதவர்களிடம் ஒப்படைக்க மாட்டேன்’ என மன்னர் உறுதியுடன் கூற முஸ்லிம்கள் இறைவனுக்கு நன்றி கூறினர். குறைஷியர் தலைகளைத் தொங்கப் போட்டுக்கொண்டு அரசவையை விட்டு வெளியேறினர்.

அன்பளிப்புகளை வழங்கி முஸ்லிம்களைக் கூட்டிக் கொண்டுசெல்லலாம் என வந்த குறைஷித்தூதர்களுக்கு நஜ்ஜாஷியின்

அரசவை திருக்குர்ஆனின் மேடையானது பெரும் கவலையைத் தந்தது. மர்யத்தின் வசனங்களைக் கூறி தப்பித்துக்கொண்ட முஸ்லிம்களை மர்யத்தின் மகனை வைத்தே மடக்கிடத் திட்டமிட்ட அவர்கள் மறுநாளும் அரசரைச் சந்தித்தனர்.

மறுநாள், அம்ர் பின் ஆஸ் நஜ்ஜாஷியிடம் உங்கள் நாட்டுக்கு வந்தேறியுள்ளவர்கள் ‘மர்யமின் குமாரரைப் பற்றி தவறாகவே கூறியுள்ளார்கள். அதைப்பற்றி அவர்களிடம் கேட்டுப்பாருங்கள்’ எனக் கூற மீண்டும் முஸ்லிம்கள் அவைக்கு அழைத்து வரப்பட்டனர்.

குறைஷித்தூதர்கள் அவிழ்த்துவிட்ட ‘கரடியை’ மன்னர் ஜாஃபரிடம் காட்டினார். ஜாஃபர் கரடிக்கு எதிராக ‘சிங்கத்’தை அவிழ்த்துவிட்டார்.

‘ஈஸா (அலை) இறைவனின் அடியாரும் அவனுடைய தூதரும் ஆவார். அவர் அவனிடமிருந்து வந்த ரூஹும் கன்னி மர்யமுக்கு அவன் அனுப்பிய அவனுடைய வாக்கும் ஆவார்’ என ஜாஃபர் கூறியபோது மன்னருக்கு பெரும் நிறைவு ஏற்பட்டது.

‘யதார்த்தமான வார்த்தைகள்; இதயங்களை வருடும் வார்த்தைகள். மெய் இவ்வாறு இருக்க ஏன் பொய்யைப் பூச்சூடி அழைத்து வருகிறார்கள். என்னிடம் ஈஸா (அலை) மனித நேயத்தை வளர்த்துள்ளார். இல்லையேல் தூதர்களாக வந்திருப்போர் பெரும் சங்கடத்தை அடைந்திருப்பார்கள். நடந்தவை நடந்தவையாக இருக்கட்டும்; இனி நடப்பவை நல்லவையாக இருக்கட்டும். எம்மை நம்பி வந்தவர்கள் கவலையின்றி வாழுங்கள்; இனி வருபவர்களைக்கூட அச்சமின்றி வாழச் செய்யுங்கள்’ என நஜ்ஜாஷி குறைஷித்தூதர்கள் கொண்டு வந்த பரிசுப் பொருள்களைத் திருப்பியனுப்பினார்.

பரிசுப் பொருளெனச் சொல்லப்பட்டவை அனைத்தும் அவருக்குக் கையூட்டாகத் தெரிந்ததே, அவற்றைத் திருப்பி அனுப்பிடக் காரணமானது!

சத்தியம் வென்றது; அசத்தியம் அகன்றது!

## உமர் பெற்ற உன்னதம்!

மலைகள் சூழ தோட்டந்துரவுகள் ஆங்காங்கிருக்க அழகுற விளங்கிய மக்கா; ஆட்டு மந்தைகள் ஒட்டக கூட்டங்கள் உலாவந்து செல்வச் செழிப்போடு விளங்கிய மக்கா; வீடுகளும் கூடாரங்களும் திகழ கஅபாவை நடுவிலே கொண்ட மக்கா; வணிகக் குழுக்கள் வடக்கிலும் தெற்கிலும் சென்று வணிகம் செய்து லாபம் பெற்று வர வளம் பெற்ற

மக்கா; விற்போரும் வாங்குவோரும் வீதிகளை நிறைத்து நிற்க மணம் பெற்ற மக்கா; நூற்றுக்கணக்கான மக்கள் அன்றாடமும் ஆயிரக்கணக்கான மக்கள் ஹஜ் புனித நாளின் போதும் வலம் வந்த மக்கா, புனிதப் பயணத்துக்காக வந்தவர்கள் புரோகிதக் குறைஷிகளிடம் தங்களை ஒப்படைத்த மக்கா. அண்ணலாரின் வருகைக்குப் பின்...

இயற்கை அழகுகளும், கஅபாவும், வீடுகளும், கூடாரங்களும் இருந்தபடியிருக்க மக்கமாநகர் மக்களிடையே வேறுபாடுகள் முளைத்திருந்தன. ஆடு, ஒட்டகம், குதிரைகளின் மனங்கள் அப்படியே இருக்க மனித மனங்களில் மாறுபாடுகள் ஏற்பட்டிருந்தன.

குறைஷிகளில் வலிமைமிக்க உமர் இப்னு கத்தாபுக்கு மக்கத்து மனிதர்கள் சிலரின் மனமாற்றம் கோபத்தை ஏற்படுத்தியது. பல்வேறு பிளவுகளும் பிரிவுகளும் ஏற்பட்டாலும் மக்காவைத் துறக்காத மக்கள் இப்போது அபிசீனியாவுக்குப் புலம் பெயர்ந்தது ஆத்திரத்தைத் தந்தது.

கோபமும் ஆத்திரமும் கொண்ட உமர் மக்களின் மனமாற்றத்துக்கும் புலம் பெயர்தலுக்கும் காரணம் முஹம்மது இப்னு அப்துல்லாஹ் தான் என முடிவுக்கு வந்திருந்தார்.

புதிய மார்க்கம் சமுதாயத்தில் பிளவை உண்டாக்கியிருந்தது; மனங்களிடையே மாச்சர்யத்தை ஏற்படுத்தியிருந்தது; ஒன்றுபட வழியில்லாமல் போயிருந்தது; குடும்பங்களைக் கூறுபோட்டிருந்தது; விருப்பமுள்ளவர்களைக்கூட விரோதிகளாக்கியிருந்தது.

இன்று சிறுபான்மையினராக இருப்பவர்கள் நாளை பெரும்பான்மையினராகிவிட்டால் குறைஷிகளின் நிலையென்ன? அவர்கள் அபிசீனியாவிலிருந்து திரும்பிவந்து மக்காவைக் கைப்பற்றிவிட்டால் கஅபாவின் கடவுள்களின் கதியென்ன?

பல்வேறு எண்ணங்களால் சூழப்பட்ட உமர், ஏற்கெனவே குறைஷிகள் அளித்த தகவல்களையும் மனத்தில் தேக்கி கொலை வெறியர் ஆனார்.

ஒருவரின் குரல்வளையை அறுப்பதின் மூலம் சமுதாயத்தின் குரல்வளையைக் காப்பாற்றலாம் என்ற முடிவுடன் உமர் கொலை வாளுடன் நடந்தார்.

அவர் செல்லும் வழியில் பனூ அதி வம்சத்தைச் சேர்ந்த நுஐம் பின் அப்துல்லாவைச் சந்திக்க நேர்ந்தது. நுஐம் மறைவாக இஸ்லாத்தை ஏற்றவர். முஸ்லிம்களுக்கு இழைக்கப்படும் இன்னல்களைக் கண்டு தன்னை முஸ்லிமெனக் காட்டிக் கொள்ளாதவர்.

‘கத்தாபுடைய மகனே! எங்கே செல்கிறீர்! கண்களில் செந்நிறம், கையினில் கொலை வாள்...!’ என்று நுஐம் கேட்டார்.

‘கொடியோர் செயல் அறுக்க கொலை வாள்’ என்றார் உமர்.

‘யாரந்த கொடியோர்?’

‘நம் தெய்வங்களைக் கேவலமாகப் பேசுபவர், நம் சமுதாயத்தைக் கூறுபோடுபவர், நம் மூதாதையர்களை எள்ளி நகையாடுபவர் அந்த அப்துல்லாஹ்வின் மகன் முஹம்மதே இந்த வாளுக்கு இரையாகப் போகிறவர்!’

‘நீர் முஹம்மதைக் கொலை செய்துவிட்டால் அப்துல் மனாப் வம்சாவளியினர் கைகளைக் கட்டிக்கொண்டு சும்மா இருப்பார்களா? முஹம்மதுவின் சிறிய தந்தை ஹம்ஸா ஒருவரே போதும், அவர் உம்மை அம்புக்கு அன்பளிப்பாகக் கொடுத்துவிடுவார்! வேறு வேலையில்லையா உமக்கு? முதலில் உம் வீட்டைச் சீர்திருத்தும்!’

‘என்ன சொல்கிறீர், நீர்?’

‘உமது சகோதரி பாத்திமாவும் அவருடைய கணவர் சயீதும் முஸ்லிம்களாகிவிட்டனர். அவர்களைக் கண்டு முதலில் சரி செய்யும்.’

‘நீர் சொல்வது உண்மையா?’ எனக் கேட்ட உமர் ‘நீர் சொல்வது பொய்யாக இருப்பின் உம்மையே முஹம்மதுக்கு முன் இந்தக் கொலைவாளுக்குப் பரிசாகக் கொடுப்பேன்’ என எச்சரித்துவிட்டு தங்கையின் வீட்டுக்குச் சென்றார்.

தங்கை வீட்டின் வாசலில் அமைதி சூழ்ந்திருந்தது; உள்ளேயோ திருக்குர்ஆன் ஓதப்பட்டுக் கொண்டிருந்தது.

புயலைப்போல் சென்ற உமர் இடி இடிப்பதைப்போல் கதவைத் தட்டினார். ‘யாரது?’ என்ற குரல் கேட்ட உமர் ‘நான்தான் உமர்!’ எனக் கத்தினார். அது இடி விழுந்தது போலிருந்தது.

வீட்டினுள் மூவர் இருந்தனர். சயீது, பாத்திமா, கப்பாப்! மறைவாக இஸ்லாத்தைத் தழுவியிருந்த தம்பதிகளுக்கு கத்தாப்தான் அப்போது திருக்குர்ஆனை ஓதிக் கற்றுக் கொடுத்துக் கொண்டிருந்தார்.

‘உமர்’ என்ற குரல் கேட்டவுடன் உடல் நடுங்கிய மூவரும் வியர்வையில் நனைந்தார்கள்; பயத்தால் பதறினார்கள். கப்பாப் வீட்டின் உட்புறம் பதுங்கிக்கொள்ள பாத்திமா ஓதிய ஏட்டை பின்புறம் மறைத்துக்கொண்டார். சயீது துணிவைத் துணையாக்கிக் கொண்டு

கதவைத் திறந்தார்.

உள்ளே நுழைந்த உமர் ‘உங்களுடன் வேறெவரும் இல்லையா? நான் வெளியே நின்றிருந்தபோது ஒரு மூன்றாவது குரலைக் கேட்டேனே!’ என்றார்.

‘வேறு யாருமில்லை! நாங்கள்தான் பேசிக்கொண்டிருந்தோம்’ என்றார் பாத்திமா.

‘எனக்கு எல்லாம் தெரியும். நீங்கள் முஸ்லிம்களாகிவிட்டதும் தெரியும்’ என உமர் கூறியபோது தம்பதிகள் பேசவில்லை.

‘நச்சு மரத்தை வெட்டப் புறப்பட்டிருக்கும் எனக்கு எதிராக என் தங்கையே நச்சு மரத்துக்கு நீரூற்றுவதா? அதற்கு நான் சம்மதிக்க மாட்டேன்’ எனக் கூறிய உமர் மைத்துனரை அடிக்கத் தொடங்கினார். கணவன் அடிபட மனைவி சகிப்பாரா? பாத்திமா தடுத்தார். ஆத்திரத்துக்கு அடிமையாகி கோபத்தால் கொந்தளித்துப் போயிருந்த உமரின் அடிகள் தங்கையைக் காயப்படுத்தின. மண்டை உடைந்து ரத்தம் கசிந்தது.

இரத்தத்தைப் பார்த்தவுடன் கணவனும் மனைவியும் சிலிர்த்தெழுந்தார்கள். உமரின் கைகள் உயரா வண்ணம் பார்த்துப் பிடித்துக்கொண்ட பாத்திமா ‘நாங்கள் முஸ்லிம்களாகிவிட்டது உண்மைதான். முஸ்லிமாவது என்ன பெரிய குற்றமா? அது எங்களுக்கும் இறைவனுக்குமிடையேயுள்ள உறவு. அதை நீங்கள் பிரச்னையாக்க முடியாது. அண்ணன் தங்கை உறவு வேறு! அல்லாஹ் அடியார் உறவு வேறு! ரத்த உறவால் இதய உறவை அறுத்துவிட முடியாது! நீங்கள் சுழற்றும் கொம்பு உங்களுடைய எல்லைக்குள் இருக்க வேண்டும். எங்கள் எல்லைக்குள் சுழலக்கூடாது. அது எங்கள் உடலில் எங்காவது பட்டுவிடவும் நாங்கள் சம்மதிக்க மாட்டோம்’ என்ற அக்கினி வார்த்தைகளைக் கேட்டு உமர் அதிர்ந்துபோய் நின்றார்.

பூவுக்குள் பூகம்பம்!

பொட்டுப் பூச்சிகளாக நினைக்கப்பட்டவர்கள் உமரின் முன் சீறும் சிங்கங்களாக நின்று கொண்டிருந்தார்கள்.

பூ முகம் முழுதும் குருதி! குருதி வடிவதைப் பார்த்த புயல் ஓய்ந்து நின்றது; கடுமை அகன்று கனிவு பிறந்தது; தென்றல் தவழ்ந்தது!

‘அன்புத் தங்கையே! நீங்களிருவரும் நான் வருவதற்கு முன்படித்த ஏட்டை எனக்குக் காட்டுங்கள். அதில் என்னதான் எழுதப்பட்டுள்ளது?

அதைப் பார்ப்பதற்கு தடையில்லையே!’ என உமர் கூறினார்.

ஏட்டைக் கொடுக்கத் தயங்கிய தங்கையிடம் ‘சத்தியமாக, நீ தரும் ஏட்டை நான் எதுவும் செய்துவிட மாட்டேன். படித்துவிட்டுத் தந்துவிடுவேன்’ எனக் கூற பாத்திமா உமரிடம் அந்த ஏட்டைக் கொடுத்தார்.

அந்த ஏட்டில் ‘தாஹா’ அத்தியாயம் எழுதப்பட்டிருந்தது. ஏட்டைப் பெற்ற உமர் வைத்த கண்களை எடுக்காமல் ஓதிக்கொண்டே சென்றார்.

‘ஓதிக் கொண்டிருப்பவர் உறுமுவாரா, ஏதாவதொன்றைச் சொல்லி உளறுவாரா, இல்லை புரிந்து செயல்படுவாரா, பொறுமையுடன் பேசுவாரா?’ என மைத்துனர் மனக்கணக்குப் போட்டுக்கொண்டிருந்தார். பாத்திமா இறைவனைப் பிரார்த்தித்துக் கொண்டிருந்தார். மறைந்திருந்த கப்பாப் உமர் ஓதிய இறை வசனங்களைக் கவனமுடன் கேட்டுக் கொண்டிருந்தார்.

‘தா; ஹா. நீர் துன்பத்துக்குள்ளாக வேண்டும் என்பதற்காக இந்தக் குர்ஆனை உம்மீது நாம் இறக்கியருளவில்லை’ எனத் தொடங்கி மூஸா நபிகளாரின் வரலாற்றைக் கூறி ‘(மக்களே!) உங்கள் இறைவன் அல்லாஹ் ஒருவன்தான்; அவனைத்தவிர வேறு இறைவன் இல்லை. அவனுடைய அறிவு அனைத்தையும் உள்ளடக்கியுள்ளது’ (20 : 98) எனத் தொடர்ந்தது.

பின்னர் எக்காளம் ஊதும் நாளைச் சொல்லி மறுமையை விவரித்து ஆதம் நபிகளாரின் வரலாற்றைக் கூறி தொழுகையைப் பற்றிப் பேசியது.

இறுதியாக ‘(நபியே!) நீர் அவர்களிடம் கூறும்! (தமது செயலின் விளைவை) ஒவ்வொருவரும் எதிர்பார்த்துக் கொண்டிருப்பவர்கள்தாம்! எனவே நீங்களும் எதிர் பார்த்திருங்கள். அதிவிரைவில் உங்களுக்குத் தெரிந்துவிடும் நேர்வழியில் நடப்பவர் யார், மேலும் நேர்வழியைப் பெற்றவர்கள் யார் என்பது!’ (20:135) என முடிந்தது.

தாஹா வசனங்கள் உமரின் தாகம் தீர்ப்பவையாக இருந்தன. அவர் இஸ்லாத்தின் பால் ஈர்க்கப்பட்டார். உமர் படிப்பறிவில்லாதவராக இருந்திருந்தால் தாஹாவைப் படிக்கும் வாய்ப்புக் கிடைத்திருக்காது. அவர் கருத்துக் குருடராகத்தான் இருந்திருப்பார். இறைவனின் அளப்பரிய அருள் அவர் கல்விக் கண்ணைப் பெற்றவராக இருந்ததுதான்.

கண்களிலிருந்து உதிர்ந்த நீர்த் துளிகளோடு உமர் ‘அன்புத் தங்கையே! அளப்பரிய செல்வத்தை என்னிடம் காட்டாது

மறைத்துவிட்டாயே! இவையனைத்தும் முஹம்மதின் வார்த்தைகளில்லை, இறைவனின் வாக்கே! இது சத்தியம்!’ எனக் கூறினார்.

தங்கையின் பிரார்த்தனை நிறைவேறியது; மைத்துனர் மனம் மகிழ்ந்தது. மறைந்திருந்த கப்பாபின் உருவம் வெளியே வந்தது.

‘உமரே! அண்ணலார் உமக்காக வேண்டுதல் புரிந்துள்ளார்கள். பலவீனமானவர்களின் பட்டியலே நீண்டுகொண்டிருக்க பலமுடையவர்களின் பட்டியலில் உம்மையும் அபுல்ஹகமைச் சேர்த்திட அண்ணலார் பிரார்த்தனை புரிந்தார்கள். அபுல்ஹகமுக்கு நேர்வழி கிடைக்கவில்லை. உமக்குக் கிடைத்துவிட்டது!’ என்றார் கப்பாப்.

‘கப்பாபே! இப்போது அண்ணலார் எங்கே இருக்கின்றார்?’ என உமர் கேட்டார்.

‘அண்ணலார் ‘ஸபா மலையருகில் உள்ள அர்கம் வீட்டில் இருக்கின்றார்’ என கப்பாப் மொழிந்த மறுகணம் உமர் அண்ணலாரைக் காணப் புறப்பட்டார்.

உமர் அர்கமின் வீட்டை அடைந்து கதவைத் தட்டியபோது அண்ணலாரோடு ஹம்ஸா, அபூபக்கர், அலீ, பிலால் ஆகியோர் அங்கிருந்தனர். பிலால் கதவைத் திறக்க அங்கிருந்தவர்கள் உமரை எதிர்கொள்ளத் தயாராக இருந்தனர்.

‘நான் இங்கே வந்ததற்கு வேறு காரணங்கள் எதுவும் இல்லை. நான் முஸ்லிமாகிடவே வந்துள்ளேன்’ எனக் கூறி உமர் கலிமா ஷஹாதத்தை உறுதியுடன் மொழிந்தார்.

அண்ணலார் உமரைக் கட்டியணைத்து நெற்றியில் முத்தமிட்டார். தோழர்கள் ‘அல்லாஹு அக்பர்!’ எனச் சத்தமிட்டனர்.

## தளபதி உமர்

உமர் பின் கத்தாப்

கத்தாபின் மகன் உமரின் பெயரைச் சொன்னாலே பயந்த சுபாவம் உள்ளவர்கள் பயப்படுவர்; நேரில் பேசினாலோ பதில் சொல்லத் தயங்குவர்; அவர் பார்த்தாலோ எதிர் நிற்போர் பார்வையைத் தாழ்த்திக்கொள்வர்; கைலாகு கொடுக்கக் கைநீட்டினாலோ கை கொடுக்கப் பயப்படுவர்; கட்டியணைக்க முன் வந்தாலோ அணைப்பில் எலும்பு முறிந்துவிடுமோ என அச்சப்படுவர்.

உடல்வாகும் தோற்றமும் உன்னிப்பான பார்வையும் கனத்த குரலும் உமருக்குக் கிடைத்த பாரம்பரிய பரிசு. அவர் எவருக்கும் அஞ்சுவதில்லை. எதற்காகவும் அவர் பிறரைக் கெஞ்சுவதில்லை. சொன்னதைச் செய்வார், செய்ததைச் சொல்வார். தன் வலிவும் மாற்றார் வலிவும் புரிந்து செயல் புரிவார். பரம்பரைப் பழக்க வழக்கங்களைப் பேணுவார். கஅபாவிலும் குறைஷியர் கூட்டங்களிலும் காணப்படுவார்.

இத்தகைய உமர் இஸ்லாத்தை எதிர்த்ததில் ஆச்சர்யமேதுமில்லை. அண்ணலாரின் மேல் அளவற்ற வெறுப்புக் கொண்ட உமர் முஸ்லிம்களைப் பார்த்ததும் முறைத்தார்; சிலரை உதைத்தார். அடிமைப் பெண்ணொருத்தி இஸ்லாத்தைத் தழுவியபோது ஆத்திரங்கொண்டு அடித்தார்.

இந்தச் சூழலில்தான் அண்ணலார், ஹிஷாமுடைய மகன் அம்ருவுக்கோ கத்தாபின் மகன் உமருக்கோ இறைவன் நேர்வழிகாட்ட வேண்டும் எனப் பிரார்த்தித்தார்.

‘வலிமை மிக்கவர்கள் இஸ்லாத்துக்குள் வந்தால் எதிரிகள் பயப்படுவர்; இஸ்லாத்துள் இருக்கும் எளியவர் திடப்படுவர்; அச்சமற்று புதியவர் இஸ்லாத்துள் நடைபயில்வர்’ என அண்ணலார் எண்ணினார்.

அண்ணலார் கணித்தபடி நடக்கும் காலம் வெகு விரைவில் வந்தது. உமர் இஸ்லாத்தைத் தழுவிய பின் அண்ணலாரின் இயக்கம் வலுப்பெறும் அறிகுறிகள் தென்பட்டன.

‘என்னரும் தலைவரே! எம்பெருமானே! நாம் இருந்தாலும் இறந்தாலும் சத்தியவாதிகள் தானே! அவ்வாறிருக்க நாம் ஏன் உங்கள் வீட்டிலோ அர்கம் வீட்டிலோ கூடிக் கலைய வேண்டும்?’ என உமர் அண்ணலாரைக் கேட்டார்.

‘நம் பழைய மார்க்கத்தினர் அதிகமாகவும் புதிய மார்க்கத்தினரான நாம் மிகக் குறைந்தவர்களாகவும் இருக்கும் நிலையில் மெல்ல மெல்லத்தான் சத்தியத்தை நிலை நாட்ட வேண்டும்’ என அண்ணலார் உரைத்தார்.

‘இறைவனை மறைந்திருந்து வணங்குவதா? சத்தியத்தை நிலை நாட்டப் பதுங்குவதா?’ என உமர் கேள்வி எழுப்பினார்.

‘எதிரிகள் பழைய பழக்க வழக்கங்களை விடாப்பிடியாக விடாமல் பிடித்திருக்கும்போது நாம் மெல்லமெல்லத்தான் அவற்றைக் கைவிடச் செய்ய பாடுபட வேண்டும்’ என்றார் அண்ணலார்.

‘இறைவன் மேலாணை! எதற்கும் பயப்படத் தேவையில்லை; இறைவனின் உதவியொன்றே போதும்! இனி நாம் பகிரங்கமாகச் செயல்படுவோம். நான் எங்கெங்கு நின்று இஸ்லாத்தை எதிர்த்தேனோ அங்கெல்லாம் சென்று இஸ்லாத்தை எடுத்துரைப்பேன். இதற்கு நீங்கள் என்னை அனுமதிக்க வேண்டும்’ என உமர் அண்ணலாரிடம் கூறினார்.

அண்ணலார் அனுமதி அளித்த மறுகணம் இஸ்லாமிய அழைப்புப் பணிக்காக இரு அணிகள் அமைக்கப்பட்டன. ஒன்றின் தலைவர் உமர், மற்றொன்றின் தலைவர் ஹம்ஸா!

முதன் முதலில் தெருமுனைக் கூட்டங்களை அமைத்தவர்கள் முஸ்லிம்கள்தான். மல்யுத்த வீரர்களைப் போன்ற இரு தளபதிகளைத் தொடர்ந்த முஸ்லிம்கள் தம் அழைப்புப் பணியை விரிவாக்கினர்.

அர்கம் வீட்டிலும் ஸபா மலை அருகிலும் மலைக் குகைகளிலும் தோட்டந்துரவுகளிலும் மறைந்து மறைந்து தொழுதுகொண்டிருந்த முஸ்லிம்கள் பகிரங்கமாகத் தொழத் தொடங்கினர். சிலைகள் எதிர்படாத கஅபாவின் உள் பகுதிகளில் அவர்கள் வரிசை வரிசையாக நின்று தொழுதனர்.

இறைமறுப்பில் தீவிரம் காட்டிய உமர் ஓரிறைக் கொள்கையை உள்ளத்தில் ஏற்றபின் மிகமிக அதிகமான தீவிரத்துடன் இஸ்லாத்துக்காகப் பாடுபட்டார். மக்காவின் பல பகுதிகளிலும் நின்று முஸ்லிம்களை உதைத்தவர் கால மாற்றத்தால் முஸ்லிம்களுக்காக அரண் அமைத்தார்.

உமரின் தாய் மாமன் அபூஜஹ்ல். இஸ்லாத்தைத் தழுவிய அன்றே உமர் மாமனைக் கண்டு செய்தி சொல்லச் சென்றார். கதவைத் திறந்து மருமகனுக்கு முகமன் கூறிய அபூஜஹ்ல் உமர் கூறிய செய்தியைக் கேட்டு கதவையடைத்துத் தாழ்ப்பாள் போட்டார்.

உமரின் இஸ்லாத்தின் நுழைவையறிந்த சில குறைஷிகள் அவரைத் தாக்க முயன்றனர். உமரோ தயங்காமல் தம் உறைவாள் எடுத்து உயர்த்திப் பிடித்தார். தாக்க முயன்றவர்கள் தலைதெறிக்க ஓடினர்.

‘அல்லாஹ்வைத் தவிர வணக்கத்துக்குரியவன் யாருமில்லை. அவனுடைய தூதர் முஹம்மது (ஸல்) என நான் சான்று பகர்கிறேன். என்னை எவராவது தாக்க முயன்றால், அவர் தலை கழுத்தில் நிற்காது’ என உமர் கூறியபோது அசத்தியம் அலறியது.

இதன்பின் அண்ணலார் உமருக்கு ஃபாரூக் எனும் பட்டத்தை வழங்கினர். உமர் தம் செயலாற்றலின் மூலம் சத்தியத்தையும்

அசத்தியத்தையும் பிரித்துக் காட்டினார்.

அதன்பின் ஒருவர் இருவராக இஸ்லாத்தை ஏற்றவர்கள் அணி அணியாகத் திரண்டுவந்து அண்ணலாரின் கைகளைப் பற்றினர்; சத்தியப் பாதையில் லட்சியப் பயணம் மேற்கொண்டனர்.

## 12. அசத்திய முள்வேலிக்குள்

### அசத்திய முள்வேலிக்குள்...

அபூதாலிபின் பொறுப்பில் வளர்ந்த, அவருடைய தம்பி மகனுக்கு இறைவனின் தூதுச் செய்தி கிடைப்பதாகப் பேசிக்கொண்டார்கள். ‘அவருடைய மனைவியும் சொந்தங்கள் சிலரும் நண்பர் அபூபக்கரும் அவர் காட்டிய புதிய வழியைப் பின்பற்றி வருகிறார்கள். இறைவன் ஒருவனாம், அவன் உருவமற்றவனாம், தனித்தவனாம், துணைவியோ, பிள்ளைகளோ இல்லாதவனாம்’ எனப் பேசிக்கொண்டார்கள். ‘அவனை மட்டுமே வணங்க வேண்டுமாம்; கடவுள் சிலைகளையோ கடவுள் சித்திரங்களையோ வணங்கக் கூடாதாம்’ என்று பேசிக் கொண்டார்கள்.

அவற்றைக் கொள்கையாகச் சொல்லிக் கோட்பாடாக ஏற்றவர்கள் பிறரிடமும் அக்கொள்கையைச் சொன்னார்கள். சிலர் அதை ஏற்றனர்; அதன்படி நடந்தனர். நாளடைவில் அவர்கள் செய்த பரப்புரை கஅபாவிலுள்ள சிலைகளைப் புரட்டிப் போட்டுவிடுமோ மூதாதையர்களின் வழிமுறையைக் குடைசாய்த்துவிடுமோ என்ற நிலையை ஏற்படுத்தியது.

செல்வமும் செல்வாக்கும் மிக்கவர்களில் அபூபக்கர் போன்ற சிலரே இயக்கத்தில் சேர்ந்தனர். அவர்களைத் தவிர அந்த இயக்கத்தில் இணைந்தவர்கள் பலரும் அடிமைகள், அடிமைகளிலிருந்து மீண்டவர்கள், அடித்தட்டு மக்கள், நசுக்கப்பட்டவர்கள்.

நாளடைவில் அர்கம் எனும் செல்வந்தர் இஸ்லாத்தில் இணைய முஸ்லிம்களுக்கு ஓர் இயக்கக் கேந்திரம் கிடைத்தது. பொதும்புகளிலும் தோட்டந்துரவுகளிலும் சந்தித்துப் பேசியவர்களுக்கு சங்கம் அமைக்க சரியான இடம் கிடைத்தது.

நெருங்கியவர்களே நேசம்கொண்டு இயக்கத்தில் இணைந்துகொண்டிருந்த சூழலில் தூரத்து மனிதர்களும் சேர்ந்து இயக்கப் பணியை விரிவாக்கினார்கள்.

மறைந்தும் அச்சப்பட்டும் இயங்கிக்கொண்டிருந்த முஸ்லிம்கள்,

மாவீரர்களான ஹம்ஸாவும் உமரும் இஸ்லாத்தில் இணைந்தபின் அச்சத்தைத் துச்சமென தூக்கியெறிந்தார்கள். தாம் முஸ்லிமென முணு முணுத்தவர்கள் மாவீரர்களின் வருகைக்குப் பின் அச்சொல்லை முழக்கமாக மொழிந்தனர். மறைவாகப் பரப்புரை செய்தவர்கள் பகிரங்கமாகப் பரப்புரை செய்தனர். ஆங்காங்கே தொழுது கொண்டிருந்தவர்கள் கஅபாவுக்குள் சென்று தொழுதனர். தனித்தனியாகத் தொழுது கொண்டிருந்தவர்கள் ஓரணியாகத் தொழுதனர்.

தெரு முனைப் பிரச்சாரம் சந்தைவரை சென்றது. மக்காவில் உதித்த பச்சைக் கதிரவன் அரபகத்தின் தெற்கிலிருந்து வடக்குவரை தன் கதிர்களை விரித்தது. யெமனின் சந்தையிலும் சிரியாவின் சந்தையிலும் இஸ்லாத்தைப் பற்றிப் பேசப்பட்டது. வளர்ந்து வரும் புதிய மார்க்கம் பழைய மார்க்கங்களை இல்லாமல் செய்துவிடும் எனக் கணிக்கப்பட்டது. மனிதன் என்ற அளவுகோலைத் தவிர குலம் கோத்திர அளவுகோல்கள் அப்புறப்படுத்தப்படுமென்பதால் குறைஷிக் குலமே இல்லாமல் போய்விடும் என்ற அச்சம் வந்தது. ‘எஜமான் இறைவனே, அவனைத் தவிர எஜமானர் எவரும் இல்லை’ என்ற பிரச்சாரம் அரபு எஜமான்களைப் பயங்கொள்ள வைத்தது. இறைவனுக்கு அச்சப்பட்டு நன்னெறியில் மட்டுமே நடக்க வேண்டுமென்ற செந்நெறி மன இச்சைப்படி நடந்த குறைஷிகளைத் திக்குமுக்காடச் செய்தது.

சிரியாவுக்கு சென்று வந்த அபூசுப்யானை அங்கு இஸ்லாத்தைப் பற்றிப் பேசப்பட்ட பேச்சுகள் அதிரவைத்தன. ‘ஒரே இறைவன் என்ற கொள்கை சரியான கொள்கைதானே! இறைத்தூதர்கள் எல்லோரும் அதைத்தானே சொன்னார்கள்!’ என்ற பாலஸ்தீன வணிகரின் பேச்சு அபூசுப்யானின் காதில் எதிரொலித்துக் கொண்டேயிருந்தது. ‘உங்களுக்கான உணவு தானியத்தில் உங்கள் பெயர் எப்போதோ எழுதப்பட்டுவிட்டது’ என்ற நபிமொழி எத்தகைய நம்பிக்கை நட்சத்திரமாகத் தெரிகிறது’ என்ற யெமனியரின் வாய்மொழி அபூசுப்யான் கோதுமை தானியங்களைக் கொள்முதல் செய்யும் போதெல்லாம் ஒலித்தது.

அபூசுப்யானுக்குப் பல்வேறு சிந்தனைகள். கோதுமை மூட்டையைக் கட்டியும் கட்டாமலும் சிந்தனையில் ஆழ்ந்தார்.

அப்துமுனாபின் மகன்கள் நால்வரில் மூத்தவர் அப்துஷம்ஸ் வம்சாவளியில் வந்த ஹர்ம் என்பாரின் மகன் அபூசுப்யான். இரண்டாவது மகன் ஹாஷிமின் வம்சாவளியில் வந்த

அப்துல்லாஹ்வின் மகன் முஹம்மத்.

அபூசுப்யானும் அண்ணலாரும் ஏறத்தாழ சம வயதுடையவர்கள். இருவரும் முன்பின்னாக நாட்டுப் புறங்களில் ஒரே செவிலித்தாயிடம் பால் குடித்து வளர்ந்தவர்கள். அபூசுப்யான் ஒரு முதலாளியாக வணிகம் செய்தவர். அண்ணலாரோ பெரியதந்தையின் உதவியாளராகவும் கதிஜா பிராட்டியாரின் செயலாளராகவும் இருந்தவர்.

ஏறத்தாழ வயது நாற்பதை எட்டியபோதும் அபூசுப்யான் வணிகத்தைப் பெருமளவில் தொடர்ந்தார். அண்ணலாரோ ஆன்மிகப் பயணத்தைத் தொடங்கினார்.

நாற்பதை எட்டும்வரை அவர்களிடையே இருந்த உறவு பகையாகிப் போனது. பழைய மார்க்கக் காவலராக அபூசுப்யான், புதிய மார்க்கப் போதகராக அண்ணலார்!

மூதாதையரின் வழிமுறையைக் கண்ணெனக் காக்க உறுதிபூண்ட அபூசுப்யான் மூதாதையரை முட்டாளெனச் சொன்ன அண்ணலாரை வீழ்த்த எண்ணினார்.

புதிய மார்க்கத்தை வீழ்த்தச் செய்த முயற்சிகளும் செயல்களும் பயனற்றுப் போன நிலையில் என்ன செய்வது? இறுதியாக அபூஜஹ்ல் போன்ற குறைஷிகளுடன் சேர்ந்து கலந்தாலோசித்து முடிவெடுக்க எண்ணிய அபூசுப்யான் இதே நினைவோடு சிரியாவிலிருந்து பயணம் செய்து மக்கா வந்து சேர்ந்தார்.

மக்கா வந்தவர் மறுநாளே அபூஜஹ்லைச் சந்தித்தார். அபூஜஹ்ல் குறைஷித் தலைவர்களைக் கூட்டினார்.

அண்ணலார்மீது எடுத்த நடவடிக்கைகள், அதன் விளைவுகளை ஆராய்ந்த குறைஷித் தலைவர்கள் இறுதியாக அண்ணலாரையும் ஹாஷிம் குலத்தலைவரையும் ஊர் விலக்கல் செய்ய முடிவெடுத்தனர்.

அண்ணலார் எடுத்துரைக்கும் ஏகத்துவக் கொள்கையைக் கைவிட வேண்டும், இல்லையேல் ஹாஷிம்கள் அண்ணலாரைக் கைகழுவ வேண்டும்.

எங்கோ ஒரு வீட்டுக்குள் ஓதப்பட்டுக் கொண்டிருந்த திருக்குர்ஆன் கஅபாவுக்குள் ஓதப்பட்டது. குறைஷிகளின் குரல்வளையைப் பிடித்து நெரிப்பது போலானது. அதற்காக ஊர் விலக்கல் செய்தபோதும் கஅபாவுக்குள் வருவதை நிறுத்த முடியாதே!

ஊர் விலக்கல் செய்து ஹாஷிம்களைத் தனிமைப்படுத்திவிட்டால்

ஏற்படும் துன்பங்களாலும் துயரங்களாலும் அவர்கள் அண்ணலாரை ஏகத்துவத்தைக் கைவிட நிர்ப்பந்திப்பார்கள் என்பதே குறைஷிகளின் கணக்கு!

பிறக் குறைஷிகள் எவரும் ஹாஷிம்களுக்கு எந்த வகையிலும் உதவக்கூடாது. தொடர்பு கொள்ளக்கூடாது. அவர்களோடு சம்பந்தமே இருக்கக்கூடாது. அவர்களின் பெண்களை மணப்பதோ அவர்களுக்கு மணம் முடித்துக் கொடுப்பதோ கூடவே கூடாது. அவர்களின் எந்தப் பொருளையும் வாங்கவும் கூடாது. அவர்களுக்கு எந்தப் பொருளையும் விற்கவும் கூடாது. அவர்களோடு உள்ள தோட்டந்துரவு தொடர்புகள், மந்தை, சந்தைத் தொடர்புகள் எல்லாமே முற்றாக விலக்கப்பட வேண்டும்.

ஊர் விலக்கல் தீர்மானம் ஒருதோலில் எழுதப்பட்டு கஅபாவில் கட்டப்பட்டது.

இந்த ஊர் விலக்கல் தீர்மானத்துக்கு எல்லா குறைஷித் தலைவர்களும் உடன்படவில்லை. நாற்பதுக்கு மேலிருந்த அவர்களில் சிலர் ஊர் விலக்கலை எதிர்த்தனர். என்றாலும் அவர்களிடம் வற்புறுத்திக் கையெழுத்து வாங்கப்பட்டது. இதைக் கடுமையாக எதிர்த்த முத்தலிப் கோத்திரத்தார் ஹாஷிமிகளோடு ஊர் விலக்கலுக்கு ஆளாகினர்.

ஹாஷிம்களில் பெரும்பாலோர் பள்ளத்தாக்கிலேயே குடியிருந்தனர். அபூதாலிபும் அங்குதான் இருந்தார். பள்ளத்தாக்குக்கு வெளியே இருந்த அண்ணலாரின் குடும்பமும் மேலும் சில ஹாஷிம் குடும்பங்களும் ஒற்றுமை கருதி பள்ளத்தாக்குக்கே குடிபெயர்ந்தன.

ஊர்விலக்கல் தீர்மானம் நிறைவேற்றப் படும்போதே ஹாஷிம்கள் அண்ணலாரைக் கைவிட்டு விடுவர் என்ற அபூஜஹ்ல் போன்றோரின் பகல் கனவு நிறைவேறவில்லை. கைவிடத்தான் இல்லை. அவர்களிலே பிளவுகூட ஏற்படவில்லை. பிளவுதான் இல்லை, அண்ணலாரால்தான் இந்நிலை என்ற பேச்சுக்கூட வரவில்லை. அண்ணலாரின் பெரிய தந்தையும் பழைய சம்பந்தியுமான அபூலஹப் குடும்பம்தான் ஹாஷிம்களை விட்டு விலகியது. ஹாஷிம்களும் அந்த நரி மனிதரை விட்டு விலகி வாழ்ந்தனர்.

ஹாஷிம்களும் முத்தலிப்களும் குறைஷியரின் பிற கோத்திரங்களுடன் ஒட்டும் உறவும் இல்லாமல் தனித்தனர். அப்து முனாஃப் வம்சாவளியைச் சேர்ந்த அப்து ஷம்ஸ்கள், அப்த் அத்தாரின்

முஸ்அப் கோத்திரம், அப்துல் உஸ்ஸா வம்சாவளியின் அஸ்த் கோத்திரம், ஜுமாஹ் வம்சாவளியின் உத்மான்பின் மஸ்ஊன் கோத்திரம், தையின் யகாஸா கையறாவின் மக்ஸூம் கோத்திரம் எனப் பிற குறைஷிகள் சுதந்திரமாக வாழ இரு வகையறாக்கள் மட்டும் சுவரில்லாத சிறைக்குள்!

சுவர்கள் இல்லை, தடுப்புகள் இல்லை, முள்வேலிகள் இல்லை! அசத்திய சுவர்கள் ஹாஷிம்களையும் முத்தலிப்களையும் தடுத்துநின்றன; அநீதிகள் அவர்களுக்குக் கைவிலங்காகின!

## ஐவர் அணி!

ஊர்விலக்கல் துன்பியலில் ஒரு காட்சி

கதீஜா பிராட்டியாரின் மருமகன் ஹகீம் மட்டக் குதிரை சுமந்த மாவு மூட்டையுடனும் ஓர் அடிமையுடனும் மாமியாரைக் காணச் சென்று கொண்டிருந்தார். அப்போது அங்கு வந்த அபூஜஹ்ல் மாவு மூட்டையை ஹாஷிம்களுக்குக் கொண்டுபோய்க் கொடுக்கக்கூடாது என்றார்.

ஹகீமும் அபூஜஹ்லும் வாதம் செய்துகொண்டிருக்கும்போது அங்கு அஸத் கோத்திரத்தைச் சேர்ந்த அபுல் பக்தரீ வந்தார். அபூஜஹ்ல், அபுல் பக்தரீயிடம் நியாயம் கேட்டார்.

‘மாவு மூட்டையைக் கொண்டு செல்பவர் ஓர் அஸத். அதை அவர் தன் மாமியார் கதீஜாவுக்குக் கொண்டு செல்கிறார். கதிஜாவும் ஓர் அஸத். ஓர் அஸத் இன்னொரு அஸத்துக்குக் கொண்டு செல்கிறாரே தவிர அவர் ஹாஷிம்களுக்காகக் கொண்டு செல்லவில்லை’ என்றார் அபுல் பக்தரீ.

அபுல் பக்தரீயும் ஹகீமும் அஸத் குறைஷியரேயன்றி முஸ்லிம்களல்லர்!

அபுல் பக்தரீ சொன்னதைக் கேட்காத அபூஜஹ்ல் மாவு மூட்டையைத் தடுத்ததால் ஒட்டகத் தாடை எலும்பால் அடிபட்டார். ஹகீம் மாவு மூட்டையுடன் செல்ல அபுல் பக்தரீ அபூஜஹ்லை நையப்புடைத்துக் கொண்டிருந்தார்.

இன்னொரு காட்சி

ஆமிர் கோத்திரத்தைச் சேர்ந்த ஹிஷாம் இப்னு அம்ர் ஹாஷிமிகளின் ரத்தபந்தக்காரரல்ல; திருமண பந்தங்களால் நெருங்கிய மனிதர். அவர் ஓர் ஒட்டகத்தின்மேல் ஆடை, உணவுப் பொருள்களை

ஏற்றி அபூதாலிப் வாழ்ந்த இடத்துக்கு அதை ஆளில்லாமலேயே அடித்து விரட்டி அனுப்பிக் கொண்டிருந்தார்.

மடையர்களும் காடையர்களும் அபூதாலிப் குழுவினரை முடக்கி வைத்திருந்தாலும் சில மனிதாபிமானம் மிக்கவர்கள் கமுக்கமாகப் பல்வேறு உதவிகளைச் செய்தனர். ஹாஷிம், முத்தலிப் கோத்திரத்தாரல்லாத முஸ்லிம்கள் சிலரும் அபூதாலிப் குழுவினருக்கு உதவினர். அபூபக்கர், உமர் இருவரும் எவரையும் எதிர்பாராமல் உதவினர். ஊர்விலக்கல் தடையைத் தகர்ப்பதற்கான முயற்சிகளில் ஈடுபட்டனர்.

ஊர்விலக்கல் நடைமுறைக்கு வந்து இரு ஆண்டுகள் உருண்டோடிவிட்டன. எண்ணற்ற இன்னல்களைச் சந்தித்தும் ஹாஷிம்களும் முத்தலிபுகளும் அண்ணலாரைக் கைவிடத் தயாரில்லை. அண்ணலாரும் ஏகத்துவத்தைக் கைவிடத் தயாரில்லை. குறைஷிகளும் ஊர்விலக்கல் தடையை விலக்கிக் கொள்ளத் தயாரில்லை!

புனித மாதங்களில் அண்ணலார் கஅபாவில் காணப்பட்டார். குறைஷிகளின் ஏச்சையும் பேச்சையும் பற்றி அண்ணலார் கவலைப்படவில்லை.

இரு ஹஜ்ஜின் போதும் வெளியூர்களிலிருந்து வந்திருந்த பயணிகள் புதிய மார்க்கத்தை அறிமுகப்படுத்தியவர் எங்கே எனத் தேடினர். ஏகத்துவ எண்ணங்கொண்டோர் வாராது வந்த மாமணியைக் காணத் துடித்தனர்.

இரு ஆண்டுகளில் மக்காவில் நிகழ்ந்த ஊர்விலக்கல் செய்தி அரபகம் முழுதும் பரவிவிட்டது. ஏகத்துவக் கொள்கையைக் கூறியதற்காக ஊர் விலக்கலா? தாய் பிள்ளைகளாக வாழ்ந்த குறைஷிகள் தனித்தனி தீவுகளாவதா? கொள்ளையர்களாக இருந்த போதிருந்த குரோதம் குறைஷிகள் வணிகர்களான பிறகும் தொடர்வதா? பெருவிரலை நீக்கிவிட்டு நான்கு விரல்களும் என்ன செய்யும்?

வெளியூர் மனிதர்களிடம் மட்டும் இக்கேள்விகள் எழவில்லை? உள்ளூர் மனிதர்களிடமும் இக்கேள்விகள் எழுந்தன!

அத்தகைய உள்ளூர் மனிதர்களில் முக்கியமானவர் ஹிஷாம்!

இவர்தான் ஒட்டகத்தின் மேல் பொருள்களை ஏற்றி இரவோடிரவாக அபூதாலிபுவுக்கு அனுப்பி வைத்தவர். வெகுஜன மனங்களிலிருந்து வித்தியாசமானவர். ஆதிக்க எண்ணங்களுக்கு எதிரானவர்.

ஊர்விலக்கலுக்குத் தடை ஏற்படுத்த வேண்டும் என எண்ணிய ஹிஷாம் அதைத் தனித்தே நின்று நிறைவேற்ற முடியாதென்பதை நன்கு அறிந்திருந்தார். அதற்குத் துணை வேண்டும்; துணைவருவோர் துணிவு மிக்கவர்களாக இருக்க வேண்டும் என எண்ணிய ஹிஷாம் மக்ஸூமிய இளைஞர் ஸுஹைரிடம் சென்றார்.

ஸுஹைர், அண்ணலாரின் மாமி ஆதிகாவின் இரு புதல்வர்களுள் ஒருவர். மக்ஸூமிகளில் இவர் மனந்திறந்து பேசக் கூடியவர். மனித நேயம் மிக்கவர்.

ஸுஹைரிடம் சென்ற ஹிஷாம் ‘நீர் சுகமாக இருக்கிறீர், உம் சகோதரர் சுகமாக இருக்கிறார்; உம் தாயார் சுகமாக இருக்கிறார். உம் தாயபிள்ளைகள் சுகமாக இருக்கிறார்களா?’ எனக் கேட்டார்.

‘அத்தோடு நிறுத்தும் ஹிஷாம். அதைப் பற்றித்தான் நானும் பல நாட்களாக யோசித்து வருகிறேன். எனக்கொருவர் துணையாக வந்தால் அந்த ஊர்விலக்கலுக்கு எதிராக என்ன வேண்டுமானாலும் செய்வேன்’ என்றார் ஸுஹைர்.

‘உம்முடன் நான் வருகிறேன்’ என்றார் ஹிஷாம்.

அவரிடம் ஸுஹைர் ‘இன்னுமொருவர் நம்முடன் இருந்தால் வல்லமையோடு செயல்படலாம்’ எனக் கூற அவர்கள் முத்இம்பின் அதீயிடம் சென்றனர்.

இவர்தான் அண்ணலார் மீது முஸ்லிம் ஆகாமலேயே அதிக அன்பு செலுத்தியவர். நவ்பல் கோத்திரத் தலைவர்; நவ்பலின் பேரன்.

‘முத்இம், ஹாஷிம் முத்தலிப் வம்சத்தை ஊர்விலக்கல் செய்து இரண்டாண்டுகள் முடிந்துவிட்டன. அவர்கள் படும் துன்பங்கள் சொல்லில் அடங்காது. உணவில்லை, உடையில்லை என்பது மட்டுமல்ல, அவர்களுக்கு அணுவளவு கூட நிம்மதியில்லை. அவர்கள் முடங்கிக் கிடக்கிறார்கள். அவர்களுடைய இளைஞர்களும் யுவதிகளும் திருமண எண்ணத்தையே மறந்து வாழ்கின்றனர். அவர்கள்தான் ஊமைகளாக உள்ளனர் என்றால் நாம் கூடவா ஊமைகளாக வாழ வேண்டும்? முத்இம், நீர் யார்? ஹாஷிம் முத்தலிப் வம்சத்தினரின் பங்காளியல்லவா? அவர்கள் மேல் எடுக்கப்பட்ட நடவடிக்கை ஒருநாள் உம் கோத்திரம்மீது எடுக்கப்படலாம்!’ என ஹிஷாம் கூற முத்இம் உடலில் நடுக்கம், உதிரம் கொதித்தது.

மூவரும் கலந்து பேசியபின் அவர்கள் அஸத் கோத்திரத்து அபுல் பக்தரீயிடம் சென்றனர். இவர்தான் ஹகீம் கொண்டு சென்ற மாவு

மூட்டையைத் தடுத்த அபூஜஹ்லை ஒட்டகத் தாடை எலும்பால் தாக்கியவர். மூவர் சொன்னதைக் கேட்ட அபுல் பக்தரீ தன் உறவுக்காரர் ஸம்ஆ இப்னு அல் அஸ்வத்தையும் தம் அணியில் சேர்த்துக் கொண்டார். ஐவர் அணி!

ஐவரும் மக்காவின் மேற்கேயுள்ள ஹஜூன் எனுமிடத்தில் கூடி, கலந்து பேசி ஒரு திட்டத்தைத் தீட்டினர். அதை மறுநாள் காலையிலேயே செயல்படுத்த விழைந்தனர்.

கஅபாவில் காலையிலேயே ஒருகூட்டம் சேர்ந்திருந்தது. அதில் அபூஜஹ்லும், சில குறைஷித் தலைவர்களும் இருந்தனர். ஐவர் குழு அப்போது அங்கு சென்றது. அவர்களிடையே ஸுஹைர் முதலிடம் வகித்தார்.

கஅபாவை ஏழுமுறை வலம் வந்த ஸுஹைர், குறைஷித் தலைவர்களிடையே வந்து ‘ஹாஷிம் முத்தலிப் வம்சத்தினர் படும் துன்பங்கள் நீக்கப்பட வேண்டும். கஅபாவில் தொங்கவிடப்பட்டிருக்கும் ஊர்விலக்கல் தீர்மானம் கிழித்தெரியப்பட வேண்டும்’ என்றார்.

கஅபாவில் தொங்கவிடப்பட்டிருக்கும் தடையுத்தரவை குறைஷிகளே நீக்க எண்ணிக் கிழித்தெறிந்தாலும் அல்லது யாரோ ஒருவர் கிழித்தெறிந்துவிட்டாலும் அது செல்லாது. இதுமரபு!

‘ஸுஹைர், நீ நினைத்தது நடக்காது. தடையுத்தரவு கிழித்தெறியப்பட மாட்டாது’ என்றார் அபூஜஹ்ல்.

‘தடையுத்தரவு எழுதப்பட்டபோது நீரும் அபூசுப்யானுமே முதலிடம் வகித்தீர்கள். பிற கோத்திரத்தார் தயங்கியேதான் நின்றனர். எங்கள் கோத்திரத்தார் யாரும் அதில் கையெழுத்திடவில்லை’ என்றார் ஸம்ஆ.

‘ஸம்ஆ கூறியது முற்றிலும் சரி! சிலருக்காகப் பலர் தலைசாய்த்தது இப்போது தவறென உணரப்படுகிறது. தடையுத்தரவைக் கிழித்தெறிய வேண்டும். இல்லையேல் கிழித்தெறிவோம்’ என்றார் அபுல் பக்தரீ.

‘ஏதோ ஒரு சதித் திட்டத்துடன்தான் இவர்கள் வந்துள்ளார்கள். குறைஷித் தலைவர்கள் கூடி இதற்கு முடிவெடுப்பார்கள்’ என்றார் அபூஜஹ்ல்.

‘மனிதர்களா முடிவெடுப்பது? இறைவன் முடிவெடுத்துவிட்டான்!’ என்ற முத்இம் தொங்கவிடப்பட்டிருந்த தடையுத்தரவை எடுக்க முயன்றார். அந்தத் தோல் அறிக்கை தானாகக் கழன்றுவிழுந்தது. தோல் துண்டு மட்டுமா கழன்று விழுந்தது, உடன் கரையான்களும்!

# 13. தாயிஃப் நகர வீதியிலே

## தாயிஃப் நகர வீதியிலே...

அரபகத்தின் பாலைவனங்களிடையே ஆங்காங்கு சோலைகளும் சிற்றூர்களும் நகரங்களும் இருந்தாலும் மக்காவுக்குத் தெற்கேயுள்ள பேரூரான தாயிஃபில் எங்கெங்கு பார்த்தாலும் சோலைகளே!

அரபக மக்கள் தம் கோடைகாலக் கடுமையைப் போக்க தாயிஃப் நகருக்குப் பயணம் போவார்கள். இவ்வாறு உல்லாசப் பயணம் மேற்கொள்வோரிடையே புனிதப் பயணம் மேற்கொள்வோரும் இருந்தனர். அவர்கள் மக்காவுக்கு அடுத்தபடியாக சிலைவணக்கம் செய்யவே தாயிஃபுக்கு வந்தனர். தாயிஃபிலிருந்த ‘லாத்’ சிலை அரபகம் முழுமையும் பெயர் பெற்றிருந்தது.

உல்லாசப் பயணமாகவும் இல்லாமல் ஆன்மிகப் பயணமாகவும் இல்லாமல் ஒரு பயணம் தாயிஃப் நகர் நோக்கி நடத்தப்பட்டது. இந்தப் பயணம் ஒரு புனிதப் பயணம், அண்ணலார் நடத்திய அந்தப் பயணம் ரத்தத்தால் எழுதப்பட்டுள்ளது.

இறைவனின் அழைப்பை ஏற்க மறுத்த குறைஷியர்கள் உர்விலக்கல் வரை வந்துவிட்டார்கள். முஸ்லிம்கள் ஒருவர், இருவராக இருந்திருப்பார்களானால் அவர்களை ஊரை விட்டே விரட்டியிருப்பார்கள்.

உறவினர்கள் பாசமும் நேசமும் இல்லாதிருப்பின் பனூஹாஷிம்கள் பள்ளத்தாக்கினின்றும் மீண்டிருக்க மாட்டார்கள். ஒரு நல்ல மனிதருக்காக ஒரு கோத்திரமே துன்பத்தை அனுபவித்தது. கொள்கைக்காக செய்த ஊர் விலக்கல் கோத்திர விலக்கலாகிப் போனது. ஹாஷிம்களில் முஸ்லிம்களும் இருந்தனர், முஸ்லிம் அல்லாதோரும் இருந்தனர்.

பனூஹாஷிம்களின் ஒற்றுமையும் அவர்களின் உறவினர், சம்பந்திகளின் எழுச்சியும் அண்ணலாரையும் ஹாஷிம்களையும் பள்ளத்திலிருந்து மேட்டுக்குக் கொண்டுவந்தன.

குறைஷியர்களின் குரோதக் கணைகளும் இஸ்லாமிய எதிர்ப்பும் அண்ணலாரை மக்காவினின்றும் தாயிஃப் நகர் நோக்கி நடக்கச் செய்தது.

தாயிஃப் நகர் சென்ற அண்ணலார் அங்கிருந்த இரு பிரமுகர்களைச் சந்தித்து இஸ்லாத்தின் அழைப்பை எடுத்துரைத்தார். மக்கமாநகரிலிருந்த மனசாட்சியுள்ளவர்களில் பெரும்பாலோர் இஸ்லாத்தை ஏற்றிருந்த நிலையில் தாயிஃபிலும் அத்தகைய மனிதர்களை உருவாக்க அண்ணலார் விழைந்தார்.

அண்ணலார் சந்தித்த மனிதர்களின் மனங்கள் இஸ்லாத்தை ஏற்றுக் கொள்ளும் பக்குவப்பட்ட நிலமாக இல்லை; களர் நிலமாயிருந்தது. அவர்கள் ‘ஸகீப்’ குலத்தலைவர்கள்.

‘இறைவனுக்குத் தன் தூதுச் செய்தியை வழங்க வேறு ஆள் கிடைக்கவில்லையா? சாமான்யரான உமக்குப் பதில் வேறு தலைவர் கிடைக்கவில்லையா!’ எனக் கூறி ஒருவர் அண்ணலாரைப் புறக்கணித்தார்.

‘நீரோ இறைத்தூதர்! நானோ ஒரு சாதாரண மனிதன்! உம்மோடு பேச நான் தகுதியற்றவன். நீரோ மக்காவில் யாரோ! நானோ தாயிஃபில் செல்வமும் செல்வாக்கும் மிக்கவன்! என்னோடு பேச நீர் எத்தகுதியும் இல்லாதவர்’ எனக் கூறி மற்றொருவர் பரிகாசம் செய்தார்.

மானுட விடுதலை இயக்கங்கள் எதுவாயிருந்தாலும் அவற்றைச் செல்வமும் செல்வாக்கும் மிக்கவர்கள் புறக்கணிக்கத்தான் செய்வார்கள். அத்தகைய சமதர்ம தலைவர்களைப் பரிகாசம் செய்வதில்தான் பெரும் மகிழ்ச்சியடைவார்கள்.

இஸ்லாத்தை ஏற்க மறுத்த இருபெரும் புள்ளிகளும் அண்ணலாரைப் புறக்கணித்ததோடு சில கீழறுப்பு வேலைகளும் செய்தார்கள். சில வம்பர்களையும் சில எடுபிடிச்சிறுவர்களையும் ஏவி அண்ணலாரைக் கேலியும் கிண்டலும் செய்யச் சொல்லி அனுப்பினார்கள். அவர்கள் குரைப்பதோடு மட்டும் நிறுத்திக்கொள்ளவில்லை கடித்தார்கள்.

கல்லடிப்பட்ட அண்ணலாரின் காயங்களில் குருதிப் புனல்! பொன்மேனி புண்மேனியானது. செவிலித்தாய் ஹலீமா ஊட்டிய பால் செந்நிறத்தில்...!

தாயிஃப் நகர வம்பர்களிடமிருந்து தப்பிய அண்ணலார் ஊர்க்கோடியிலிருந்த ஒரு கொடி முந்திரித் தோட்டத்துக்குள் சென்றார்.

அங்கு நின்று விண்ணை தலைநிமிர்த்திப் பார்த்து இருகையேந்திப் பிரார்த்தனை செய்தார். ‘இறைவா! என் பாதையில் எதிர்ப்படும் இன்னல்களைத் தவிர்ப்பாயாக! வன்மையான உள்ளங்களை மென்மையாக்குவாயாக! உன்னையன்றி எனக்குப் பேருதவி செய்பவர் யார்? நீ எனக்குக் கருணை மழை பொழிவாயாக! உன்னுடைய பாதுகாப்பில் என்னை முழுமையாகக் காப்பாயாக!’ என அண்ணலார் இறைவனிடம் வேண்டினார்.

அண்ணலார் வந்து நின்று பிரார்த்தித்த தோட்டம் உத்பா, ஷைபா எனும் இரு சகோதரர்களுடையது. அவர்கள் அண்ணலார் கல்லெறியப்பட்டதையும் தப்பித்து வந்ததையும் கண்டவர்கள்.

அண்ணலாரைக் கண்டு இரக்கப்பட்ட அவர்கள் தங்களுடைய கிறிஸ்துவ அடிமையை அழைத்து ‘அத்தாஸ்! கொடி முந்திரிகளைப் பறித்து ஒரு தட்டில் வைத்து அதோ நிற்கும் மனிதருக்குக் கொடு’ என்றனர்.

அத்தாஸ் பழத்தட்டோடு அண்ணலாரிடம் சென்று பழங்களை சாப்பிடச் சொன்னார். அத்தாஸை ஏறிட்டுப் பார்த்துப் பழத்தட்டைப் பெற்ற அண்ணலார் ‘பிஸ்மில்லாஹ்’ எனச் சொல்லி உண்ணத் தொடங்கினார்.

‘என்ன சொன்னீர்கள்? பிஸ்மில்லாஹா? எவரும் இந்த வார்த்தையைச் சொன்னதில்லையே!’ என அத்தாஸ் அண்ணலாரைக் கேட்டார்.

‘அல்லாஹ்வின் பெயரது! அன்புக்குரியவரே நீர் யார்? உம் ஊரென்ன?’ என அண்ணலார் கேட்டார்.

‘என் பெயர் அத்தாஸ், கிறிஸ்துவ மார்க்கத்தைச் சேர்ந்தவன். என்னுடைய சொந்த ஊர் நைனிவா’ என்றார் அத்தாஸ்.

‘நைனிவாவா? அது யூனுஸ்பின்மத்தீயுடைய ஊரல்லவா?’ என அண்ணலார் கூறினார்.

இதைக்கேட்டு வியப்படைந்த அத்தாஸ் ‘யூனுஸ் பின் மத்தீ பற்றி உங்களுக்கு எப்படித் தெரியும்!’ எனக் கேட்டார்.

‘யூனுஸ் ஓர் இறைத்தூதர், அவரைப்போல் நானும் ஓர் இறைத்தூதர். ஓர் இறைத்தூதர் பற்றி மற்றொரு இறைத்தூதருக்குத் தெரியாமல் இருக்குமா?’ என அண்ணலார் உரைத்த மறுகணம் அத்தாஸ் அளவற்ற ஆனந்தம் அடைந்தார். அண்ணலாரின் கரங்களைப் பற்றி

முத்தமிட்டார்.

அண்ணலார் அத்தாஸிடம் விடை பெற்றுச் செல்ல கண்களில் துளிர்த்த நீரைத் துடைத்தபடி தன் எஜமானர்களிடம் சென்றார்.

‘அத்தாஸ், பழங்களைக் கொடுத்தாய், சரி; பேசிக் கொண்டிருந்தாய், சரி; அந்த மனிதர் கைகளைப் பற்றி முத்தமிட்டாயே ஏன்?’ எனக்கேட்டர்.

‘அவர் மிகச் சிறந்த மனிதர். எங்களூரில் எப்போதோ வாழ்ந்த யூனுஸ் பற்றிச் சொன்னார். அவர் உண்மையானவர்’ என அத்தாஸ் கூறிட ‘அத்தாஸ் நீ அவருடைய பேச்சில் மயங்கிவிட்டாய்! நீ உன் மார்க்கத்தை விட்டுவிடாதே! அதுதான் மிகச் சிறந்த மார்க்கம்’ என்றனர்.

ஓர் இரவும் ஒரு பகலும் பயணித்து தாயிஃப் வந்திருந்த அண்ணலார் மீண்டும் மக்கா நோக்கி

வழியில் நக்லா என்னுமிடத்தில் தங்கி அண்ணலார் இரவுத் தொழுகையை நிறைவு செய்தார். அப்போது அண்ணலார் அமைதி தவழும் சூழலில் திருக்குர்ஆனை இனிமையாக ஓதினார்.

நக்லாவில் அண்ணலார் ஓதிய திருக்குர்ஆன் வசனங்களைத்தான் அப்போது அவ்வழியாகச் சென்று கொண்டிருந்த ஜின்கள் கேட்டு தம் சமுதாயத்திடம் எடுத்துக் கூறின.

## வருத்தப்பட்டும் பாரம் சுமந்தும்...

அண்ணலார் தாயிஃப் நிகழ்வுகள் மக்கா குறைஷிகளுக்குத் தெரிந்துவிடக்கூடாது என எண்ணி முன்னெச்சரிக்கையாக ஸகீம் குலத் தலைவர்களிடம் கேட்டுக் கொண்டிருந்தும் செய்தி மக்காவை எட்டிவிட்டது.

குறைஷிகள் குதூகலப்பட்டனர். அண்ணலாரைக் கேவலமாகப் பேசினர். ‘முஹம்மது தாயிஃபை விட்டு எங்கு வேண்டுமென்றாலும் போகட்டும். ஆனால் அவர் மீண்டும் மக்காவுக்குள் வந்தால் துரத்தியடித்துவிடுவோம். அவர் எங்களை மீறி உள்ளே வந்தால் கொல்லாமல் விடமாட்டோம்’ என குறைஷிகள் சூளுரைத்தனர்.

இச்செய்தி நக்லாவிலிருந்து புறப்பட்டு ஹிரா எனும் இடத்துக்கு வந்த அண்ணலாருக்குக் கிடைக்க எச்சரிக்கையோடு செயல்படத் திட்டமிட்டார்.

ஹிராவில் தங்கியபடி வழியில் வந்திருந்த குறைஷி ஒருவரிடம்

மக்காவுக்குத் தூது அனுப்பினார்.

மக்கமாநகரைச் சேர்ந்த ஒருவரை வேறொரு மக்கமாநகரைச் சேர்ந்தவர் கொல்லவோ, தாக்கவோ சபதம் ஏற்கிறார். அப்போது மூன்றாவது மக்கமாநகர் மனிதர் முதல் மனிதருக்கு அபயம் அளிக்கிறார். அப்போது இரண்டாம் மனிதரோ வேறு எவரோ முதல் மனிதரை சுண்டுவிரலால் கூட தொட்டுவிட முடியாது. இது குறைஷிகளிடையே கடைப்பிடிக்கப்பட்ட பழைய மரபு, ஒருவர் அபயமளித்தால் அனைவரும் அபயமளிக்க வேண்டும்.

அண்ணலார் முதல் தூதை ஷீரைருடைய மகன் அக்னஸிடம் அனுப்பினார். தமக்குப் பாதுகாப்புத் தருவதோடு இஸ்லாத்தின் அழைப்பையும் எடுத்துரைக்க உதவ வேண்டும் என்பதே அந்தத் தூதுச் செய்தி.

குறைஷிகளுடன் ஒப்பந்தம் செய்துகொண்டிருந்த அக்னஸ் மறுத்துவிட அண்ணலார் அம்ருடைய மகன் ஸுஹைலுக்குத் தூது விட்டார். ஆமிர் இப்னு அய்யு கூட்டத்தார் ஆலே கஃபு கூட்டத்துக்கு எதிராகப் பாதுகாப்புத்தர முடியாதென்ற பதில் வந்தது.

மூன்றாவது தூது அதீயுடைய மகன் முத்இமிடம் அனுப்பப்பட்டது. முத்இம், நவ்பல் கோத்திரத்தின் முக்கிய தலைவர். ஹாஷிம் முத்தலிப் இருவரின் சகோதரரான நவ்பலின் பேரன். முத்இம் அண்ணலாருக்குப் பாதுகாப்பளிக்க முன்வந்தார்.

முத்இம் அளித்த அபயச் செய்தியைப் பெற்ற அண்ணலார் மக்காவின் எல்லையை அடைந்தபோது எதிரில் நின்று வரவேற்றவர்கள் யார் தெரியுமா?

முத்இம், அவருடைய புதல்வர்கள், மேலும் அவரின் உறவினர்கள்! அண்ணலாரை வரவேற்ற அவர்கள் போருடையில் இருந்தார்கள். வாளோடும் வில்லோடும் ஈட்டியோடும் அவர்கள் காணப்பட்டார்கள்.

மக்காவுக்குள் நுழைந்த அண்ணலாரும் முத்இம் குழுவினரும் நேராக கஅபாவுக்குள் சென்றார்கள். அங்கே அப்போது அபூஜஹ்ல் குறைஷிகள் புடை சூழ அமர்ந்திருந்தார்.

முத்இமை நிமிர்ந்து பார்த்த அபூஜஹ்ல் ‘அபயம் மட்டுந்தானா? புதிய மார்க்கத்திலும் புகுந்துவிட்டீரா?’ எனக் கேட்டார்.

‘அபயம் மட்டுந்தான்!’ என்றார் முத்இம். ‘முனாஃப் வம்சத்தாரே! இதோ உங்கள் நபி, அவரை வரவேற்றுப் போற்றுங்கள்’ எனக்

கிண்டலாகச் சொன்னார் அபூஜஹ்ல்.

அப்போது அங்கிருந்த ரபீஆ மகன் உத்பா ‘எங்களில் ஒருவர் நபியாகவோ ஆட்சியதிகாரம் பெற்றவராகவோ இருப்பதில் உமக்கென்னய்யா கடுப்பு?’ என உரத்தக் குரலில் கேட்டார்.

முனாஃப் வம்சத்து ஹாஷிம் குலத்தைச் சேர்ந்த உத்பா அண்ணலாரின் உறவினர். உத்பா அருகில் வந்த அண்ணலார் ‘இறைவனுக்காகவோ இறைத்தூதருக்காகவோ நீர் பரிந்து பேசவில்லை. வம்சப் பாசத்துக்காகவே நீர் வரிந்து கட்டிக்கொண்டு பேசியுள்ளீர்’ என்றார்.

அபூஜஹ்ல் அருகில் வந்த அண்ணலார் ‘அபுஹகம்! நன்றாகக் கேட்டுக் கொள். சொல்லாலும் செயலாலும் அல்லாஹ்வுக்கு எதிராகச் செயல்பட்டு வரும் உனக்கு ரத்தக் கண்ணீர் சிந்தும் நாள் வந்தே தீரும்’ என எச்சரித்தார்.

பிறகு அங்கிருந்த குறைஷிகளிடம் ‘உயர்ந்த குதிரைகள் என்றாலும் ஒருநாள் அவை மணலில் தலை குப்புற விழுவது சாத்தியமே! உங்களின் ஓட்டங்கள் ஒருநாள் முடிவுக்குவரும்’ என்று மொழிந்த அண்ணலார் கஅபாவை வலம் வரச் சென்றார்.

அதன்பின் அண்ணலாரின் அழைப்புப் பணி குறைஷிகளின் வட்டத்தைத் தாண்டிச் சென்றது. சந்தை கூடுமிடங்களிலும் விழா நடக்கும் இடங்களிலும் அண்ணலார் அழைப்பை விடுத்தார். இஸ்லாத்தை எடுத்துக் கூறினார்.

இளமைக் காலங்களில் மந்தையோடு சென்றபோது யாராவது ஒரு மேய்ப்பர் துணையோடுதான் அண்ணலார் சென்றார், தனியாகச் சென்றதில்லை. சிரியாவுக்கு வணிகப் பயணம் மேற்கொண்டபோதும் அண்ணலார் பெரிய தந்தையாரோடுதான் சென்றார். அதன்பின் கதிஜா பிராட்டியாரின் வணிகச் செயலாளரான போதும் மைஸரா எனும் உதவியாளரோடுதான் சென்றார். ஆனால் அழைப்புப் பணியாற்றச் செல்லும் போதோ தனியாகச் சென்றார், இறைவன் துணையாக இருந்தது வேறு சங்கதி!

தனியாக தாயிஃப் நகருக்குச் சென்றபோது நிகழ்ந்த கசப்பான சம்பவங்கள் சந்தைகளிலும் விழாக்களிலும் நிகழவில்லை. எதிர்ப்புகள் சூழ்ந்த போதும் அண்ணலாரின் பயணம் லட்சிய இலக்கை நோக்கிச் சென்றுகொண்டிருந்தது. எல்லாவற்றையும் அண்ணலார் இறைவனிடம் ஒப்படைத்துவிட்டார்.

# 14. பால்வீதிப் பயணம்

## பால்வீதிப் பயணம்!

நபித்துவம் கிடைத்த பத்தாம் ஆண்டின் ரஜப் மாத இரவுகளில் ஓரிரவு

அன்றிரவு அண்ணலார் பெரிய தந்தை அபூதாலிபின் மகள் ஹிந்த் என அழைக்கப்பட்ட உம்மு ஹானி வீட்டில் உறங்கினார்.

அங்கு வைகறையில் எழுந்த அண்ணலார் அதிகாலைத் தொழுகையை முடித்துவிட்டு உம்மு ஹானியிடம் ஒரு செய்தியைக் கூறினார்.

இஷாத் தொழுகையை நிறைவேற்றியபின் பாலஸ்தீனத்திலுள்ள பைத்துல் முகத்தஸ் சென்று, அங்கு நடுநிசித் தொழுகையைத் தொழுதுவிட்டு வந்து காலைத் தொழுகையை உம்மு ஹானி வீட்டில் தொழுததாக அண்ணலார் சொன்ன செய்தி சகோதரியை ஆச்சர்யப்படவைத்தது. ‘இஸ்ரா’ எனத் திருக்குர்ஆன் குறிப்பிடும் இரவோடு இரவாக நடந்த பயணம் உம்மு ஹானியை உறைய வைத்தது.

‘நீங்கள் என்ன சொல்கிறீர்கள்! நீங்கள் சொன்ன செய்தி எனக்குப் பெரும் வியப்பைத் தருகிறது. விளக்கமாகக் கூறுங்கள்’ என உம்மு ஹானி அண்ணலாரிடம் கூறினார்.

இஷாத் தொழுகைக்குப் பின் அண்ணலார் சகோதரி அளித்த இரவுச் சாப்பாட்டை முடித்துவிட்டு உறங்கிக் கொண்டிருந்தார். அப்போது அங்கு வந்த வானவர்க்கோன் அண்ணலாரைப் புராக் எனும் வாகனத்தில் அமரவைத்துப் பைத்துல் முகத்தஸ்ஸுக்கு அழைத்துச் சென்றார். அங்கு கூடியிருந்த நபிமார்களின் முன்னே இமாமாக நின்று அண்ணலார் தொழவைத்தார். அதன்பின் அண்ணலார் பால் வீதியில் சென்று வானங்களைக் கடந்து இறைவனுடைய ஆட்சி பீடத்தைக் காணும் வாய்ப்பைப் பெற்றார். பின் பழையபடி பயணம் செய்து உம்மு ஹானி வீட்டில் தூக்கத்தைத் தொடர்ந்து காலையில் எழுந்து வைகறைத்

தொழுகையை நிறைவேற்றினார்.

இச்செய்தியை அண்ணலார் விரிவாகச் சொன்னபோது உம்மு ஹானியின் வியப்பு அதிகமானது. தன்னுடைய நம்பிக்கைக்குரிய சகோதரரின் புனிதப் பயணத்தைக் கேட்டு உடல் புல்லரித்துப் போனார். ஒன்றாகவே இருந்து, ஒன்றாகவே உண்டு, ஒன்றாகவே வாழ்ந்த அன்புச் சகோதரரை உம்மு ஹானி அதிசயப் பிறவியைப் பார்ப்பதுபோல் பார்த்தார்.

உம்மு ஹானி விண்ணுலகப் பயணம்பற்றி கேட்ட கேள்விகளுக்கெல்லாம் அண்ணலார் தக்க பதில்களைக் கூறினார்கள். அங்கு ஆதம் முதல் மூஸாவரை சந்தித்த நபிமார்களைப் பற்றியெல்லாம் கூறிய அண்ணலார் ஐந்துவேளை தொழுகைகள் வரையறுக்கப்பட்ட விவரங்களையெல்லாம் விரிவாகச் சொன்னார்.

மிஃராஜ் விண்ணுலகப் பயணம் அண்ணலாரைத் திடப்படுத்தியது. வானங்களுக்கு அப்பால் கண்ட அர்ஷ் காட்சி அண்ணலாரை வசப்படுத்தியது.

வானத்தை வசப்படுத்திய அண்ணலார் வானம் வசப்பட்டதைக் குறைஷிகளிடம் கூறினார். குறைஷிகள் விலா நோகச் சிரித்தனர்; விதவிதமான கேள்விகள் கேட்டனர்.

குறைஷிகள் அண்ணலார் மொழிந்ததை நம்பாத நிலையில் அபூபக்கர் அண்ணலாரின் ஒவ்வொரு வார்த்தையையும் நம்பினார். அதனால்தான் அவருக்கு ‘ஸித்தீக் மாபெரும் வாய்மையாளர்’ என்ற பட்டத்தை இறைவன் அருளினான்.

அண்ணலாரின் விண்ணுலகப் பயணம் இறைநம்பிக்கையற்றவர்களின் மனங்களை மட்டும் எடைபோடவில்லை. இறைநம்பிக்கையாளர்களின் இதயங்களையும் எடை போட்டது. எவருடைய நம்பிக்கை உறுதியாக இருந்ததோ அது மேலும் வலுவானது; வைரமானது. எவருடைய நம்பிக்கையில் ஊசலாட்டம் இருந்ததோ அது தொய்வடைந்தது; தோல்வியடைந்தது.

அண்ணலாரின் மிஃராஜ் பயணத்தைப் பற்றி திருக்குர்ஆன் குறிப்பிடுவதைப் பாருங்கள்:

> ‘மிகத் தூய்மையானவன்; தன் அடியாரை ஓர் இரவில் அழைத்துச் சென்றான்! மஸ்ஜிதுல் ஹராமிலிருந்து வெகுதொலைவில் உள்ள மஸ்ஜித் வரையில்! அதன் சுற்றுப்புறங்களை அவன் அருள்வளம் மிக்கதாக ஆக்கினான். எதற்காக அழைத்துச் சென்றானெனில்,

தன்னுடைய சான்றுகளை அவருக்குக் காண்பிப்பதற்காக!’

(திருக்குர்ஆன் 17: 1)

மிஃராஜ் மூலம் தொழுகை, மட்டும் மானுடர்க்கு அன்பளிப்பாகக் கிடைக்கவில்லை, மேலும் இரு அன்பளிப்புகள் கிடைத்தன.

ஒன்று, முஸ்லிம்கள் சோதனைகளிலிருந்து மீண்டுவருவது குறித்தும் இஸ்லாத்தின் கொள்கைகளும் இறைநம்பிக்கையும் முழுமையடைவது குறித்தும் கூறப்பட்டுள்ள அல்பகரா அத்தியாயத்தின் கடைசி இருவசனங்கள். மற்றொன்று, அண்ணலாரின் சமுதாயத்தில் இணைவைக்கும் பாவத்திலிருந்து விலகியிருப்பவர் மன்னிப்பு அளிக்கப்படுவார் எனும் நற்செய்தி.

> ‘இந்தத் தூதர் தம் இறைவனிடமிருந்து தமக்கு அருளப்பட்டதின்மீது நம்பிக்கை கொண்டுள்ளார். அவரை ஏற்றுக்கொண்டவர்களும் அந்த வழிகாட்டுதலின்மீது நம்பிக்கை கொண்டுள்ளனர்...’

(திருக்குர்ஆன் 2: 285)

**‘அல்லாஹ் எந்த மனிதரையும் அவரது சக்திக்கு அதிகமாக (பொறுப்புகளைச் சுமத்தி) சிரமப்படுத்துவதில்லை. அவன் சம்பாதித்த நன்மையின் பலனும் அவனுக்கே; அவன் சம்பாதித்த தீமையின் பலனும் அவனுக்கே!... எங்களைப் பொறுத்தருள்வாயாக! எங்களுக்கு மன்னிப்பு அருள்வாயாக! எங்கள்மீது கருணை பொழிவாயாக! நீயே எங்கள் பாதுகாவலனாவாய்! (சத்தியத்தை) நிராகரிக்கும் மக்களுக்கு எதிராக வெற்றி கொள்ள எங்களுக்கு உதவி செய்வாயாக!’**

(திருக்குர்ஆன் 2: 286)

‘நிராகரிக்கும் மக்களுக்கு எதிராக வெற்றிகொள்ள எங்களுக்கு உதவி செய்வாயாக’ எனும் கோரிக்கையை வைக்கும் முன் நடந்த இரு நிகழ்வுகள் துன்பம் தந்தவை; துயரம் தந்தவை.

தாயிஃப் நகரில் கல்லடிபட்டுவந்ததும் மக்கமாநகருக்குள் சொல்லடிப்பட்டு நின்றதும் மறக்கக்கூடிய நிகழ்வுகள் அல்லவே!

மக்கமாநகரில் சொல்லடி மட்டுமா நடந்தது. குறைஷிகள் அண்ணலாரைக் கொல்வதற்காகவே கூடிக்கூடிப் பேசினர். கொலை வாளைத் தீட்டினர்.

அன்னை ஆமினாவின் அருமை மகனை, செவிலித்தாய் ஹலீமா ஊட்டி வளர்த்த பெருமை மிகு பிறப்பை, பாட்டனாரும் பெரியதந்தையும் கண்ணெனப் போற்றிவளர்த்த கண்ணியத்தை, கதிஜா பிராட்டியாரின் கருவூலத்தை இவற்றுக்கெல்லாம் மேலான லட்சிய புருஷரை மக்கள் தலைவரைக் கொன்றுவிட்டால் மனம் போனபோக்கில் வாழலாம் எனக் குறைஷிகள் மனப்பால் குடித்தனர்.

குறைஷிகள் எண்ணியதெல்லாம் நடந்துவிடுமா? இறைநிராகரிப்பாளர்களின் கணக்கெல்லாம் சரியாகிவிடுமா?

எண்ணிய எண்ணங்களெல்லாம் நிறைவேறுவதில்லை; கணக்குகளில் வல்லவரும் தப்புக் கணக்குப் போட்டுவிடுவர்.

இறைவனின் எண்ணங்கள்தான் நிறைவேறும்; இறைவனின் கணக்குகள்தான் தப்புக் கணக்காவதில்லை.

இறைவனின் கரம் பற்றி நடந்த அண்ணலார் லட்சிய இலக்கை நோக்கிச் சென்று கொண்டிருந்தார். இறைவன் போட்ட கணக்குச் சரியாகிக் கொண்டிருந்தது. இறுதித் தூதர் அண்ணலார் ராஜபாட்டையில் சத்தியப் பயணத்தைத் தொடர்ந்தார்.

காலம் கண்திறந்து பார்த்துக் கொண்டிருந்தது. ஞாலம் சத்திய தரிசனத்தைக் காணக் காத்துக் கொண்டிருந்தது. ஒரு புதிய வரலாற்றின் பக்கங்களின் எழுதுகோல் நின்று கொண்டிருந்தது. புதிய விடியலைக் காணவும் பூபாளம் பாடவும் புல்புல்கள் காத்துக் கொண்டிருந்தன.

## துன்பியல் ஆண்டு

கி.பி. 619

அண்ணலாருக்கு அப்போது அகவை ஐம்பது, நபித்துவம் பெற்ற பத்தாம் ஆண்டு

கதிஜா பிராட்டியார் மரணமடைந்தார். இருபத்தைந்து ஆண்டுகள் இணைந்து வாழ்ந்த அற்புதத் துணைவியின் மரணம் அண்ணலாரை பெரும் கவலைக்குள்ளாக்கியது.

எஜமானியாக அறிமுகமாகி தோழியாகப் பழகி துணைவியாக ஆன பிராட்டியார் அண்ணலாரின் ஆலோசகராகவும் இயக்க முன்னோடியாகவும் விளங்கியவர். பெற்ற தாயாகவும் வளர்ப்புத் தாயாகவும் விளங்கிய பிராட்டியார் இஸ்லாமிய இயக்கத்தின் கருவூலமாகவும் திகழ்ந்தார்.

பெற்ற மகள்கள் நால்வரும் வளர்ப்பு மகன்கள் அலீயும் ஜைதும் இயக்கத் தோழர்களும் பிராட்டியாரின் பிரிவால் வருந்தினார்கள்.

இறைவனின் அழைப்பைக் கேட்ட மாத்திரத்திலேயே இஸ்லாத்தைத் தழுவிய பிராட்டியார் கடந்த பத்தாண்டுகளில் அண்ணலாருக்குத் துணைநின்ற செயல் வரலாற்று ஏடுகளில் பொன்னெழுத்துகளால் பொறிக்கப்பட்டுள்ளன. ஒரு வண்டியில் பூட்டிய இரு குதிரைகள்போல் ஒற்றுமையாகப் பயணத்தைத் தொடர்ந்த அண்ணலாரும் பிராட்டியாரும் இயக்கத் தம்பதிகளுக்கு இன்றும் முன்மாதிரியாகத் திகழ்கின்றனர்.

அண்ணலாரைவிட புதல்விகள் நால்வரும்தான் அதிகமாக வருத்தப்பட்டார்கள். அவர்களின் வருத்தத்தைப் போக்க பலவாறு ஆறுதல் மொழிகளைக் கூறிய அண்ணலார் முன்பொருமுறை வானவர்க்கோன் ஜிப்ரீல் இறைவனிடமிருந்து பிராட்டியாருக்கு கொண்டு வந்த சோபனத்தையும் சொர்க்கத்தில் அவருக்குத் தனியிடம் அமைக்கப்பட்டுள்ளமையையும் எடுத்துரைத்தார்.

அவ்வாண்டே அண்ணலாருக்கு இன்னொரு பேரிழப்பு ஏற்பட்டது. ஹாஷிம்களின் தலைவராகவும் அண்ணலாருக்குப் பேருதவிகள் புரிந்தவராகவும் இருந்த பெரிய தந்தை அபூதாலிப் மரணமடைந்ததே அந்தப் பேரிழப்பு!

அவர் இறக்கும் தறுவாயில்கூட குறைஷித் தலைவர்கள் அவரை அணுகி அண்ணலாரை ஏகத்துவத்தை விட்டுவிடச் செய்ய முயன்றனர். அதைச் செய்ய முடியாதபோது பழைய மார்க்கத்தையும் புதிய மார்க்கத்தையும் எல்லோரும் ஒரே சமயத்தில் பின்பற்ற வேண்டுமென்ற ஒரு சமூக உடன்படிக்கையைக் கொண்டுவர முயன்றனர்.

இஸ்லாத்தில் எம்மதமும் சம்மதம் என்பதோ கொள்கைகளை விட்டுக் கொடுத்துச் சமரசம் செய்துகொள்வதோ கிடையாதெனக் கூறிய அண்ணலார் குறைஷிகளின் கோரிக்கையை நிராகரித்தார்.

> ‘கூறிவிடுவீராக: ஓ! நிராகரிப்பாளர்களே! நீங்கள் எவற்றை வணங்குகிறீர்களோ அவற்றை நான் வணங்குவதில்லை. நான் யாரை வணங்குகின்றோனோ அவனை நீங்கள் வணங்குபவர்கள் அல்லர், மேலும் நீங்கள் வணங்கியவற்றை நான் வணங்குபவன் அல்லன். நான் யாரை வணங்குகின்றேனோ அவனை நீங்கள் வணங்குகின்றவர்கள் அல்லர். உங்களுக்கு உங்களுடைய மார்க்கம், எனக்கு என்னுடைய மார்க்கம்.’

(திருக்குர்ஆன் 109: 1 6)

அபூதாலிப் மரணமடைந்தபின் குறைஷிகள் அண்ணலாரையும் முஸ்லிம்களையும் நேரடியாகவே தாக்கத் தொடங்கினர்.

அபூதாலிபுக்குப் பின் ஹாஷிம்களின் தலைமைப் பீடம் அபூலஹப் வசமானது. அண்ணலார்மீது வன்மம் கொண்ட அபூலஹப் தம்பி மகனைக் காப்பாற்ற முயலவில்லை. ஹாஷிம்களின் தலைவர் என்ற முறையிலும் ஒரு ஹாஷிமைப் பற்றிக் கவலைப்படவில்லை.

அபூதாலிப் ஹாஷிம்களின் தலைமைப் பதவியில் இல்லாதது குறைஷிகளைக் கட்டவிழ்த்துவிட்டது. குதர்க்கம் பேசிக்கொண்டிருந்தவர்கள், கொலை வெறிப் பேச்சுகளை அவிழ்த்துவிட்டுக் கொண்டிருந்தவர்கள் தீயசெயல்களில் ஈடுபட்டனர்; தீமைகளை முகமூடியாக்கிக் கொண்டனர்.

ஒருநாள் குறைஷி வம்பர் ஒருவர் அழுகிய மாமிசத்துண்டை அண்ணலார் வீட்டுக்குள் வீசிச் சென்றார். இன்னொரு நாள் இன்னொரு மனிதர் அண்ணலார் வீட்டில் தொழுது கொண்டிருந்தபோது செம்மறியாட்டுக் குடலை உடல்மேல் போட்டுச் சென்றார்.

செம்மறியாட்டுக் குடலை வீசிச் சென்ற சிறுமனிதர் தம் மருமகன் உத்மானின் சிறிய தந்தை உக்பா என அறிந்து அண்ணலார் வேதனைப்பட்டார். இன்னொரு சமயம் அண்ணலார் கஅபாவை விட்டு வந்தபோது ஒரு மண்ணாங்கட்டி மனிதர் மணலை வாரித் தலையிலும் முகத்திலும் வீசியெறிந்தார். வீட்டுக்கு வந்த அண்ணலாரின் கோலத்தைப் பார்த்த அருமை மகள் பாத்திமா கண்ணீர் விட்டு அழுதார்; கயவர் செயல் கருகப் பிரார்த்தித்தார்.

இந்தச் சூழலில்தான் அண்ணலார் தாயிஃப் நகருக்கு அழைப்புப் பணி புரியச் சென்றார். அங்கும் ‘மண்ணாங்கட்டிகள்’!

மக்காவில் வாழ்ந்த ஏழை எளிய முஸ்லிம்களும் எண்ணற்ற இடர்ப்பாடுகளை அடைந்தனர். குறைஷிக் கயவர்களில் சிலர் அபூபக்கரைக்கூட விட்டுவைக்கவில்லை. செல்வமும் செல்வாக்கும் பெற்றிருந்த அவர் இஸ்லாத்தை ஏற்றபின் குறைஷிகளால் குறிவைக்கப்பட்ட எதிரிகளில் ஒருவரானார். அடிமைகளை விடுவித்து முஸ்லிமாக்கியதும் நண்பர்களையும் உறவினர்களையும் இஸ்லாத்தைத் தழுவச் செய்ததும் அபூபக்கர் செய்த பெரும் துரோகமெனக் குறைஷியர் கூறினர்.

அஸத் கோத்திர நவ்பலின் மகன் அஸ்வத்தை அபூபக்கரும் தல்ஹாவும் இஸ்லாத்தை ஏற்கச் செய்திருந்தனர். இந்த ஒரே காரணத்துக்காக நவ்பல் தோழர்கள் இருவரையும் கைகால்களைக் கட்டி நடுப் பாதையில் போட்டுவிட்டார். நவ்பலைக் கண்டிக்கவோ எதிர்க்கவோ தையிம் கோத்திரத்தார் முன்வரவில்லை. அபூபக்கரும் தல்ஹாவும் தையிம் கோத்திரப் பிரமுகர்கள்!

பிலாலின் முந்தைய எஜமானரான ஜுமாஹ் கோத்திரத் தலைவர் உமையா அபூபக்கரின் தொடர்பைத் துண்டித்திருந்தார். ஆனாலும் அபூபக்கர் அக்கோத்திரத்தின் நடுவிலேதான் காலத்தைக் கழித்துவந்தார். அவருடைய உள்ளத்தில் மக்காவைத் துறக்கும் எண்ணம் வர அண்ணலாரிடம் அனுமதி பெற்று அபிசீனியா செல்ல ஆயத்தமானார்.

அப்போது அபூபக்கரை வழியில் சந்தித்த மக்காவை அடுத்திருந்த சிற்றூர்களின் ஒன்றியத் தலைவர் இப்னு துகன்னா அவரின் பயணத்தைத் தடுத்து மக்காவுக்குத் திரும்ப அழைத்து வந்தார். அபூபக்கரின் நற்குணமறிந்த துகன்னா குறைஷிகளிடம், தான் பாதுகாப்பளிப்பதாக மொழிந்தார்.

‘அபூபக்கர் மக்காவில் வாழலாம், ஆனால் அவர் குறைஷியரை மதம் மாற்றும் எவ்விதச் செயலையும் மேற்கொள்ளக்கூடாது. அவர் குர்ஆனை ஓதுவதோ தொழுவதோ வெளியில் தெரியக் கூடாது, வீட்டுக்குள்ளேயே செய்துகொள்ள வேண்டும்’ என ஜுமாஹ் கோத்திரத்தார் கண்டிப்போடு கூறினர். பெரும் முழக்கமாக ஒலித்தவரை சிறு முணக்கமாகச் சொல்லினர்.

சூழ்நிலையைக் கருத்தில்கொண்டு அபூபக்கர் அடக்கத்துடன் செயல்பட்டார். காலம் முழுவதும் கயவர் கரங்களிலா கட்டுப்பட்டுக்கிடக்கும்? ஞாலத்தைக் கைக்குள் அடக்கும் ஞானவான்கள் வெற்றி பெறாமலா இருப்பர்?

## 15. காலாவின் மக்கள்

### மக்காவும் யத்ரிபும்

மூன்று பக்கமும் கடல் சூழ்ந்த அரபகத்தின் மேற்கே செங்கடலுக்கு அருகிலுள்ள இரு நகரங்கள் மக்காவும் யத்ரிபும். தெற்கே மக்கா, வடக்கே யத்ரிப். இரு நகரங்களுக்கும் இடையிலுள்ள தொலைவு 200 கற்கள் 20 காதங்கள்.

இரு நகரங்களுக்கும் அருகிலுள்ள கடல் பகுதி செங்கடல். மக்காவுக்கு மேற்கே ஜித்தா துறைமுகமும் யத்ரிபுக்குக் மேற்கே யான்பூ துறைமுகமும் உள்ளன. மக்காவிலிருந்து அபிசீனியா செல்பவர்கள் ஜித்தாவுக்கு மிகத் தெற்கேயுள்ள ஹிம்ஸர் துறைமுகத்தைத்தான் பயன்படுத்தினர்.

மக்காவிலிருந்து சிரியா செல்பவர்கள் யத்ரிப் வழியாகத்தான் சென்றனர். காரணம் இவ்வழியில் வனச்சோலை கிராமங்களும் வற்றாத கிணறுகளும் இருந்தன. சில சமயங்களில் யத்ரிப் நகரைத் தவிர்க்க வேண்டி செங்கடலோரப் பாதையைப் பயன்படுத்துவர். இவ்வழியில் ஊர்களும் குறைவு, கிணறுகளும் குறைவு, திருடர் பயம் அதிகம், பாதையும் கரடு முரடானது. மேற்கண்ட இரு பாதைகளைத் தவிர்க்க வேண்டியிருந்தால் யத்ரிபை மிகவும் மேற்கே தள்ளி நஜ்த் பிரதேசம் வழியாக தலையைச் சுற்றி மூக்கைத் தொட்ட கதையாக தூமதுல் ஜந்தலைத் தொட்டு சிரியா செல்வார்கள்.

யத்ரிபைப் பொறுத்தவரை நில அமைப்பில் மக்காவைவிட மேம்பட்டதாகும், ‘யத்ரிப் சோலை’ என்று அந்த மலை சூழ்ந்த பிரதேசம் அழைக்கப்பட்டது.

பேரீச்சம் பழச் சோலைகளும் கொடி முந்திரித் தோட்டங்களும் நிறைந்திருந்த யத்ரிப் நீர்வளமும் நிலவளமும் மிக்கது. உழவுத் தொழிலில் யத்ரிப் முன்னணியில் இருந்தது. யத்ரிப்வாசிகளில் பலர் உழவர்களாகவே இருந்தனர். அங்கு கிணறுகள் மட்டுமின்றி குளங்களும் இருந்தன. அண்ணலார் சிறுவராக இருந்தபோது அக்குளங்களில்தான் நீந்தப் பழகிக்கொண்டார். யத்ரிபில் கால்நடைகள் ஓரளவுக்கு

வளர்க்கப்பட்டன. மக்காவில் கால்நடைகள் மிக அதிகமாகக் காணப்பட்டன.

விவசாய பூமிகளும் தோட்டந்துரவுகளும் பல இருந்தாலும் மக்கா யத்ரிபைவிட உழவுத் தொழிலில் பின் தங்கியே இருந்தது. மக்காவாசிகள் விவசாயத்தைவிட வியாபாரத்தையே பெரிதும் விரும்பினர். காரணம், யெமன் சந்தை. ஹிந்துஸ்தானத்திலிருந்து இறக்குமதி செய்யப்பட்ட கைத்தறித் துணிகளுக்கும் வாசனைப் பொருள்களுக்கும் முத்துக்களுக்கும் யெமன் முக்கிய சந்தையாக விளங்கியது. அங்கு வந்த சந்தைப் பொருள்கள் மக்காவைக் கடந்தே சிரியா செல்ல வேண்டும். மக்காவாசிகளுக்கு இருந்த யெமன் தொடர்பு அவர்களைத் தெற்கே வந்து கொள்முதல் செய்து வடக்கே சென்று விற்கும் வாய்ப்பைத் தந்தது.

வடக்கே சிரியாவில் கிடைத்த லினனும் மஸ்லினும் பட்டும் கோதுமை, பார்லி போன்ற தானியங்களும் தெற்கே யெமனுக்குக் கொண்டு செல்லும் வணிகப் பொருள்களாகின.

சிலர் தென்கிழக்கு அரபுக்கடல் துறைமுகங்களுக்கு வந்து ஹிந்துஸ்தானத்துக்குக் குதிரைகளை ஏற்றுமதி செய்தனர். அவர்கள் குதிரைகளோடு பயணித்து கேரளம், தமிழகம் வரை வந்து வணிகம் செய்தனர். பின் அங்குள்ள பொருள்களை வாங்கி கடல் வழியாக அரபகம் சென்றனர்.

மக்காவில் வாழ்ந்த குறைஷிகள் பாரம்பர்யம் மிக்கவர்கள். இஸ்மாயில் நபிகளாரின் நேரடி வம்சாவளியினர் இவர்கள். பிஹ்ர் என்பாரின் வழித்தோன்றல்களான இவர்களில் மக்காவில் வாழ்ந்தோர் பள்ளத்தாக்குக் குறைஷியர் என அழைக்கப்பட்டனர். சுற்றுப்புற ஊர்களில் வாழ்ந்தவர்கள் நாடோடிக் குறைஷியர் என அழைக்கப்பட்டனர்.

குறைஷ் என்பாருக்கு இரு புதல்வர்கள். அவர்கள் காலிதும், அல்ஹாரிதும். இவர்களிருவரின் கிளைகளே மக்காவில் வாழ்ந்த பல குலம், கோத்திரங்கள்; ஒரு கொடியில் பூத்த பல மலர்கள். அவர்களில் பலரும் தன் மூதாதையரான குறைஷிலிருந்து தன் பிறப்புவரை உறவுச் சங்கிலிகளைச் சொல்வதில் நினைவாற்றல் மிக்கவர்கள்.

குறைஷ், காலிப், லுஅய், கஅப், முர்ரா, கிலாப், குஸை, அப்து மனாப், ஹாஷிம், அப்துல் முத்தலிப், அப்துல்லா என பதினோறு தலைமுறைகளைச் சொல்லி பனிரெண்டாவது தலைமுறை அண்ணலார்

எனச் சொல்லிவிடுவார்கள்.

மக்காவில் வாழ்ந்தவர்கள் அனைவரும் குறைஷிகளாக இருந்தாலும் அவர்கள் பல கோத்திரங்களாக இருந்தனர். கோத்திரங்கள் ஒவ்வொன்றுக்கும் ஒரு தலைவர் இருந்தார். அக்கோத்திரத் தலைவர்களே அவரவர்களுக்கு பாதுகாப்பளிப்பவராக இருந்தனர். தாருந்நத்வா (அறிஞர்கள் சபை)வில் கூடும் தலைவர்களில் எவரும் பெருந்தலைவரில்லை. எல்லோரும் சம தகுதியுடையோரே!

அவர்களை இணைத்தது கஅபா ஆலயமும் அதன் நிர்வாகமுமே! கஅபா ஆலயத்தின் பாதுகாவலர்கள் குறைஷிகள் என்பதால் ஒட்டு மொத்த அரபுச் சமுதாயமும் குறைஷிகளை மதித்தது. கஅபாவைத் தவிர அரபுகளை எதுவும் இணைக்கவில்லை, மக்காவில் வாழ்ந்த குறைஷிகளைப்போல் யத்ரிபில் வாழ்ந்த அரபுகளும் இஸ்மாயில் நபிகளாரின் வழித்தோன்றல்களே.

கஅப், முர்ரா, கிலாப் எனக் கிளை பிரிய ஸுஹ்ரா கோத்திரங்கள் யத்ரிபில் வாழ்ந்தனர். அவர்கள் நஜ்ஜார் இனமக்கள் என அழைக்கப்பட்டனர். நஜ்ஜாரிலிருந்தே அண்ணலாரின் அன்னை ஆமினா பிறந்தார்.

இவர்களைத் தவிர யத்ரிபில் வாழ்ந்தவர்கள் காலாவின் மக்கள். யெமனிலிருந்து குடியேறிய இவர்கள் யெமனின் பூர்வீகக் குடிமக்கள் எனவே கூறத் தோன்றுகிறது.

மக்காவில் குடியேறிய இஸ்மாயில் நபிகளாரும் அவருடைய அன்னை ஹாஜிராவும் அரபு மொழி தெரியாதவர்கள். இவர்களுக்கு யெமனிலிருந்து வந்து குடியேறியவர்களே அரபு மொழியைக் கற்றுக் கொடுத்ததாக வரலாறு. எனவே இவர்கள் யெமனின் பூர்வீகக் குடிகளே! இஸ்மாயில் நபிகளாருக்குப் பெண் கொடுத்த இவர்களே பிற்காலத்தில் கஅபாவின் காவலராக இருந்துள்ளனர்.

இவர்களில் காலா எனும் ஓர் அன்னையின் இரு புதல்வர்களே அவுசும், கஸ்ரஜ்களும். ஒருதாய் மக்கள் இரு சமுதாயங்களானது ஆச்சர்யமில்லை, அவர்கள் சண்டைக்காரர்களாக மாறியதுதான் அதிசயம்! இவர்கள் காலாவின் மக்கள் என அழைக்கப்பட்டனர்.

அவ்ஸ் கஸ்ரஜ்கள் தவிர யத்ரிபில் கைனுகா, நளீர், குரைளா யூதச் சமுதாயங்களும் வாழ்ந்தனர். மக்காவில் அதிகமாக காணப்படாத யூதச் சமுதாயம் யத்ரிபில் காணப்பட்டது. இவர்கள் வட அரபகத்தின் கைபர் யூதர்களோடு தொடர்பு வைத்திருந்தனர்.

யத்ரிப் அரபுகள் மக்காவாசிகளோடு தொடர்பு வைத்திருந்தனர். சிரியா சென்றபோது மக்காவாசிகள் யத்ரிபில் தங்கினர். கஅபா தரிசனத்துக்காக சென்ற யத்ரிப்வாசிகள் மக்காவில் குறைஷிகள் வீட்டில் தங்கினர்.

மக்கா யத்ரிப் பெண் கொள்வினை கொடுப்பினை நீண்ட காலமாக நடந்து வந்துள்ளது. அரபுகள் சொந்த உடன்பிறப்புகளைத் தவிர மற்ற சொந்தங்கள் அனைவரையும் மணம் முடித்துள்ளனர்.

மக்காவைச் சேர்ந்த பெண்களைவிட யத்ரிப் பெண்கள் சுதந்திரமானவர்கள், சம உரிமை பெற்றவர்கள். அண்ணலாரின் பாட்டனார் அப்துல் முத்தலிபின் தாயார் ஸல்மாவை இதற்கு எடுத்துக்காட்டாகக் கொள்ளலாம். வணிகரான அவர் மக்காவாசியை மணந்தும் யத்ரிபிலேயே வாழ்ந்து வந்தார்.

மக்காவில் இருந்ததுபோல ஆலயங்கள் எதுவும் யத்ரிபில் இருக்கவில்லை. வீடுகளில் சில சிலைகளை வைத்து வணங்கியுள்ளனர்.

மக்காவில் ஹுபைலுக்கும், தாயிபில் லாத்துக்கும், நக்லாவில் உஸ்ஸாவுக்கும், குதைத்தில் மனாத்துக்கும் ஆலயம் அமைந்திருந்ததுபோல் யத்ரிபில் இல்லை.

மக்கா சூடான பிரதேசம், யத்ரிப் குளிர்ச்சியான பிரதேசம்! மக்களும் சூடானவர்களாகவும் குளிர்ச்சியானவர்களாகவுமே இருந்தனர்.

மக்காவாசிகள் சின்னச் சின்ன சண்டைகள் போட்டுக்கொண்டிருந்தனர். யத்ரிப்வாசிகள் பெரும் சண்டைகள் போட்டுக்கொண்டிருந்தனர். மக்காவில் பல்வேறு கோத்திரங்கள் இருந்தன. யத்ரிப் அரபுகளில் இரு வம்சாவளியினரே வாழ்ந்தனர். மக்காவாசிகள் மனங்களைத் தாழ்ப்பாள் போட்டு அடைத்துக்கொண்ட சூழலில் யத்ரிப்வாசிகள் மனங்களைத் திறந்து கொண்டனர்.

உணவுப்பழக்க வழக்கங்களில் இரு நகரங்களும் ஒரு மாதிரியாக இருந்தன. இல்லறப் பிணைப்புகளிலும் இரு சமுதாயங்களும் ஒரே மாதிரியாக இருந்தன. முறையான சம்பாத்தியமும் இங்கேயும் அங்கேயும் இருந்தன.

மதுவும் மடத்தனங்களும் எங்கும் இருந்தன. அதே சமயம் மரியாதையான வாழ்வும் மகத்தான உணர்வும் மக்காவிலும் யத்ரிபிலும் இருந்தன. களவும் கயமைத்தனமும் எங்கும் இருந்தன. அதே சமயம் இரு நகரங்களிலும், நியாயமும் நேர்மையும் வளர்ந்தன. விபச்சாரமும் விளையாட்டுப் புத்தியும் எங்கும் இருந்தன. அவற்றை விரும்பாத

மனிதமும் களமும் இருநகரங்களிலும் உருவாகிவந்தன. சூதும் சூதுமதியும் எங்கும் இருந்தன. குறிகேட்டலும் சகுனம் பார்த்தலும் எங்கும் இருந்தன. அவை மக்காவிலும் யத்ரிபிலும் அதிகமாக இருந்தன.

யத்ரிப்வாசிகளைவிட மக்காவாசிகள் வேட்டைப் பிரியர்களாக இருந்தனர். இரு நகரங்களிலும் படித்தவர்கள் குறைவாகவே இருந்தனர்; பலதார மணம் முடித்தவர்கள் பலராக இருந்தனர்.

கலைகளை வளர்த்தெடுக்க முடியாத சூழலில் கவிஞர்களும் கதைச் சொல்லிகளும் இருந்தார்கள். அன்றைய காலகட்டத்தில் கலைகள் முக்கிய இடம் பெறவில்லை. அன்றைய தேவை ஒரு நல்ல வாழ்க்கை நெறி.

இபுறாகீம் நபிகளாரின் காலத்தில் புனர் நிர்மாணம் செய்யப்பட்ட கஅபா சிதைந்து சின்னாபின்னமாகி 360 சிலைகளாக நின்றன; மக்கள் நிர்வாணக் கோலத்துடன் அச்சிலைகளை வலம் வந்தனர்.

சத்தியம் சாய்க்கப்பட்டு அசத்தியம் ஆரோகணித்துப் படுத்துக் கிடந்தது. சாராயத்தால் சாய்க்கப்பட்ட சமுதாயம் விபச்சாரிகளின் மடிமேல் கிடந்தது. அம்புகளை வைத்து ஆரூடம் பார்த்த சமுதாயம் சூதாட்டச் சுவையில் சொக்கிப் போய்க் கிடந்தது.

இறைவன் சத்தியத்தை நிலை நிறுத்த விரும்பினான். சாராய சமுதாயத்தை சரியான சமுதாயமாக்க எண்ணினான்; ஆரூட அம்புகளை மாற்றி அகத்தில் அன்பினைப் பெருகச் செய்ய விழைந்தான்.

ஆனால் அண்ணலார் தோன்றிய மக்கா மாற மறுத்தது; நன்மையை ஏற்க மறுத்தது; சத்தியத்துக்குச் சான்றாகத் திகழ மறுத்தது; நீதி நேர்மையைத் தரிசிக்க மறுத்தது. இவற்றுக்கெல்லாம் முத்தாய்ப்பாக ஏகத்துவத்தை ஏற்க மறுத்தது.

அதே சமயம் யத்ரிப் ஏகத்துவத்தை ஏற்க இசைந்தது. இறைவனின் வாழ்க்கை நெறியை தீனை நிலைநாட்ட இசைந்தது. சத்தியத்துக்குச் சான்று பகர முன்வந்தது. தீமையை அழித்து நன்மையை ஓங்கச் செய்ய சத்தியப் பிரமாணம் செய்தது.

அனற்காற்று மக்காவில் என்றால் புனற்காற்று யத்ரிபில்!

அனற்காற்றுப்பட்டு அவதிப்பட்ட அண்ணலாரைப் புனற் காற்றுப் பட வைக்க எண்ணினான் இறைவன்.

உரிய கருவி, உற்றகாலம், ஆற்றும் வகை, ஆற்றிடும் பணி ஆகியவற்றை ஆய்ந்தறிந்து செயல்படுத்தும் அகிலங்களின் இறைவன்

பொறுத்திருந்து அண்ணலாரை யத்ரிபுக்குப் புலம் பெயர வைத்தான்.

புஞ்சையாக மக்கா, நஞ்சையாக யத்ரிப், பக்குவப்படாத மக்கா, பக்குவப்பட்ட யத்ரிப்.

மனத்தாலும் செயலாலும் முரடான மக்கா, மனத்தாலும் செயலாலும் மென்மையான யத்ரிப்.

இருபதுக்கும் மேற்பட்ட கோத்திரங்கள் கொண்ட மக்கா, இரண்டே பிரிவுகள் கொண்ட யத்ரிப்!

இருபது கோத்திரங்களும் ஒன்றாகாத மக்கா, இரண்டே பிரிவுகள் ஒன்றாகிக் கொண்டிருந்த யத்ரிப்.

மக்காவின் நிலைமைகளைக் கண்ட இறைவன் தன்னுடைய ஏகத்துவக் கொள்கை விளைய ஏற்ற இடம் யத்ரிப் என முடிவு செய்து அண்ணலாரைப் புலம் பெயர வைத்தான்.

எல்லோருமே அரபுகளாக இருந்த மக்கா, அரபுகளோடு மூன்று வகை யூதர்களைக் கொண்டிருந்த யத்ரிப்!

அவ்ஸ் கஸ்ரஜ் சகோதரர்களை ஒன்றாக்கி அண்ணலாரை அவர்களின் தலைவராக அனுப்பினான் இறைவன். இதை எச்சரிக்கையாக எடுத்துக்கொள்ளாத யூதர்களைக் காலப்போக்கில் அகற்றினான் அதே இறைவன்.

அறநெறி உணர்ந்தவர், சொல்லாற்றல் கொண்டவர், செயல் திறன் படைத்தவர், ஆலோசனைக் கூறக் கூடியவர் என எல்லாத்திறனும் படைத்த அண்ணலாரை தன்னுடைய கருவியாகக் கொண்டு யத்ரிபைத் தன்னுடைய களமாக்கிக் கொண்டான் இறைவன்.

‘உலோகங்களுக்கு

உலக மாந்தர் மேல் பேராசை

சிம்மாசனம் ஏற பொன்முடியாகும்,

சிறைப்படும்போது கைவிலங்காகும்!’

யத்ரிப் மணிமுடிசூடிக் கொண்டபோது மக்கா கைவிலங்கிடப்பட்டது.

மனத்தில் பேராசை, மான உணர்வில் ஊனம், மாசு படியும் செயல்களில் மகிழ்ச்சி இது மக்காவின் மனோநிலை.

மனத்தில் இறையச்சம், மான உணர்வில் பயம், மாசு படியும்

செயல்களைக் கண்டு தூர விலகியிருப்பது இது யத்ரிபின் மனோநிலை.

சொந்தச் சகோதரர்களையே பகைவர்களாகக் கருதியது மக்கா அந்நியர்களையும் சொந்தச் சகோதரர்களாக ஏற்றுக் கொண்டது யத்ரிப்! செய்யக் கூடாததைச் செய்தது மக்கா, செய்ய வேண்டியதைச் செய்தது யத்ரிப்!

சூழ்ச்சி செய்தவர்கள் இருந்த இடம் மக்கா, சூழ்ச்சியைத் தகர்க்கக் கூடியவர்கள் ஒன்று கூடிய இடம் யத்ரிப்!

இவற்றையெல்லாம் சூழ்ச்சிக்காரர்களையெல்லாம் வென்று விடும் இறைவன் அமைதியாகப் பார்த்துக் கொண்டிருந்தான்.

அண்ணலார் பிறந்த மக்கா, அன்று நடுமையமாக அமையும் வாய்ப்பை இழந்தது. அண்ணலாரின் தாய் பிறந்த யத்ரிப் நடுநிலைச் சமுதாயத்தில் நடுமையமாக அமையும் பேற்றைப் பெற்றது.

குறைஷிகள் அரபகத்தின் தலைவர்களாக இருந்த நிலை மாறி முஹாஜிர்களும் அன்ஸாரிகளும் தலைவர்களாக மாறும் நிலை உருவானது.

உபைல், லாத், உஸ்ஸா கொண்டாடப்படுவது மாறி ஏக இறைவன் ஒருவனே எல்லோருக்குமான இறைவன் எனும் மனமாற்றம் ஏற்படும் நிலை திருவானது.

மக்கத்து குறைஷிகளின் ஜீவநாடியே வியாபாரந்தான். அவர்கள் யத்ரிபைக் கடந்துதான் சிரியா செல்ல வேண்டும். பகை முற்றினால் குறைஷியர் வணிகக் குரல்வளை நெரிக்கப்படலாம். பொருள்கள் கொள்ளையிடப்படலாம்.

யத்ரிபில் முஸ்லிம்களின் மக்கள் தொகை அதிகமானால் சுற்றுப்புற மக்களும் இஸ்லாத்தில் சேர்ந்தால் மக்கா யத்ரிப்வசமாகும்! கஅபா ஆலயச்சிலைகள் அகற்றப்படும் அல்லது உடைக்கப்படும்.

இவற்றையெல்லாம் மனிதர்கள் எண்ணிப்பார்க்கவில்லை. இறைவன் எண்ணிப்பார்த்தே திட்டமிட்டான்!

> ‘நம்மால் தூதர்களாக அனுப்பப்பட்ட நம்முடைய அடியார்களுக்கு நாம் முன்னரே இவ்வாறு வாக்குறுதி அளித்துள்ளோம். நிச்சயமாய் அவர்கள் உதவி செய்யப்படுவார்கள். மேலும் திண்ணமாக நமது படையினர் தாம் வெற்றியாளர்களாகத் திகழ்வார்கள். ஆகவே (நபியே!) இவர்களை இவர்களுடைய நிலையிலேயே சிறிது காலம் விட்டுவிடும். மேலும், பார்த்துக் கொண்டிரும், மிக விரைவில்

இவர்களும் தாங்களாகவே கண்டு கொள்வார்கள். என்ன, இவர்கள் நம்முடைய தண்டனைக்காக அவசரப்படுகின்றார்களா? அது அவர்களின் முற்றத்தில் இறங்கிவிடுமாயின், எவர்களுக்கு எச்சரிக்கை செய்யப்பட்டுவிட்டதோ அவர்களுக்கு அந்நாள் மிகவும் கெட்டதொரு நாளாகிவிடும். எனவே, சிறிது காலத்துக்கு இவர்களைவிட்டுவிடும். மேலும், பார்த்துக் கொண்டிரும்; மிக விரைவில் இவர்களும் தாமாகவே கண்டு கொள்வார்கள்.'

(திருக்குர்ஆன் 37: 171 179)

எத்தகைய முன்னறிவிப்பு இது! இந்த முன்னறிவிப்பு நிறைவேறியபோது குறைஷிகளால் என்ன செய்ய முடிந்தது?

குறைஷிகள் இஸ்லாத்தை நம்பி ஏற்றிருந்தால் ஆன்மிக மையமாக விளங்கிய மக்கா அரசியலதிகார மையமாகவும் விளங்கியிருக்கும். குறைஷிகள் தாம் இபுறாகீம் நபிகளாரின் வழியிலிருந்து பிறழ்ந்தவர்கள் என்பதை ஒப்புக் கொண்டிருந்தால் தம் மண்ணின் மைந்தருக்குத் தொல்லை கொடுக்காமல் இருந்திருப்பர். அண்ணலாரை உச்சிமோர்ந்து ஏற்றிருப்பர். அது நடக்காமல் போய்விட்டது!

அதை யத்ரிப் நடக்கச் செய்தது. சோலை நகராக விளங்கிய யத்ரிப், மக்கள் மனங்களையும் சோலை வனமாக்கியது. காலைக் கதிரவன் வருகைக்கு முன்னே எழுந்து நாளைத் தொடங்கும் பழக்கத்தை ஏற்றுக்கொண்டது.

இவையெல்லாம் இறைவனின் தீர்மானமும், நடவடிக்கையும்!

## அவ்ஸ்களும் கஸ்ரஜ்களும்

யத்ரிப் மலைகளுக்கிடையே அமைந்த பூங்கா நகரம், நீர் வளமும் நிலவளமும் வாய்க்கப்பெற்றது. இங்கு வாழ்ந்த அரபுகள் அவ்ஸ் கஸ்ரஜ் என்ற பங்காளிகளின் மக்கள். இவர்கள் காலா என்னும் ஒருதாய் மக்கள்; யெமனிலிருந்து வந்து குடியேறியவர்கள். மக்கா குறைஷிகளோடு கொள்வினை கொடுப்பினை செய்து கொண்டவர்கள்.

இவர்களோடு மூன்று யூதக்குழுக்கள் வாழ்ந்தன. அவர்கள்: பனூ கைனுகா, பனூ நளீர், பனூ குரைளா.

யத்ரிபில் வாழ்ந்த அவ்ஸ் கஸ்ரஜ் கோத்திரங்கள் ஒற்றுமையோடு வாழ்வதற்குக் கற்றுக் கொள்ளாதவர்கள். ஒருவர் இன்னொருவரை

முறைத்துப் பார்த்தாலே போதும், அதுவே சண்டைக்குரிய காரணியாகிவிடும். இவ்விரு கோத்திரங்களும் பல்வேறு சிலைகளை வணங்கிவந்தனர்.

அவ்ஸ் கஸ்ரஜ் கோத்திரங்களுடன் யத்ரிபில் வாழ்ந்த இன்னொரு இனம் யூதரினம். இவர்கள் உருவமற்ற ஏக இறைவனை வணங்கியவர்கள். சிறுபான்மையினரான இவர்கள் இரு கோத்திரங்களுடன் நல்லுறவு வைத்திருந்தனர். இரு கோத்திரங்களும் சண்டையிட்டுப் பிரிந்திருக்கும்போது யூதர்களும் அவர்களுக்காக இரு குழுக்களாகிவிடுவர். என்றாலும் யூதர்கள் அவர்களை வெறுத்தனர். இறைவனின் ஏகத்துவம் குறித்தும் மறுமை குறித்தும் இரு கோத்திரத்தாருக்கும் யூதமத அறிஞர்கள் ராபிகள் எடுத்துக் கூறியும் அவர்கள் புரியாதவர்களாகவே இருந்தனர்.

‘அரபகத்தின் தெற்கேயிருந்து ஒரு இறைத்தூதர் வரப்போகிறார்’ என யூத குருக்களும் குறி சொல்வோரும் சொல்லிவந்தனர். அதை மெய்ப்பிக்கும் செய்திகள் மக்காவிலிருந்து யத்ரிபுக்கு வரத் தொடங்கியிருந்தன. சிரியாவுக்குச் சென்ற வணிகக் குழுக்கள் பொருள்களை மட்டும் கொண்டு செல்லவில்லை; இறைத்தூதர் வருகையையும் அவர் மொழிந்ததையும் கொண்டு சென்றனர்.

யத்ரிபில் அந்தச் செய்தியைக் கேட்ட அவ்ஸ் கஸ்ரஜ் கோத்திரங்கள் இறைத்தூதர் அரபி என்பதால் மகிழ்ந்தனர்; ஆனால் அவர்கள் இறைத்தூதரின் போதனைகளை ஏற்கத் தயாரில்லை. யூதர்களோ இறைத்தூதரின் போதனைகளை ஏற்கத் தயாராக இருந்தனர்; போதித்த மாமனிதர் அரபி என்பதால் ஏற்கத் தயாரில்லை.

தாம் பேணும் ஏக தெய்வக் கொள்கையையே இறைத்தூதராக வந்துள்ளவர் மொழிவதால் யூதர்களுக்கு புதிய மார்க்கத்தில் ஆர்வம் ஏற்பட்டது. தம்மைப் போன்ற அரபி ஒருவர் இறைத்தூதராக வந்துள்ளது அரபிகளுக்கு புதிய மார்க்கத்தின் மேல் ஈடுபாட்டை அதிகமாக்கியது.

இறைத்தூதர் யத்ரிபைச் சேர்ந்து ஓர் அன்னையின் அருமைப் புதல்வர், வணிகம் நிமித்தம் சிரியா செல்லும்போது யத்ரிபில் பலமுறை தங்கியவர் என்ற அறிமுகத்தால் கஸ்ரஜ் கோத்திரத்தார் அண்ணலாரோடு உறவுகொள்ள ஆர்வம் காட்டினர். அவ்ஸ் கோத்திரத் தலைவர்களுள் ஒருவரான அபூகைஸ் மக்காவில் மணம் முடித்திருந்தார். அவரது மனைவியார் வரகா இப்னு நவ்பலின் மாமியார். வரகா கதிஜா பிராட்டியாரின் ஒன்றுவிட்ட சகோதரர். வரகா அபூகைஸிடம் இறைத்தூதர் பற்றிச் சொல்லியிருந்தார். அதனால் அவ்ஸ் கோத்திரம்

அண்ணலார்மீது ஆர்வம் கொண்டது.

இந்நிலையில் இரு கோத்திரங்களுக்குமிடையே நீண்ட நாட்களாக ஒரு பிரச்னை. அப்பிரச்னை குரோதத்தை வளர்த்து பழி வாங்க எண்ணி மூன்று பெரும் சண்டைகளை உருவாக்கியிருந்தது. அதன்பின் நான்காவதாக ஒரு சண்டைக்கு ஆயத்தமாகிக் கொண்டிருந்தது.

இந்தப் பின்னணியில் அவ்ஸ் கோத்திரத்தார் குறைஷிகளின் ஆதரவைக் கோரி மக்காவுக்கு வந்தனர். குறைஷிகளோ அவ்ஸ் கோத்திரத்தின் கோரிக்கையைப் புறந்தள்ளி ரெட்டைத் தாழ்ப்பாள் போட்டார்கள்.

அவ்ஸ் கோத்திரக்குழுவை அப்போது சந்தித்த அண்ணலார் இஸ்லாத்தின் கருத்துகளை எடுத்துக் கூறினார். அவ்ஸ்களின் காதுகளில் அண்ணலாரின் போதனை ஏறவில்லை. இயாஸ் இப்னு முஆத் எனும் இளைஞர் அண்ணலார் திருக்குர்ஆனை ஓதியபோது கவரப்பட்டு தன்னை இஸ்லாத்தில் இணைத்துக் கொண்டார். இவர்தான் இஸ்லாத்தை ஏற்ற முதல் யத்ரிப்வாசி.

# 16. அகபா உடன்படிக்கைகள்

## யமாமா, ஸமாமா கணவாய் மக்கள்

புனிதப்பயண காலம்

மக்காவின் மினாவில் கூடாரங்கள் தோலாலும் துணியாலும் எழுப்பப்பட்டிருந்தன. எல்லாம் வெகுதூரத்திலிருந்து வந்தவர்களுடையவை.

அண்ணலார் நபித்தோழர்கள் அபூபக்கர் அலீயுடன் கூடாரங்கள் தோறும் சென்று இஸ்லாமிய மார்க்கத்தைப் பற்றி எடுத்துரைத்துக் கொண்டிருந்தார்.

அவற்றில் ஒரு கூடாரம், அரபகத்தின் வடக்கிழக்கு எல்லையில் பாரசீகத்தைத் தொட்டுக் கொண்டிருந்த பிரதேச மக்களின் கூடாரம்.

அக்கூடாரத்தினரைச் சந்தித்த அண்ணலாரின் அணியினர் ‘நீங்கள் எந்தக் கோத்திரத்தார்?’ எனக் கேட்டனர்.

‘நாங்கள் ரபீஆ கோத்திரத்தார்’ என்றனர் கூடாரவாசிகள்.

‘ரபீஆ கோத்திரத்தில் நீங்கள் எந்தப் பிரிவினர்?’ என அபூபக்கர் கேட்டார்.

‘நாங்கள் ஷைபா இப்னு ஸலபாவின் குடும்பத்தார் ஆவோம்’ என அவர்கள் பதில் கூற ‘ஆம், இவர்கள் ரபீஆ கோத்திரத்தில் மிகச் சிறப்பானவர்கள்’ என அபூபக்கர் அண்ணலாரிடம் சொன்னார்.

அபூபக்கர் கூடாரவாசிகளின் தலைவரைப் போலிருந்த மஃப்ரூக் இப்னு அம்ரு என்பவருடன் உரையாடத் தொடங்கினார்.

‘உங்கள் மக்கள்தொகை என்ன?’ என அபூபக்கர் கேட்க, ‘ஆயிரத்துக்கு மேல்! யாவரும் அடங்க மறுப்பவர்’ என மஃப்ரூக் சொன்னார்.

‘உங்களுக்குத் தகுந்த பாதுகாப்பிருக்கிறதா?’

‘எங்களுக்கு நாங்களே பாதுகாப்பு! நாங்கள் எந்நேரமும் எச்சரிக்கையோடும் கரங்களில் ஆயுதங்களோடும் இருப்போம்.’

‘உங்களுக்கும் உங்கள் எதிரிகளுக்கும் நடக்கும் போர் எத்தகையதாக இருக்கும்?’

‘வாழ்வா சாவா என்றிருக்கும்! பெரும்பாலும் வாழ்வு எங்கள் பக்கந்தான் இருக்கும். எங்கள் சொந்தங்களைவிட எங்களுக்குப் போர்க் குதிரைகள் மேலானதாகும். எங்கள் போர்த்தளவாடங்கள் எங்கள் ஆடுமாடுகளைவிட மேலானவை. வெற்றியும் தோல்வியும் இறைவனின் கையிலே உள்ளவை!’

மஃப்ரூக் கூறியதைக் கேட்ட அபூபக்கர் அவரிடம் அண்ணலாரைப் பற்றிக் கூறினார். மஃப்ரூக் அண்ணலார் அங்கு வந்த நோக்கத்தை வினவினார்.

‘அல்லாஹ்வைத் தவிர வணங்குவதற்கு வேறொருவருமில்லை எனும் கொள்கையின் பால் அழைப்பதற்கே நான் இங்கு வந்துள்ளேன். நான் அல்லாஹ்வின் தூதராவேன். நீங்கள் இந்த இறைமார்க்கத்தை ஏற்க வேண்டும். இஸ்லாத்தை ஆதரிக்க வேண்டும்’ என அண்ணலார் மொழிந்தார்.

மஃப்ரூக் கேட்ட கேள்விகளுக்கு அண்ணலார் பதில் கூற உரை நீண்டது.

‘குறைஷி சகோதரரே! நீங்கள் கூறியவற்றையெல்லாம் நாங்கள் நெஞ்சில் இருத்திக் கொண்டோம். நீங்கள் சொன்னவை அனைத்தும் சத்தியம்! ஆயினும் முதல் சந்திப்பிலேயே நாங்கள் ஒரு முடிவுக்கு வர முடியாது; சிந்தித்துத்தான் ஒரு முடிவுக்கு வரவேண்டும். நாம் இப்போது பிரிவோம், மீண்டும் சந்திப்போம்’ என மஃப்ரூக் கூறினார்.

மஃப்ரூக்கோடு இருந்த முஸன்னிப்னு ஹாரிஸ் என்பார் கூறினார்:

நாங்கள் வசிக்கும் பகுதி யமாமா மலைக் கணவாயும் ஸமாமா மலைக் கணவாயும் அடங்கிய புவிப்பிரதேசமாகும். ஒரு பக்கம் அரபுப் பாலை, மறுபக்கம் பாரசீகப் பசுஞ்சோலை! பாரசீகத்தின் எல்லையோரம் நாங்கள் வாழ்வதால் நாங்கள் பாரசீக மன்னர் குஸ்ருவோடு ஒப்பந்தம் செய்து கொண்டவர்கள். எங்கள் ஒப்பந்தத்தில் புதிய மார்க்கங்கள் எதற்கும் இடமளிப்பதில்லை எனக் கைச் சாத்திட்டுள்ளோம். ஆகவே, தற்போது நாங்கள் உங்கள் இயக்கத்தை அங்கு கொண்டு செல்ல வாய்ப்பில்லை.

‘பாரசீகப் பகுதியில் பிரச்சாரம் செய்யாமல் அரபுப் பகுதியில் பிரச்சாரம் செய்ய வாய்ப்பிருந்தால், செய்யலாம்’ என மஃப்ரூக் கூறினார்.

‘குஸ்ருவுக்கு அச்சப்பட்டு நீங்கள் இறை மார்க்கத்தை எடுத்துக் கூறத் தேவையில்லை. இறைவனுக்கு அச்சப்பட்டு நீங்கள் அவன் மார்க்கத்தை எடுத்துரைக்கும் நாள் வந்தே தீரும்’ என அண்ணலார் கூற ரபீஆ கோத்திரத்தார் விடை கொடுத்தனர்.

அண்ணலாரும் தோழர்களும் அடுத்தடுத்த கூடாரங்களுக்குச் சென்று இஸ்லாமிய அழைப்பை எடுத்துரைத்தனர்.

இறுதியாக அவர்கள் யத்ரிப்வாசிகள் தங்கியிருந்த கூடாரங்களை அடைந்தனர்.

## அகபா உடன்படிக்கைகள் அவை அகங்களின் உடன்படிக்கைகள்!

அண்ணலாருக்கு அகவை அப்போது ஐம்பது, நபித்துவம் வந்தடைந்து பத்தாண்டுகளாயிருந்தன. கி.பி. 620

புஹாஸ் போருக்குப் பிறகு வந்த புனித மாதங்களில் ஒன்று.

யத்ரிபிலிருந்து கஸ்ரஜ் குலத்தைச் சேர்ந்த ஆறுபேர் புனிதப் பயணம் மேற்கொண்டு மக்காவுக்கு வந்திருந்தனர்.

அவர்களை அண்ணலார் மக்காவை அடுத்த அகபா எனுமிடத்தில் சந்தித்துப் பேசினார். அவர்கள் அண்ணலாருடன் பேசிக் கொண்டிருந்தபோது தாங்கள் யத்ரிபிலுள்ள கஸ்ரஜ் குலத்தைச் சேர்ந்தவர்கள் எனக் கூறினர். அதில் இருவர் நெருக்கமாகி, தாங்கள் பனூ நஜ்ஜார் குடும்பத்தைச் சேர்ந்தவர்களெனக் கூறி உறவு பாராட்டினர். காரணம் நஜ்ஜார்கள் அண்ணலாரின் பாட்டனார் அப்துல் முத்தலிப் வழிச் சொந்தக்காரர்கள்.

யத்ரிபிலுள்ள நிலைமைகள், அவ்ஸ் கஸ்ரஜ் குலங்களின் பிரிவினைகள் சண்டைகள், யூதக்குழுக்கள், குலங்களுக்கும் குழுக்களுக்குமுள்ள தொடர்புகள் என கஸ்ரஜ் குலச் சகோதரர்கள் சொன்ன சங்கதிகளைக் கேட்ட அண்ணலார் இஸ்லாத்தின் தூதுச் செய்தியை விளக்கமாகக் கூறினார்.

‘இறைவன் ஒருவன், நான் அவனின் இறுதித் தூதன்’ எனக் கூறிய

அண்ணலார் இஸ்லாத்தை எளிமையாகவும் இனிமையாகவும் எடுத்துரைத்து திருக்குர்ஆன் வசனங்களை ஓதிக்காட்டினார்.

‘யூதர்கள் நீண்ட காலமாக ஒருநபி வரப்போவதாகச் சொல்லிக் கொண்டிருந்தனர். அந்த நபி நீங்கள் தான்’ எனக் கூறிய யத்ரிப்வாசிகள் அண்ணலாரின் கரங்களில் கரங்களை வைத்து உறுதிமொழி எடுத்தனர்.

‘உலக மக்கள் அனைவரும் ஒரு தாய் தந்தைக்குப் பிறந்தோம். எல்லோரும் சகோதரர்களாவோம். இதில் செல்வந்தர் ஏழை, கறுப்பர் சிவப்பர், உயர்ந்தவர் தாழ்ந்தவர், அரபிகள் அரபியல்லாதவர், கிழக்கத்தியர் மேற்கத்தியர் என எந்தப் பிரிவினையும் கிடையாது’ எனக் கூறிய அண்ணலார் சாந்தி மார்க்கமே இஸ்லாம் என வலியுறுத்திக் கூறினார்.

‘அவ்ஸ் கஸ்ரஜ் வேற்றுமைகளும் சண்டைகளும் முடிவுக்கு வரும், யூதர்களும் அவர்கள் எதிர்பார்த்த நபிகள் வந்து விட்டதால் அண்ணலார்மீது நம்பிக்கை கொள்வர், பெரும்பாலான பிரச்னைகள் தீரும்’ எனும் நம்பிக்கையோடு அறுவர் குழு யத்ரிபைச் சென்றடைந்தது.

அறுவர் ஆற்றிய பணி அளப்பரியது; கஸ்ரஜ்கள் மட்டும் முஸ்லிமாகி கரம் பற்றவில்லை. அவ்ஸ்களும் கரம் பற்றினார்கள். அவ்ஸ்களின் தலைவர்களான ஸஅத் இப்னு முஆத், உஸைத் ஆகிய இருவரும் இஸ்லாத்தைத் தழுவ அவர்களுடைய மக்கள் அணியணியாக இஸ்லாத்தை ஏற்றனர். இஸ்லாம் மட்டும் அவர்களை அண்ணலாரோடு இணைக்கவில்லை. அண்ணலார் யத்ரிபின் தாய் பெற்ற பிள்ளை என்ற பாசமும் இணைத்தது.

ஆதியாகமங்களும் தவ்ராத்தும் இஞ்சீலும் சொல்லும் எதிர்பார்க்கப்பட்ட நபிகள் அண்ணலார்தான் என்ற எண்ணம் யூதர்களையும் கிறிஸ்துவர்களையும் சலனப்படுத்தியது. அவர்கள் இஸ்லாத்தை அறிந்துகொள்வதில் ஆர்வம் காட்டினார்கள்.

அவ்ஸ்களும் கஸ்ரஜ்களும் அண்ணலாரைப் பற்றியும் இஸ்லாத்தைப் பற்றியும் பேசாத நாளில்லை. அவர்கள் இஸ்லாத்தைப்பற்றி அறிந்துகொள்வதில் அதிகம் ஆர்வம் காட்டினார்கள்.

அடுத்த புனிதப் பயண நாளை அவர்கள் ஆவலோடு எதிர்பார்த்துக் கொண்டிருந்தனர். அவர்களில் சிலர் சிரியா சென்ற மக்கமாநகர் வணிகர்களைச் சந்தித்து இஸ்லாத்தைப் பற்றிய செய்திகளைத் தெரிந்து கொண்டனர். அவர்களின் உடல்கள்தான் யத்ரிபில் வாழ்ந்து

கொண்டிருந்தன, உள்ளங்களோ மக்காவில் மிதந்து கொண்டிருந்தன.

அடுத்த புனிதப் பயணத்தில் கி.பி. 621இல் பன்னிரண்டு பேர் பங்கேற்றார்கள். முதல் பயணத்தில் கஸ்ரஜ்கள் மட்டுமே இருந்தனர். இரண்டாவது பயணத்தில் அவ்ஸ்களும் இருந்தனர். அவர்களில் பழையவர் ஐவர். புதியவர் எழுவர். பனிரெண்டு பேரில் இருவர் அவ்ஸ்கள். இப்பயணம் நபித்துவம் பெற்ற பதினொன்றாம் ஆண்டில் நடந்தது.

அவர்கள் பன்னிரண்டு பேரும் அண்ணலாரை முந்தையப் பயணத்தில் சந்தித்த அதே அகபா எனும் இடத்திலேயே சந்தித்தனர். அண்ணலாரைச் சந்தித்து அளவளாவி மகிழ்ந்த அவர்கள் அங்கேயே இஸ்லாத்தைத் தழுவினார்கள்.

‘இறைவன் ஒருவன், அவனுடைய இறுதித்தூதர் முஹம்மது நபி (ஸல்) ஆவார்கள். இறைவனைத் தவிர வேறு எவரையும் வணங்கமாட்டோம்; இணைவைக்க மாட்டோம். பிறர் பொருளுக்கு ஆசைப்பட மாட்டோம். யார்மீதும் பழி கூற மாட்டோம்; குழந்தைகளைக் கொல்லமாட்டோம்’ எனக் கூறி உறுதி மொழி எடுத்துக் கொண்டார்கள்.

‘நீங்கள் இறைவனுக்கு அஞ்சி வாழ்ந்து இஸ்லாமிய நெறி முறைகளைக் கடைப்பிடித்தால் அல்லாஹ் உங்களுக்குச் சொர்க்கத்தைத் தருவான். நீங்கள் ஏதேனும் தவறு செய்தால் இறைவன் உம் பிரார்த்தனையை ஏற்று மன்னிப்பான், இல்லையேல் தண்டிப்பான்’ என அண்ணலார் மொழிந்தார்.

அண்ணலார் மொழிந்ததைக் கேட்ட யத்ரிப்வாசிகள் மீண்டும் அண்ணலாரின் கரம் பற்றி ‘பைஅத்’ செய்துகொண்டனர். அண்ணலாரின் அணியினரும் யத்ரிப்வாசிகளும் ஒருவருக்கொருவர் உதவிக் கொள்வதென உடன்படிக்கை செய்து கொண்டனர்.

இஸ்லாமிய வரலாற்றில் செய்து கொள்ளப்பட்ட முதல் உடன்படிக்கை இது. இந்த உடன்படிக்கை முதல் அகபா உடன்படிக்கை என அழைக்கப்பட்டது. எழுதப்படாத உடன்படிக்கையாக விளங்கிய அகபா உடன்படிக்கை இதயங்களில் எழுதப்பட்டது.

யத்ரிப்வாசிகள் ஊருக்குத் திரும்பியபோது அவர்களுடன் குர்ஆனைக் கற்றுக் கொடுக்கவும் இஸ்லாமியப் போதனைகளை எடுத்துரைக்கவும் மார்க்கச் சட்டங்களைப் போதிக்கவும் தொழுவதற்குப் பயிற்சியளிக்கவும் முஸ்அப் பின் உமைர் எனும் தோழரை அண்ணலார்

அனுப்பினார்.

முஸ்அப் செய்த அகப்பணிகளும் புறப்பணிகளும் யத்ரிபைத் திருப்பிப்போட்டன. யத்ரிப்வாசிகள் இஸ்லாத்தை இதயத்தில் பதிக்க வசந்தங்கள் வந்தன.

காலாதிகாலமாக சண்டை போட்டுக்கொண்டிருந்த அவ்ஸ்களும் கஸ்ரஜ்களும் கை கோர்த்துக் கொண்டனர்; தோளோடு தோள் சேரத் தொழுதனர்.

பத்தாண்டுகளாக எடுத்துரைத்தும் மக்காவில் ஏற்படாத மனமாற்றம் யத்ரிபில் ஓராண்டு காலத்தில் ஏற்பட்டது. மக்க மாநகர் கண்களை மூடிக்கொண்டபோது யத்ரிப் மக்கள் கண்களையும், இதயங்களையும் திறந்து வைத்துக் கொண்டிருந்தனர். இஸ்லாத்தைத் தரிசிக்க மறுத்து மக்க மாநகர் முதுகைக்காட்டியபோது யத்ரிப் மக்கள் இஸ்லாத்தை ஆரத் தழுவிக் கொண்டார்கள்.

மக்காவின் அனல்காற்றுக்கூட யத்ரிப்வாசிகளுக்கு தென்றல் காற்றாக இருந்தது. அங்கிருந்து வந்த செய்தியெல்லாம் தேனாக இனித்தது. இஸ்லாத்தைப் பற்றிய செய்திகளும் அண்ணலாரைப் பற்றிய செய்திகளும் யத்ரிப்வாசிகளுக்கு மனோரஞ்சித மலராக மணத்தது.

அண்ணலார்மீது அளவற்ற அன்பை வளர்த்திருந்த யத்ரிப் அன்பர்கள் நேரடிச் சந்திப்பை எதிர்பார்த்திருந்தனர். அண்ணலாரோடு சேர்ந்து வாழத் துடித்தனர். அண்ணலாருக்காக அவர்கள் எதையும் செய்யக் காத்திருந்தனர். அண்ணலார் மொழிகேட்டு அவர்கள் அன்பு செலுத்தவும் வம்பர் மீது அம்பு செலுத்தவும் அணியமாகி நின்றார்கள்.

யத்ரிபில் எழுந்த எழுச்சியும் புத்துணர்ச்சியும் அண்ணலாரை அகமகிழ வைத்தது. யத்ரிப்வாசிகளின் இறைநம்பிக்கை இஸ்லாத்தை உச்சிக்குக் கொண்டு செல்வதாக அமைந்தது.

யத்ரிப்வாசிகளின் இஸ்லாமிய ஈடுபாட்டைப்பற்றிக் கேள்விப்பட்ட அண்ணலார் அவர்களைக் காணவிழைந்தார். அதேபோல் அண்ணலாரை யத்ரிப்வாசிகளும் காண ஆசைப்பட்டனர்.

அழைப்புப் பணிக்காக யத்ரிபுக்கு அனுப்பப்பட்ட முஸ்அப் மக்காவுக்குத் திரும்பி வந்திருந்தார். அவரிடம் அளவளாவிய அண்ணலார் யத்ரிப் முஸ்லிம்களைப் பற்றி முழு நம்பிக்கை கொண்டார்.

யத்ரிபில் இஸ்லாமியத் தென்றல் வீசிக்கொண்டிருக்க மக்காவிலோ அனல் காற்று வீசியபடியே இருந்தது. யத்ரிப்வாசிகள் நேர்வழியில்

பயணம் செய்துகொண்டிருக்க மக்காவாசிகள் கோணல் வழியை விடுவதாக இல்லை. மனத் தெளிவு யத்ரிபிலே, மனக்குழப்பங்கள் மக்காவிலே!

மனத்தெளிவு பெற்றவர்களில் 75 ஆண்களும் இரு பெண்களும் நபித்துவம் பெற்ற பன்னிரண்டாவது ஆண்டில் மக்காவுக்கு வந்தனர். இவர்களோடு இஸ்லாத்தைத் தழுவாத யத்ரிப்வாசிகள் பலரும் வருகை புரிந்திருந்தனர்.

யத்ரிப் முஸ்லிம்கள் அண்ணலாரை சென்ற ஆண்டைப்போல் இந்த ஆண்டும் இரண்டாம் ஜாமத்தில் சந்திப்பதென்றும் அங்கேயே உறுதிமொழி ஏற்று உடன்படிக்கை செய்து கொள்வதென்றும் திட்டமிடப்பட்டிருந்தது.

இரண்டாம் ஜாமத்தில் ஈரக் காற்று வீசிக்கொண்டிருந்தது. பாறைகளும் குன்றுகளும் படுத்துக் கொண்டும் நின்றுகொண்டுமிருந்தன. யத்ரிப் முஸ்லிம்கள் அண்ணலாருக்காகக் காத்திருந்தனர்.

இருள் போர்த்திக் கொண்டிருந்த அந்த இரவில் அண்ணலார் தம் சிறிய தந்தை அப்பாஸுடன் அங்கு வந்தார். இஸ்லாத்தைத் தழுவாதிருந்தும் அப்பாஸ் தன் தம்பி மகனின் பாதுகாவலராக அங்கு வந்தார்.

அண்ணலார் மக்காவைவிட்டு யத்ரிப் செல்லத் திட்டமிட்டிருந்ததை அறிந்திருந்த அப்பாஸ் அதன் சாதகபாதகங்களை நேரில் அறிந்துகொள்வதற்காகவே வந்திருந்தார்.

‘யத்ரிப் சகோதரர்களே! எல்லாவற்றையும் நாம் மனம் திறந்து பேசுவோம். என் அண்ணன் மகனின் தகுதி, உயர்வு, செயல்பாடுகள் ஆகியவற்றை நீங்கள் நன்கு அறிவீர்கள். எங்களில் பலர் முஹம்மது சொன்ன ஏகத்துவத்தை இதுவரை ஏற்கவில்லை. என்றாலும் நாங்கள் இவரை எதிரிகளிடம் ஒப்படைக்க சம்மதிக்கவில்லை. எங்கள் உயிரைவிட இவர் உயிரை உயர்வாகக் கருதுகிறோம். இவரின் தந்தை நூறு ஒட்டக உயிர்களுக்கு ஈடானவர். இவரை நாங்கள் ஆயிரம் உயிர்களுக்கு மேலாகக் கருதிப் போற்றி வருகிறோம். எங்கள் ஹாஷிம் குலத்தின் நம்பிக்கை நட்சத்திரம் முஹம்மது. எங்கள் அண்ணன்தான் கஅபாவைக் காக்கும் பணியைச் செய்து வந்த அபூதாலிப். என் இளவல் ஹம்ஸா பறக்கும் பறவையைக்கூட வில்லைக் கொண்டு வீழ்த்துபவர். எங்கள் தந்தை அப்துல் முத்தலிபைப் பற்றிச் சொல்ல வேண்டியதில்லை.

அவர்தான் ஜம்ஜம்மை மீண்டும் சுரக்கச் செய்தவர். எங்கள் தந்தையின் தந்தை ஹாஷிம் உங்கள் யத்ரிபில் தான் மணம் முடித்திருந்தார். இப்போது இங்குள்ள சூழல் உங்களுக்கு நன்றாகத் தெரியும். எனவே முஹம்மது யத்ரிபுக்குப் புலம் பெயர எண்ணுகிறார். ஆனால் அங்குபோய் முஹம்மது பாதுகாப்பற்று இருந்துவிடக்கூடாது. இவர் எங்கள் கண்ணின் மணி; எங்கள் கல்புக்கனி! எங்கள் கண்ணின் மணியைக் காப்பதற்குரிய சாத்தியக்கூறுகள் இருந்தால் கூட்டிச் செல்லுங்கள். எங்கள் கல்புக்கனியின்மீது சிறு கீறல்கூட விழாமல் காப்பாற்ற முடியுமென்றால் அழைத்துச் செல்லுங்கள்' என நீண்ட உரையாற்றினார் அப்பாஸ்.

'நீங்கள் சொன்னவையெல்லாம் உண்மை. இறைவனின் தூதரை நாங்கள் எங்கள் ஈரல் குலையைப்போல் கருதுகிறோம். எனவே மக்காவிலுள்ள பாதுகாப்பைவிட யத்ரிபில் அதிகமான பாதுகாப்பைக் கொடுப்போம். இறைவனின் தூதரே! எங்கள் உயிரின் உயிரே! எங்களிடம் என்ன உறுதிமொழி வேண்டுமோ, கேளுங்கள். அதை நாங்கள் செய்திட சித்தமாகவுள்ளோம்' என்றார் ஹஸீம். தஹ்யான் என்பாரின் மகனான இவர் யத்ரிபிலுள்ள உயர் குடியைச் சேர்ந்தவர்.

'எனக்கும் உங்களுக்குமிடையே அல்லாஹ்வின் சாட்சியமே போதுமானது. அவன் தன்னுடைய அடிமைகளின் நிலைமைகளை நன்கறிந்து கொண்டும் அனைத்தையும் பார்த்துக் கொண்டும் இருக்கிறான். யாருக்கு அல்லாஹ் நேர்வழிகாட்டுகிறானோ அவரே நேர்வழி பெற்றவர்' (17:9697) என்ற திருக்குர்ஆன் வசனத்தை ஓதிய அண்ணலார் 'நீங்கள் என்னை உங்களுடைய மனைவி மக்களைக் காப்பதுபோல் காத்தாலே போதும், முழுநிறைவடைவேன்' என்றார்.

அப்போது சென்ற ஆண்டே இஸ்லாத்தைத் தழுவியிருந்த அஸ்அத் 'யத்ரிபின் புத்திரர்களே! நீங்கள் இப்போது இஸ்லாத்தின் புத்திரர்களாக உலக மானுடத்தில் சங்கமிக்கப் போகிறீர்கள். இது சாதாரண சங்கதியல்ல. நீங்கள் ஏற்கப் போகும் உறுதிமொழி அனைத்துவித அசத்தியவாதிகளுக்கும் எதிரான போர்ப்பிரகடனம் என்பதைப் புரிந்து கொள்ளுங்கள்' என்றார்.

'புரிந்தே இங்கே பைஅத் கூறி இஸ்லாத்தை ஏற்க வந்துள்ளோம். நாங்கள் போர்க்களங்களில் பிறந்து வளர்ந்தவர்கள். போராயுதங்களே எங்கள் விளையாட்டுச் சாமான்கள். வில்லும் வாளும் ஈட்டியும்கூட எங்கள் மூன்றாம் நான்காம் கரங்களாகியுள்ளன. எவருக்கும் அஞ்சோம்; இறைவனுக்கு மட்டுமே அஞ்சுவோம்' என்றார் பர்ராஃ இப்னு மஃரூர்.

பர்ராஃ அன்றைய யத்ரிப் மக்கள் மதித்த மாபெரும் தலைவர். பர்ராஃ பேசி முடித்த மறுகணம் அண்ணலாரின் கரம் பற்றி இஸ்லாத்தில் இணைந்தார். அடுத்தடுத்து வந்தவர்கள் அனைவரும் அண்ணலாரின் கரம் பற்றி உறுதிமொழி ஏற்றனர்.

‘இப்போது நான் உங்களைச் சேர்ந்தவன். உதிரச் சொந்தத்தைவிட கொள்கைச் சொந்தந்தான் உறுதியானது என நம்புபவன். எனவே நீங்கள் என்னைச் சேர்ந்தவர்கள். நீங்கள் யாருடன் போர் புரிவீர்களோ நானும் அவர்களுடன் போர் புரிவேன். நீங்கள் யாருடன் சமாதானம் செய்து கொள்வீர்களோ நானும் அவர்களுடன் சமாதானம் செய்து கொள்வேன்’ என அண்ணலார் கூறினார்.

‘எமது உடைமைகள், எமது மனைவி மக்கள், எமது தலைவர்கள் என எதை வேண்டுமானாலும் இழப்போம். உங்களை இழக்கச் சம்மதியோம். நாங்கள் எங்கள் வாக்குறுதியை நிறைவேற்றினால் எங்களுக்கு என்ன கிடைக்கும்?’ என இளைய கவிஞர் கஅப் இப்னு மாலிக் கேட்டார்.

‘சொர்க்கம்!’ என அண்ணலார் சுருக்கமாகக் கூறினார்.

அதன்பின் அங்கு வந்திருந்தவர்களில் பனிரெண்டு பேரைத் தேர்ந்தெடுத்து அடுத்தடுத்த பணிகளை முடிக்கவும் யத்ரிபைக் கேந்திரமாக்கவும் ஆவன செய்யப்பட்டன. இந்த உடன்படிக்கையே இரண்டாம் அகபா உடன்படிக்கையாகும்.

இந்த உடன்படிக்கை எப்படியோ குறைஷியரை எட்ட யத்ரிப்வாசிகள் மக்காவைப் பிடிக்க நினைக்கின்றனரா அல்லது அழிக்க நினைக்கின்றனரா எனும் கேள்வி எழுந்தது.

கேள்வி எழும் முன்னரே யத்ரிப்வாசிகள் கூடாரங்களைக் காலி செய்திருந்தனர்.

## மக்காவில் ஜபல் அல்நூர் காற்று!

ஜபல் அல்நூர் மலை

மக்காவை அடுத்துள்ள மலையின் உச்சியிலிருந்து புறப்பட்ட காற்று அண்ணலார் தவசியாக அமர்ந்திருந்த ஹிராக்குகைக்குள் சென்று விட்டுத் திரும்பியது.

அண்ணலார் ஹிராக்குகைக்குள் அமர்ந்து இறைவனைத் தொழுது கொண்டிருந்தபோதும் அவர்கள் மக்காவுக்குள் சென்ற போதும்

தொடர்ந்து கண்டு கொண்டிருந்த காற்றுக்கு இப்போது காணக்கூடிய வாய்ப்புக் கிடைக்கவில்லை.

அப்போது காற்றுக்கு அண்ணலாரைக் காண வேண்டுமென்ற ஆவல் அதிகரித்தது. ஆகவே, அது உடனே தயங்காமல் மக்காவை நோக்கிச் சென்றது; கதிஜா பிராட்டியாரின் இல்லம் சென்று நின்றது.

அது சென்ற நாளுக்கு ஓரிரு மாதங்களுக்கு முன்புதான் அண்ணலாரும் ஹாஷிமிகளும் முத்தலிபுகளும் திறந்தவெளிச் சிறையிலிருந்து மீண்டு மக்காவுக்குள் வந்திருந்தார்கள். அவர்களை மீட்டவர்கள் குறைஷிகளின் எதிரிகளல்லர், குறைஷிகளைச் சேர்ந்தவர்களே.

அக்காலகட்டத்தில் ஏதாவது ஒரு காரணத்தைக் கூறி ஒரு கோத்திரத்தாரை பிற கோத்திரத்தார்கள் ஒன்றாகச் சேர்ந்து ஊர்விலக்கல் செய்துவிடுவர். அப்போது விலக்கப்பட்டவர்கள் ஊர்க்கட்டுப்பாட்டுக்கு ஆட்படத்தான் வேண்டும். அதை எதிர்க்க முடியாது. ஆகவே ஹாஷிமிகளும் முத்தலிப்களும் ஊர்விலக்கலை ஏற்று பள்ளத்தாக்கில் குடிபுகுந்தனர். அதன்பின் ஊர்விலக்கலை நடைமுறைக்குக் கொண்டுவந்தவர்களிடையே இருந்த நல்லவர்கள் எடுத்த நடவடிக்கையால் அபூதாலிபைச் சார்ந்தவர்கள் அசத்தியவாதிகளின் பிடியிலிருந்து விடுபட்டனர்.

அதன்பின் கோடைமழையெனப் பெருமழை பெய்தது. இஸ்லாமிய அழைப்புப் பணி பெருமளவில் நடந்தது. அபூபக்கர், உமர், ஹம்ஸா ஆகியோர் முன்னணிவகிக்க இஸ்லாம் மக்கா முழுவதும் எடுத்துரைக்கப்பட்டது. அண்ணலாரின் இல்லத்திலும் அர்கமின் இல்லத்திலும் கமுக்கமாகக் கூடியவர்கள் கஅபாவில் கூடினார்கள். கூடியவர்கள் கலந்து பேசியும் அணியாக நின்று தொழுதும் அச்சமின்றி நடமாடினார்கள்; கச்சைகட்டி எதிர்த்தவர்கள் கைபிசைந்து நின்றார்கள். இறைவன் ஒருவன் எனும் பிரகடனம் சிலைகளை வீழ்த்துவதுபோல் ஒலித்தது. இறைவனுக்கு இணைவைத்தவர்களின் குரல் ஈனஸ்வரமாகிப் போனது.

அண்ணலார் கஅபாவுக்கு வந்தபோது உடன் வந்த ஜபல் அல்நூர் காற்று அங்கு கண்ட காட்சிகளால் புல்லரித்துப் போனது. ஹிராக்குகைக்குள் வழங்கப்பட்ட வசனம் எப்படியெல்லாம் மக்காவைப் புரட்டிப்போட்டுக் கொண்டிருக்கிறது என்பதைக் கண்ட அது அளவற்ற மகிழ்ச்சியுடன் ஆனந்தப் பூங்காற்றாக மாறியது.

அந்தப் பூங்காற்றுக்கு நாலு திக்குகளிலும் சென்று அன்றைய மக்காவின் காட்சிகளைச் சொல்ல ஆசை வந்தது. முதலில் அது புறப்பட்டு தென்மேற்குத் திசையில் சென்று அபிசீனியாவுக்குப் பயணம் போக விரும்பியது.

அபிசீனியா செல்வதற்கும் அங்கு சென்று செய்தி சொல்வதற்கும் விரும்பிய காற்று செங்கடலோரம் சென்றபோதே புலம் பெயர்ந்து சென்றவர்கள் மக்காவை நோக்கி வந்து கொண்டிருந்தார்கள்.

அவர்களோடு கைகுலுக்கிக் கட்டித் தழுவிய காற்று அவர்களின் கால்தடம் பற்றியே மீண்டும் மக்காவுக்கு வந்தது.

பள்ளத்தாக்கிலிருந்து மீண்டு வந்தபிறகு மக்கா முஸ்லிம் பட்டணமாக மாறிக் கொண்டிருந்தது. குறைஷிகளின் எண்ணிக்கை குறைந்துவிட்டது. முஸ்லிம்கள் முன்னணிக்கு வந்து விட்டார்கள் என்ற செய்தி கேட்டே புலம் பெயர்ந்தவர்கள் மக்காவுக்குள் வந்து கொண்டிருந்தனர்.

மக்காவுக்குள் வந்தவர்கள் நேராக அண்ணலாரைச் சென்று சந்தித்தார்கள்.

நபித்தோழர் ஜாஃபர் தய்யார் திரும்பியதும் அண்ணலாரைச் சந்தித்தார். அவரைக் கண்டதும் எழுந்து சென்ற அண்ணலார் உள்ளம் பூரித்து ஆரத்தழுவி இரு புருவங்களிடையே முத்தமிட்டார்.

இக்ரிமா அண்ணலாரைச் சந்திக்க வந்தபோது ‘புலம் பெயர்ந்து சென்று வந்திருக்கும் கொள்கைப் பயணிக்கு வரவேற்பு’ என முகம் மலர்ந்து கூறினார்.

காற்றும் அவர்களோடு கைகுலுக்கியது, கட்டியணைத்தது, முத்தமிட்டது. அவர்கள் கன்னத்தைத் துடைத்துக் கொண்டார்கள்.

அண்ணலார் அபிசீனியாவிலிருந்து திரும்பி வந்த தோழர்களிடம் ‘பயணங்கள் எப்படியிருந்தன!’ எனக் கேட்டனார்.

‘வணிகப் பயணமாகவும் சுற்றுலாப் பயணமாகவும் இல்லாமல் நாங்கள் சென்ற ஹிஜ்ரத் பயணம் புனிதப் பயணம் இல்லையென்றாலும் வரலாற்றில் குறிப்பிடத்தக்க பயணந்தான்! கால்நடைப் பயணம், ஒட்டகப் பயணம், குதிரைப் பயணம் எனப் பயணங்களை மேற்கொண்ட எங்களுக்கு அபிசீனியப் பயணம் கடற்பயணம்! அது வானத்தோடும் விண்மீன்களோடும் அலைகளோடும் காற்றோடும் எங்களைப் பேசச் செய்தது’ என்றனர் தோழர்கள்.

‘உங்கள் (உண்மையான) இறைவன் யாரெனில், அவன்தான் உங்களுக்காக கடலில் கப்பலைச் செலுத்துகிறான்; நீங்கள் அவனது அருளைத் தேடும் பொருட்டு! திண்ணமாக, அவன் உங்களுக்கு மிகவும் கிருபை புரிபவனாக இருக்கின்றான்’ என்ற திருக்குர்ஆன் (17:66) வசனத்தை அண்ணலார் ஓதிக்காட்டினார்.

ஜாபரையும் உபைத்துல்லாஹ் இப்னு ஜஹ்ஷையும் தவிர்த்து அண்ணலாரின் ஒன்றுவிட்ட சகோதரர்கள் அனைவரும் அபிசீனியாவிலிருந்து மக்காவுக்கு திரும்பிவந்திருந்தனர்.

அண்ணலார் வீட்டைச் சுற்றி வந்த ஜபல் அல் நூர் காற்று கஅபாவுக்குச் சென்றது.

அப்போது அங்கே கூடியிருந்த குறைஷிகளிடையே அரபுப் பெருங்கவிஞர் லபீத் தலைப்பாகையுடன் அமர்ந்திருந்தார். அரபுகள் கவிதைச் கலையில் வல்லுநர்கள். அவர்களின் உரையாடல்களே கவிதைகளாகத்தான் இருக்கும். அக்கால கட்டத்தில் மக்காவிலிருந்த சில கவிஞர்கள் அபூதாலிப், அபூசுப்யான், ஹுபைரா ஆகியோர். இவர்களைவிடப் புகழ்பெற்ற கவிஞர் லபீத்.

கவிஞரைக் கண்ட காற்று, கவிதைகேட்க கஅபாவைச் சுற்றிச் சுற்றி வந்தது.

அங்கே உத்மான் இப்னு மஸ்ஊனும் இருந்தார். முஸ்லிமான இவர் அண்மையில்தான் அபிசீனியாவிலிருந்து வந்திருந்தார். ஜுமாஹ் கோத்திரத்து உத்மான், மக்சூமி வலீதைப் பொறுப்பாளராக ஏற்றிருந்தார். தன்னுடைய ஒன்றுவிட்ட சகோதரர்களான உமையாவும் உபையும் வதைப்பர் என எண்ணியே வலீதின் உதவியை நாடியிருந்தார். பின்னர் இறைவனின் உதவியே போதுமென எண்ணி வலீதின் பொறுப்பைவிட்டு நீங்கினார்.

இச்சூழலில் உத்மான் கஅபாவில் நடந்த கவிதைப் பொழிவைக் கேட்க உட்கார்ந்திருந்தார். அப்போது அங்கே வலீதும் இருந்தார்.

கவிஞர் பாடினார்:

நிலையற்ற கதிரவன், நிலையற்ற மதியவன்

நிலையானவன் ஒருவன், அவனே இறைவன்

கவிதையைக் கேட்ட உத்மான் ‘உண்மை, உண்மை!’ என உற்சாகக் குரல் எழுப்பினார்.

‘எதுதான் நிலைத்தவை? எதுவுமே இல்லை!

மதுதரும் மகிழ்ச்சி, மங்கையின் குளிர்ச்சி,

புதுப்புது மகிழ்ச்சிகள், பழைய மகிழ்ச்சிகள்

எதுவுமே நிலைக்கா! அழிந்தே போகும்!’

எனக் கவிஞர் லபீத் மொழிந்த மறுகணம் ‘பொய்யுரைக்கிறீர் பொய்யுரைக்கிறீர்!’ எனக் கத்தினார் உத்மான்.

‘சுவர்க்கத்து மகிழ்ச்சிக்கு ஒருபோதும் அழிவில்லை!’ என்று அவர் கூறியதைக் கேட்டு குறைஷிகளுக்குக் கோபம் வந்தது. கவிஞர் அக்கினிப் பிழம்பானார்.

‘ஏனிந்த குறுக்கீடு, யாரிந்த மனிதர்? விருந்தாளியை மதிக்கத் தெரியாத இவர் இங்கே தேளாகக் கொட்டுவதேன்?’ என கவிஞர் கேட்கக் கூட்டத்தில் குழப்பம்.

‘கவிஞர் பெருமானே! இங்கே நாவிலே தேனேந்தி வந்திருக்கும் உம்மை நாவிலே நஞ்சேந்தி வந்திருக்கும் இவர் எதிர்ப்பாட்டு பாடியதற்கு மன்னிப்புக் கேட்டுக் கொள்கிறோம். இவர் ஒரு மடையர், அதனால்தான் இவர் நம் பழைய மார்க்கத்தைவிட்டுப் புதிய மார்க்கத்தில் சேர்ந்துள்ளார்’ என்ற ஒரு குறைஷி உத்மானைத் தாக்கினார்.

தாக்குதலால் கண்ணில் அடிபட்ட உத்மான் கஅபாவை விட்டு வெளியேறி அண்ணலாரின் இல்லத்தை நோக்கி நடந்தார்.

ஒரு துன்பியல் காட்சியைக் கண்ட காற்று கவலைப்பட்டது. அது உத்மானைப் பின் தொடர்ந்தது; கவிதையைப் புறக்கணித்தது.

உத்மான் கஅபாவில் நடந்ததை அண்ணலாரிடம் உரைக்க ‘நிலையானவன் இறைவன் ஒருவனே என்ற கவிஞர் லபீத் மகிழ்ச்சிகள் நிலைக்காது எனக் கூறியபோது அவை பூவுலக மகிழ்ச்சிகள் என்று கூறியிருக்க வேண்டும்’ என்றார் அண்ணலார்.

> திருக்குர்ஆன் கூறுகிறது: ‘இந்தப் பூமியின் மேலுள்ள ஒவ்வொரு பொருளும் அழியக் கூடியதே! கம்பீரமும் கண்ணியமும் உடைய உம் அதிபதி மட்டுமே நிலைத்திருப்பவன் ஆவான்.’

(திருக்குர்அன் 55: 26 27)

‘எவர்கள் நற்பேறுடையவர்களோ அவர்கள் சொர்க்கம்

செல்வார்கள். வானங்களும் பூமியும் இருக்கும் காலமெல்லாம் அங்கே அவர்கள் நிலையாகத் தங்கியிருப்பார்கள்; ஆனால் (அந்நிலையை மாற்ற) உம் இறைவன் நாடினாலே தவிர! முடிவுறாத அருட்கொடைகள் (அங்கு) அவர்களுக்குக் கிடைத்துக் கொண்டே இருக்கும்.’

(திருக்குர்ஆன் 11: 108)

ஜபல் அல் நூர் காற்றுக்கு மக்காவில் நடந்த நிகழ்ச்சிகளெல்லாம் அறிவுக் கொள்முதலாக இருந்தது. அண்ணலாரைச் சந்தித்த மனநிறைவோடு திரும்பிச் செல்ல எண்ணிய காற்று குளிர்க்காற்றாய் மாறியிருந்தது.

மக்காவில் கண்ட காட்சிகளை ஜபல் அல் நூர் மலைக்குச் சொல்ல விரும்பிய காற்று பிறந்த இடந்தேடி பெருமையோடு நடந்தது.

## புலம் பெயர்ந்தவர்கள்

மக்காவிலிருந்து யத்ரிபுக்குச் செல்ல அண்ணலார் ஊக்குவித்தார்கள். உண்டும் உறங்கியும் வாழ முடிந்த மக்காவில் ஏகத்துவத்தைக் கடைப்பிடிக்க எழுந்த எதிர்ப்புகளைச் சமாளிக்கப் புலம் பெயர்தல் அவசியமாக இருந்தது.

அபூதாலிப் இறந்தபின் அண்ணலார் முத்இம்மின் பொறுப்பில் வாழ்ந்தார். அபூஸலாமா எனும் அபூதாலிபின் மருமகனுக்குப் பொறுப்பாளர் கிடைக்கவில்லை. அவர் யத்ரிப் செல்ல ஆயத்தமானார்.

அபூஸலாமா தன் மகன் ஸலாமாவைக் கையிலேந்தியபடி மனைவி உம்முஸலாமை ஒட்டகத்தில் உட்காரவைத்து யத்ரிபை நோக்கிப் புறப்பட்டார்.

மக்ஸூமிகளின் அடுத்த கிளையான பனூ அல் முகீராவைச் சேர்ந்தவர் உம்மு ஸலாமா, மக்ஸூமியான அபூஜஹ்லின் ஒன்றுவிட்ட சகோதரி! எனவே பனூ முகீராக்களும் மக்ஸூமிகளும் உம்மு ஸலாமாவை யத்ரிப் செல்ல அனுமதிக்கவில்லை; அபூஸலாமா மட்டும் யத்ரிப் சென்றார்.

இவர்தான் யத்ரிபுக்குப் புலம் பெயர்ந்த முதல் முஸ்லிம். சில காலம் கழித்து உம்மு ஸலாமாவும் ஸலாமாவும் யத்ரிப் செல்ல குறைஷிகள் அனுமதித்தனர்.

இரண்டாவது அகபா உடன்படிக்கைக்குப் பின்னர் பெரும்பாலான முஸ்லிம்கள் யத்ரிபுக்குப் புலம் பெயர்ந்து சென்றனர். அவர்கள் அனைவரும் குறைஷிகளின் கண்களில் படாமலேயே இரவோடிரவாக வெளியேறினர்.

அண்ணலாரின் ஒன்றுவிட்ட சகோதரர்களில் சிலர் யத்ரிப் சென்றனர். ஜஹ்ஷ் உமைமா தம்பதியரின் குடும்பத்தில் நால்வர் சென்றனர். புதல்வர்கள் அப்துல்லா அபூஅஹ்மத், புதல்விகள் ஸைனப் ஹம்னா ஆகியோரே நால்வர். நீண்ட காலமாக அப்த் ஷம்ஷின் பொறுப்பில் வாழ்ந்த பனூ அஸத்களில் பலரும் புலம் பெயர்ந்து சென்றனர்.

ஹம்ஸாவும் ஜைதும் மனைவியரை மக்காவில்விட்டு தனியாக யத்ரிப் சென்றனர். உத்மான் ருகையாவை அழைத்துச் சென்றார். அண்ணலாரின் ஒன்றுவிட்ட சகோதரர்கள் ஸுபைரும் துலைபும் யத்ரிப் புறப்பட்ட செய்தி குறைஷிகளைச் குமுறச் செய்தது.

அபூஸலாமாவின் ஒன்றுவிட்ட சகோதரர் அபூஸப்ரா தனது மனைவியும் ஸுஹைலின் மகளுமான உம்மு குல்தூமைக் கூட்டிச் சென்றார்.

பெரும்பாலோர் இரவிலும் மறைவாகவும் புலம் பெயர்ந்து கொண்டிருக்க ஒரே ஒரு குடும்பம் பகலிலே பகிரங்கமாகப் புறப்பட்டது. அது உமர் பாரூக்கின் குடும்பம்.

குறைஷிகளுக்கு சவால்விட்ட வண்ணம் கையில் வாளேந்திப் புறப்பட்ட உமர்பாரூக்கைப் பின் தொடர்ந்து மனைவி ஸைனப், மகள் ஹப்ஸா, மருமகன் குனைஸ், மகன் அப்துல்லாஹ் ஆகியோர் சென்றனர்.

புலம் பெயர்தலைத் தடுக்க குறைஷிகள் முயன்றபோதும் அவர்களால் வெற்றி பெற முடியவில்லை. ஏதிலிகளைத்தான் அவர்கள் மிரட்டிப் பணியவைக்க முடிந்தது. எதிர்த்தவர்களை எதுவும் செய்ய முடியவில்லை.

அபூஸப்ரா மனைவியின் தங்கையும் ஸுஹைலின் மகளுமான இளைய நங்கை தனது கணவர் அபூஹுதைபாவுடன் யத்ரிப் சென்றுவிட்டார். இவர்கள் அபிசீனியாவுக்கு புலம் பெயர்ந்து மீண்டவர்கள்.

ஸுஹைலின் மகள்கள்தான் கணவர்களுடன் யத்ரிப் சென்றுவிட்டனரென்றால் அருமை மகன் அப்துல்லாஹ்வை அவர்

எப்படி இழக்கச் சம்மதிப்பார்? அப்துல்லாஹ்வும் அபிசீனியா புலம் பெயர்ந்து மீண்டவர்தான்!

அப்துல்லாஹ்வைப்போல் அபிசீனியா சென்று மீண்ட ஸஹ்மியத் தலைவர் ஆஸ்ஸின் மகன் ஹிஷாம் யத்ரிப் செல்ல ஆயத்தமானார்.

ஹிஷாம், ஹிஷாமின் சிற்றன்னை மகன் உமர், மக்ஸூமின் அய்யாஷ் ஆகிய மூவரும் மக்காவிலிருந்து தனித் தனியாகப் புறப்பட்டு பத்து மைல்களுக்கு அப்பாலுள்ள அதாத் எனுமிடத்தில் சந்திப்பதற்கு ஏற்பாடு செய்து கொண்டனர்.

உமர் மட்டும் புறப்படவில்லை, அவருடைய குடும்பமே புறப்பட்டு அதாத் வந்தடைந்தது. அதைப்போல் அய்யாசும் வந்தடைந்தார். ஹிஷாமால் வரமுடியவில்லை. அவர் தந்தையாலும் தமயனாலும் தடுத்து நிறுத்தப்பட்டார். அதன்பின் அவர் இஸ்லாத்தைத் துறக்கும் நிலைக்குத் தள்ளப்பட்டார்.

உமர் குடும்பத்தார் யத்ரிப் சென்று நிம்மதியாக வாழ்ந்தனர். அய்யாசை, அவருடைய ஒன்றுவிட்ட சகோதரர் அபூஜஹ்ல் ஹாரிசுடன் சேர்ந்து அடித்து உதைத்து மக்காவுக்கு கொண்டு வந்துவிட்டார்.

அய்யாசும் ஹிஷாமைப்போல் இஸ்லாத்தைத் துறந்தார். இருவருமே இஸ்லாத்தைப் புறத்தால்தான் துறந்தார்கள், அகத்தால் துறக்கவில்லை.

இவர்களைப் பற்றி இறைமறை எடுத்துரைப்பதைப் பாருங்கள்:

‘தங்கள் ஆன்மாக்களுக்குக் கொடுமை இழைத்துக்கொண்ட என் அடிமைகளே! அல்லாஹ்வின் கருணை பற்றி நம்பிக்கை இழந்துவிடாதீர்கள். திண்ணமாக, அல்லாஹ் எல்லாப் பாவங்களையும் மன்னித்துவிடுகின்றான். அவன் பெரிதும் மன்னிப்பவனும் கருணையாளனும் ஆவான். திரும்பி விடுங்கள், உங்கள் இறைவனின் பக்கம்! மேலும், அடிபணிந்துவிடுங்கள் அவனுக்கு உங்கள்மீது வேதனை வருவதற்கு முன்பாகவே! பிறகு, எங்கிருந்தும் உங்களுக்கு உதவி கிடைக்காது.’

(திருக்குர்ஆன் 39: 53 54)

இந்த வசனங்கள் உமரால் ஹிஷாமுக்கு அனுப்பப்பட்டு அய்யாசையும் அடைந்தன. அவர்கள் மீண்டும் இஸ்லாத்தில் நுழைய ஒரு தக்க தருணத்தை எதிர்பார்த்து மக்காவிலிருந்துத் தப்பிச் செல்ல

திட்டமிட்டுக் கொண்டிருந்தனர்.

# 17. இரு திருமணங்கள்

## இரு திருமணங்கள்

அண்ணலாரின் திருமணங்கள் அர்த்தம் பொதிந்தவை; எல்லாமே இறைவனின் ஏற்பாடுகள். முதல் திருமணம் வாழ்க்கைத் துணை நலம், இயக்க வளர்ச்சிக்கு உதவியதென்றால் இரண்டாம் திருமணம் தாயற்ற பிள்ளைகளை வளர்க்கவும் மூன்றாவது திருமணம் இல்ல, இயக்கப் பணிச் செயல்களுக்காகவும் உதவின. இவ்வாறு அண்ணலாரின் திருமணங்களின் காரணங்களையும் அவற்றின் பல்வேறு விளைவுகளையும் சொல்லிக்கொண்டே செல்லலாம்.

மூன்றாம் திருமணத்துக்குப் பின் நிகழ்ந்த திருமணங்கள் பெரும்பாலும் கைம் பெண்களின் மறுமணங்களாகவே அமைந்தன. அவை கூட குலம், கோத்திரங்களை இணைப்பதாகவே அமைந்தன. கடைசியாக நிகழ்ந்த மாரியத்துல் கிப்தியாவின் திருமணம் அடிமைப் பெண்ணின் விடுதலை சாசனமாக அமைந்தது.

கதீஜா பிராட்டியார் மரணம் அடைந்ததும் அண்ணலாருக்குத் துணை இல்லை என்பதை விட பிள்ளைளுக்குத் துணையில்லை என்பதைத்தான் நாம் கருத்தில் கொள்ள வேண்டும்.

அதற்காகவே அண்ணலார் செளதாவை மணந்தார்.

ஒருநாள் கவ்லா எனும் குடும்பத்தோழி அண்ணலாரின் இல்லம் வந்தார். ஹக்கீம் என்பாரின் மகளான இவர் உத்மான் இப்னு மஸ்ஊனின் மனைவியாவார். உத்மான் மாவீரர் உமரின் மனைவி ஸைனபின் சகோதரர். ஏகத்துவ எண்ணமும் துறவு மனப்பான்மையும் கொண்ட இவர்தான் கஅபாவில் கவிஞர் லபீத் கவிதை பாடியபோது எதிர்த்துக் கேள்வி கேட்டவர்.

கவ்லா கதிஜாப் பிராட்டியாருடன் மிக நெருங்கிய அன்பு செலுத்தியவர். பிள்ளைகளைப் பேண உதவியாக இருந்தவர். பிராட்டியாரின் மரணம் முதற்கொண்டு அண்ணலாரின் குடும்பத் தேவைகளை நிறைவேற்றிவந்தவர்.

அண்ணலாரிடம் பேசிக்கொண்டிருந்த தோழியர் கவ்லா ‘ஏன் நீங்கள் மறுமணத்தைப் பற்றிச் சிந்திக்கக்கூடாது? உங்களுக்கும் துணையாக இருக்கும்; பிள்ளைகளுக்கும் பாதுகாப்பாக இருக்கும்’ என்றார்.

‘கதிஜாவின் இடத்தை வருபவர் பூர்த்தி செய்வாரா?’ என அண்ணலார் கேட்டார்.

‘பிராட்டியாரின் இடத்தைப் பூர்த்தி செய்வார் எனக் கூறமாட்டேன். ஆனால் உங்கள் இல்லத்தில் மறுமலர்ச்சி ஏற்படும். மனவேதனை குறையும்; நிம்மதிப் பூக்கள் பூக்கும்’ என்றார் கவ்லா.

‘அப்படியானால், நான் சம்மதித்தே ஆகவேண்டும். யாரந்த குடும்ப விளக்கு?’ என அண்ணலார் கேட்க கவ்லா ‘ஒரு விளக்கல்ல, இரு விளக்குகள்’ என்றார்.

‘புதிர் போடுகிறீர்களே! யார் அவர்கள்?!’

‘ஒருவர் கன்னிப்பெண், மற்றொருவர் கைம்பெண்!’

‘மேலும் புதிரா?’

‘புதிருக்கான விடைகள் இதோ! கன்னிப் பெண் அபூபக்கரின் இளையமகள் ஆயிஷா! கைம்பெண் ஸம்ஆ உடைய மகள் சௌதா!’

‘இருவரையுமா நான் மணக்க வேண்டும்? அவர்களின் பெற்றோர்கள் சம்மதிப்பார்களா?’

‘கட்டாயம் சம்மதிப்பர். ஆயிஷா உங்கள் பணிகளுக்குத் துணையாக இருப்பார். சௌதா உங்கள் வீட்டுப் பணிகளுக்குத் துணையாக இருப்பார்’ என்ற கவ்லா அண்ணலாரின் சம்மதத்தோடு மணப்பெண்களின் வீடுகளுக்குச் சென்றார்.

முதலில் சௌதாவின் வீடு

ஸம்ஆ உடைய மகள் சௌதா தொடக்கத்தில் இஸ்லாத்தைத் தழுவிய சுக்ரான்பின் அம்ருவின் மனைவி. கணவரோடு அபிசீனியாவுக்குப் புலம் பெயர்ந்து சென்றுவிட்டுத் திரும்புகையில் சுக்ரான் மரணமடைய சௌதா விதவையானார்.

சௌதாவிடம் கவ்லா தான்வந்த நோக்கத்தைக் கூற அவர் தன் மைத்துனர் ஹாதிபிடம் பேசச் சொன்னார். ஹாதிப் சம்மதிக்க கவ்லாவுக்கு மணவிழாவே நடந்துவிட்டது போலிருந்தது. சௌதாவுக்கு ரெட்டிப்பு மகிழ்ச்சி; ஒன்று மறுமணம், இரண்டு அண்ணலாரே மண

மகனாகக் கிடைத்தது.

அடுத்து ஆயிஷாவின் இல்லம்

கவ்லா அபூபக்கரின் துணைவியார் உம்மு ரூமானைச் சந்தித்துப் பேசினார். கவ்லா அண்ணலாரின் விருப்பத்தை ஆயிஷாவின் தாயாரிடம் சொன்னபோது அவர் அளவற்ற மகிழ்ச்சியடைந்தார்.

‘எவ்வளவு உயர்ந்த ஏற்பாடு இது? அண்ணலாரின் தோழமை இப்போது வந்துவிடுவார். அவரிடமே நீங்கள் கலந்து பேசிவிடுங்கள்’ என்ற உம்மு ரூமான் மகிழ்ச்சியோடு கவ்லாவோடு நீண்ட நேரம் பேசிக் கொண்டிருந்தார்.

அபூபக்கர் வந்தபின் கவ்லா ஆயிஷாவின் திருமணம் பற்றிப் பேசினார். ‘தோழமை பலம் பெறும், ஆயிஷாவின் தொண்டு நலம் பயக்கும்’ எனக் கருதிய அபூபக்கர் சம்மதத்தைச் சொல்ல சிறிது தடுமாறினார்.

காரணம், அபூபக்கர் தன் மகளுக்கு மணம் முடிக்க ஒரு மணமகனைப் பேசி வைத்திருந்தார். அந்த மணமகன் முத் இம்மின் மகன் ஜுபைர்.

ஜுபைரைத் தவிர்ப்பதெனவும் அண்ணலாரை ஏற்பதெனவும் முடிவெடுக்க சிறிது நேரமானது. அதன்பின்னரே அபூபக்கர் தன் மகள் ஆயிஷாவை அண்ணலாருக்கு மணம் முடித்துக் கொடுக்க சம்மதித்தார்.

சௌதாவுக்குப் பெற்றோர்களில்லை, எனவே தனது மைத்துனர் ஹாதிப்பைப் பொறுப்பாளராக்கிக் கொண்டார். ஹாதிப்பே சௌதாவை மணம் முடித்துக் கொடுத்தார்.

சௌதாவை மணந்த சில மாதங்கள் கழித்து ஆயிஷாவை அண்ணலார் மணந்து கொண்டார். அப்போது ஆயிஷா சின்னஞ்சிறு பெண்.

## சதித்திட்டம்!

பழைய மார்க்கத்திலேயே இருக்கும் குறைஷி ஒருவர் பட்டியில் அடைக்கப்பட்ட மிருகத்தைப்போல் இருக்க புதிய மார்க்கத்தைத் தழுவியவர் விடுதலை பெற்ற வீரரைப்போல் திகழ்கிறார். முன்னவர் கூண்டில் அடைக்கப்பட்ட பறவைபோல் இருக்க பின்னவர் விண்ணைச்சாடி காற்றைக் கிழிக்கும் ராஜாளிபோல் பறக்கிறார்.

இந்த வித்தியாசத்தைப் பெரும்பாலான முஸ்லிம்களிடம் கண்ட குறைஷிகள் கொதித்துப் போயினர். வாயடைத்துக் கிடந்தவர்கள் வாய்திறந்து கேள்விகளைக் கேட்டபோது இறைநிராகரிப்பாளர்கள் என்ன செய்வதெனத் தெரியாமல் மருண்டு போயினர்.

கஅபாவில் கவிஞர் லாபித் கவிதை படித்தபோது உத்மான் செய்த விமர்சனம் கூண்டைத் திறந்து கொண்டு வந்த சிங்கத்தைப் போலவும் விண்ணைக் கிழித்துக் கொண்டு பறந்த ராஜாளியைப் போலவும் இருந்தது.

கவிஞர் லாபித்தை உத்மான் கேள்வி மட்டும் கேட்கவில்லை, அவமானப்படுத்தியும் விட்டார். இது லாபித்தை மட்டும் பாதிக்கவில்லை, எல்லாக் குறைஷிகளையும் பாதித்தது.

உத்மானின் எழுச்சிக்கும் வாய்த்துடுக்கும் காரணம் இஸ்லாமே எனக் குறைஷிகள் எண்ணினர். ‘அடித்தும் உதைத்தும் விரட்டியும் முஸ்லிம்கள் திருந்திய பாடில்லை; ஊர்விலக்கல் செய்தும் மூன்றாண்டுகள் துன்பப்பட்டும் பாடம் படிக்கவில்லை’ என்ற கருத்து ஒவ்வொரு குறைஷியரையும் எதிர்வினையாற்றச் செய்தது.

ஒருமுறை குறைஷிகளை நேருக்கு நேராக எச்சரித்த அண்ணலார் ‘உங்களுக்கு இஸ்லாமே அழிவைக் கொண்டு வரப்போகிறது!’ என்றனார். இந்த எச்சரிக்கையை ஒரு சாதாரண தகவலாக எடுத்துக்கொண்ட குறைஷிகள் ஊர்விலக்கல் அகற்றப்பட்டபின் அதை வேடிக்கைப் பேச்சென எண்ணினர். அவ்ஸ் கஸ்ரஜ் சகோதரர்கள் அண்ணலாரைச் சந்தித்து இஸ்லாத்தைத தழுவியதைக் கேள்விப்பட்ட குறைஷிகள் அண்ணலாரின் பேச்சை எண்ணிப் புத்தியைத் தீட்டினர். அதன்பின் மக்கா முஸ்லிம்கள் யத்ரிபுக்குப் புலம் பெயர்ந்ததைக் கண்ட குறைஷிகள் கத்தியைத் தீட்டினர்.

மக்காவிலிருந்து சென்ற முஸ்லிம்களும் யத்ரிபைச் சேர்ந்த முஸ்லிம்களும் பெரும்பாலோராகி அக்கம் பக்கத்து பழங்குடி மக்களும் முஸ்லிமாகி ஒன்றாகச் சேர்ந்து கஅபாவைக் கைப்பற்றினால் என்ன செய்வது?

புரோகிதர்களாகவும் விவசாயிகளாகவும் இருந்த மக்கத்துக் குறைஷிகள் வணிகர்களானதால் அதிக அளவு பரிணாமம்! அவர்கள் தாக்கப்பட்டதும் தாக்கியவரைத் தாக்கியதும்தான் அவர்கள் கண்ட போர்க்களம்! அவர்கள் போர்வீரர்களல்லர்! வாளேந்துவர் தமக்குள் சண்டை வந்தால், வில்லேந்துவர் வேட்டைக்குச் சென்றால்,

குதிரையேறுவர் பயணம் சென்றால்!

ஆனால் யத்ரிப் அவ்ஸ் கஸ்ரஜ் அரபுக்கள் போர் வீரர்கள்! அவர்கள் வில்லோடும் வாளோடும் பிறந்ததாகப் பெருமையோடு கூறுவார்கள். இருகுலங்களுக்கும் எப்போதுமே போர்தான்! எப்போதாவது யாராவது வெளியார் சண்டைக்கு வந்தால் ஆயுதங்களைத் தேடிக் கொண்டிருக்க மாட்டார்கள். அரையிலேயே வைத்திருப்பார்கள். ஒவ்வொரு வீட்டிலும் வாளும் கேடயமும்!

விவசாயிகளாகவும் வீரர்களாகவும் திகழ்ந்த அவ்ஸ் கஸ்ரஜ் மக்கள் இஸ்லாத்தின் ஒரே குலமாக மாறிக்கொண்டிருந்தார்கள். மக்காவிலிருந்து சென்றவர்களும் அவர்களோடு சேர்ந்து புதிய சமுதாயமாக உருமாறிக் கொண்டிருந்தார்கள்.

மொத்த முஸ்லிம்களும் படை நடத்தி வந்து கஅபாவைக் கைப்பற்றினால் குறைஷிகள் கைபிசைந்தே நிற்க வேண்டும். அப்ரஹா சன்ஆ பட்டணத்திலிருந்து வந்தபோது அவாபீல்கள் கஅபாவைக் காப்பாற்றின. முஸ்லிம்கள் படையெடுத்து வந்தால் எதிர்த்து நிற்க முடியாது, சரணாகதி ஒன்றே சரியான செயலாக இருக்கும். அதன்பின் வணிகம், தோட்டந்துரவு, வாழ்வு?

குறைஷிகள் குழம்பிப் போயினர்; தம்மைச் சேர்ந்தவர்களையே சந்தேகக் கண் கொண்டு பார்த்தனர். யார் எப்போது முஸ்லிமாகி தமக்கு எதிரியாகிவிடுவார் எனத் தெரியவில்லை. வீடுகளில் கூடிப் பேசினர்; தெருக்களில் சேர்ந்து பேசினர்; கஅபாவில் அமர்ந்து பேசினர்.

ஒருநாளல்ல பலநாட்கள் குறைஷிகள் அவர்களின் ஆலோசனை மண்டபமான தாருந் நத்வாவில் கூடிக் கூடிப் பேசினர். அண்ணலாரைக் கைது செய்து வைக்கலாம் என்றனர் சிலர்; அண்ணலாரை நாடு கடத்திவிடலாம் என்றனர் சிலர். இறுதியாக, அண்ணலாரைக் கொலை செய்து அழித்தொழித்து விடுவதென முடிவுக்கு வந்தனர்.

அண்ணலாருக்கு முழுமையான பாதுகாப்பளித்த அபூதாலிப் உயிரோடில்லை. அபூதாலிப்புக்குப் பின் பொறுப்பாளராக விளங்கிய முத்இம் கூட உயிரோடில்லை. இவர்கள்தான் பெரிய மனிதர்கள். ஹம்ஸா அப்பாஸ் இருவரும் செல்வமும் செல்வாக்கும் பெற்றவரில்லை. பெரிய தந்தை அபூலஹப், அபூதாலிபுக்குப்பின் ஹாஷிம்களின் தலைவராகியிருந்தும் அண்ணலாரைப் பற்றிக் கவலைப்படாதவர்.

கேட்பதற்கு நாதியில்லாதபோது கேட்பவருக்கு உதிரக்கிரயமாக 100 ஒட்டகங்களைக் கொடுத்துவிட்டால் பிரச்னை முடிவுக்கு

வந்துவிடும். பிரச்னை தீருமென்பதற்காக குறைஷிகள் எத்தனை ஒட்டகங்களைத் தரவும் தயாராயிருந்தார்கள்.

குறைஷிகள் திட்டமிட்டிருந்தபடி கொலைக்குக் காரணமானவரைத் தனியாக அடையாளம் காண முடியாது. குறைஷிகளில் அன்று எத்தனை கோத்திரங்கள் இருந்ததோ அத்தனை கோத்திரங்களிலிருந்தும் ஒவ்வொரு இளைஞரை கொலை விழாவை நடத்துவதற்காகத் தேர்வு செய்ய முடிவெடுத்திருந்தனர்.

ஹாஷிம், முத்தலீப் கோத்திரத்தாரைத் தவிர மக்ஸூம், அஸத், ஜுமாஹ், தையிம், ஷம்ஸ், ஸஹ்மீ, அப்த், நவ்பல், அப்த் அத்தார், அல்ஹாரித், ஸுஹ்ரா எனப் பத்துக்கும் மேற்பட்ட கோத்திரங்களின் இளைஞர்கள் தேர்ந்தெடுக்கப்பட்டு தாருந்தத்வாவில் சேர்க்கப்பட்டனர்.

அண்ணலார் வைகறையில் வீட்டிலிருந்து வெளியில் வரும்போது எல்லோரும் சேர்ந்து பாய்ந்து சென்று கொன்றுவிடுவதென முடிவெடுத்திருந்தனர்.

அண்ணலாருக்கு எதிராக எடுக்கப்பட்ட முடிவையும் அதை நிறைவேற்றக் கையாளப்போகும் செயலையும் வானவர்க்கோன் அறிவித்தார்.

> ‘சத்தியத்தை நிராகரித்தவர்கள் உமக்கு எதிராக சதித்திட்டங்களை உருவாக்கிக் கொண்டிருந்தார்கள். உம்மைக் கைது செய்ய வேண்டும் அல்லது உம்மைக் கொலை செய்ய வேண்டும் அல்லது நாடு கடத்த வேண்டும் என்பதற்காக! (இவ்வாறாக) அவர்கள் தங்களுடைய சூழ்ச்சியைச் செய்துகொண்டிருந்தார்கள். மேலும், அல்லாஹ் தன்னுடைய சூழ்ச்சியைச் செய்து கொண்டிருந்தான். இன்னும் அல்லாஹ் சூழ்ச்சி செய்வோரில் அனைவரையும் விடச் சிறந்தவனாக இருக்கின்றான்.’

(திருக்குர்ஆன் 8: 30)

ஆட்சியதிகாரமே இல்லாத குறைஷிகளுக்கு கைது செய்ய அல்லாஹ் அதிகாரத்தைக் கொடுக்கவில்லை. கொலைத் தீர்ப்பு வழங்க அவர்களுக்கு நீதிமன்றமோ நீதிபதியோ இருக்கவில்லை. நாடுகடத்தவும் அவர்களுக்கு உரிமையில்லை.

ஏகத்துவத்தை எடுத்துரைப்பது என்ன, பெருங்குற்றமா? மனிதர்களை மனிதர்களாக வாழச் சொல்வது கொலைக்குற்றமா? மானுடம் நிறைவோடு வாழ ஒரு நல்ல வாழ்க்கை நெறியை

எடுத்துரைப்பது நாடு கடத்தப்பட வேண்டிய குற்றச் செயலா?

கடைசியாகக் கூறிய நாடு கடத்தலை குறைஷிகள் நிறைவேற்ற வேண்டியதில்லையே, அதை அண்ணலாரே தாமே நிறைவேற்ற முன்வந்தபோது ஏன் அவர்கள் கொதித்தெழுந்தார்கள்.

கைது செய்வதாலேயோ நாடு கடத்தப்படுவதாலேயோ இஸ்லாம் முழுமையாக இல்லாமல் போய்விடாது. கொலை செய்துவிட்டால் அண்ணலாரோடு இஸ்லாம் முழுமையாக அழிந்தொழிந்து போகும் என குறைஷிகள் மனப்பால் குடித்தார்கள்.

கொலைவிழா நடத்த இளைஞர்களைத் தெரிவு செய்தவர்கள் வாட்களைத் தயார் செய்து கொண்டு நாட்களை எண்ணினர்.

## புலம் பெயர்தல்!

> ‘இந்த மண்ணிலிருந்து உமது பாதத்தைப் பெயர்த்திட வேண்டும்; உம்மை இங்கிருந்து வெளியேற்றிட வேண்டும் என்று அவர்கள் மும்முரமாக முயன்று கொண்டிருக்கிறார்கள். ஆனால், அவர்கள் அவ்வாறு செய்தால் உமக்குப் பின் அவர்களும் இங்கு அதிக காலம் தங்கியிருக்க முடியாது!’

(திருக்குர்ஆன் 17: 76)

குறைஷிகள் அண்ணலாரை மக்காவிலிருந்து வெளியேற்ற வேண்டும் என்று முயன்றது ஒரு காலம். ஆனால் அவர்கள் இப்போது அண்ணலாரை உலகத்திலிருந்தே வெளியேற்ற ஆயுதங்களோடு காத்திருந்தார்கள்.

> ‘உமக்கு முன்னால் அனுப்பப்பட்ட நம்முடைய அனைத்துத் தூதர்கள் விஷயத்திலும் நாம் கடைப்பிடித்துவந்த நிலையான நியதி இதுவே! நமது நியதியில் நீர் எந்த மாறுதலையும் காணமாட்டீர்.’

(திருக்குர்ஆன் 17: 77)

இறைவன் சொல்லும் நிலையான நியதி புலம் பெயர்தலே! இது பெரும்பாலான நபிமார்களின் வாழ்வில் ஹிஜ்ரத் புலம் பெயர்தல் நடந்தே உள்ளது. எனவே, அண்ணலாரும் அந்நியதியை ஏற்க வேண்டிய காலம் கனிந்து வந்திருந்தது.

‘சூரியன் (நடுவானை விட்டு) சாய்ந்ததிலிருந்து இரவின்

இருள்வரை தொழுகையை நிறைநிறுத்தும்! அதிகாலையில் ஓதுவதைக் கடைப்பிடியும். திண்ணமாக அதிகாலையில் (குர்ஆன்) ஓதுவது சாட்சி சொல்லக் கூடியதாகும். இரவில் தஹஜ்ஜுத் தொழுகையைக் கடைப்பிடியும். இது நீர் செய்ய வேண்டிய அதிகப்படியான தொழுகையாகும். உம் இறைவன் உம்மை 'மகாமே மஹ்மூத்' எனும் அந்தஸ்த்துக்கு உயர்த்தலாம்.'

(திருக்குர்ஆன் 17: 78 79)

சூரியன் நடுவானத்தை விட்டுச் சாய்ந்ததிலிருந்து இரவு வரையிலும் தொழுது நடுநிசித் தொழுகையையும் தொழச் சொல்லும் இறைவன் அதிகாலையில் திருக்குர்ஆனை ஓதச் சொல்கிறான். அதன்பின் அவன் அண்ணலாருக்கு மகாமே மஹ்மூத் உயர்தகுதி தருவதாகக் கூறுகிறான்.

அண்ணலார் தொழுதார். திருக்குர்ஆனை ஓதினார். மறுபடியும் தொழுதார். வீட்டிலிருந்து வெளியேறி யத்ரிப் செல்ல காத்துக் கொண்டிருந்தார்.

வீட்டின் முன்பும் தெருவில் ஆங்காங்கும் குறைஷி இளைஞர்கள் கொலைவாளுடன் காத்து நின்றனர். கூரிய பார்வையுடன் அந்த இளைஞர்கள் கூரிய வாட்களைத் தடவிப் பார்த்துக் கொண்டிருந்தனர்.

அண்ணலாரின் வீட்டை விட்டு சௌதா, தன்னுடைய தாய் வீட்டில் இருந்தார். ஆயிஷாவும் தன் தாய் தந்தையருடன் இருந்தார். அண்ணலாரும் அலீயும் மட்டுமே அப்போது வீட்டினுள் இருந்தனர்.

'என் இறைவனே! நீ என்னை எங்கு கொண்டு சென்றாலும் உண்மையுடன் கொண்டு செல்வாயாக! என்னை எங்கிருந்து வெளியேற்றினாலும் உண்மையுடன் வெளியேற்றுவாயாக! உன் தரப்பிலிருந்து எனக்குப் பக்கபலமாக ஓர் அதிகாரத்தை வழங்குவாயாக!'

(திருக்குர்ஆன் 17: 80)

பனு இஸ்ராயீல்களைப் பற்றியும் மூஸா நபிகளாரைப் பற்றியும் பேசும் மேற்கண்ட வசனங்கள் அண்ணலாரின் ஹிஜ்ரத் பயணத்தைப் பிரதிபலிப்பவையாக உள்ளன.

குறைஷிகள் அண்ணலாரை அல்அமீன் அஸ்ஸாதிக் எனப் போற்றியபோதும் அதன்பின் ஏகத்துவத்தைச் சொன்னதற்காகத்

தூற்றியபோதும் அவர்கள் தங்களுடைய அமானிதப் பொருள்களை அண்ணலாரிடமே கொடுத்து வைத்திருந்தனர்.

அவற்றை அலீயிடம் கொடுத்து உரியவர்களிடம் ஒப்படைக்கக் கூறிய அண்ணலார் யத்ரிப் செல்ல ஆயத்தமானார். இறைவனின் ஆணையையும் இனி செய்ய வேண்டிய செயல்களையும் அலீயிடம் விளக்கமாகக் கூறினார். அப்போதுதான் குறைஷி இளைஞர்கள் அண்ணலாரின் இல்லத்தைச் சூழ்ந்திருந்தனர்.

நீண்ட நேரத் தொழுகைக்குப் பின்பும் திருக்குர்ஆன் ஓதுதலுக்குப் பின்பும் பிரார்த்தனைக்குப் பின்பும் அண்ணலார் வீட்டைவிட்டு வெளியேற ஓரடி ஈரடியெனத் தம் பொன்னடியை எடுத்து வைத்தார்.

அப்போது குறைஷி இளைஞர்களின் இமைகள் தைக்கப்பட்டுவிட்டனவோ என்னவோ, தற்காலிகமாகக் கண் பார்வை அற்றுவிட்டனவோ என்னவோ, கண்கட்டி வித்தையை இறைவன் நடத்திவிட்டானோ என்னவோ யாருக்குத் தெரியும்?

அண்ணலார் வீட்டைவிட்டு வெளியேறியபோது என்ன நடந்தது என்பது இறைவனுக்கே தெரியும். அண்ணலார் ஒரு கைப்பிடி மண்ணை எடுத்து வீசிவிட்டு யாஸீனை ஓதியபடி விரைந்தார்.

அண்ணலார் வெளியே சென்றபின் அலீ போர்வையைப் போர்த்திக்கொண்டு படுத்துக்கிடந்தார். அண்ணலாரை எதிர்பார்த்து, எதிர்பார்த்து ஏமாந்த குறைஷி இளைஞர்களில் ஒருவர் அண்ணலாரின் இல்லக் கதவின் சாவித்துவாரம் வழியாகப் பார்த்தார். அவர் பார்வையில் போர்வை போர்த்திய அலீ தெரிய, அது அண்ணலார் என எண்ணிக் காவலைப் பலப்படுத்தினர்; வாட்களை உறையினின்றும் எடுத்தனர்.

யாஸீனை ஓதியபடி விரைந்த அண்ணலார் அபூபக்கரின் இல்லத்தை அடைந்தார். வியப்புடன் கதவைத் திறந்த அபூபக்கரிடம் ‘ஹிஜ்ரத் செல்ல இறைவனின் அனுமதி கிடைத்துவிட்டது. இனி நாம் யத்ரிபுக்குப் புறப்பட வேண்டியதுதான்’ என அண்ணலார் மொழிந்தார்.

அண்ணலார் மொழிந்த மறுகணம் ‘எனக்கும் தங்களோடு வரும் பெரும் பேறு உண்டா?’ என அபூபக்கர் கேட்டார். அண்ணலார் ‘உண்டு’ என்றார்.

‘எப்படியும் யத்ரிப் செல்லும் வாய்ப்பு கட்டாயம் கிடைக்கும் என்பதால் தேவையான ஆயுதங்களோடு சில பொருள்களையும் சேகரித்துவைத்துள்ளேன். இரு ஒட்டகங்களோடு உதவிக்கு

அப்துல்லாஹ் பின் அர்கத் உள்ளார். புறப்படலாமா?’ என அபூபக்கர் பயணத்துக்கு ஆயத்தமானார்.

‘இப்பொழுது ஒட்டகங்களோ பொருள்களோ உதவிக்கு ஆளோ தேவையில்லை. ஆயுதங்கள் மட்டும் போதும். தெற்கு நோக்கிப் பயணம் செய்து தவ்ர் குகையில் தங்குவோம். அதன்பின் ஒட்டகங்களைக் கொண்டு வரச் செய்து யத்ரிப் செல்வோம்’ எனத் தம் திட்டத்தைக் கூறினார் அண்ணலார்.

‘யத்ரிப் இருப்பது வடக்கிலே, தவ்ர் குகை இருப்பது ஐந்து கல் தூரத்தில் தெற்கிலே!’ என எண்ணிய அபூபக்கர் திசைமாறிய பயணத்துக்குரிய காரணத்தை உடனே புரிந்து கொண்டார். நீண்டகாலத் தோழருக்கு அண்ணலாரின் திட்டமிடுதல் புரியாதா, என்ன?

அண்ணலார் யத்ரிபுக்குத்தான் செல்வர் என எண்ணி குறைஷியர்கள் மகத்தான தப்பித்தலுக்குப் பின் வடக்கேதான் தேடுவர். தெற்கே தேட மாட்டார்கள் என்பதால்தான் அண்ணலார் தவ்ர் குகையைத் தேர்ந்தெடுத்தார்.

அண்ணலாரும் தோழரும் விரைவாக நடந்து தவ்ர் குகையை அடைந்தனர். அண்ணலாரின் வீட்டிலிருந்து அலீயோ போர்வையை நீக்கி எழுந்து கதவைத் திறந்து வாசலுக்கு வந்தார். அலீயைக் கண்ட குறைஷிகள் அதிர்ச்சியடைந்தனர். அண்ணலார்தான் போர்த்திக்கொண்டு தூங்கிக் கொண்டிருந்தார் என நம்பிய குறைஷி இளைஞர்கள் குழப்பம் அடைந்தனர்.

அவர்கள் ஓடோடிச் சென்று அலீயைப் பிடித்து ‘எங்கே முஹம்மது? எங்கே முஹம்மது?’ எனக் கூச்சல் போட்டனர்.

அலீ தெரியாதெனக் கூற அடிகள் விழுந்தன. அவரை அடித்தும் உதைத்தும் சித்ரவதைகள் செய்த குறைஷிகள் கஅபாவுக்குள் கொண்டுபோய் அடைத்து வைத்தனர். அதே சமயம் அண்ணலாரைத் தேட யத்ரிப் பாதையில் ஆட்களை அனுப்பினர்.

உடல் வலியோடும் பசியோடுமிருந்த அலீயை நெருங்கிய உறவினர் ஒருவர் குறைஷிகளோடு வாதிட்டுக் காப்பாற்றினார். அலீ அமானிதப் பொருள்களை உரியவரிடம் கொடுத்து யத்ரிப் செல்வது எப்படியென சிந்தித்துக் கொண்டிருந்தார்.

குறைஷிகளோ மானைப்பிடித்து இரையாக்க முடியாத சிங்கம்போல் கர்ஜித்தனர். வடக்கிலும் தெற்கிலும் குதிரை வீரர்களை

அனுப்பினர். அபூபக்கர் இல்லத்திலும் அபூதாலிப் உறவோர் வீடுகளிலும் தம் தேடுதல் வேட்டையை நடத்தினர். அபூபக்கர் அப்போது வீட்டிலில்லை.

சுராகாபின் மாலிக் என்பார் தடம் பார்த்தறிவதில் தலைசிறந்த நிபுணர். ஆடு மாடுகள், ஒட்டகம் குதிரைகள் ஆகியவற்றின் தடங்களோடு மனிதரின் தடங்களையும் இனம் கண்டுபிடிப்பதில் கலைஞானம் மிக்கவர்.

சுராகா உதவியோடு தேடிய குறைஷிகள் இறுதியில் தவ்ர் குகையை அடைந்தனர். மணல் வெளியில் மனிதக் காலடித் தடங்களைக் கண்டவர்கள் மலையடிவாரத்தில் காணாது நின்று திகைத்தனர்.

தப்பித்தவர்கள் குகைக்குள் சென்றிருக்கலாம் என எண்ண வாய்ப்பில்லை. குகை வாயிலிலிருந்த மரமும் அதிலிருந்த பறவைக் கூடும் எவரும் உள்ளே சென்றிருப்பர் என்ற எண்ணத்தை ஏற்படுத்தவில்லை. ஆங்காங்கே சிலந்தி வலைகள். இவையெல்லாம் இறைவன் பின்னிய வலைகள்.

குகைக்குள்ளோ இருவர், இறைவனைத் தொழுது கொண்டிருந்தனர். உள்ளே அமைதி, வெளியிலோ காலடி ஓசையும் கதைக்கும் ஓசையும்!

அபூபக்கரை அச்சம் சூழ்ந்தது. ‘வெளியிலோ பலர், நாமோ இருவர்’ என அபூபக்கர் கூற அண்ணலார் ‘நாம் இருவர்தான், ஆனால் நம்முடன் மூன்றாவதாக இருக்கும் அல்லாஹ் பற்றி நீங்கள் எண்ணவில்லையா?’ எனப் புன்னகைத்தபடி கேட்டார்.

இடுக்கண் வருங்கால் நகுக!

தேடிக்களைத்த குறைஷிகள் அண்ணலாரைப் பிடிப்பவருக்கு நூறு ஒட்டகங்களை வழங்கப்போவதாக அறிவித்தனர்.

அண்ணலாரும் தோழரும் மூன்று நாட்கள் தவ்ர் குகையில் தங்கினர். அவ்வப்போது அவர்களுக்கான உணவுகளை அபூபக்கரின் புதல்வர் அப்துல்லாஹ்வும் புதல்வி அஸ்மாவும் கொண்டுவந்து கொடுத்தனர். குறைஷிகளின் தேடுதல் வேட்டையைப் பற்றிய செய்திகளையும் அவ்வப்போது கூறினர்.

மூன்று நாட்களுக்குப் பின் மூன்று ஒட்டகங்களும் உதவிக்கு அப்துல்லாஹ் பின் அரீகத் என்பாரும் ஓர் அடிமையும் கொண்டு வரப்பட்டனர். அரீகத் யத்ரிபுக்கு செல்லும் மறைவான பாதைகளை

நன்கு அறிந்தவர்.

தவ்ர் குகையிலிருந்து புறப்பட்டு தென்மேற்காகச் சென்ற ஒட்டகங்கள், பின் திரும்பி வடக்கு நோக்கிப் பயணித்தன.

ஒன்றில் அப்துல்லாஹ் பின் அரீகத் பயணத் தலைவனாக, முன்னோடியாக! மற்றொன்றில் அண்ணலார்! மூன்றாவது ஒட்டகத்தில் அபூபக்கரும் அவருடைய அடிமை ஃபகீராவும்!

செங்கடலில் புறப்பட்ட காற்றுத் தாலாட்ட ஆடி அசைந்து அந்த மூன்று ஒட்டகங்களும் இரவு பகல் பாராது பயணத்தைத் தொடர்ந்தன.

அப்பயணத்தை வரலாறு ஒரு சாதாரணப் பயணம் எனச் சொல்லாது! உலகையே புரட்டிப் போட நடத்தப்பட்ட முதல் பயணம் என்றே வரலாறு வரைந்துள்ளது.

## மேற்குக்கரைப் பாதையில்!

‘அண்ணலாரைப்பிடித்துக் குறைஷியர்களிடம் ஒப்படைப்பவருக்கு நூறு ஒட்டகங்கள் பரிசாக வழங்கப்படும்’ என அறிவித்தவுடன் சிலர் குதிரைகளில் ஏறிப் பயணித்து அண்ணலாரைத் தேடினர்.

‘அண்ணலாரும் தோழரும் ஒட்டகங்களில்தான் சென்றிருப்பர், அவர்களை குதிரையில் சென்றால் எப்படியும் பிடித்துவிடலாம்’ என நம்பியே குதிரை வீரர்கள் யத்ரிபை நோக்கி விரைந்தனர்.

இந்நிலையில் கஅபாவில் கூடிய குறைஷிகள் தம் கையாலாகாத செயலை எண்ணி, அண்ணலார் வீட்டின் முன் அன்றொரு நாள் நடந்ததைப் பற்றி கதை கதையாகப் பேசிக் கொண்டிருந்தனர்.

அப்போது அங்குவந்த ஒரு குறைஷிப்பயணி ‘நான் யத்ரிபிலிருந்து செங்கடல் வழியாக வந்து கொண்டிருந்தேன். வரும் வழியில் மூன்று ஒட்டகங்கள் சென்று கொண்டிருந்ததைப் பார்த்தேன். அவற்றில் பயணித்த ஒருவர் முஹம்மது போலவே இருந்தார்’ எனக் கூறினார்.

அவரிடம் அண்ணலாரின் அங்க அடையாளங்களை குறைஷிகள் விளக்கமாகக் கேட்டனர். அடையாளங்களைச் சொன்ன அவர் அண்ணலாரின் முகத்தைச் சரியாகப் பார்க்கவில்லை என்றார்.

இதைக் கேட்டுக் கொண்டிருந்த சுராகா பின் ஜிஃஷீம் குறைஷிகளின் கூட்டத்திலிருந்து நழுவி தன்னுடைய வீட்டுக்குச் சென்றார். தன் நோக்கத்தை மனைவியிடம்கூடச் சொல்லாமல்

குதிரையிலேறி யத்ரிபுக்குச் செல்லும் செங்கடலோரப் பாதைக்குச் சென்றார்.

செங்கடல் தூரத்தில் கிடந்தது; செங்கடலில் இருந்து புறப்பட்டு வந்த காற்றில் சுராகாவின் குதிரை மிதந்தது. சேணத்தின் மேல் நின்றும் உட்கார்ந்தும் சுராகா காற்றைக் கிழித்தார்.

மூச்சிரைக்க ஓடி வாயில் நுரை தள்ளிய குதிரை சுராகா விரட்டிய விரட்டில் மண்ணில் வீழ்ந்தது. சுராகாவும் வீழ்ந்தார். மண்ணில் புரண்டார்.

சுராகா எழும்முன் குதிரை எழுந்தது; உடலைச் சிலிர்த்து மணலைக் களைந்தது. சுராகாவுக்கு வீழ்ந்து எழுந்தது வேதனையாக இருந்தது. மணலைத் துடைக்க மனமில்லாத நிலையில் சோகம் சூழ்ந்தது.

கண்ணுக்கெட்டிய தூரம் வரை எந்த ஒட்டகங்களையும் காணோம். தோல்ப் பையை அவிழ்த்துத் தண்ணீரைக் குடித்த சுராகா புதிய உற்சாகத்துடன் குதிரையில் ஏறினார்.

பகல் பொழுது கழிந்திருந்தது; இருளைச் சந்திக்க அது போய்க்கொண்டிருந்தது. குதிரையில் விரைந்த சுராகாவின் கண்களில் மூன்று ஒட்டகங்களும் நான்கு பயணிகளும்! கடிவாளத்தை இழுத்துப் பிடித்த பின் அதைத் தளர்வாக்கிய சுராகா தன் முழங்கால்களால் குதிரையின் இரு புறங்களிலும் இடித்தார்.

பறந்த குதிரை அண்ணலாரின் ஒட்டகத்தை அடுத்து விழுந்து மண்ணில் புரண்டது. சுராகாவும் குப்புற விழுந்து இருமுறை உருண்டார்.

அண்ணலாரின் பயணம் தொடர்ந்தது; அபூபக்கரின் ஒட்டகம் நின்றது; அடிமை ஃபகீரா ஒட்டகத்தினின்றும் கீழே குதித்தார்; வழிகாட்டி அப்துல்லாஹ் பின் அரீகத் ஒட்டகத்தை விட்டுக் கீழேயிறங்கி சுராகாவின் அருகில் சென்றார்.

வீழ்ந்து கிடந்த சுராகாவின் அருகில் விழுந்து கிடந்தது உறையுடன் வாள். அப்துல்லாஹ் பின் அரீகத் உறைவாளை எடுக்க ‘அபயம், அபயம்’ எனக் கத்தினார் சுராகா. ஒருவரால் நால்வரை என்ன தான் செய்ய முடியும்?

‘என் பெயர் சுராகா. மக்காவைச் சேர்ந்த என் தந்தையின் பெயர் ஜிஃஷீம், இறைவன் மீதாணை! நான் உங்களுக்குக் கெடுதல் ஏதும் புரியமாட்டேன். என்னை நம்புங்கள்’ என சுராகா மொழிய அண்ணலார் அபூபக்கரிடம் சைகை செய்தார். சுராகாவிடம் அபூபக்கர் வினவ ‘அபயச்

சீட்டு வேண்டும், அபயச் சீட்டு வேண்டும்’ என அலறியபடி வேண்டுகோள் விடுத்தார்.

சுராகா வந்த காரணத்தையும் சொல்லவில்லை; அபூபக்கரும் அவரிடம் எந்த விபரத்தையும் கேட்கவில்லை.

அண்ணலார் அனுமதி கொடுக்க அபூபக்கர் அபயச் சீட்டு எழுதிக் கொடுத்தார். அதைப் பெற்ற சுராகா குதிரை மீதேறி வந்த வழியில் திரும்பினார்.

மக்கா சென்ற சுராகா, அண்ணலாரைத் தொடர்ந்ததையோ செங்கடல் பாதையில் நடந்ததையோ அபயச் சீட்டு வாங்கியதையோ எவரிடமும் சொல்லவில்லை. அவருடைய உள்ளத்தில் அண்ணலாரைப் பற்றிய நல்ல எண்ணம் வளர்ந்தது; அன்பு மலர்ந்தது.

சுராகா மக்காவை அடைந்தபோது அண்ணலார் அணி கூபாவைத் தொட்டது. கூபாவிலிருந்த முஸ்லிம் சகோதரர்கள் அண்ணலாரை வரவேற்று அன்பு மழை பொழிந்தனர்.

‘மதியிறங்கி வந்தது எங்கள்

மதியும் மகிழ்வு கொண்டது.

நதியுமிங்கே பாய்ந்தது பல

நலமும் எம்மைச் சூழ்ந்தது.

புதிய வழி பிறந்தது எங்கள்

புலமை வளமை பெற்றது.

விதியில் மாற்றம் வந்தது புது

விடியல் ஏக்கம் தீர்ந்தது.’

சிறுவரும் சிறுமியரும் கூடி தப்ஸ் அடித்துப் பாடினர். கூபா நகர மக்களனைவரும் அண்ணலாரைக் காணக் கூடினர். ஒவ்வொருவரும் தம் இல்ல விருந்தினராக்கி அண்ணலாரைப் போற்றினர். இஸ்லாத்தைத் தழுவியவரோடு கூடிய புதிய தோழர்களும் கலிமா ஷஹாதத் கூறி உறுதிமொழிகள் ஏற்றனர்.

கூபா நகரில் ஒரு பள்ளிவாசல் எழுப்பப்பட்டது. அண்ணலார் முன்னிலை வகித்துத் தொழவைத்தார்கள். மக்காவிலிருந்து புறப்பட்டு பதினான்கு நாட்கள் பறந்ததே தெரியவில்லை. மக்காவிலிருந்து அண்ணலார் புறப்பட்ட நாளிலிருந்து யத்ரிப்வாசிகள் தலைவரைக்

காண பேராவலோடு காத்துக் கிடந்தனர்.

அண்ணலார் புலம் பெயர்ந்த பின்னர் மக்காவிலிருந்த அலீ தம்மிடம் ஒப்படைக்கப்பட்ட அமானிதப் பொருள்களை உரியவர்களிடம் ஒப்படைத்துவிட்டு யத்ரிபுக்குப் புறப்பட அணியமானார்.

மக்காவில் முஸ்லிம்களே இல்லாத நிலை, உறவினர்கள் சிலரும் ஒதுங்கியிருந்த நிலை, குறைஷிகள் கொந்தளித்துப் போயிருந்த நிலை! அலீ தனிமரமாக நின்றார். துணிச்சல்மிக்க அவர் யத்ரிப் புறப்பட வேண்டும். ஒட்டகமோ, மட்டச்சிறு குதிரையோ இல்லாத நிலையில் அந்த இளைஞர் இறையருளை எண்ணிப் பிரார்த்தனை புரிந்த வண்ணம் யத்ரிபுக்குப் புறப்பட்டார், கால்நடையாகவே!

அண்ணலார் அலீயிடம் முன்னரே சொல்லிச் சென்றபடி அவர் கூபா நகரையடைந்தார். அங்கு அவர் அண்ணலாரைக் கண்டபோது அளவற்ற மகிழ்ச்சியடைந்தார். மக்காவின் பழைய வாழ்க்கைக்கு முற்றுப் புள்ளி வைக்கப்பட்டு ஒரு புதிய வாழ்க்கை தொடங்கியிருப்பதற்கான அறிகுறிகள் கூபாவில் தெரிந்தன.

சிலை வணக்கத் தலங்களே காணப்பட்ட அரபகத்தில் சிலையே இல்லாத ஒரு புனித ஆலயம் முதன் முதலில் கூபாவில் எழுப்பப்பட்டது. இஸ்லாமிய இயக்கத்தின் அச்சாணி பள்ளிவாசலே! அதிலிருந்துதான் ஆன்மிக அணிகள் பேரணிகளாகின, அதன்பின் போரணிகளாகின; அதுவே ஆட்சியதிகார அணிகளாக மாறின.

# 18. யத்ரிப் மதீனா ஆனது!

## யத்ரிப் மதீனா ஆனது!

யத்ரிபின் எல்லையிலிருந்த பேரீச்சந் தோப்புகளின் அருகிலே ஒரு பெருங்கூட்டம் கூடியிருந்தது. அதில் அவ்ஸ் கஸ்ரஜ் குலமக்கள், குலங்களைத் துறந்த முஸ்லிம் பெருமக்கள், யூதர்கள் என யத்ரிப் நகரமே இருந்தது.

அன்று பெருங்கூட்டமாக இருந்தாலும் அதற்கு முந்தைய நாட்களில் சிறு கூட்டங்கள் கூடிக் கூடிக் கலைந்து கொண்டிருந்ததை நகரமே அறியும். அவர்கள் கூடிக் கலைய காரணமிருந்தது. மக்காவிலிருந்து புறப்பட்ட அண்ணலார் கூபா நகரில் தங்கியிருந்தார். எனவே அண்ணலாரின் வருகை விரைவில் நிகழலாம் என்பதாலேயே யத்ரிப்வாசிகள் கூடிக் கலைந்தபடி இருந்தனர்.

முதலில் அவ்ஸ்களின் அறுவர் மக்கா சென்று முஸ்லிமாகியிருந்தனர். அடுத்த புனிதப் பயணத்தில் அவ்ஸ் கஸ்ரஜ் இணைந்து சென்று மேலும் சிலர் இஸ்லாத்தைத் தழுவினர். அண்ணலாரோடு உடன்பாடு கொண்டனர். மூன்றாவது புனிதப் பயணத்தில் உறுதியான ஓர் உடன்படிக்கை கண்டனர்.

அந்த உடன்படிக்கையைத் தொடர்ந்து மக்காவிலிருந்த முஸ்லிம்கள் ஒருவர் இருவராகவும் குடும்பமாகவும் குடும்பங்களாகவும் புலம் பெயர்ந்து வந்து கூபாவிலும் யத்ரிபிலும் குடியேறினார்கள்.

அந்த உடன்படிக்கையின் முத்தாய்ப்பாக அண்ணலார் அணியினர் கூபாவில் தங்கி யத்ரிபை நோக்கி வந்துகொண்டிருந்தார்கள்.

அண்ணலாரும் அருமைத் தோழர் அபூபக்கரும் அலீயும் கூபாவைச் சேர்ந்த சில முஸ்லிம்களும் யத்ரிப் நகர எல்லையை அடைந்தனர்.

‘இதோ ரசூலுல்லாஹ், இதோ இறைவனின் தூதர், இதோ அண்ணலார்!’ எனும் குரல்கள் காற்றில் கலந்து ஈச்சமரச் சோலைகளை எட்டிப்பார்த்தன.

‘பத்துக்கு மேற்பட்டோர் வருகின்றனரே! இவர்களில் யார் அண்ணலார்?’ எனும் வினாக்குறியோடு யத்ரிப் மக்கள் வந்த விருந்தாளிகளைப் பார்த்தனர். ஏற்கெனவே அண்ணலாரை அறிந்த யத்ரிப் தோழர்கள் அடுத்து நின்ற சகோதரர்களிடம் மாநபியாரென அடையாளங்காட்டினர்.

அப்போது அருமைத் தோழர் அபூபக்கர் அண்ணலாரின் மேல் வெயில் படாமலிருக்க ஒரு விரிப்பை விரித்துப் பிடிக்க கூடியிருந்த அனைவருக்கும் அண்ணலார் யாரென அடையாளம் தெரிந்தது.

அன்று வெள்ளிக்கிழமை

யத்ரிப் எல்லையிருந்து புறப்பட்ட அண்ணலாரின் அணியினர் பனூ சாலிம் மக்கள் வாழ்ந்த பகுதியை அடைந்தனர். அப்போது ஜும்ஆ நேரம் நெருங்கியதால் அங்கேயே ஏற்பாடுகள் செய்து வெள்ளிக்கிழமை தொழுகை நிறைவேற்றப்பட்டது.

அண்ணலாரின் தந்தை பட்டணம் ஒரே இறைவனை ஏற்க மறுத்து போர்க்கோலம் பூண்டு நின்றபோது அண்ணலாரின் அன்னை பட்டணம் முஸ்லிம்களை அரவணைத்துப் பாதுகாக்க முன்வந்திருந்தது.

அண்ணலாரின் தாய்வழிச் சொந்தங்களான பனூ நஜ்ஜார் குலத்தினர் பாதுகாப்புக் கருதி ஆயுதமேந்தி வந்தார்கள். ஏழாம் நூற்றாண்டு அணிவகுப்பும் பாதுகாப்பும் இருபத்தியொன்றாம் நூற்றாண்டை நினைவுப்படுத்துவதாக இருந்தன.

சண்டை போட்டிருப்பர், சமரசம் செய்து கொண்டிருப்பர், விழா கொண்டாடியிருப்பர், விருந்து கொடுத்திருப்பர், ஆனால் அண்ணலாரை வரவேற்றது போன்ற ஒரு நிகழ்ச்சியை இதுவரை அவர்கள் கண்டதில்லை.

யத்ரிப் முஸ்லிம்கள் ஒவ்வொருவரும் தம் இல்லங்களில் அண்ணலார் விருந்துண்ண வேண்டுமெனக் கூறி அழைத்தனர். சிலர் தம் வீடுகளில் ஒன்றை அண்ணலாருக்குத் தருவதற்கு முன் வந்தனர்.

ஒட்டகத்தின்மேல் அமர்ந்து ஊர்வலம் வந்துகொண்டிருந்த அண்ணலார் ‘இறைவன் என்னை எங்கு தங்க வைக்க விரும்புகிறானோ அங்கேயே நான் தங்குவேன்’ என்றார்.

அல்லாஹ்வைத் துதித்தபடியும் அண்ணலாரை வாழ்த்தியபடியும் ஒரு கூட்டம் அண்ணலாரைப் பின் தொடர்ந்தது.

தொடர்ந்த கூட்டம் தொடர்ந்தபடியே இருக்க, ஆங்காங்கே

தெருவோரங்களில் பெரியவரும் சிறியவரும். மாடிகளில் நின்றும் பெண்களும் முதியவரும் அண்ணலாரைக் கண்டு மகிழ்ந்தனர்.

மாநபி வருகை புரிந்த மாநகர் யத்ரிப், மதீனத்துன் நபியாக மாறிக்கொண்டிருந்தது. அதன் அகமும் புறமும் இஸ்லாத்தின் புகழைப்பாடிக் கொண்டிருந்தது.

ஒட்டகம் நடை பயின்று கொண்டிருந்தது. அண்ணலார் அதில் அமர்ந்திருக்க பரிசுப் பேழையைச் சுமந்து செல்லும் உயர் பல்லாக்குபோல் அக்காட்சியிருந்தது.

‘ஒட்டகம் எங்கே தன் பயணத்தை நிறுத்திக்கொள்கிறதோ அங்கேயே தம் தங்குமிடத்தை ஏற்பாடு செய்துகொள்ளலாம்’ என அண்ணலார் எண்ணிக் கொண்டிருந்தார்.

சிறிது நேரப் பயணத்துக்குப் பின்னர் ஓர் இடத்தில் நின்று ஒட்டகம் கால்களை மடித்து அமர்ந்தது. ஒட்டகத்திலிருந்து இறங்கிய அண்ணலார் அந்த இடம் யாருடையது என வினவினார்.

அப்போது மஆஸ் பின் அப்ராஃ என்பார் முன் வந்து ‘அண்ணலெங்கோவே! இது நஜ்ஜார் வம்சத்து அநாதைச் சிறுவர்களான ஸஹ்ல் ஸுஹைல் இடமாகும்’ என்றார்.

அந்த இடம் நீண்டகாலமாகப் பராமரிக்கப்படாத நிலம்போல் தோன்றியது. அங்கு சில பேரீச்சம் மரங்களும் சில சமாதிகளும் இருந்தன. அண்ணலார் அவ்விடத்தில் ஒரு மஸ்ஜித் பள்ளிவாசலைக் கட்ட விரும்பினார்.

அண்ணலார் தம் எண்ணத்தை மஆஸ் பின் அப்ராஃவிடம் கூறினார்.

‘அண்ணலெங்கோவே! அந்த அநாதைச் சிறுவர்கள் இருவரும் என் பொறுப்பில்தான் உள்ளனர். அவர்களிடம் பேசி இவ்விடத்தை மஸ்ஜித் கட்டுவதற்கு ஏற்பாடு செய்கிறேன்’ என்றார் மஆஸ்.

அண்ணலார் ஸஹ்லையும் ஸுஹைலையும் அழைத்துவரச் செய்து தம் எண்ணத்தைக் கூறினார். அவர்கள் அந்த நிலத்தை இலவசமாக தர முன் வந்தனர். அண்ணலாரோ அவ்விடத்துக்கு உரிய விலையைக் கொடுத்து நிலத்தைப் பெற்றுக் கொண்டார்.

நிலத்தை வாங்கிய அண்ணலார் நிலத்தைச் சமப்படுத்தி பள்ளிவாசல் கட்டும் பணியை மேற்கொண்டார். மக்காவிலிருந்து புலம்பெயர்ந்து வந்திருந்த முஹாஜிர்கள் மதீனாவிலிருந்தபடியே

முஹாஜிர்களை ஆதரித்த அன்ஸாரிகள் ஆகிய இரு தரப்பினரும் பள்ளிவாசல் கட்டும் பணிகளில் ஆர்வமுடன் ஈடுபட்டனர்.

அண்ணலார் அபூ அய்யூப் எனும் அன்ஸாரியின் இல்லத்தில் தங்கினார். ஏழு மாதங்களில் மஸ்ஜித் கட்டி முடிக்கப்பட்டது.

ஈச்சமரங்கள் தூண்களாகவும் கல்லும் மண்ணும் மதில்களாகவும் ஈச்சமரக் கீற்றுகள் கூரையாகவும் அமைந்த அந்த மஸ்ஜித் நபவி பள்ளிவாசல்தான் இன்றைய பல சலவைக்கல் பள்ளிவாசல்களின் முன்மாதிரி!

## ஓர் இளவேனிற் காலத்தைத் தொடர்ந்து....

அரபகத்தின் அன்றைய, இன்றைய அடையாளமாகத் திகழும் பேரீச்சமரமும் அங்குள்ள மண்ணும் கற்களும் மேலும் கீழுமாக விளங்கக் கட்டப்பட்ட மஸ்ஜித் நபவி நபிகளார் கட்டிய பள்ளிவாசல் முஸ்லிம்கள் அனைவருக்கும் உரிமையுடையதாக ஆனது.

அதற்கு அடித்தளமிட எண்ணிய அண்ணலார் அவ்ஸ் கஸ்ரஜ் அன்ஸாரிகள், பல்வேறுவகை மனிதர்களாக இருந்து பின்னர் முஸ்லிம்களான முஹாஜிர்கள் ஆகியவர்களின் பிரதிநிதிகளை கட்டடத்துக்கான கற்களை எடுத்துக் கொடுக்கப் பணித்தார். பெரியவர்களிடமிருந்து மட்டும் கற்களைப் பெறவில்லை, சிறுவர் சிறுமியரிடமிருந்து அண்ணலார் கற்களைப் பெற்றார்.

அங்கு நின்று கட்டட வேலைகளை வேடிக்கை பார்த்துக் கொண்டிருந்த யூதர்களில் ஒரு மூத்த குடிமகனிடமும் அண்ணலார் விருந்தாளியாகத் தங்கியிருந்த மஆஸ்பின் அப்ராஃ என்ற தோழரின் துணைவியாரிடமும் அண்ணலார் கட்டட அடித்தளத்துக்காக கற்களை எடுத்துத்தரச்சொல்லி வாங்கினார்.

‘ஏகத்துவத்தை ஏற்றுக்கொண்டவர்கள் அனைவருக்கும் மஸ்ஜித் உரிமையுடையது’ என்ற பிரகடனத்தின் செயல் வடிவமாகவே அண்ணலாரின் செயல் அமைந்தது. யூதர்களும் ஏகத்துவக்காரர்களே!

சமுதாயத்தின் பல்வேறு பிரதிநிதிகளிடமிருந்து கற்களைப் பெற்ற, அண்ணலாருக்கு மக்காவில் கஅபா கட்டப்பட்டபோது ஹஜ்ருல் அஸ்வத் கறுப்புக்கல்லைப் பதித்த நிகழ்வை நினைவுப்படுத்தியது.

மஸ்ஜித் நபவி கட்டப்பட்டது இறைவனைத் தொழுவதற்கான ஏற்பாடாக அமைந்தாலும் அது காலப்போக்கில் இஸ்லாமிய

இயக்கத்தின் தலைமைச் செயலகம் போலானது இறைவனின் மாபெரும் அருட்கொடை!

பள்ளிவாசல் கட்டப்பட்ட பிறகு அதன் அருகிலேயே சில சிறிய இல்லங்கள் கட்டப்பட்டன. அவற்றில் மக்காவிலிருந்து புலம் பெயர்ந்து வந்திருந்த அண்ணலாரின் இரு மனைவியரும் புதல்விகளும் குடியேறினர்.

அபூபக்கர் தன்னுடைய புதல்வருக்குத் தகவல் கூறி அவருடைய மனைவியையும் புதல்விகளையும் வரவழைத்தார். இதேபோல் நபித்தோழர்கள் பலரும் மக்காவிலிருந்த குடும்பங்களை மதீனாவுக்கு அழைத்து வந்தனர். மக்காவில் எஞ்சியிருந்த முஸ்லிம்கள் அனைவரும் மதீனாவுக்கு வந்து சேர்ந்தனர்.

மக்காவிலிருந்து வந்தோர் அனைவருமே தம் இல்லங்கள், தோட்டந்துரவுகள், தொழில்கள் என அனைத்தையுமே துறந்து வந்திருந்தனர். அவர்கள் அனைவரையும் மதீனாவில் வாழ்ந்த முஸ்லிம்கள் தம் ரத்தபந்த சொந்தங்களைப்போல ஏற்றுக் கொண்டனர்.

முஹாஜிர்களையும் அன்ஸாரிகளையும் ஒரு கொடியில் பூத்த இரு மலர்களாக்கி அண்ணலார் செய்த அற்புத ஏற்பாடு உலக வரலாற்றில் எங்குமே இதுவரை காணக் கிடைக்காதது.

நூற்றுக்கணக்கான மைல்களுக்கப்பால் பிறந்து வளர்ந்தவர்கள், கண்டோ பேசியோ காரியம் புரியாதவர்கள், எந்த வகையிலும் உறவே இல்லாதவர்கள் இஸ்லாம் என்ற காந்த சக்தியால் கவரப்பட்டார்கள். ஏகத்துவம் அவர்களை இருகை பிணைக்கவும் கட்டியணைக்கவும் காரணமாகி உச்சநிலை உறவை வளர்த்தது.

முஹாஜிர்களையும் அன்ஸாரிகளையும் ஒன்றாகக் கூட்டி அவர்களின் சகோதரத்துவத்துக்கு அண்ணலார் சாட்சியாக நின்றார். மக்காவாசிகள் யத்ரிப்வாசிகள் என்றிருந்தோர் அண்ணலார் ஏற்பாட்டால் அனைவரும் மதீனாவாசிகளாகினர்.

பெரும்பாலான முஹாஜிர்கள் வணிகர்கள். அதைப்போல் பெரும்பாலான அன்ஸாரிகள் விவசாயிகள். விவசாயிகள்; வணிகத்தைக் கற்றுக்கொண்டார்கள்; வணிகர்கள் விவசாயத்தைக் கற்றுக்கொண்டார்கள்.

அன்ஸாரிகளின் தோட்டந்துரவுகளில் முஹாஜிர்கள் காணப்பட்டார்கள். சிரியா சென்ற முஹாஜிர்களோடு அன்ஸாரிகள் காணப்பட்டார்கள். அதே சமயம் அவர்கள் தம் பழைய

அடையாளங்களை மறந்து முஸ்லிம்கள் என்பதிலேயே பெருமைப்பட்டார்கள்.

தொடக்கத்தில் சில குழப்பங்கள் உருவானாலும் நாளடைவில் அவர்கள் விவசாயம், தொழில், வணிகம் என மூன்றிலும் முத்திரை பதித்தார்கள். தம் தேவைகள் அனைத்தையும் தேடிய பொருளாதாரத்தால் நிறைவு செய்தார்கள்.

சிலருக்கு விவசாயமும் தெரியாது; வியாபாரமும் தெரியாது; தொழிலும் தெரியாது; தொண்டாற்ற மட்டும் தெரியும். பசியும் பட்டினியும் அவர்களை வாட்டினாலும் இறைவனைத் தொழுதார்கள், ஏகத்துவத்தைப் பற்றிப் பேசினார்கள். அவர்களுக்குக் குடும்பமும் கிடையாது; குடியேறி வாழ வீடும் கிடையாது. அண்ணலார் அவர்களை அற்புதமாக உபசரித்துக் காப்பாற்றினார்.

பள்ளிவாசல் அருகிலிருந்த திண்ணையில் படுத்த அவர்கள் திண்ணைத் தோழர்கள் அஸ்ஹாபு ஸஃப்பா என அழைக்கப்பட்டார்கள். அவர்களுக்கான தேவைகளை அண்ணலார் பள்ளிவாசல் பொது நிதியிலிருந்து வழங்கினார்.

முஹாஜிர்கள், அன்ஸாரிகள் என இரு கூறுகளும் ஒரே முஸ்லிம் சமுதாயமாக, இவர்களைத் தவிர்த்து அவ்ஸ் கஸ்ரஜ் என்பார் இரு சமுதாயங்களாக, நான்காவதாக ஒரு குழு யூதர் சமுதாயமாகப் பிரிந்து அப்போது மதீனாவில் வாழ்ந்தனர். ஐந்தாவதாக கிறிஸ்துவ சமுதாயமும்!

இறைநம்பிக்கையாளர்கள் அண்ணலாரின் கீழ் திரண்டபோது யூதர்கள் தனித்தே இருந்தனர். அவ்ஸ் கஸ்ரஜ் பழைய கோட்பாளர்கள் மதில் மேல் பூனையாக இருந்தார்கள். கிறிஸ்துவர்கள் திரித்துவக் கொள்கை என்னவாகுமோ எனப் பயந்து கிடந்தனர். யூதர்களில் சிலர் அண்ணலாரின் ஏகத்துவக் கொள்கையால் ஈர்க்கப்பட்டு முஸ்லிமாகினர்.

மூஸா நபிகளாரின் காலத்தில் ஏற்பட்ட புலம் பெயர்தல்கள் பனூ இஸ்ராயீல்களை மத்திய ஆசியா, ஐரோப்பா என ஓட வைத்தது. அவர்கள் மனிதத் தீவுகளாக ஆங்காங்கு வாழ்ந்தனர். அத்தீவுகளில் ஒன்று யத்ரிபில் இருந்தது.

அத்தீவின் விளைபொருளைத் தந்தவை வணிகமும், வட்டித் தொழிலும்! அவற்றால் அவர்கள் செல்வமும் செல்வாக்கும் பெற்றிருந்தார்கள். பொருள்செல்வத்தோடு யூதர்கள் வேதாகமச்

செல்வத்தையும் பெற்றிருந்தார்கள். அவர்களுடைய வேத விற்பன்னர்கள் ராபிகள் என அழைக்கப்பட்டனர். ராபிகள் பலகாலமாக தம் மக்களிடம் எதிர்பார்க்கப்பட்ட நபியைப் பற்றிச் சொல்லிவந்தார்கள்.

யூதர்கள் எதிர்பார்த்த நபி வந்துவிட்டாலும் அந்நபி யூதராக இல்லாததால் மனத்துக்குள் கவலைப்பட்டார்கள்; வெளியில் காட்டிக் கொள்ளவில்லை.

இந்நிலையில் அண்ணலாரின் வருகையும் முஸ்லிம்களின் பெரும்பான்மையும் யூதர்களை ஓர் உடன்பாடு காணவைத்தன.

மதீனாவில் ஆதிக்க சக்தியாக வாழ்ந்த யூதர்கள் ஏற்பட்டிருக்கும் புதிய சக்தியோடு கைகுலுக்கச் சம்மதித்தார்கள். இரு சமுதாயமும் சுமுகமாக வாழ்ந்தால்தான் சமாதானம் நிலவும்; பாதுகாப்பு கிடைக்கும்; சுதந்திரமாகவும் நிம்மதியாகவும் செயல்பட முடியும்.

‘ஒருவர் மற்றவருடைய மதத்தை மதிக்க வேண்டும்; யாரும் யாரையும் இழிவுபடுத்தக் கூடாது; பிறர் பொருளை அபகரிக்கக் கூடாது. அண்ணன் தம்பிபோல் நேசமுடன் நடந்து கொள்ள வேண்டும். அந்நியர் மதீனாவுக்குள் நுழைய முயன்றால் இருதரப்பாரும் எதிர்த்து நின்று அவர்களை விரட்ட வேண்டும். போரில் கிடைக்கும் பொருள்களைச் சமமாகப் பங்கிட்டுக் கொள்ள வேண்டும். எக்காரணத்தைக் கொண்டும் ஒருவரை மற்றவர் கைவிட்டு விடக் கூடாது.’

அண்ணலார் முன்வைத்த தீர்மானத்தை யூதர்கள் ஏகமனதாக ஏற்றுக்கொண்டார்கள். குறைஷிகளோ காட்டரபி இனக் குழுக்களோ எவர் போர்புரிய வந்தாலும் மதீனா அவர்களை எதிர் கொள்ளத் தயாராக இருந்தது.

யூதர்களின் சிலர் இஸ்லாத்தைத் தம் பழைய மார்க்கமென உணர்ந்து ஆரத்தழுவிக் கொண்டாலும் பலர் அதை வேற்றுமதமாகவே கருதினர். சிலை வணங்கிகளிடையே சிலிர்த்தெழுந்த இஸ்லாத்தை யூதர்கள் சிலர் உச்சி மோந்து வரவேற்றாலும் பலர் அதை ஓரங்கட்ட எண்ணினர்.

அப்போது யூதர்களிடம் ஒரு கீழறுப்பு எண்ணம் இருந்தது. அண்ணலாரின் விருப்பப்படியே நடந்து காலப்போக்கில் இஸ்லாத்தைத் தம் அங்கிக்குள் போட்டுக் கொள்ள எண்ணினர். யூதர்களும் முஸ்லிம்களும் ஒன்றாகி ஏகத்துவ மதம் பெரும்பான்மையாகும்போது கிறிஸ்துவம் கிழித்த மட்டையாகிவிடும் என அந்த ஆதிக்கச் சதியாளர் நினைத்தனர். அதுதானே அவர்களின் வரலாறு!

இஸ்லாம் கொடியாகி யூத அரசமரத்தில் படரும் என்ற எண்ணம் பகல்கனவானது; இஸ்லாம் ஆலமரமாக வளர்ந்தது. ஆலமரத்தில் பறவைகளின் கூட்டம், அரச மரத்தில் நச்சரவங்கள்.

யூதர்களின் கயமைத்தனம் உலகறிந்தது. அவர்கள் ஆடுகளை மோதவிட்டு ரத்தம் குடிப்பார்கள்; நரித்தனம் செய்வார்கள். ஆனால் அவர்களின் நரித்தனம் முஸ்லிம்களிடம் தோற்றது. நயவஞ்சகம் இணை வைப்போரின் நாடிபிடித்துப் பார்த்தது. அவர்கள் யூதர்களின் வஞ்சக வலையில் சிக்கினார்கள்; பஞ்சமா பாதங்களைச் செய்ய பழகிக் கொண்டனர்!

## முஹாஜிர்களும் அன்ஸாரிகளும்

உலக வரலாற்றிலேயே புலம் பெயர்ந்து சென்றவர்களை மண்ணின் மைந்தர்களோடு ஒரே சமுதாயமாக ஆக்கியது இஸ்லாமிய வரலாற்றில் மட்டுமே நிகழ்ந்துள்ளது. இதை முன்மாதிரியாகக் கொண்டவர்கள்கூட புலம் பெயர்ந்து சென்றவர்களை அகதிகள் எனவே அழைக்கின்றனர்.

மதீனாவின் மண்ணின் மைந்தர்களாகிய அன்ஸாரிகள் புலம்பெயர்ந்து உதவிதேடிச் சென்ற மக்காவின் முஹாஜிர்களை சொந்தபந்தமாகவே ஆக்கிக் கொண்டனர். அன்ஸாரிகளில் ஒவ்வொருவரையும் முஹாஜிர்கள் ஒவ்வொருவருக்கும் உறவுக்காரராக ஆக்கிய அண்ணலாரின் செயல் தொலைநோக்குப் பார்வைக்கு அடித்தளமிட்டது.

மக்காவிலிருந்து மதீனாவந்த நபித்தோழர் அப்துர் ரஹ்மான் அவ்ஃபுக்கு மதீனாவின் ஸஅது பின் ரபீஉ சகோதரர் ஆனார். சகோதரத்துவம் என்றால் அதைச் சாதாரண சகோதரத்துவம் எனக் கூறமுடியாது. அது சன்மார்க்க சகோதரத்துவம். உலகச் சகோதரத்துவத்துக்கு அது ஒரு முன்மாதிரி.

‘அன்ஸாரிகளில் நான் அதிகம் செல்வம் உடையவன். வீடுவாசல், தோட்டம் துரவுகள் எனக்கு அதிகம் உள்ளன. எனவே என் சொத்தில் பாதியைத் தருகிறேன். அதுமட்டுமல்ல எனக்கு இரு மனைவியர். அவர்களில் ஒருவரை மணவிலக்களித்து உமக்கு மணம் முடித்துவைக்கிறேன்’ எனச் சொன்ன ஸஅது, அப்துர் ரஹ்மானை அதிசயப்பட வைத்துவிட்டார்.

‘அன்புச் சகோதரரே! தற்போதைக்கு எனக்குச் சொத்தும் வேண்டாம், சுகமும் வேண்டாம். வியாபாரம் செய்கின்ற கடைவீதியைக்

காட்டுங்கள். அதுபோதும்' என்ற அப்துர் ரஹ்மானின் மொழிகேட்டு ஸஅது மெய்சிலிர்க்க நின்றார்.

ஸஅத் கடைத்தெருவுக்கு அழைத்துச் செல்ல அப்துர்ரஹ்மான் வியாபாரி ஆனார்.

காலம் சுழன்றது

ஸஅதின் கூட்டுறவால் அப்துர்ரஹ்மானின் வணிகம் வளர்ந்தது. கைனுகா யூதர்களின் கடைத்தெருவில் அப்துர்ரஹ்மானின் கை உயர்ந்தது.

ஒருநாள் அப்துர்ரஹ்மான் அண்ணலாரைக் காணவந்தார். வணிகரின் ஆடையில் மஞ்சள் கறை, அது நறுமணப் பொருள் வழங்கிய அடையாளம்.

நறுமணத்தோடுவந்த வணிகரைப் பார்த்து 'அப்துர்ரஹ்மானே! நீர் மணம் முடித்து விட்டீரா?' என அண்ணலார் கேட்டனர்.

'ஆம்' என்றனர் புது மணமகன்.

'யாரை?' எனக் கேட்டனர் புதுமகனைப் பார்த்துப் புன்னகைத்த அண்ணலார்.

'ஓர் அன்ஸாரிப் பெண்ணை!' என்ற அப்துர்ரஹ்மானிடம் 'எவ்வளவு மஹர் (பரிசப்பணம்) கொடுத்தீர்?' என அண்ணலார் கேட்டார்.

'ஒரு பேரீச்சங்கொட்டை அளவுக்குத் தங்கம்' என்ற அப்துர்ரஹ்மானிடம் 'ஓர் ஆட்டை அறுத்து மணவிருந்து அளிப்பீராக' என அண்ணலார் மொழிந்தனர்.

முஹாஜிர்கள் பரம்பரையாகச் செய்து பழகிய வியாபாரத்தை சிலர் செய்ய, மேலும் சிலர் அன்ஸாரிகளோடு இணைந்து வேளாண்மையில் ஈடுபட்டார்.

> 'மதீனாவாசிகளான அன்ஸாரித்தோழர்கள் அண்ணலாரிடம் வந்து 'எங்களுக்கும் மக்கா நகரிலிருந்து வந்திருக்கும் முஹாஜிர் சகோதரர்களுக்கும் இடையே எங்கள் பேரீச்ச மரங்களைப் பங்கிட்டுவிடுங்கள்' என்றனர். அதற்கு அண்ணலார் 'வேண்டாம்' எனக் கூறிவிட்டார். இதனைக் கேட்ட அன்ஸாரித் தோழர்கள் 'அப்படியென்றால் எங்கள் தோட்டத்தை முஹாஜிர்கள் பராமரிக்கட்டும். நாங்கள் வருமானத்தில் பங்கு பெற்றுக்

கொள்கிறோம்’ எனக் கூற அவ்வாறே நடந்தது.’

(நபித்தோழர் அபூஹுரைரா)

‘முஸாக்காத்’ எனும் இவ்வித நிலக் குத்தகை மூலம் தோழர்கள் ஒருவருக்கொருவர் வருவாய் தேடிக்கொண்டனர்.

முஹாஜிர்களாகிய அலீ, சஅது பின் மாலிக், அப்துல்லாஹ் பின் மஸ்ஊத், உமர் பின் அப்துல் அஜீஸ், காஸீம், உர்வா பின் ஸுபைர், அபூபக்கரின் குடும்பத்தார், உமரின் குடும்பத்தார் எனப் பலர் குத்தகை விவசாயம் செய்தனர்.

அண்ணலார், அப்போது பஹ்ரைன் என அழைக்கப்பட்ட கிழக்கு அரபக அல் அஹ்ஸா பிராந்தியத்தின் ஒரு பகுதியிலிருந்த தரிசு நிலங்களை அன்ஸாரிகளுக்கு வருவாய் மானியமாகத் தர விரும்பினார். அதற்கு அன்ஸாரிகள் ‘அல்லாஹ்வின் தூதரே! அருமைத் தலைவரே! நீங்கள் எங்களுக்கு வருவாய் மானியம் வழங்குவதைப் போன்றே முஹாஜிர் சகோதரர்களுக்கும் மானியம் வழங்காதவரை நாங்கள் அவற்றை ஏற்றுக்கொள்ள மாட்டோம்’ என்றனர்.

அதற்கு அண்ணலார் அவர்கள் ‘அன்ஸாரிகளே! எனக்குப் பின் சிறிது காலத்துக்குள்ளாகவே ஆட்சியதிகாரத்தில் உங்களை விடப் பிறருக்கு முன்னுரிமை தரப்படுவதைப் பார்ப்பீர்கள். ஆகவே, என்னை மறுமையில் சந்திக்கும் காலம்வரை பொறுமையைக் கடைப்பிடியுங்கள்’ என மொழிந்தார்.

அண்ணலார் நிலத்தைக் குத்தகைக்கு விடுவதைத் தடை செய்யவில்லை. நிலத்தைக் குத்தகைக்கு விடுவதற்குப் பதிலாக அந்நிலத்தின் பயனை விவசாயிக்கே விட்டுவிட அண்ணலார் மொழிந்தார்.

## அனார் அவுர் மர்ஸக்

யத்ரிப் மதீனா ஆன பின் மக்காவில் சில முஸ்லிம்கள் சிறைவைக்கப்பட்டனர். அவர்களில் ஒருவரை மீட்டது பற்றி நபித்தோழர் மர்ஸக் சொல்கிறார்:

நடுநிசி

மக்கமாநகர் வீதிகள் வெறிச்சோடிக் கிடந்தன. அன்று பவுர்ணமியாதலால் பட்டப்பகல்போல் நகரம் ஒளி

வீசிக்கொண்டிருந்தது. என்றாலும் ஆங்காங்கு இருந்த வீடுகள் நிழலுள் மூழ்கியும் நிழலைப் பரப்பியும் மௌனமொழி பேசின.

நான் என்னை ஒரு போர்வைக்குள் மறைத்துக் கொண்டும் நிழல்களுக்குள் ஒளித்துக் கொண்டும் சந்து பொந்துகளில் நடந்து சென்றேன். பின் முக்கிய வீதியொன்றில் முன்னேறி இலக்கை எட்டும் தூரத்தைக் கடந்துவிட்டேன்.

முஸ்லிம்களில் பலரும் மக்காவை விட்டு ஏகிய பின்னரும் நான் மக்காவிலேயே தங்கியிருப்பதற்குக் காரணம் இருந்தது.

கைது செய்யப்பட்டு சிறை வைக்கப்பட்டிருந்த முஸ்லிம்களில் சிலரை இரவில் யாருக்கும் தெரியாமல் மீட்டு மதீனாவுக்குக் கொண்டு சேர்ப்பதே என் பணியாக இருந்தது.

அதற்காகவே நான் நடுநிசியில் தன்னந்தனியாக குறைஷிகளின் கூடாரங்களை நோக்கி முன்னேறிக் கொண்டிருந்தேன்.

அன்று இரவு ஒரு முஸ்லிம் தோழரை மீட்பதாக வாக்குறுதி அளித்திருந்தேன். அவரும் எனக்காகக் கண் விழித்துக் காத்துக் கொண்டிருப்பதாக செய்தி கிடைத்திருந்தது.

முக்கிய வீதியில் சென்ற நான் எதிரில் ஆள்நடமாட்டம் தெரிய அருகிலிருந்த வீட்டின் நிழலுள் நிழலானேன்.

எதிரில் ஓர் உருவம் தென்பட்டது. அது நானிருந்த இடத்தைக் கடந்து சென்றபோது அது யாரெனப் பளிச்செனத் தெரிந்தது.

அது ஒரு பெண். அவள் பெயர் அனாார். அவளை எனக்கு நன்றாகத் தெரியும். அவளையும் பலருக்குத் தெரியும். அவள் ஒரு பாலியல் தொழிலாளி; பசப்பி.

அவளுக்கு நான் ஒரு வழமைச் சவாரி, ஒரு காலத்தில்; அவளைப் போன்றவர்களையெல்லாம் அப்பால் தள்ளிவிட்டு இப்பால் வந்து நீண்ட நாட்களாகிவிட்டன. கண்டபடி வாழ்ந்த காலங்களெல்லாம் கனவாய்ப் பழங்கதையாய்ப் போய்விட்ட நிலையில் நான் இப்போது ஓர் உண்மை முஸ்லிம்.

அவள் என்னைப் பார்த்துவிட்டால் எனக்கு இருவகை இழப்புகள் ஏற்படலாம்.

ஒன்று என் செயல் குறித்து அறிந்தால் அவள் மூலம் எதிரிகளின் தொல்லை வரலாம். பணி தடைபடலாம். இரண்டு, என்னை அவள் தன்

திசைக்கு அழைக்கலாம்.

இரண்டுமே நடைபெறாமல் இறைவன் என்னைக் காப்பாற்ற வேண்டும் என எண்ணிய நான் என்னையறியாமல் தும்மினேன்.

தும்மலைக்கேட்ட அனார் திரும்பிப் பார்த்து ‘யாரது! இருளின் மடியில்...!’ எனக் கேட்டபடி என்னை நோக்கிவந்தாள். அவளின் மடி என் நினைவுக்கு வந்தது. இறைவன் என்னைக் காப்பாற்றுவான்.

நான் பதில் பேசாமல் நின்றபடி போர்வையால் முகத்தை முழுவதுமாக மூடிக் கொண்டேன்.

‘எனக்குத் தெரியாதவர் மக்காவில் யாருமே இருக்கமுடியாது... யார் நீ?’ எனக் கேட்டபடி அருகில் வந்து என் போர்வையை வேகமாக உருவினாள்.

என் முகம் இப்போது அவளுக்கு நன்றாகத் தெரிய வர, ‘மர்ஸத் நீங்களா? என் மனங்கவர்ந்தவர்களில் ஒருவரான நீங்கள் ஏன் என்னிடமிருந்து மறைய வேண்டும்?’ எனக் கேட்டபடி அருகில் வந்து என் கைகளைப் பற்றினாள். நான் கைகளை உதறினேன்.

எனக்கு நா வறண்டது. என்ன பதில் கூறுவது என எனக்குத் தோன்றவில்லை. எச்சிலைக் கூட்டி விழுங்கினேன். கண்களிலும் நீர் தளும்பியது.

‘மர்ஸத், ஏன் பேச மறுக்கிறீர்கள்? ஏன் இப்போது உங்கள் கரங்கள் உதறுகின்றன? மெல்லிய காற்று வீசும் சூழலில் எப்படி வந்தன உங்கள் முகத்தில் வியர்வைத் துளிகள்?’

‘அனார்! நான் இப்போது ஒரு முக்கிய வேலையாக போய்க்கொண்டிருக்கிறேன். அதனால்தான்...’

‘என்ன வேலைக்காக தாங்கள் பதுங்கிப் பதுங்கிச் சென்றுகொண்டிருக்கிறீர்கள்? என்னைக் கண்டு பேசுவதைவிட அவ்வேலை என்ன அப்படி முக்கியத்துவம் வாய்ந்தது!’

‘அதைப் பற்றி நான் இப்போது உன்னிடம் பேச முடியாது.’

‘ஏன்? என் மேல் நம்பிக்கையில்லையா உங்களுக்கு? திருடச் செல்கிறீர்களா? இல்லை, யாரையும் கொலை செய்யப் போகிறீர்களா? அப்படிப்பட்ட ஆளில்லையே நீங்கள்... என்னிடம் நம்பிக்கையிருந்தால் சொல்லுங்கள்; இல்லையேல் பரவாயில்லை’ என்ற அவளின் பேச்சில் என் மனம் குளிர்ந்தது.

அனார் விலைமகளாயிருந்தாலும் அவள் அநியாயத்துக்கு விலைபோகமாட்டாள் என எண்ணி, 'நான் குறைஷியர் சிறைப்பிடித்துள்ள முஸ்லிம் ஒருவரை மீட்கப் போய்க் கொண்டிருக்கிறேன்' என்ற உண்மையைச் சொன்னேன்.

'நல்ல வேலையைத்தான் செய்துகொண்டிருக்கிறீர்கள். பரவாயில்லை. என்றாலும், இன்று நீங்கள் என்னோடு தங்கிச் செல்ல வேண்டும்' என அனார் என்னிடம் வேண்டுகோள் விடுத்தாள்.

'அனார்! நான் இப்போது முஸ்லிமாகிவிட்டேன். எனவே, நான் உன் அழைப்பை ஏற்க முடியாத நிலையில் இருக்கிறேன். அல்லாஹ் தவறான பாலியல் உறவைத் தடை செய்துள்ளான். அது உனக்குத் தெரிந்திருக்க வாய்ப்பில்லை. இனியாவது தெரிந்துகொள். இனி நீ கூட அல்லாஹ்விடம் மன்னிப்புக் கேட்டு ஒரே மனிதருடன் வாழும் வாழ்க்கையை மேற்கொள்ளலாம்.'

'அதெல்லாம் கவைக்குதவாத வீண் பேச்சு. வீடு கட்டிக்கொண்டு வாழ்வதெல்லாம் என்னைப் பொறுத்தவரை வீண் வேலை. எனக்குக் கூடாரமே போதும். அதனால் இப்போது நீங்கள் எனக்கு வேண்டும்.'

'நான் சொல்வதை ஏன் நீ புரிந்துகொள்ள மறுக்கிறாய். நான் அல்லாஹ்வுக்குப் பயப்படுகிறேன்' எனக் கூறி, புறப்பட ஆயத்தமானேன்.

'நீங்கள் என்னுடன் வர சம்மதிக்கவில்லையானால், நான் கூச்சலிட்டு குறைஷிகளிடம் உங்களைக் காட்டிக் கொடுத்துவிடுவேன்' என அவள் என்னை எச்சரித்தபோதே என் கால்கள் ஓட ஆரம்பித்தன. அவள் கத்தத் தொடங்கினாள்.

'கூடாரக்காரர்களே! நீங்கள் அடைத்து வைத்திருக்கும் கைதிகளை மீட்பதற்காக இதோ ஒருவர் வந்துவிட்டு தப்பித்து ஓடுகிறார். அவரை விரைந்து வந்து பிடியுங்கள்' என அனார் கூச்சலிட நான் சிட்டாகப் பறந்தேன்.

குதிகால் பிடரியில் பட ஓடிய நான் திரும்பிப் பார்த்தேன். எட்டுப் பேர் என்னைத் தொடர்ந்து ஓடி வந்துகொண்டிருந்தார்கள். அனார் தூரத்தில் புள்ளியாக நின்று கொண்டிருந்தாள்.

ஓடினேன்; ஓடினேன்... ஓடிக் கொண்டே இருந்தேன். ஓடிக் கொண்டிருந்த நான் கந்தமா எனும் மலைக்குகையின் அடிவாரத்தில் சென்று மறைந்து கொண்டேன்.

தேடி வந்த எட்டுப்பேரும் குகையின் மேல் நின்று எட்டுத்திக்கும் எட்டிப் பார்த்திருப்பர் போலும், பேச்சொலி கேட்டது.

பதுங்கியிருந்த என் தலைமேல் சொட்டுச் சொட்டாக நீர் வடிந்து வழிந்து கொண்டிருந்தது. ஏதோ ஒரு வகை நாற்றம் மூக்கைத் துளைத்தது. அவை உதட்டில் பட உப்புக் கரித்தது. குகை மேலிருந்து அவர்கள் பெய்த சிறுநீர் என்னைப் பெருமைப்படுத்தியது போலும்! ஏதும் கூற முடியாத நிலையில் அமைதிகாத்தேன்.

தேடி வந்தவர்கள் திரும்பிய பின் நீண்ட நேரங்கழித்து மூன்றாம் ஜாமத்தில் என் பணியை மீண்டும் தொடர்ந்தேன்.

பவுர்ணமி நிலவு கீழ் வானத்தில் போர்வை போர்த்திப் படுத்துக்கிடந்தது.

சில்லென்ற காற்று சிலிர்க்க வைத்தது. முகில்கள் முயங்கிக் கொண்டு முத்து முத்தாகப் பொழிந்து உடனே ஓய்வெடுத்துக் கொண்டுவிட்டன.

முஸ்லிம்கள் சிறை வைக்கப்பட்டிருந்த கூடார மைதானத்தை அடைந்தேன்.

குறட்டை ஒலியே கேட்டது. காவலிருந்த குறைஷிகள் குடித்திருந்த காரணத்தால் ஆழ்ந்த உறக்கத்தில் இருந்தனர்.

நான் குறிப்பிட்ட கூடாரத்தை அடைந்தேன். நான் மீட்கச் சென்ற நபர் என்னை எதிர்பார்த்திருந்தார். அவர் கால்களில் காயம்; கைகளில் விலங்கு.

நான் குனிந்து அவரை என் முதுகில் ஏற்றிக்கொண்டு புறப்பட்டேன்.

கனத்த சரீரம் கொண்ட அவரை என்னால் நீண்ட தூரம் தூக்கிக்கொண்டு நடக்க முடியவில்லை.

அவரின் விலங்கை உடைத்தெறிந்தேன். அவருக்கு ஓரளவு வலு கூடியது போலிருந்தது. என்றாலும் கால்களில் இருந்த காயங்களால் தரையில் காலூன்றி நடக்க முடியவில்லை.

மீண்டும் அவரைப் பேரீச்சை மூட்டையைச் சுமப்பதுபோல் சுமக்க அரம்பித்தேன்.

நகர எல்லையைத் தாண்டியபோது வானம் வெளுக்க ஆரம்பித்திருந்தது. பறவைகள் கிரீச்சிட்டுக் கொண்டு பறக்க, தூரத்தில்

இடி முழக்கங்கள்.

என் கால்களும் கைகளும் வலுவிழந்தன. சுமையோடு விழுந்துவிடுவேனோ எனப் பயம் வந்தது.

அருகிலிருந்த ஈச்சமரத்தோப்பில் தங்கியிருந்துவிட்டு, மீண்டும் பயணத்தை இரவில் தொடரலாம் என எண்ணினேன். என் முதுகிலிருந்த நண்பரும் நான் எண்ணியதையே செயல்படுத்தச் சொன்னார்.

நண்பரைக் கீழே இறக்கி வைத்துவிட்டு தோப்பை ஆராய்ந்தேன். அங்கே ஆளரவம் இல்லை. தோட்டத்தின் பின்புறம் ஓர் உயர்ந்த மணல் மேடு இருந்தது.

அம்மணல் மேட்டின் மறைவில் நாங்கள் வீழ்ந்து கிடந்தோம். பசி, அரை மயக்கம், அசதி எல்லாம் ஒன்று சேர்ந்து எங்களை நீண்ட தூக்கத்தில் ஆழ்த்தின.

கண் விழித்துப் பார்த்தபோது சூரியன் உச்சியில் இருந்தான்.

‘மர்ஸத், உங்கள் உதவிக்கு நன்றி. நம்மிருவரையும் இஸ்லாமிய உறவு இணைத்ததோடு அல்லாஹ்வின் அருள் நமக்கு எவ்வளவு வலுவைத் தந்திருக்கிறது பார்த்தீர்களா?’ எனத் தோழர் உரைக்க, ‘ஆம் நண்பரே!’ எனக் கூறி சபலங்களிலிருந்தும் சஞ்சலங்களிலிருந்தும் நான் தப்பித்ததையும் அதற்கு அண்ணலாரின் வழிமுறைதான் காரணம் என்பதையும் கூற மாலை மதியமும் வீசுதென்றலும் வந்து சேர்ந்தன.

பசியும் அசதியும் வலியும் சென்றஇடம் தெரியவில்லை.

நாங்கள் மதீனாவை நோக்கிச் செல்ல ஆயத்தமானோம்!

வானத்தில் வட்ட நிலா.

## 19. யாரிந்த நால்வர்?

### தெருப்பாடகன் துறவி கவிஞர் யூத ராபி!

மதீனாவில் வாழ்ந்த யூதர்கள் கிறிஸ்துவர்களைத் தொலைவில் வைத்தனர். காரணம், கிறிஸ்துவர்கள் ஓரிறைக் கொள்கையைவிட்டு திரித்துவக் கொள்கையைக் கொண்டாடியதே! கிறிஸ்துவர்களும் யூதர்களோடு உறவாடவில்லை. காரணம் ஈஸா நபிகளாரை சிலுவையில் ஏற்றியவர்கள் யூதர்களே என்பதால்!

யூதர்களோடு நெருங்கியிருந்தவர்கள் அவ்ஸ் கஸ்ரஜ் அரபு மக்களே! அண்ணலார் மதீனாவுக்கு வரும் முன் சிலராக இருந்த முஸ்லிம்கள் அண்ணலாரின் வருகைக்குப் பின் பலராகினர். அவ்ஸ் கஸ்ரஜ் பேதம் மறைந்து அவர்கள் அன்ஸாரிகளாக மாறியிருந்தனர். அந்த மாற்றத்தில் மக்காவிலிருந்து வந்திருந்த முஹாஜிர்களுக்குப் பெரும்பங்கு இருந்தது.

பெரும்பான்மையினராக மாறிப்போன முஸ்லிம்களோடு யூதர்கள் செய்துகொண்ட ஒப்பந்தம் மதீனா நகருக்கும் நல்லது, அதன் மக்களுக்கும் நல்லதே! ஆனால் யூதர்களுக்கு நல்லதே நடப்பது பிடிக்காதே! ஒப்பந்தத்தால் லாபம் என்றாலும் இழப்பும் பெருமளவில் வருமே எனக் கணக்குப் போட்டனர்.

அவ்ஸ் கஸ்ரஜ் குலங்களை மோதவிட்டுக் கொண்டிருந்தவர்கள் நாளை எவரும் மதீனாவுக்குள் நுழைய முயன்றால் போர் செய்ய வேண்டியிருக்குமே! ஆயுதமேந்தாமல் வாழ்ந்து பழக்கப்பட்டுப் போன யூதர்கள் ஆயுதங்களைக் கையிலேந்தினால் என்னவாகும்? அழிவும் வரும், அங்கங்களுக்குப் பங்கமும் வரும். சொத்துச் சேர்த்தே பழக்கப்பட்ட சுகவாழ்வுக்கு தொல்லைவரும்.

ஏகத்துவம் பேசிக்கொண்டே இஸ்லாத்துடன் சேர்ந்து அதை நீர்த்துவிடச் செய்யலாம் எனக் கூட்டு சேர்ந்தவர்கள் நிராசையடையும் சூழல் வந்தது. இஸ்லாம் மலையுச்சித் தீபமானது யூதர்களின் கண்களைக் கூசச் செய்தது.

அவ்ஸ் கஸ்ரஜ் மக்களை மறுபடியும் பழைய கறுப்பனாக்குவது எப்படி என யூதர்கள் சிந்தித்தனர். அதுவே அவர்களின் விருப்பமாக இருந்தது.

‘வேதம் அருளப்பட்டவர்களில் பலர் நீங்கள் இறைநம்பிக்கை கொண்டுவிட்டதற்குப் பின்னர் (உங்களை எவ்விதத்திலாவது) நிராகரிப்பவர்களாக திருப்பிவிட வேண்டும் என விரும்புகின்றனர். சத்தியம் தமக்குத் தெளிவாகிவிட்ட பின்னரும் தங்களிடமுள்ள பொறாமையின் காரணமாக (இவ்வாறு செய்ய முனைகின்றார்கள்.)’

(திருக்குர்ஆன் 2: 109)

யூதர்களின் பனூ கைனுகா பிரிவைச் சேர்ந்த ஒரு முக்கிய பிரமுகர் அவ்ஸ் கஸ்ரஜ் குலங்களின் ஒற்றுமையைக் கண்டு மனம் வெதும்பிப் போனார். அவர் ஒரு நல்ல குரல்வளமிக்க கைனுகா இளைஞனைத் தூண்டிவிட்டு கடைசியாக நடந்த புஆத் யுத்தத்தைப் பற்றிய பாடல்களை அன்ஸாரிகள் வாழ்ந்த பேட்டையில் சென்று பாடச் செய்தார்.

முதலில் அந்தத் தெருப்பாடகன் கஸ்ரஜ்களைப் பற்றி உயர்வாகப் பாடினான். கலா என்ற ஒரு தாய் வயிற்றுப் பிள்ளைகளே அவ்ஸும், கஸ்ரஜும், அவர்களின் வம்சாவளியினர் பங்காளிச் சண்டையால் பாதை மாறி விரோதிகளாக மாறிப் போயினர். யெமன் தேசத்திலிருந்து வந்து மதீனாவில் குடியேறியவர்கள் கோபங்களால் ரத்தத்தைக் கொதிக்கவைத்து ரத்த ஆற்றை ஓடச் செய்தார்கள்.

‘கலாவின் மக்களாகப் பிறந்தோம்

கஸ்ரஜ்குலக் கொழுந்தாக வளர்ந்தோம்.

கையில் வில் வாளோடு அலைந்தோம்

கயவர்களைக் கண்டந்துண்டமாக்கி உயர்ந்தோம்’

எனப்பாடிய தெருப்பாடகன் அவ்ஸ் மக்களைக் கோபமுறச் செய்தான். பின்னர் அவ்ஸ்களைப் பற்றிய பழையபாடலைப் பாடினான்.

‘கலாவின் மக்களில் யாம் உயர்ந்தோர்

கழுதைகள் அல்ல யாம் சிறந்தோர்

வீராதி வீரர்களாக வளர்ந்தோர்

வேட்டையாடி கஸ்ரஜ்களைக் குவித்தோர்’

எனப்பாட கஸ்ரஜ்கள் கொதித்துப் போயினர்.

அவ்ஸ் கஸ்ரஜ் சார்பில் மாற்றி மாற்றிப் பாடினான். எரிந்த கட்சி எரியாத கட்சி பாடகர்களின் பாடல்களைப்போல் அவை அமைந்தன.

லாவணிப் பாடல்கள் தொடர, ஒரே மார்க்கத்துக்கு வந்தபின்னரும் பழையபடி இருவேறு குலங்களாக அவ்ஸ் கஸ்ரஜ் மாறிப்போயினர். உள்ளங்கள் கொதித்து உடல்கள் சூடாகி கண்கள் சிவந்து நின்றவர்கள் இருட்டறைக்குள் தள்ளப்பட்டார்கள்.

பாடகனின் நோக்கம் நிறைவேறிவிடும் போலிருந்தது. பாடல்கள் ஊட்டிய உணர்ச்சிகள் கொந்தளிப்பாக மாறிக்கொண்டிருந்தது. பாடகன் வாயை மூடிக்கொள்ள பாடல்வரிகள் இரு குலத்தாரின் வாய்மொழியாகின. சண்டை வலுத்தது, சச்சரவு நீடித்தது.

இந்தச் செய்தி அண்ணலாரை எட்டியது. அண்ணலார் உடனே முஹாஜிர்களுடன் அன்ஸாரிகள் இருக்குமிடத்துக்கு விரைந்தார்.

‘இருட்டறையைவிட்டு வந்தவர்கள் மீண்டும் இருட்டறைக்குச் செல்லப் போகிறீர்களா? மலையுச்சியை நோக்கிப் பயணம் செய்தவர்கள் ஏன் பள்ளத்தில் விழ ஆசைப்படுகிறீர்கள்?’ என அன்ஸாரிகளிடம் அறிவுரை கூறி, யூதர்கள் செய்த சூழ்ச்சியினின்றும் அண்ணலார் அவர்களைக் காப்பாற்றினார். அன்ஸாரிகளின் சகோதரர்களாக மாறிப்போயிருந்த முஹாஜிர்கள் தம் உறவினர்களுக்கு கடந்த கால வாழ்க்கையை ஓர் எச்சரிக்கையாகக் கொள்ளும்படி வேண்டினர்.

யூதர்கள் மட்டுமல்ல பழைய மார்க்கத்தில் இருந்த சில அவ்ஸ் கஸ்ரஜ்களும் இஸ்லாத்தின் மேல் பெரும் பகைமை கொண்டிருந்தனர். அவர்களில் ஒன்றுவிட்ட இரு சகோதரர்கள் முக்கிய பங்கு வகித்தனர். அவர்களின் அன்னைகள் இருவரும் உடன்பிறந்த சகோதரிகள் என்றாலும் சகோதரிகள் இருவரும் அவ்ஸ், கஸ்ரஜ்களை மணந்திருந்தனர்.

அவ்ஸ் குலத்தைச் சேர்ந்த அபூ ஆமிர் துறவிபோல் வாழ்ந்தார். சில சீடர்களையும் சேர்த்து வைத்திருந்தார். இபுறாகீம் நபிகளாரைப் பின் பற்றுவதாகக் கூறி ஆன்மிகக் கருத்துகளைக் கூறிவந்தார். அவர் அண்ணலாரைச் சந்தித்துப் பேசினார்.

‘(யூதர்கள்கூறுகிறார்கள்:) நீங்கள் யூதர்களாக இருங்கள்; நேர் வழி

பெறுவீர்கள். (கிறிஸ்துவர்கள் கூறுகிறார்கள்:) நீங்கள் கிறிஸ்துவர்களாக இருங்கள்; நேர்வழி பெறுவீர்கள். (அவர்களிடம்) சொல்வீராக: இல்லை, நான் அனைத்திலிருந்தும் முகம் திருப்பி இப்றாகீமின் வழிமுறையை ஏற்றுக்கொண்டுள்ளேன். மேலும், அவர் இணை வைப்பவர்களில் ஒருவராக இருக்கவில்லை.'

(திருக்குர்ஆன் 2: 135)

அண்ணலார் அபூ ஆமிரிடம் இபுறாகீம் நபிகளாரைப் பற்றிய திருக்குர்ஆன் வசனங்களை மொழிந்தபோது அந்தத் துறவி இஸ்லாத்தின் கருத்துகளை எதிர்த்து வாதம் செய்தார். அண்ணலார் பொய்யுரைப்பதாகக் கூறிய துறவி சாபமிட்டார். 'பொய்யுரைப்போர் சாபக்கேட்டை அடைவர்' என அண்ணலார் கூறிப் புன்னகைத்தார்.

துறவி அபூ ஆமிர் அண்ணலாரைச் சந்தித்துச் சென்றபின் இஸ்லாம் மதீனாவைக் கடந்தும் பரவியது. துறவியைக் கண்டு ஆன்மிகத்தைக் கற்க வருவோர் குறைந்தனர். அவருடைய மகன் ஹன்ஸலா இஸ்லாத்தின் மேல் பற்றுக்கொண்டார். அபூ ஆமிர் தன் சீடர்கள் பத்துப்பேரோடு மக்கா நோக்கிச் சென்றுவிட்டார்.

அபூ ஆமிரின் சிற்றன்னை புதல்வரே கஸ்ரஜ் கோத்திரத்தைச் சேர்ந்த அப்துல்லாஹ் இப்னு உபை. அவ்ஸ் கஸ்ரஜ்கள் ஒன்றானபோது அவர்களின் தலைவராக மகுடம் சூட்ட இருந்தவர்; அண்ணலாரின் வருகையால் அந்த உயர் வாய்ப்பை இழந்தவர். வவ்வால் மனிதர். இஸ்லாத்தை ஏற்காமல் இருந்தவர்.

அன்றொரு நாள்

கஸ்ரஜ்களின் தலைவர்களில் ஒருவரான ஸஅத் இப்னு உபாதா உடல் நலமின்றி இருந்தார். அவரைக் காண அண்ணலார் சென்றபோது, அப்துல்லாஹ் இப்னு உபை தன் மாளிகை வீட்டின் முன்பாக கஸ்ரஜ்கள் சிலருடன் பேசிக்கொண்டிருந்தார்.

இப்னு உபையைக் கண்ட அண்ணலார் வாழ்த்துக் கூறிவிட்டு இஸ்லாத்தைப் பற்றிப் பேசினார்.

'நீர் கூறுவது மிக நன்றாகவே உள்ளது. இதை உம் வீட்டுக்கு வருபவர்களிடம் கூறும். வெளியே சொல்லாதீர்' என இப்னு உபை ஏளனமாகக் கூறினார். அப்போது

'வீட்டுக்கு வெளியிலே வாரும் இந்த

நாட்டுக்கு நல்வழி கூறும்.

கூட்டுப்புழு ஒருநாள் மாறும் பொய்மைக்

கோட்டைகள் தூள் தூளாகும்'

என ஒருவர் கவிதைபாடுவது கேட்டது. அங்கே இப்னு உபையின் நண்பர் கவிஞர் அப்துல்லாஹ் இப்னு ரவாஹா காட்சிதந்தார்.

நண்பர் இஸ்லாத்தில் இணைந்துவிட்டாரா இல்லை இணையப் போகிறாரா என எண்ணிய இப்னு உபை நண்பரை இழக்க வேண்டி வருமோ என அஞ்சினார்.

'நண்பரை இழந்தால்

அன்பினை இழப்பீர்

அன்பினை இழந்தால்

அத்தனையும் இழப்பீர்'

என இப்னு ரவாஹா பாடியது இப்னு உபையின் எண்ணத்தைப் பிரதிபலித்தது.

இப்னு உபை இஸ்லாத்தைத் தழுவாதிருந்த நிலையில் அவருடைய புதல்வர் அப்துல்லாஹ்வும் புதல்வி ஜமீலாவும் இஸ்லாத்தைத் தழுவினர். அதன்பின் இப்னு உபை இஸ்லாத்தைத் தழுவினாலும் தழுவியதாகவும் காட்டவில்லை, தழுவவில்லை எனவும் காட்டவில்லை. அன்ஸாரிகளில் பலர் அவரை நம்பவுமில்லை; நம்பாமலும் இருக்கவில்லை.

அவ்ஸ் கஸ்ரஜ்கள்தான் இஸ்லாத்தைத் தழுவியவர்களில் அதிகமானோர். கிறிஸ்துவர்கள் சிலரும் இஸ்லாத்தைத் தழுவினர். அவர்களில் ஒருவர்தான் ஸல்மான் பார்ஸி. பார்ஸியாக இருந்து கிறிஸ்துவராகி இஸ்லாத்தை ஏற்றவர் ஸல்மான். பல கிறிஸ்துவர்களுக்கு ஏகத்துவக்கொள்கை பிடித்திருந்தாலும் திரித்துவக் கொள்கையை விட அவர்களுக்கும் மனம் வரவில்லை.

யூதர்களோ திசைமாறவே விரும்பவில்லை. அவர்கள் அரபுகளாக இருந்தால் அரபுலகில் உதித்த அண்ணலாரை உச்சிமோந்து ஏற்றிருப்பர். அவர்கள் பனூ இஸ்ராயீல் வழிவந்தவர்கள். பனூ இஸ்மாயில் வழிவந்த அண்ணலாரை ஏற்கத் தயாராகவில்லை.

மிகச் சிலர் இஸ்லாத்தைத் தழுவினர். அவர்களில் முக்கியமானவர் பனூ கைனுகா யூத மதராபி ஹுஸைன் இப்னு ஸல்லாம்!

யூதர்களிடையே பெருமதிப்பு மிக்கவராகத் திகழ்ந்த ஹுஸைன் இஸ்லாத்தை ஏற்றபோதும் யூதர்கள் மனம் மாறவில்லை.

மதீனாவில் முஸ்லிம்கள் பெரும்பான்மையினராக மாறிக் கொண்டிருந்தபோது பழைய மார்க்கத்தைச் சேர்ந்தவர்களும் பழங்குடிமக்களும் யூதர்களும் கிறிஸ்துவர்களும் இறைவனின் வண்ணத்தை இதயத்தில் பூசிக் கொள்ளவில்லை.

மதீனா ஒரே வண்ணமடைய அரை நூற்றாண்டு காத்திருந்தது!

## எரியப்பட்ட ஈட்டிகள்!

அப்துல்லாஹ் இப்னு உபையைப் பற்றி அறிமுகம் தேவையில்லை. கஸ்ரஜ் குலத்தில் பிறந்து பெரும் செல்வமும் செல்வாக்கும் பெற்றிருந்த இப்னு உபை, அவ்ஸ் கஸ்ரஜ் குலங்கள் ஒன்றுபட உழைத்தவர். அவர்களின் தலைவராக முடி சூட்டிக்கொள்ள இருந்தவர். அண்ணலாரின் மதீனா வருகையால் மகுடம் மண்ணில் உருள மனம் மாறிப்போனவர்.

இவற்றை நன்கு தெரிந்துகொண்ட குறைஷிகள் இப்னு உபையைத் தம் கையாளாக்க முயன்றனர். அவருக்கு ஒரு கடிதம் எழுதிய குறைஷிகள் அவரைத் தூண்டிவிட்டு அண்ணலாரைக் கொலை செய்ய திட்டம் தீட்டினர்.

‘யத்ரிபின் கீர்த்தி மிக்க தலைவரே! எங்கள் நகரைச் சேர்ந்த ஒருவரும் அவருடைய ஆட்களும் உங்களூரில் தஞ்சம் அடைந்திருக்கிறார்கள். அவர்கள் நம் பழம் மார்க்கத்தை இழித்தும் பழித்தும் பேசியும் நம் கடவுள்களைக் கற்களென்று கூறியும் நம் முன்னோர்களை மூடர்களென்று வர்ணித்தும் வருவது உங்களுக்கும் தெரியும். அவரை வளரவிட்டால் அழிமானம்தான் நமக்கு. ஆகவே அவரை நாங்கள் அழித்துவிட எண்ணியபோது அவர் அங்கே தப்பியோடிவந்துவிட்டார். இறைவன்மீது ஆணையிட்டுச் சொல்கிறோம். முதலில் அவரைக் கொன்று விடுங்கள். இல்லையேல் அவரை உங்கள் மாநகரிலிருந்து விரட்டிவிடுங்கள். இந்த இரண்டில் ஒன்றை நீங்கள் செய்யாவிடில் நாங்கள் உங்கள்மீது தாக்குதல் நடத்துவோம். உங்களுடைய தலைகள் அறுபடவும் உங்களுடைய மனைவிகள் எங்கள் கைவரவும் நாங்கள் விரும்பவில்லை. நீங்களும் விரும்ப மாட்டீர்கள் என்பது எங்களுக்குத் தெரியும்’ என இப்னு உபைக்கு மக்கத்துக் கடிதம் சேதி சொன்னது.

அப்துல்லாஹ் இப்னு உபைக்குத் தலைமைப் பதவிமேல் ஆசையிருந்தாலும் அதையடைய அவர் மக்காவிலிருந்து வந்த காகிதக் கணைப்படி நடக்கத் தயாரில்லை. தலைமைப் பதவியால் தகுதி மட்டும் வருவதில்லை, தலைவலிகளும் வரும்.

‘கொலைப் பழி ஏற்கவேண்டுமா? கொலை செய்யாது அவர்கள் சொற்படி நடந்து நகரிலிருந்து முஹம்மதை விரட்டத்தான் முடியுமா? விரட்டினால் அன்ஸாரிகள் எல்லாம் சேர்ந்து என்னைப் புரட்டிப் போடமாட்டார்களா? அவர்கள் எல்லோருமே அவ்ஸ் கஸ்ரஜ்கள் தானே! ஒரு சிலரைத் தவிர எல்லோரும் முஸ்லிமாகியிருக்கும்போது என்னால் எதிர்த்து நிற்க முடியுமா? மக்காவிலிருந்து வந்துள்ள கடிதம் என்னுடைய தலையறுக்கக் காரணமாகி விடக்கூடாது. வருவது வரட்டும்’ என எண்ணிய இப்னு உபை கடிதத்தை ஒரு ஈட்டி முனையில் குத்தி வைத்தார்.

இந்தக் காலகட்டத்தில் மதீனாவின் தலைவர்களில் ஒருவரான சஅத்பின் முஆத் மக்கா சென்றார். உம்ராவை நிறைவேற்றச் சென்ற அவரை இறையில்லத்தின் வாயிலில் அபூஜஹ்ல் சந்தித்தார்.

‘யத்ரிப் நகரம் எப்படியிருக்கிறது? யத்ரிப் மக்கள் எப்படியிருக்கிறார்கள்? எங்களை ஏமாற்றிவிட்டு வந்தவர் எப்படியிருக்கிறார்?’ என அபூஜஹ்ல் கேட்டபோது சஅத் கண் சிவந்தார்; வாய் திறக்கவில்லை.

‘நம்முடைய மார்க்கத்தைக் கேவலமாகப் பேசுபவர் அங்கே எப்படி நிம்மதியாக இருக்கிறார்? நீங்களெல்லாம் அவருக்கு சாமரம் வீசுகிறீர்களா? நாங்கள் யத்ரிபுக்கு வந்துதான் அவரை விரட்ட வேண்டுமா? நீங்கள் விரட்ட மாட்டீர்களா? அவருடைய பேச்சைக் கேட்டு எங்கள் சமுதாயம் இரண்டாகிவிட்டது. நீங்களோ அவருக்குத் தஞ்சமளித்துவிட்டு இங்கே வந்து நிம்மதியாக தவாஃப் செய்து கஅபாவை வலம் வந்து கொண்டிருக்கிறீர்கள்! நீர் மட்டும் உமையா கலஃபின் விருந்தினராக இல்லாதிருந்தால் நடப்பதே வேறு. கஅபாவில் உம்மை உயிர்ப்பலி கொடுத்திருப்பேன்’ என அபூஜஹ்ல் ஆவேசமாகப் பேசினார்.

‘அபூஹகம்! நாவை அடக்கும்; முஹம்மதுக்கும் உனக்கும் பிரச்னையென்றால் நான் என்ன செய்ய முடியும்? கஅபா ஆலயம் குறைஷிகளுக்கு மட்டும் சொந்தமானதல்ல, அரபுலகம் முழுமைக்கும் சொந்தமானது. இன்னும் கடந்த கால வரலாற்றை விரித்துப் பார்ப்போமானால் இபுறாகீம் நபிகளார் வம்சா வளியினர் எங்கெங்கு

இருக்கிறார்களோ அவர்கள் எல்லோருக்கும் சொந்தமான இடம் இது!' என சஅத் கூற அபூஜஹ்ல் ஆவேசம் குறைந்தது.

சஅத் சப்தமிட்டுப் பதில் கூறியதைக் கேட்ட அபூஜஹ்லின் உறவுக்கார மக்ஸுமிகள் 'என்ன, என்ன?' எனக் கேட்டபடி அவர்களிருவரையும் சூழ்ந்தனர்.

'ஒன்றுமில்லை' என அபூஜஹ்ல் கூற 'தவாஃப் செய்ய விடாமல் தடுப்பாராம்; என்னைக் கொலைகூட செய்வாராம்; இந்த அபூஹகம்!' என சச்சரவுக்கான காரணத்தை எடுத்துரைத்தார் சஅத்.

மௌனமாக நின்ற மக்ஸுமிகளிடம் 'இறைவன் மீதாணையாக! யத்ரிப்வாசிகளாகிய எங்களை கஅபாவை வலம்வர விடாமல் நீங்கள் தடுப்பீர்களெனில் எங்களுக்கு உங்களை என்ன செய்ய வேண்டும் என்பதைத் தெரிந்தே வைத்துள்ளோம்' என்றார் சஅத்.

'என்ன செய்வீர்கள்!' என அபூஜஹ்ல் கேட்டார்.

'யத்ரிப் வழியாக நடக்கும் உங்கள் வணிகப் பயணங்களுக்குத் தடை வரலாம். சிரியா சென்று செழுமையோடு வாழும் உங்கள் சகோதரர்கள் முடங்கிப் போவார்கள்' என சஅத் எச்சரித்தார்.

'சின்ன விஷயத்தைப் பெரிதாக்க வேண்டாம். நீங்கள் தவாஃப் செய்யுங்கள்' என அபூஜஹ்ல் அடங்கிப் போனார்.

உம்ராவை முடித்துவிட்டு மதீனாவுக்கு சென்ற சஅத்பின் முஆத் அண்ணலாரைச் சந்தித்து கஅபாவில் நடந்தவற்றைச் சொன்னார்.

சஅத், உமையா கலஃபின் விருந்தினர், யத்ரிப்வாசி என்பதை மட்டுமே அறிந்தவர் அபூஜஹ்ல். அவர் அவ்ஸ் குலத்தைச் சேர்ந்த மிகப் பெரும் தலைவர், இஸ்லாத்தைத் தழுவியவர் என்பது அபூஜஹ்லுக்குத் தெரியாது. அவர் முஸ்லிம் எனத் தெரிந்திருந்தால் இன்னும் மூர்க்கத்தனமாக அபூஜஹ்ல் நடந்திருப்பார்.

சஅத் மொழிந்ததைக் கேட்ட அண்ணலார் ஆழமாக சிந்தித்தார்.

'சிரியா செல்லும் பயணம் முடக்கப்படும் என நீங்கள் செய்த எச்சரிக்கை அபூஜஹ்லை உறுதியாக ஆட்டங்காண வைத்திருக்கும். நானும் அதைப்பற்றி இப்போது சிந்திக்கத் தொடங்கியுள்ளேன். குறைஷிகளின் மூலாதாரமே வியாபாரம்தான். அதற்குத் தடையேற்படுவதை அவர்கள் கனவிலும்கூட நினைத்திருக்க மாட்டார்கள். நமக்கு மேலும் மேலும் அவர்கள் தொல்லை கொடுப்பார்களாயின் வணிகக்குழுக்களைத் தடுப்போம். அதன்

விளைவுகள் என்னவாகயிருந்தாலும் எதிர்கொள்வோம்’ என அண்ணலார் மொழிந்தார்.

வர்மக்கலை விற்பனர் எந்த நரம்பை எவ்விதத்தில் தட்டினால் எந்தப் பகுதி இயங்காமல் போகும் என்பதை அறிவார். அவர் அடிக்கும் இடத்தைப் பொறுத்து கால், கையை மட்டுமல்ல, வாயைப் பேசாமலும் முடக்கலாம்! அப்போது சாப்பிடக்கூட முடியாது!

## மூலதனமும் மூளை தனமும்!

பகலெல்லாம் உடல் வேர்க்கும்

இரவெல்லாம் பனிபூக்கும்

காற்றெல்லாம் மண்துகள்கள்

பாட்டெல்லாம் இசைப்பாட்டு

அரிக்கனெல்லாம் மின்மினியாய்

ஒட்டகங்கள் சிறுமலையாய்

வான்முகில்கள் ஓய்வெடுக்க

வட்டநிலா வலசை வரும்

மக்காவின் வணிகக் குழு

மணல்பாதை வளைகோட்டில்

மதீனாவைத் தொட்டுவிட்டு

சிரியாவைச் சென்றடையும்

சிரியாவில் சுமையிறக்கி

சில நாட்கள் ஓய்வெடுக்கும்

ஒட்டகங்கள் போன்ற நல்ல

உயிர்த் தோழர் எவருமில்லை

உயிர்த் தோழன் ஒட்டகம் என்றால் உயிர் வாழவைக்கும் உற்ற தோழன் வணிகம் என்பதைக் குறைஷிகள் அறிந்தே வைத்திருந்தனர்.

அபூஜஹ்ல் கஅபா நிகழ்ச்சியைச் சொல்லி மதீனாவில் சஅத்பின் முஆத் கூறிய எச்சரிக்கையையும் அபூசுப்யானிடம் எடுத்துரைத்தார்.

அபூசுப்யான் மிகப்பெரிய வணிகர் மட்டுமல்ல, சிந்தனையாளர் கவிஞர். அவருக்கு அப்போது மேற்கண்ட கவிதை நினைவுக்கு வந்தது.

அக்கால கட்டத்தில் மக்காவிலிருந்த வணிகர்களில் மிகப்பெரிய வணிகர் அபூசுப்யான். அவருடைய வணிகக் குழுவில் ஒவ்வொரு முறையும் நூற்றுக்கணக்கான ஒட்டகங்கள் பங்கேற்றன. மக்காவிலிருந்து யெமனுக்கும், சிரியாவுக்கும் அவருடைய ஒட்டகங்கள் சென்றுவந்தன. யெமனிலிருந்து சிரியாவரையுள்ள ஊர்களிலுள்ள பிரமுகர்கள் அவரை நன்கு அறிந்து வைத்திருந்தனர். ஆங்காங்குள்ள பழங்குடி மக்கள் அபூசுப்யானின் பயணக்குழுவென்றால் தாமாக முன்வந்து பாதுகாப்பளித்தனர். அவர்கள் தங்குமிடமெல்லாம் திருவிழாக் கூட்டந்தான்; ஒட்டகக் கறி விருந்துதான்.

அபூசுப்யானிடமிருந்த வணிகத்திறனும் கவிதைத் திறனும் பலரை வியக்க வைத்தது. அபூஜஹ்லோ வணிகரும் இல்லை; கவிஞரும் இல்லை. அவர் தோட்டந்துரவுக்காரர்; வம்பர். தோட்டந்துரவுகளைக் கண்காணித்ததைவிட அவர் வெட்டிப் பேச்சு பேசிக் கொண்டு கஅபாவில் கிடந்ததுதான் அதிகம்.

அபூஜஹ்லிடம் மதீனாவின் சஅத் பின் முஆத் எச்சரித்ததைக் கேட்ட அபூசுப்யான் அதை வெறும் பேச்சாகக் கருதவில்லை. உண்மையில் நடக்கக்கூடிய செயலாகவே தெரிந்தது.

மதீனாவில் முஸ்லிம்கள் கண்டுவந்த வளர்ச்சியை அபூஜஹ்லைவிட அபூசுப்யான் நன்கறிவார். மதீனாவிலிருந்து வந்த ஆட்களும், யெமன், சிரியா சந்தைகளில் சந்தித்த வணிகர்களும் சொன்ன செய்திகள் அபூசுப்யானை பதட்டமடையச் செய்திருந்தது. அவர்கள் பெரும்பான்மையினரானால் பேரிழப்பு குறைஷிகளுக்குத்தான் என்பதில் இருவேறு கருத்துகள் இருக்கவில்லை.

‘முஸ்லிம்கள் மேலும் வலுவடைவதற்கு முன் அவர்களை வீழ்த்துவதெப்படி?’ என அபூசுப்யான் ஆழமாகச் சிந்தித்தார்.

‘அவ்ஸ் கஸ்ரஜ்களெல்லாம் முஸ்லிமாகிக்கொண்டே இருக்கின்றனர். யத்ரிபைச் சுற்றியுள்ளவர்களோடும் யூதர்களோடும் அவர்கள் ஒப்பந்தங்கள் செய்துகொண்டுள்ளனர். யத்ரிபின் ஆட்சியதிகாரமே முஸ்லிம்களின் கைகளுக்குள் வந்துவிட்டது. இந்நிலை மேலும் வளருமானால் அவர்கள் மக்காவை நோக்கிப் படையெடுத்து வருவார்களா?’ என அபூஜஹ்ல் கேட்டார்.

‘அதைப் பற்றித்தான் நானும் யோசிக்கிறேன். தாருந் நத்வாவில்

கூடிப்பேசி முஸ்லிம்களை நசுக்குவதற்குரிய ஏற்பாட்டைச் செய்ய வேண்டும்' என அபூசுப்யான் கூற அடுத்த நாளே குறைஷிகளின் மகாசபை கூடியது.

'முஸ்லிம்கள் படையெடுத்துவந்தால் ஆள்பலத்தோடு ஆயுதபலமும் வாகன பலமும் வேண்டும். அதற்காக நாம் பெருந்தொகை சேர்த்தாக வேண்டும்' என காலித் சொன்னார்.

'அதற்காக அபூசுப்யானிடம் உங்களால் முடிந்த மூலதனத்தைக் கொடுங்கள். அதன் மூலம் அவர் பொருள்களை வாங்கி சிரியாவில் விற்று கிடைக்கும் லாபத்தை பொது நிதியில் சேர்ப்போம். அந்த நிதியிலிருந்து வில், வாள், ஈட்டி, கேடயங்கள் செய்வோம்; குதிரைகளும் ஒட்டகங்களும் வாங்குவோம்; கூடாரப் பொருள்களோடு அடிமைகளையும் சேர்ப்போம்' என அபூலஹப் முன்மொழிய கூடியிருந்த குறைஷித் தலைவர்கள் அனைவரும் அவர் சொன்னதை வழி மொழிந்தனர்.

வணிகர்கள், வணிகரல்லாதோர், தொழில்புரிவோர் என அனைத்துவிதக் குறைஷிகளும் மூலதனத்தை வாரி வாரிக் கொடுத்தனர். அம்மூலதனத்தின் மூலம் வாங்கிய பொருள்கள் அம்பாரமாகக் குவிந்தன. ஒட்டகங்களும் ஒட்டக ஓட்டிகளும் பணியாள்களும் மக்காவின் வீதிகளெங்கும் காணப்பட்டனர்.

அபூசுப்யானின் வணிகப் பெருங்குழு பற்றிய செய்தி, வணிகத்தின் நோக்கம் என்பன போன்ற சங்கதிகள் ஈச்சமரத் தோட்டங்களில் எதிரொலித்து ஒட்டகங்களின் மணியோசைகளில் பயணம் செய்து மதீனா மாநகரைப் போய்ச் சேர்ந்தன.

'முஸ்லிம்களையும் இஸ்லாமிய இயக்கத்தையும் அழித்திட குறைஷிகள் தீட்டிக் கொண்டிருந்த திட்டங்களைத் தவிடுபொடியாக்க என்ன செய்ய வேண்டும்?' என அண்ணலார் ஆலோசித்தார்.

குறைஷியர்கள் பெரும் செல்வராக உயரக்காரணம் வணிகமே? அவர்கள் செல்லும் வணிகப் பாதைகளை அடைத்துவிட்டால் வணிகம் தடைப்படும். அதன் மூலம் அவர்கள் வாழ்க்கையும் முடைபடும். தம்மளவில் அவர்கள் பொருளாதாரப் பள்ளத்திலிருக்கும்போது போர் புரியத் துணிவார்களா? போரென்று சொல்லக்கூட முடியாதவர்களாகிவிடுவார்கள்; கையாலாகாதவர்களாகி விடுவார்கள்! இந்த நிர்ப்பந்தம் தான் மக்காவாசிகளை சின்னாபின்னமாக்கும்.

அண்ணலார் சிரியா வரையுள்ள பாதையோர ஊர்களிலுள்ள

பழங்குடி மக்களோடும் யூதர்களோடும் ஒப்பந்தங்கள் செய்துகொண்டார். அண்ணலாரின் திட்டம் மக்காவிலிருந்து யெமன் செல்லும் பாதையையும் அடைத்துவிடுவதாக அமைந்தது. அதற்காக வணிகக் குழுக்களை மிரட்டக்கூடிய சிறு சிறு குழுக்களை அண்ணலார் அமைத்தார்.

அவற்றில் ஒரு குழு மக்காவுக்கும் தாயிபுக்கும் இடையேயுள்ள நக்லா என்னும் இடத்துக்கு அனுப்பப்பட்டது. பனிரெண்டுபேர் இருந்த அக்குழுவின் தலைவர் அப்துல்லாஹ் பின் ஜஹ்ஷ்.

மதீனா, மக்காவுக்கு வடக்கில் வெகுதொலைவிலிருக்கிறது. நக்லாவோ மக்காவுக்குத் தெற்கே இருக்கிறது. குறைஷியர் பட்டணத்துக்குத் தெற்கேயுள்ள ஊருக்கு உளவுக்குழுவை அனுப்பியதன் மூலம் முஸ்லிம்கள் மதீனாவை மட்டும் கவனிக்கவில்லை மக்காவைக் கடந்தும் கவனிக்கிறார்கள் என்பதை அண்ணலார் உணர்த்தினார்.

## உளவு பார்த்துப் பழகி...

ஹிஜ்ரி இரண்டு, ரஜப் மாதம்

நக்லாவுக்கு அனுப்பப்பட்ட குழுத் தலைவர் அப்துல்லாஹ் பின் ஜஹ்ஷிடம் அண்ணலார் ஒரு கடிதத்தைக் கொடுத்து அதை இரண்டு நாட்களுக்குப் பின் பிரித்துப் பார்க்கும்படி கூறியிருந்தார்.

அப்துல்லாஹ் அக்கடிதத்தை இரண்டு நாட்களுக்குப் பின் பிரித்துப் பார்த்தார். அதில் நக்லாவிலும் அதைச்சுற்றியுள்ள பகுதிகளிலும் தங்கியிருந்து குறைஷிகளின் நடமாட்டத்தைக் கண்காணிக்குமாறு எழுதப்பட்டிருந்தது.

அக்கடிதத்தின் கட்டளைக் கிணங்க வேவு பார்த்த முஸ்லிம்களின் உளவுக் குழுவின் கண்களில் யெமனிலிருந்து வந்துகொண்டிருந்த குறைஷியரின் வணிகக் குழு தென்பட்டது.

மக்காவிலிருந்து புறப்படும் வணிகக் குழுக்கள் பெரும்பாலும் உயர் மதிப்புள்ள பொருள்களைக் கொண்டு செல்வதில்லை. அவை பழவகைகளாகவும் ஜைத்தூன் எண்ணெயாகவும் ஆடு, மாடு, ஒட்டகத் தோல்களாகவும் இருக்கும். யெமனிலிருந்து வருபவையோ முத்து போன்றவையாக இருக்கும். அவை தமிழகம், கேரளம் போன்ற மாநிலங்களிலிருந்து இறக்குமதியாகி வந்தவை.

யெமனிலிருந்து வந்த அந்த சிறிய வணிகக் குழுவை முஸ்லிம்கள்

வழிமறித்தனர். அப்போது ஏற்பட்ட சண்டையில் உமர்பின் ஹள்ரமீ என்பார் கொலை செய்யப்பட்டார்; இருவர் கைது செய்யப்பட்டனர்; மற்றவர்கள் ஓடிவிட்டார்கள்.

கைது செய்யப்பட்ட இருவரையும் கைப்பற்றப்பட்ட பொருள்களையும் அப்துல்லாஹ் மதீனாவுக்குக் கொண்டு வந்து சேர்த்தார்.

இதைக் கண்ட அண்ணலார் துயரமும் கோபமும் அடைந்தார். ‘உளவு பார்த்து வரத்தானே உங்களை அனுப்பினேன். கொலை செய்யவும் கொள்ளை அடிக்கவுமா உங்களை அனுப்பினேன். கொலை செய்யப்பட்டவரும் நீங்கள் கைது செய்து கொண்டு வந்திருக்கும் இருவரும் சாமான்யர்களில்லை; உயர்ந்த குடும்பத்தைச் சேர்ந்தவர்கள். இவர்களின் நிலையைக் கேள்விப்பட்டால் குறைஷிகள் கொந்தளித்துப் போய்விடுவர்’ எனக் கூறிய அண்ணலார் கொள்ளைப் பொருள்களைப் பெற்றுக்கொள்ள மறுத்துவிட்டார்; இரு கைதிகளையும் விடுதலை செய்து அனுப்பினார்.

செய்தி அறிந்த குறைஷிகள் தாருந் நத்வாவில் கூடி தர்க்கம் செய்தனர். முஸ்லிம்களைக் கொன்றொழிப்பதே குறைஷிகளின் குறிக்கோள் என சபதம் செய்தனர். சிரியா சென்றிருக்கும் அபூசுப்யான் வந்தவுடன் படை சேர்த்து படைக்கலன்களையும் பெருக்கி மதீனாவை நோக்கி படை நடத்துவதென முடிவு செய்தனர்.

மதீனாவுக்கு வடக்கே சென்ற அண்ணலாரின் உளவுக்குழுவினர் சென்றவிடமெல்லாம் மக்காவின் வணிகக் குழுக்கள் நழுவியிருந்தன அல்லது இடத்தைக் காலி செய்திருந்தன.

அபூசுப்யான் தலைமையில் சிரியா சென்ற மிகப் பெரும் வணிகக்குழு கூட அரைநாள் பயணத்தில் அகப்படாமல் போனது. நூற்றுக்கணக்கான ஒட்டகங்களின் தடங்களைத்தான் முஸ்லிம்களால் காண முடிந்ததே தவிர அவற்றின் அணிவரிசையைக் காண முடியவில்லை.

ஹிஜ்ரி இரண்டாம் ஆண்டு, ஷஅபான் மாதம்

அபூசுப்யானின் வணிகக் குழு மக்காவை நோக்கிப் புறப்பட்டது. அது ஐம்பதினாயிரம் பொற்காசுகள் மதிப்புள்ள வணிகப் பொருள்களைச் சுமந்து வந்தது. நூற்றுக்கணக்கான ஒட்டகங்களுக்கு நாற்பது காவலர்களே பாதுகாப்பாக வந்தனர்.

மதீனாவை எட்ட சில நாழிகைப் பொழுது இருந்தபோது

அபூசுப்யானை அச்சம் சூழ்ந்தது. முஸ்லிம்கள் பயணக்குழுவை மறித்து வணிகப் பொருள்களைக் கொள்ளையிட்டுவிட்டால் என்ன செய்வது என்ற பயம் வந்தது.

குதிரை வீரர் ஒருவரை மக்காவுக்கு அனுப்பி உதவிக்கு ஆள்கேட்டார். அவர் செய்தியை உரத்துக் கூவிட மக்காவே கூடியது.

அபூசுப்யான் மதீனாவை இடப்புறம் தள்ளி செங்கடல் பக்கம் சென்று பயணத்தைத் தொடர்ந்தார்.

'மதீனாவாசிகள் அபூசுப்யானின் வணிகப் பொருள்களைக் கொள்ளையிட்டுவிட்டனர். ஐம்பதினாயிரம் பொற்காசுகள் மதிப்புள்ள பொருள்கள் அபகரிக்கப்பட்டுவிட்டன' என்ற இல்லாத செய்தி பொல்லாத செய்தியாக மக்கா வீதிகளில் வலம் வந்தது.

அபூஜஹ்ல் வகையறாக்கள் ஆவேசப்பட்டனர். கஅபாவெங்கும் மக்கள் கூட்டம். தாருந் நத்வாவில் கூடிக் கூடிப் பேசினர். சிலைகளை வணங்கியும் சிலைகளோடு பிணங்கியும் சபதமும் சாபமும்!

ஆயிரம்பேர் திரண்டு விட்டனர்; அனைவரின் கரங்களிலும் ஆயுதங்கள். அவர்கள் மதீனாவை நோக்கிப் போர்புரியச் சென்றார்கள். போர்புரிய வெளிக்காரணம் கொள்ளையென்றாலும் உள்ளே உள்ள காரணம் கொள்கை.

'மூதாதையர்களின் கொள்கையா? முஹம்மது சொல்லும் கொள்கையா?' எது சிறந்தது என முடிவுக்குக் கொண்டுவர குறைஷிகள் மதீனாவை நோக்கிப் படை நடத்தினர்.

மதீனாவிலோ முஸ்லிம்களுக்கு இருவேறு பணிகள் எதிரில் நின்றன! திரண்ட செல்வத்தோடு செல்லும் அபூசுப்யானின் வணிகக் குழுவைக் கொள்ளையடிப்பதன் மூலம் குறைஷியரின் வலுவைத் தகர்ப்பதா? இல்லை மக்காவிலிருந்து புறப்பட்டு மதீனாவை அழிக்க வரும் குறைஷிப் படையின் எதிர்ப்பைச் சந்தித்து அவர்களை அழிப்பதா என இரு பணிகள்!

வணிகக் குழுவை மடக்கினால் ஐம்பதினாயிரம் பொற்காசுகள் மதிப்புள்ள பொருள்கள் கிடைக்குமே எனச் சிலர் எண்ணினர். போர்ப்படையை எதிர்த்துப் போரிட்டால் மதீனாவும் மதீனாவின் மக்களும் காக்கப்படுவர், இஸ்லாம் ஏற்றமடையும் என சிலர் எண்ணினர். அண்ணலார் இருவேறு எண்ணம் கொண்டோரையும் மாறி மாறி கேட்டனர்.

அன்ஸாரிகளோ போர்ப் படையினரை எதிர்த்துப் போரிடுவதையே முதன்மைப் பணியாகக் கருதினர். அதே சமயம் அல்லாஹ்வின் ஆணையென்ன, அண்ணலாரின் கருத்தென்ன என வினவினர்.

> ‘இரு கூட்டத்தாரில் ஒரு கூட்டம் நிச்சயம் உங்கள் கைக்குக் கிடைத்துவிடுவர்.’ என்று அல்லாஹ் உங்களிடம் வாக்குறுதி அளித்தான். ஆனால், நிராயுதபாணிகளான கூட்டத்தினர் உங்களுக்குக் கிடைக்க வேண்டுமென நீங்கள் விரும்பினீர்கள். ஆனால் அல்லாஹ்வோ தன் வாக்குகளால் சத்தியத்தைச் சத்தியம் என்று காட்டவும் நிராகரிப்பாளர்களை வேரறுக்கவும் நாடியிருந்தான். ஏனெனில் சத்தியம் சத்தியம்தான் என்றும் அசத்தியம் அசத்தியம்தான் என்றும் தெளிவாக்கிட வேண்டும் என்பதற்காக!’

(திருக்குர்ஆன் 8: 78)

அல்லாஹ்வின் ஆணையே அண்ணலாரின் கருத்து என்பது அடியார்களுக்குத் தெரிய வந்தது. அவர்கள் குறைஷிகளை வேரறுக்கும் பொறுப்பை ஏற்றனர்.

இறையாணை கிடைக்காமல் அவர்கள் அபூசுப்யானின் வணிகக் குழுவை வழிமறித்துக் கொள்ளையிடச் சென்றிருந்தால் என்ன நேர்ந்திருக்கும்?

ஐம்பதினாயிரம் பொற்காசுகள் மதிப்புள்ள வர்த்தகப் பொருள்கள், நூற்றுக்கணக்கான ஒட்டகங்கள், மற்றும் அடிமைகள் கிடைத்திருப்பர். ஆனால் மதீனாவை அவர்கள் இழந்திருப்பர்.

இஸ்லாத்தின் வரலாற்றில் பத்ருப் போர்தான் முஸ்லிம்களுக்கு ஆளுமைப் பண்புகள் பலவற்றை அளித்தது. அதுதான் அரபகம் முழுமையையும் அவர்களைப் பார்க்க வைத்தது; அதுதான் அவர்களை ஆட்சியதிகாரத்தை நோக்கி நகர்த்திச் சென்றது.

இரு கூட்டத்தாருள் ஒரு கூட்டத்தார் உங்கள் கைகளுக்குள் கிடைத்துவிடும் நிலையிலிருந்தபோது வணிகக் கூட்டத்தார் அருகிலும் வாளேந்திய கூட்டத்தார் தொலைவிலும் இருந்தனர்.

> ‘நீங்கள் (பள்ளத்தாக்கிலிருந்து) மிக நெருங்கிய பகுதியிலும் அவர்கள் மிகத் தொலைவான பகுதியிலும் (தளம் அமைத்து) இருந்ததையும், மேலும் பயணக் கூட்டம் உங்களுக்குக் கீழே (கடற்கரை ஓரமாக) இருந்ததையும் நீங்கள் நினைத்துப் பாருங்கள்.’

(திருக்குர்ஆன் 8: 42)

தொலைவிலிருந்த பணியைச் செய்தால் வெற்றிக் கனி பறிப்பதில் சந்தேகமிருந்தது. அருகிலிருந்த பணியைச் செய்தால் வெற்றிக் கனி நிச்சயம் கிடைக்கும் என்பதில் சந்தேகமில்லை. இந்நிலையில் இறைவன் தொலைவிலிருந்த பணியைச் செய்ய ஆணையிட்டான்.

அப்பணி பத்ருப் போராக அமைந்தது. ஆயிரம் பேர் அணிவகுத்து வந்தபோது 313 முஸ்லிம்கள் அவர்களை எதிர் கொள்ள வேண்டியிருந்தது.

உலக வரலாற்றில் எத்தனையோ போர்கள் நடந்திருந்தாலும் உலகத்தின் நடுவிலே நடைபெற்ற பத்ருப் போர் இன்றுவரை பேசப்படுகிறது; நாளைய போர்களுக்கான இலக்கணமாகவும் அது விளங்கி வருகிறது.

## அம்பர் மீன் ஆற்றிய பசி!

நபித்தோழர்கள் முன்னூறு பேர் அபூஉபைதா பின் அல்ஜர்ராஹ் தலைமையில் செங்கடலோரப் பாதைக்கு (சீஃபுல் பஹ்ர்) அனுப்பப்பட்டார்கள்.

வழக்கமாகச் செல்லும் பாதையில் செல்லாமல் அப்போது குறைஷி வணிகர்கள் கடலோரப் பாதையில் பயணம் செய்துகொண்டிருந்தார்கள். அவர்களை வழிமறிக்கவே படை அனுப்பப்பட்டிருந்தது.

முன்னூறு பேருக்கும் குறைந்த அளவே உணவுக்காக பேரீச்சம் பழங்கள் கொடுத்து அனுப்பப்பட்டிருந்தன.

நாட்கள் கடந்தன

உணவுப் பற்றாக்குறை; பேரீச்சம் பழத்தை வாயில் போட்டுச் சுவைத்து தண்ணீரைக் குடித்துக் காலத்தைக் கடத்தினர். பெரும் பசி, கருவேல மரத்தின் இலையைப் பறித்து உண்டனர்.

படையில் அங்கம் வசித்த நபித்தோழர் ஜாபிர் உணவுப் பற்றாக்குறையைப் பற்றிப் பேசி பெருங் கவலைப்பட்டார். நபித்தோழர் கைஸ் பின் ஸஅத் ஒட்டகங்களை அறுத்துப் படையினரின் பசியை ஆற்றினார்.

ஒருநாள் படையிலிருந்த சிலர் கடல் அலைகளை எண்ணிக் கொண்டிருந்தனர். மேலே எழும் அலைகள் கீழே விழ, கீழே விழும்

அலைகள் கடற்கரையைத் தொட்டுத் திரும்பிச் சென்று கொண்டிருந்தன.

அப்போது அலைகள் ஒரு சிறு நிலப்பரப்பை கடலிலிருந்து கரைக்குக் கொண்டு வந்து சேர்த்தன. உற்றுப் பார்த்த தோழர்களுக்கு அது ஒரு இறந்த பெரிய மீன் எனத் தெரிய நேரம் பிடித்தது.

அந்தத் திமிங்கிலம் போன்ற பெரிய மீனின் பெயர் அம்பர் மீன் எனப் பின்னர் தெரிந்தது. கடலின் நடுவே வாழும் அம்மீன் இறந்ததால் கரை வந்தடைந்துள்ளது.

‘பிறந்தோம், இருந்தோம், இறந்தோம்’ என்றில்லாமல் சிலர் உலகுக்கு நன்மை செய்து செல்வதுபோல் அம்பர் மீன் நறுமணம் தந்து செல்கிறது.

கடலில் விளையும் ஒருவகைச் செடியை விழுங்கும் அம்பர் மீன் அதை வயிற்றின் ஒரு பகுதியில் வைத்து அம்பரெனும் வாசனைப் பொருளாக்கி வாய் வழியாகத் துப்பும். பெரும் பொட்டலமாக அம்பர் கடலில் மிதக்க, அது மக்கள் கைவந்து சேர நறுமணப் பொருளாக மணக்கும்.

அம்பரை உற்பத்தி செய்வதாலேயே அது அம்பர் மீன் என அழைக்கப்படுகிறது. கொழுப்பு நிறைந்த அம்மீன் முன்னூறு போராளிகளுக்கும் நல்ல உணவாகியிருக்கிறது.

‘செத்ததாயிற்றே!’ எனச் சொன்ன தளபதி அபூஉபைதா ‘சாப்பிடலாம், அறப்போர் வீரர்கள் நிர்ப்பந்தத்துக்கு ஆளாகும்போது உண்ணலாம்’ என்றார்.

அதைப் புசித்த பின்னர் போராளிகள் உடல்வலு பெற்றனர். கருவேல இலை படைப் பிரிவு ‘திமிங்கில மீன் படை’ப் பிரிவானது.

பதினைந்து நாட்களாகிவிட்டன

குறைஷி வணிகர்களைக் காணோம். போராளிகள் மீனின் எலும்புகளை எடுத்து அளவு பார்த்துக் கொண்டிருந்தார்கள்.

பூமியில் நாட்டிய அதன் விலா எலும்பின் கீழ் ஒரு மனிதர் ஒட்டகத்தில் அமர்ந்து தலைமுட்டாமல் சென்றார். அதன் கண்ணிருந்த குழியில் ஒருவர் ஏறி அமர முடிந்தது. மிகப் பெரிய மீன் அது!

மீதியிருந்த மீனின் துண்டங்களை அரை வேக்காடாக்கி எடுத்து மதீனா வந்த தோழர்கள் அதில் சில துண்டுகளை அண்ணலாருக்கும் கொடுத்தார்கள்.

# 20. பத்ருப் போர்

## பத்ருவில் அமைந்த பாடிவீடுகள்!

ஹிஜ்ரி இரண்டு, ரமளான் மாதம், பிறை 12

இறையாணையை ஏற்று அண்ணலாரும் தோழர்களும் மதீனாவிலிருந்து புறப்பட்டு தென்மேற்கு திசை நோக்கிப் பயணமானார்கள்.

அண்ணலாரின் அணியில் மொத்தம் 300 போராளிகளே இருந்தனர். அவர்கள் அனைவரும் வாள்வீசத் தெரிந்தவர்களோ வில் வித்தைக்காரர்களோ அல்லர். என்றாலும் அண்ணலார் அல்லாஹ்வின் மேல் முழு நம்பிக்கை வைத்து புனிதப் போர் செய்யப் புறப்பட்டிருந்தார்.

பிறை பனிரெண்டில் புறப்பட்ட முஸ்லிம்களின் அணி இரவும் பகலும் பயணித்து பத்ரு எனும் நகரின் எல்லையை அடைந்தது. அந்நகர் மதீனாவிலிருந்து எண்பது கல் தொலைவில் உள்ளது. அவர்கள் பத்ருப் பள்ளத்தாக்கை அடைய ஐந்து நாட்களாகியிருந்தன.

அன்று ரமளான் பிறை 16

பத்ருவை அடைந்த அண்ணலாருக்கு குறைஷிப்படை பத்ருப் பள்ளத்தாக்கின் தென் முனையை அடைந்த செய்தி கிடைத்தது.

முஸ்லிம்களின் படையும் சிறுத்திருந்தது, ஆயுத பலமும் சிறுத்திருந்தது, அப்போதுதான் நோன்பு கடமையாக்கப்பட்டிருந்ததால் வலிமையும் குன்றியிருந்தது. வாகன வசதிகளும் உணவுப் பொருள் வசதிகளும் தேவையான அளவில் இல்லை.

குறைஷிப்படையிலோ போராளிகள் மட்டும் ஆயிரம் பேர் இருப்பர். தலைவர்களோ நூறுபேர் இருப்பர். வாகன வசதியும் ஆயுத வசதியும் தேவையான அளவு இருந்தன. உணவுக்கும் உல்லாசமாகக் குடிப்பதற்கும்கூட பஞ்சமில்லை.

குறைஷிகளின் பெரும் படைக்கு உத்பா பின் ராபிஆ தலைமை தாங்கினார். அபூஜஹ்ல் போன்றோர் முன்னணி வகித்தனர்.

மக்காவிலிருந்து புறப்பட்டபோது அபூசுப்யானின் வணிகக் குழு பாதுகாப்புக்காக செல்வதாகவே, குறைஷிகளுக்குச் சொல்லப்பட்டிருந்தது. பத்ருவை அடைந்த குறைஷிகளுக்கு அபூசுப்யானின் வணிகக் குழு கடலோரப் பாதைகளில் சென்று மக்காவை எட்டிக் கொண்டிருக்கும் செய்தி கிடைத்தது.

வந்த வேலை எவ்வித இடர்ப்பாடும் இல்லாமல் நிறைவேறிவிட்டதால் குறைஷிகளின் படையிலிருந்த ஸஹ்ரா குலத்தினரும் அதீ குலத்தினரும் மக்காவுக்குத் திரும்பிவிட எண்ணினர். அவர்கள் எண்ணத்தை தலைவரிடம் சொன்னபோது அபூஜஹ்ல் திரும்பிச் செல்ல இசையவில்லை.

‘அபூசுப்யானின் வணிகக் கூட்டத்தைக் காப்பாற்ற நாம் புறப்பட்டது என்னவோ, உண்மைதான். ஆனால் அதே சமயத்தில் நம்முடைய முதன்மையான நோக்கம் முஸ்லிம்களைக் கருவறுப்பதே! அதற்குரிய காரணங்கள் பல உள்ளன. அவர்கள் நம்முடைய மூதாதையர்களின் மார்க்கத்தை அழிக்கப் பார்க்கின்றனர். லாத், உஸ்ஸாவைப் பிளக்கப் பார்க்கின்றனர். நம் அனைவரையும் அவர்கள் எதிரிகளாகக் கருதுகின்றனர். அதற்கு ஒரே ஒரு உதாரணத்தைக் கூறலாம். நக்லாவில் நம்முடைய வணிகக்குழுவை வழிமறித்து ஹள்ரமீயைச் கொன்ற ஒரு நிகழ்வே போதும், அவர்களின்மீது போர் தொடுக்க’ என அபூஜஹ்ல் கூறியபோது எவரும் பதில் சொல்லவில்லை.

வீண் சண்டை செய்ய விரும்பாத ஸஹ்ரா அதீ குலத்தார் குறைஷிய படையை விட்டு வெளியேறி மக்கா நோக்கிச் சென்றனர்.

உத்பா பின் ராபீஆ தன்னுடனிருந்த குறைஷித் தலைவர்களுடன் கலந்து பேசி பத்ருப் பள்ளத்தாக்கில் பாடி வீடுகளை அமைக்கச் செய்தார்.

குதிரைகளையும் ஒட்டகங்களையும் முளைக்குச்சிகளில் கட்டி தீவனங்களை வைத்தவர்கள் கூடாரம் அமைக்கும் பணிகளில் ஈடுபட்டார்கள். சிலர் சமையலுக்கான ஏற்பாடுகளைச் செய்தார்கள்.

குறைஷிகள் தெற்கில் கூடாரங்களை அமைத்துக்கொண்டிருந்தபோது முஸ்லிம்கள் வடக்கில் அமர்ந்து கலந்தாலோசித்துக் கொண்டிருந்தார்கள்.

> ‘எவர்களுக்கு எதிராகப் போர் புரியப்படுகிறதோ அவர்களுக்கு அனுமதியளிக்கப்பட்டு விட்டது. ஏனெனில் அவர்கள் கொடுமைப்படுத்தப்பட்டிருக்கின்றார்கள். மேலும், திண்ணமாக

அல்லாஹ் அவர்களுக்கு உதவி செய்ய ஆற்றல் பெற்றவனாக இருக்கின்றான்.'

(திருக்குர்ஆன் 22: 39)

முஸ்லிம்களுக்குப் போர் புரிய, தொடக்கத்திலேயே ஆணை கிடைக்கவில்லை. அவர்கள் பல்வேறு கொடுமைகளைச் சந்தித்த பின்னரே எதிரிகளைத் துவம்சம் செய்ய கட்டளை கிடைத்தது. அந்தக் கட்டளையை ஏற்றே முஸ்லிம்கள் களத்துக்கு வந்தார்கள். களம் புகுந்த அவர்களுக்கு உதவி செய்வதாகவும் இறைவன் கூறியதால், முழு நம்பிக்கையோடு அவர்கள் பத்ருவில் நின்றார்கள்.

குறைந்த போராளிகள், குறைந்த வாகனங்கள், குறைந்த ஆயுதங்கள், குறைந்த உணவு இருப்பு என எல்லாமே முஸ்லிம்களிடம் குறைந்து இருந்தபோது நிறைந்து இருந்தது இறைநம்பிக்கை, நிறை நம்பிக்கை, தன்னம்பிக்கை!

950 வீரர்கள், நூறு குதிரைகள், எழுநூறு ஒட்டகங்கள், நூற்றுக்கணக்கான வாட்கள், நூறு கவசங்கள் என போர்த்தளவாடங்கள் குறைஷிகளிடம் இருந்தன.

'தங்களின் வீடுகளைவிட்டு அவர்கள் நியாயமின்றி வெளியேற்றப்பட்டார்கள். 'அல்லாஹ்தான் எங்கள் இறைவன்' என்று அவர்கள் கூறியதுதான் அவர்கள் செய்த குற்றம்.'

(திருக்குர்ஆன் 22: 40)

'குற்றமென்ன செய்தார்கள் முஸ்லிம்கள்?' என ஒருவர் கேட்பாராயின் அவர்கள் செய்த குற்றங்களைப் பட்டியலிட முடியாது. அவர்கள் செய்த ஒரே குற்றம் இறைவன் ஒருவனெனச் சொன்னதுதான். இதற்காகவே அவர்கள் மக்காவைவிட்டு விரட்டப்பட்டார்கள்.

இப்போது பத்ருப் பள்ளத்தாக்கில் முஸ்லிம்கள் நிற்பதற்குக் காரணம் தொடர்ந்து இறைவன் ஒருவனெனக் கூறுவதற்கான வழியைத் தேடுவதற்காகவே! அவர்கள் தம் கொள்கையை நிலை நாட்ட வேண்டுமெனில், இறைவனுடைய வாழ்க்கைநெறியைப் பாதுகாத்து அடுத்துவரும் தலைமுறைக்கு எடுத்துச் செல்ல வேண்டுமெனில் பத்ருப் போரில் வென்றாக வேண்டும்.

'இறைவா! நாங்கள் சின்னஞ்சிறு குழுவாக உள்ளோம். எதிரிகளோ

ஆயிரக் கணக்கில் உள்ளனர். அவர்கள் அழிந்துவிடின் லாத்துக்கும் உஸ்ஸாவுக்கும் இழப்பேதுமில்லை. நாங்கள் அழிந்துவிடின் இறைவா, உன்னுடைய வாழ்க்கை நெறியைக் கடைப்பிடிக்க யாருமில்லாமல் போவர். ஒரு பெரும் தலைமுறை இடைவெளி ஏற்படலாம். இறைவா, உன்னுடைய வாக்கை முழுமையாக நம்பி நாளை களத்தில் குதிக்கவுள்ளோம். அருள் புரிவாய், யா அல்லாஹ். நிறையருள் புரிவாய்!' என அண்ணலார் இறைவனை இரவு முழுவதும் இறைஞ்சினார்.

அண்ணலாரின் இறைஞ்சுதல் முடிய வான்மழை பொழிந்தது, அது அருள் மழையாகவும் இருந்தது!

பத்ருப் போர்!

வானத்தில் மேகம் இல்லை;

வந்தகாற்றில் ஈரம் இல்லை.

மோனம் கலைவதற்கு

முகாந்திரங்கள் ஏதும் இல்லை!

மேகங்கள் ஓடி வந்து

மின்னலொடு இடி இடித்து

தாகங்கள் தீர்த்த தம்மா,

தரையெல்லாம் தண்ணீர், தண்ணீர்!

கூடாரம் காற்றில் ஆட

குதிரையொடு ஒட்டகங்கள்

கூத்தாட குளிரால் வாட

கொண்டாட்டம் உள்ளமெல்லாம்!

மழைக்கான அறிகுறியே இல்லாத அந்த ரமளான் மாத இரவில் திடீரென பொழியத் தொடங்கிய மழை, மாமழையாகக் கொட்டியது.

முஸ்லிம்கள் பாளையம் இறங்கியிருந்த இடம் கால்கள் புதையும் அளவுக்கு மணற்பாங்காக இருந்தது. தொடர் மழையால் மணல் வெளி திடமாகிவிட்டது. ஒட்டகங்களும் குதிரைகளும் நனைந்தாலும் அவை மழையை வரவேற்பதுபோல் விண்ணோக்கித் தம் தலைகளை வைத்து மழைத்துளியைக் குடித்தன.

முஸ்லிம்கள் மழை பொழிவதைக் கண்டு மகிழ்ச்சியடைந்து இறைவனுக்கு நன்றி சொன்னார்கள். அண்ணலார் தொழுது, தொழுது பிரார்த்தனை செய்தார்.

எதிர் முகாமிலோ ஏதேதோ சப்தங்கள். கட்டாந்தரைபோலிருந்த நிலம் சேறும் சகதியானது. கால்புதைந்தது. குறைஷிகள் கவலையின்றிக் கதைத்துக் கொண்டிருந்தார்கள். சிலர் குடித்துக் கொண்டிருந்தார்கள்.

பொழுது விடிந்தது அன்று ரமலான் 17.

கதிரவன் போர்க்களத்தைப் பார்க்க உச்சிமேல் ஏறிக் கொண்டிருந்தான்.

முஸ்லிம்களுக்கும் குறைஷிகளுக்கும் தொடங்கவிருந்த போர் உலகத்தில் சத்தியத்துக்கும் அசத்தியத்துக்கும் நடந்த போர்களில் தலைசிறந்ததாகும். ஓரிறைக் கொள்கைக்கும் பலசிலை கொள்கைக்கும் நேரடியாக நடந்த வாள் சண்டையாகும். இறைவனின் வழிமுறைக்கும் சைத்தானின் வழிகேட்டுக்கும் நடந்த கைகலப்பாகும். சமாதான சகவாழ்வுக்கும் சண்டித்தனத்துக்கும் நடந்த சமர்க்களமாகும். பண்பாட்டுக்கும் பண்பாட்டுச் சிதைவுக்கும் பகுத்தறிவுக்கும் மூடத்தனத்துக்கும் நடந்த உச்சக்கட்ட மோதலாகும்.

ஆயிரம் பேரின் பின்னணியில் அநீதி ஆர்ப்பரித்து நின்றது. நூற்றுக்கணக்கானவர்களின் பின்னணியில் இறையருள் சூழ்ந்திருந்தது.

குறைஷிகளின் போர்ப்படைத் தளபதியாக உத்பா நின்றார். முஸ்லிம்களின் போர்ப் படைத் தளபதியாக அண்ணலார் நின்றார்.

அன்றைய அரபுலக போர் மரபுப்படி ஒருவர் இன்னொருவரோடு மோதுவார். வென்றவர் பின் ஒருவரோடு மோதுவார். மோதல்கள் தொடர இருவர் இருவராகவும் மூவர் மூவராகவும் மோதுவர். இறுதியில் மொத்தப்படைகளும் மோதிட முடிவில் வெற்றி யாருக்கெனத் தீர்மானிக்கப்படும்.

முதல் மோதல் தொடங்கியது. குறைஷியரின் அணியிலிருந்து ஆமிர் இப்னு ஹள்ரமீ வாளேந்தி முதல் வீரராக வந்தார்.

இவர் நக்லாவில் முஸ்லிம்களால் கொல்லப்பட்ட உமர்பின் ஹள்ரமீயின் சகோதரர். ஆமிர் போர்க்களத்தில் முன்வந்ததற்குக் காரணம் நக்லாவில் நடந்த படுகொலையே! இந்தப் படுகொலையைக் காரணம் காட்டியே அபூஜஹ்ல் குறைஷிகளை உசுப்பேத்தியிருந்தார்.

ஹள்ரமீயின் கொலைக்குப் பகரமாக முஸ்லிம்கள் ரத்தக்கிரயம்

தந்துவிட்டால் போர் தேவையில்லையே என கதீஜா பிராட்டியாரின் மருமகன் அபுல்ஆஸ் எடுத்துக்கூறி அண்ணலாரோடு ஆமிரிகளின் தலைவர் உத்பாவைப் பேசச் சொல்லியும் அவர் அபூஜஹ்லின் சொல்லைக் கேட்டதால் பேசும் வாய்ப்பேற்படவில்லை.

ஆமிர் இப்னு ஹள்ரமீ பலிக்குப் பலிவாங்க வந்து நின்று கர்ஜித்தார். அவரை எதிர்த்துப் போரிட முஸ்லிம் அணியைச் சேர்ந்த அம்ருவுடைய அடிமை மஹ்ஜஃ வாளேந்திச் சென்றார்.

வாட்கள் வலிமையோடு மோதிக்கொண்டன. தீப்பொறி பறக்கும் சண்டை. ஆமிர் ஆவேசத்தோடு வாளை வீசினார். மஹ்ஜஃ இறையுணர்வோடு வாளை வீசினார். இறுதியில் ஆமிரின் வாள் மஹ்ஜஃ மார்பில் பாய்ந்தது. பத்ருப் போரில் மஹ்ஜஃ முதல் ஷஹீதானார் உயிர்த்தியாகியானார்.

ஒருவர் ஒருவரோடு மோத, அடுத்த மோதல் இருவரோடு இருவராக இருக்கவில்லை. மூவர் மோதலாகத் தொடங்கவிருந்தது.

குறைஷிகளின் தளபதி உத்பா மூவரணிக்குத் தலைமையேற்க உடன் அவருடைய சகோதரர் ஷைபாவும் மகன் வலீதும் வரிந்துகட்டிக்கொண்டு முன் வரிசைக்கு வந்தனர்.

மூவரோடு மோத அன்ஸாரிகளில் மூவர் முன்வந்தனர். குறைஷிகளோடு அன்ஸாரிகள் மோதுவதை அண்ணலார் விரும்பவில்லை. அன்ஸாரிகளை அடுத்தடுத்த சண்டைகளில் பயன்படுத்திக் கொள்ளலாம். முதன் முதலில் அன்ஸாரிகள் பலியாகிவிடக்கூடாது. முஹாஜிர்களே குறைஷிகளோடு மோதட்டும் எனக் கருதிய அண்ணலார் தம்முடைய ஹாஷிம் குலத்தவரை அழைக்க மூவரணி அணியமானது. அதில் அலீ, ஹம்ஸா, உபைதா ஆகியோர் அங்கம் வகித்தனர்.

அலீ முன்வரிசைக்கு வர குறைஷிப்படைத் தளபதி உத்பா தன் மகன் வலீதை போர்புரிய பணித்தார். கண்களோடு கண்கள் மோத வாளோடு வாள் மோதின. போர் வெறியும் இறைநெறியும் வாள்களாகி மோதிக்கொள்ள தீப்பொறி பறந்தது. தொடர்ந்த சண்டையில் போர்வெறி மாண்டது.

அதன்பின் தலைக்கவசத்தோடு தளபதி உத்பா முன்வந்து வாளைச் சுழற்றினார். அவரை எதிர்த்து தலையசைவோடு வந்த ஹம்ஸா வாளால் பேசினார். வில்வித்தகர் ஹம்ஸா வாளில் வித்தகம் காட்டினார். உத்பாவின் உடலில் பாய்ந்த ஹம்ஸாவின் வாள்வரிகள் ஒரு

முடிவுரையை எழுதின.

குறைஷியர் இருவர் இறக்க, தளபதியின் தம்பி ஷைபா சண்டைபோட வந்தார். ஷைபாவை எதிர்த்து உபைதா!

இரு வெற்றிகளுக்குப் பின் மூன்றாவதாகவும் ஒரு வெற்றி வாய்ப்பு முஸ்லிம்களுக்குக் கிடைக்கவிருந்த சூழலில் ஷைபாவின் வாள் உபைதாவின் முழங்காலைத் துண்டாக்கியது. உபைதா சரிய அலீயும் ஹம்ஸாவும் ஷைபாவைத் தீர்த்துக் கட்டினர். பின்னர் இருவரும் உபைதாவைக் களத்திலிருந்து தூக்கிச் சென்றனர்.

மீண்டும் மூவரணி, மீண்டும் மீண்டும் மூவரணி!

முஸ்லிம்களுக்கு இழப்பு ஒன்றென்றால் குறைஷிகளுக்கு இழப்பு, இரண்டாய் மூன்றாய்! அம்மோதல்கள் அசத்தியவாதிகளின் வீழ்ச்சியை அதிகமாக்கிக் கொண்டிருந்தன.

இறுதியாக தனித்தனி மோதல்களாக இல்லாமல் மொத்த மோதலாக அமைந்தது.

கைகால்கள் சரிந்தன. தலைகள் வீழ்ந்தன. அசத்தியத்துக்கு இழப்புகள் அதிகமாகவும் சத்தியத்துக்கு இழப்புகள் குறைவாகவும் அமைந்தன.

தனிமோதல்களிலும் குழு மோதல்களிலும் ஈடுபட்டுக் கொண்டிருந்த அரபுமக்கள் பத்ரு யுத்தத்தின் மூலம் மக்கள் யுத்தக் குழுவாக மாறத் தொடங்கினர். உழவர்களாகவும் வணிகர்களாகவும் வாழ்க்கையை நடத்திக்கொண்டிருந்த அரபு மக்கள் ராணுவ வீரர்களாக மாறத் தொடங்கினர்.

புரோகிதர்களாகவும் வணிகர்களாகவும் இருந்த குறைஷிகள் ஷத்திரியர்களாக மாறும் கால கட்டம் வந்தது. அரபகச் சந்தைகளுக்குச் சென்றும் யெமன், சிரியா பயணம் செய்தும் தராசு பிடித்தவர்களில் கைகளிலே வாளும் கேடயமும் இடம் பெறும் சூழல் வந்தது.

பத்ருப் போர் அரபுலக வரலாற்றிலே பல்வேறு மாற்றங்களைக் கொண்டுவந்தது.

மதீனாவில் அமைக்கப்பட்ட முஸ்லிம்களின் அரசு வலுப்பெற பத்ருப் போர் உதவியது. அது விரிவடைவதற்கான அறிகுறிகளை பத்ருப் போர் வெற்றியே காட்டியது.

பத்ருப் போர் முடிவில் குறைஷிகளில் எழுபது பேர்

கொல்லப்பட்டிருந்தனர்; எழுபது பேர் கைது செய்யப்பட்டிருந்தனர்.

இறந்த எழுபது குறைஷிகளில் அபூஜஹ்லும் இருந்தார். குறைஷிகளை அச்சம் சூழ்ந்தது. முஸ்லிம்களோ அச்சமின்றி காணப்பட்டனர்.

முஸ்லிம்களில் பதினான்குபேர் வீரமரணமடைந்தனர். அவர்களில் ஆறுபேர் முஹாஜிர்கள், எட்டுப்பேர் அன்ஸாரிகள்.

வெற்றிச் செய்தியைக் கேட்ட மதீனா மகிழ்ந்தது. யூதமும் நயவஞ்சகமும் தடுமாறின.

## இறைவனின் போர்ப்பிரகடனம்

இறைநேசர்கள் பெரும்பாலும் மதீனாவை அடைந்துவிட்டனர். என்றாலும் மக்காவில் வாழ்ந்த சிலர் குறைஷிகளால் துன்பத்துக்கு ஆளாகினர்.

மதீனாவில் வாழ்ந்த முஸ்லிம்களின் மனங்களில் மக்காவைப் பிரிந்த வேதனை அகலவேயில்லை. குற்றங்கள் செய்தால் நாடு கடத்தலாம்; முஸ்லிம்கள் குற்றங்கள் செய்யாமலேயே தங்களைத் தாங்களே நாடு கடத்திக் கொண்டார்கள்.

முஸ்லிம்கள் குற்றம் புரியவில்லை, குற்றங்கள் புரிந்தவர்கள் யார்? இறைவன் ஒருவன் என்று சொன்னதற்காகவே குறைஷிகள் முஸ்லிம்களைத் துன்பத்துக்கும் துயரத்துக்கும் ஆளாக்கினார்கள்.

அபிசீனியாவுக்குப் புலம் பெயர வைத்ததும் அண்ணலார் வகையறாவை சிபி அபூதாலிபில் ஊர் விலக்கல் செய்து வைத்ததும் மதீனாவுக்கு இடம் பெயர வைத்ததும் மிகச் சாதாரண செயல்கள் அல்ல! கொடுஞ்செயல்கள்! இந்தக் கொடுஞ்செயல் புரிந்தோர்மீது போர்தெடுத்தே ஆக வேண்டுமென முஸ்லிம்கள் அண்ணலாரிடம் அனுமதி கோரி நின்றனர்.

இறையாணை வரும்வரைக்கும் பொறுமையுடன் இருக்கும்படி முஸ்லிம்களை அண்ணலார் கேட்டுக் கொண்டார்.

அபூஜஹ்ல் ஆயிரம் பேருடன் மதீனாவைத் தாக்க வரும்போது இறைவன் பார்த்துக் கொண்டிருப்பானா? இறைவன் அண்ணலார் மூலம் போர்ப் பிரகடனம் செய்தான்.

‘எவர்களுக்கு எதிராகப் போர்புரியப்படுகின்றதோ அவர்களுக்கு

அனுமதியளிக்கப் பட்டுவிட்டது. ஏனெனில், அவர்கள் கொடுமைப்படுத்தப் பட்டிருக்கின்றார்கள். மேலும், திண்ணமாக அல்லாஹ் அவர்களுக்கு உதவி செய்ய ஆற்றல் பெற்றவனாக இருக்கின்றான். தங்களின் வீடுகளை விட்டு அவர்கள் நியாயமின்றி வெளியேற்றப்பட்டார்கள். ‘அல்லாஹ்தான் எங்கள் இறைவன்’ என்று அவர்கள் கூறியதுதான் அவர்கள் செய்த குற்றம். அல்லாஹ் மக்களில் சிலரைக்கொண்டு சிலரைத் தடுத்துக் கொண்டிராவிடில் மடங்கள், கிறிஸ்தவ ஆலயங்கள், யூத ஆலயங்கள், அல்லாஹ்வின் பெயர் அதிக அளவில் கூறப்படும் மஸ்ஜித்கள் ஆகியவை தகர்க்கப்பட்டிருக்கும்! திண்ணமாகத் தனக்கு உதவி செய்வோருக்கு அல்லாஹ் உதவி செய்வான். நிச்சயம் அல்லாஹ் வலிமை வாய்ந்தவனும் யாவற்றையும் மிகைத்தவனுமாவான்.’

(திருக்குர்ஆன் 22: 39 40)

போர் புரிய அனுமதி கொடுத்த இறைவன் முஸ்லிம்கள் ‘அல்லாஹ் ஒருவன் எனச் சொன்னதற்காகவே ஊரைவிட்டு வெளியேறியுள்ளார்கள். பாதிக்கப்பட்டவர்கள் படைநடத்துவதில் தவறில்லை’ எனப்போருக்கான காரணத்தைச் சொல்கிறான்.

அக்கிரமக்கார சமுதாயத்துக்கு எதிராகப் போராடுவது இறைவனுக்காகப் போராடும் செயல்தானே! அநியாயக்காரர்கள், அசத்தியவாதிகளை அழிப்பது அல்லாஹ்வுக்குச் செய்யும் கடமைதானே!

‘மேலும், உங்களோடு போர்புரிபவர்களுடன் நீங்களும் அல்லாஹ்வின் பாதையில் போர்புரியுங்கள். ஆனால், நீங்கள் வரம்பு மீறாதீர்கள். ஏனெனில், வரம்பு மீறுபவர்களை அல்லாஹ் நேசிப்பதில்லை. (போரின்போது) அவர்களை நீங்கள் எங்கு கண்டாலும் வெட்டி வீழ்த்துங்கள்! மேலும் எங்கிருந்து உங்களை அவர்கள் வெளியேற்றினார்களோ அங்கிருந்து அவர்களை நீங்களும் வெளியேற்றுங்கள். (கொலை கொடியதுதான் என்றாலும்) ‘ஃபித்னா’(அராஜகத்தைத்) தோற்றுவிப்பது கொலையைக் காட்டிலும் மிகக் கொடியதாகும். மஸ்ஜிதுல் ஹராமுக்கு அருகே அவர்கள் உங்களுடன் போர் தொடுக்காதவரை நீங்களும் அதன் அருகே அவர்களுடன் போர் புரிய வேண்டாம். ஆயினும் (அங்கே) அவர்கள் உங்களோடு போர் செய்தால் நீங்களும் (தயக்கமின்றி) அவர்களோடு போர் புரியுங்கள். இத்தகைய நிராகரிப்பாளர்களுக்கு இதுவே

தண்டனையாகும். ஆயினும் அவர்கள் (போரிலிருந்து) விலகிக்கொண்டால் நிச்சயமாக அல்லாஹ், மன்னிப்பு வழங்குபவனாகவும் கருணை புரிபவனாகவும் இருக்கின்றான் (என்பதை அறிந்து கொள்ளுங்கள்).

‘ஃபித்னா’ இல்லாதொழிந்து, தீன் (வாழ்க்கை நெறி) அல்லாஹ்வுக்கே உரித்தானதாகும் வரை நீங்கள் அவர்களோடு தொடர்ந்து போர்புரியுங்கள். ஆனால், அவர்கள் (இத்தகைய ஃபித்னாவிலிருந்து) விலகிக்கொண்டால் அக்கிரமக்காரர்களைத் தவிர வேறு எவரையும் துன்புறுத்துவது அனுமதிக்கப்பட்டதல்ல.

> போர் தடை செய்யப்பட்ட சங்கைக்குரிய மாதத்துக்கு சங்கைக்குரிய மாதமே ஈடாகும். மேலும் சங்கைக்குரிய அனைத்துக்கும் (அவற்றின் கண்ணியம் மீறப்பட்டால்) சமமான அளவில் ஈடு செய்யப்படும். எனவே உங்களிடம் எவரேனும் வரம்பு மீறினால், அவர் எந்த அளவுக்கு உங்களிடம் வரம்பு மீறினாரோ அந்த அளவுக்கே நீங்களும் அவருக்குப் பதிலடி கொடுங்கள். ஆயினும் அல்லாஹ்வுக்கு அஞ்சி வாழுங்கள். வரம்புகளை முறிப்பதிலிருந்து விலகி இருப்பவர்களுடன் அல்லாஹ் இருக்கின்றான் என்பதை உறுதியாக அறிந்து கொள்ளுங்கள்.’

(திருக்குர்ஆன் 2: 190 194)

‘அல்லாஹ்வின் பாதையில் போர் புரியுங்கள். விரட்டியவர்களை விரட்டுங்கள், வெட்டி வீழ்த்தியவரை வெட்டி வீழ்த்துங்கள், வரம்பு மீறியவர்மீது வரம்பு மீறுங்கள், உங்களுடன் சண்டையிடாதவரை சண்டை செய்யாதீர்கள்’ எனக் கூறும் இறைவன் பொறுத்திருந்தே போர்ப்பிரகடனம் செய்கிறான்.

> ‘நீங்கள் அவர்களோடு போர் புரியுங்கள்; அல்லாஹ் உங்களுடைய கைகளால் அவர்களுக்குத் தண்டனை அளிக்கச் செய்வான். மேலும், அவர்களை இழிவுபடுத்துவான். இன்னும் நீங்கள் அவர்களை வென்றிட உங்களுக்கு உதவி புரிவான். மேலும், நம்பிக்கை கொண்ட மக்களின் இதயங்களைக் குளிரச் செய்வான்.’

(திருக்குர்ஆன் 9: 14)

இறைவன் போர் செய்யும்படிக் கூறுகின்றானே! ஆள்பலம், ஆயுதபலம், வாகனபலம் எல்லாம் எதிரிகளிடம் அதிகமாக இருக்கிறதே!

முஸ்லிம்கள் வெற்றி பெறுவார்களா?

இந்நிலையில் அவனே எல்லாமாக இருந்து உதவி செய்வதாகக் கூறுகிறான். கூறியபடி முஸ்லிம்களை இயக்குகிறான்; சூழ்நிலையைச் சாதகமாக்குகிறான். இதயங்களைக் குளிரச் செய்கிறான்.

இச்செயல் நடு இரவில் சூர்யன் உதித்தது போலாகும்; கோடை மழை போலாகும்!

> ‘எவர்கள் தங்கள் உடன்படிக்கைகளை முறித்துக்கொண்டே இருக்கின்றார்களோ, மேலும், எவர்கள் இறைத்தூதரை நாட்டைவிட்டு வெளியேற்ற முடிவு செய்திருந்தார்களோ அக்கிரமம் செய்யத் தொடங்கியது முதலில் அவர்களாகவே இருந்தும் அத்தகைய மக்களுடன் நீங்கள் போர் புரிய வேண்டாமா? அவர்களுக்கா நீங்கள் அஞ்சுகிறீர்கள்? நீங்கள் நம்பிக்கையுடையவர்களாயின் நீங்கள் அஞ்சுவதற்கு மிகவும் தகுதியுள்ளவன் அல்லாஹ்வே ஆவான்.’

(திருக்குர்ஆன் 9: 13)

‘எதிரிகள் குற்றவாளிகள், நீங்கள் குற்றமற்றவர்கள். குற்றவாளிகள்தான் தலைகுனிய வேண்டும். குற்றமற்றோர் நெஞ்சம் நிமிர்த்திட வேண்டும்’ என சத்திய இஸ்லாம் சண்டமாருதமாக ஒலிக்கும்போது முஸ்லிம்கள் தம் வாள்களை உறைகளில் போட்டுவிடமாட்டார்கள்; அவற்றை உதிரத்தில் குளிக்கச் செய்வார்கள்.

> ‘போர் செய்யுமாறு உங்களுக்குக் கட்டளையிடப்பட்டிருக்கிறது; ஆனால் அதுவோ உங்களுக்கு வெறுப்பாயிருக்கிறது. ஒரு பொருள் உங்களுக்கு நன்மையாக இருக்கும் நிலையில் அதனை நீங்கள் வெறுக்கக்கூடும். மேலும் ஒரு பொருள் உங்களுக்குத் தீமையாக இருக்கும் நிலையில் அதனை நீங்கள் விரும்பக்கூடும். (இவற்றை) அல்லாஹ் நன்கு அறிகின்றான். ஆனால் நீங்கள் அறிவதில்லை.’

(திருக்குர்ஆன் 2: 216)

‘நன்மையை வெறுக்கலாமா! தீமையை விரும்பலாமா? நன்மையை விரும்ப வேண்டும்; தீமையை வெறுக்க வேண்டும். பாதிக்கப்பட்ட நீங்கள் போர் செய்வது நன்மையை விரும்புவது போலாகும்! அது வெறுக்கக்கூடியதல்ல’ என்பதைப் புரிந்து கொண்ட முஸ்லிம்கள் இறைவனின் பிரகடனத்தை ஏற்று புனிதப் போர் புரிந்தார்கள். அதில்

வெற்றி பெற்றார்கள்.

‘இறைநம்பிக்கையுடைய நடத்தையை மேற்கொண்டவர்கள் அல்லாஹ்வின் வழியில் போர்புரிவார்கள். நிராகரிப்புப் போக்கினை மேற்கொண்டவர்கள் தாஃகூத்தின் வழியில் போர்புரிவார்கள். எனவே ஷைத்தானின் தோழர்களுடன் போர் புரியுங்கள்! திண்ணமாக, அறிந்து கொள்ளுங்கள்@ ஷைத்தானுடைய சூழ்ச்சி மிகவும் பலவீனமானதாகும்.

> (போர் புரியாமல்) உங்கள் கரங்களைத் தடுத்துக் கொள்ளுங்கள்; மேலும் தொழுகையை நிலை நிறுத்துங்கள்; ஜகாத்தையும் கொடுங்கள் என்று எவர்களிடம் கூறப்பட்டதோ அவர்களை நீர் கவனிக்கவில்லையா? இப்பொழுது போர் புரியுமாறு அவர்களுக்குக் கட்டளையிடப்பட்டபோது, அவர்களில் ஒரு பிரிவினர் அல்லாஹ்வுக்கு அஞ்சுவதைப் போல ஏன் அதைவிட அதிகமாக மனிதர்களுக்கு அஞ்சுகின்றார்கள்! ‘எங்கள் இறைவனே! போர் புரிவதை எங்கள்மீது ஏன் கடமையாக்கினாய்? இன்னும் சிறிது காலம் வரை எங்களுக்குத் தவணை அளித்திருக்கக்கூடாதா?’ என்று கேட்கிறார்கள். (நபியே! அவர்களிடம்) கூறுவீராக@ இவ்வுலக வாழ்வின் இன்பமனைத்தும் அற்பமானதே! மேலும் (அல்லாஹ்வுக்கு) அஞ்சி வாழ்பவர்க்கு மறுமை மிகவும் சிறந்ததாகும். இன்னும் உங்களுக்கு இம்மியளவும் அநீதியிழைக்கப்படமாட்டாது.’

(திருக்குர்ஆன் 4: 76 77)

போரில் இரு அணிகள் எதிரும் புதிருமாக நிற்கும் என்றால் ஓரணி சத்திய அணியாகும்; மற்றொரு அணி அசத்திய அணியாகும். ஒன்று நீதிக்காகவே போராடினால் மற்றொன்று அநீதிக்காகப் போராடும்.

ஒன்று மூடத்தனத்தை எதிர்ப்பதற்காகப் போரிடுகிறது. மற்றொன்று மூடத்தனத்தைக் காப்பாற்றுவதற்காகப் போராடுகிறது.

முஸ்லிம்கள் முதல் வகையைச் சேர்ந்தவர்கள்; குறைஷிகள் இரண்டாவது வகையைச் சேர்ந்தவர்கள்.

இறைநம்பிக்கை கொண்டோர் அல்லாஹ்வின் வழியில் போர் புரிபவர்கள்; இறைநிராகரிப்பாளர்கள் தாஃகூத்தின் வழியில் போர்புரிபவர்கள்.

முதலணி நன்மைக்காகப் (மஃரூஃப்) போரிடுகிறது. இரண்டாவது அணி தீமையைக் (முன்கர்) காக்கப் போரிடுகிறது.

முதலணியைப் பற்றி இறைவன் சிறப்பித்துக் கூறுகிறான்:

‘மனித இனத்தைச் சீர்படுத்துவதற்காக தோற்றுவிக்கப்பட்டிருக்கும் மிகச் சிறந்த சமுதாயமாக நீங்கள் இருக்கிறீர்கள். நீங்கள் நன்மை புரியும்படி ஏவுகின்றீர்கள்; தீமையிலிருந்து தடுக்கின்றீர்கள்.’

(திருக்குர்ஆன் 3: 110)

வாழ்க்கையில் வெற்றி பெறுபவர் யார் தெரியுமா? நன்மையை ஏவி தீமையைத் தடுப்பவரே வெற்றி பெறுவார்! நன்மையை ஏவி தீமையைத் தடுப்பதே இஸ்லாம்!

‘நன்மையின் பக்கம் அழைக்கக்கூடிய ஒரு குழுவினர் உங்களிடையே கண்டிப்பாக இருந்திட வேண்டும். அவர்களோ நல்லவை புரியும்படி ஏவ வேண்டும். தீயவற்றிலிருந்து தடுத்த வண்ணம் இருக்க வேண்டும். எவர்கள் இப்பணியைப் புரிகிறார்களோ அவர்கள் வெற்றியாளர் ஆவர்.’

(திருக்குர்ஆன் 3: 104)

அந்த வெற்றியாளருக்கு ஆதரவான பிரகடனமே அல்லாஹ்வின் போர்ப்பிரகடனம்!

## பத்ரு என்னும் நதிமூலம்!

முதல் மகாயுத்தம்

இஸ்லாமிய வரலாற்றில் முதல் மகா யுத்தம் பத்ரு யுத்தம்தான்! இந்த யுத்தம்தான் இருளைக் கிழித்த முதல் யுத்தம்; இருளர்களைக் கிழித்துப் போட்ட முதல் சமர்க்களம்.

உலகில் பல்வேறு காலகட்டங்களில் பல்வேறு இடங்களில் பல்வேறு மனிதர்களிடையே பல்வேறு காரணங்களுக்காக போர்கள் நடந்துள்ளன. ஆனால் ஏகத்துவக் கொள்கைக்காக நடந்த போர் இதுவொன்றே!

உலகில் நடைபெற்ற ஒரே ஒரு போர் மட்டும் பத்ருப் போரைப் போலிருக்கும். ஆனால் அது கொள்கைப் போரல்ல சாம்ராஜ்யத்துக்கான போர்! பத்ருப் போர் கொள்கைப்போர், ஆனால் சாம்ராஜ்யத்துக்கான போரல்ல!

அப்படியானால் பாரதத்தில் நடந்த குருஷேத்திரப்போருக்கும் பத்ருப் போருக்கும் என்ன தான் ஒற்றுமை? இரண்டுமே சகோதர யுத்தம்; அண்ணன் தம்பிகள், மாமன் மச்சான்கள், கொண்டோர் கொடுத்தோர் மோதிக்கொண்ட யுத்தங்களே இரண்டும்!

குருஷேத்திரப்போரில் சம்பந்தப்பட்டவர்கள் யுத்தம் செய்யவே புறப்பட்டு வந்தவர்கள். பத்ருப் போரில் ஈடுபட்டவர்களில் இரு அணியினரும் போர் செய்யப் புறப்பட்டு வந்தவர்கள் அல்லர்!

வணிகக்குழுவை வழிமறிக்க வந்தவர்கள் மதீனாவாசிகள்! காரணம் வணிகக் குழுவின் மூலதனம் எதிர்வரப் போகும் போர் நிதிக்கான ஆதாரமாக இருந்தது.

வணிகக் குழுவைக் காப்பாற்ற வந்தவர்கள் மக்காவாசிகள்! காரணம் வந்தவர்களின் மூலதனமெல்லாம் வணிகக்குழுவில் குவிந்திருந்தது.

பறிக்க வந்தவர்களுக்கும் பாதுகாக்க வந்தவர்களுக்கும் போர் எவ்வாறு தொடங்கியது? வணிகப் பொருள்களை வழிமறித்துக் கொள்ளையிட்டபோது போர் மூண்டதா? இல்லை, வழிமறிக்காதபோது எவ்வண்ணம் போர் மூண்டது?

வணிகக்குழு மாற்று வழியில் தப்பிச் சென்றுவிட மக்காவாசிகள் திரும்பிச் சென்றிருக்க வேண்டும்! ஆனால் அவர்கள் திரும்பிச் செல்லவில்லை. அப்படியானால் அவர்கள் விரும்பிப் போருக்குச் சென்றார்களா? இல்லை, இருகோத்திரத்தார் திரும்பிவிடலாம் என்றனர். அவர்கள் ஸுஹ்ராக்களும் ஹாஷிமிகளும். அப்போதைய குறைஷிகளின் தலைவர் திரும்பிச் செல்ல விரும்பவில்லை. அவர் மண்டைக்குள் போர் வெறி மூண்டிருந்தது.

சந்தர்ப்பத்தைப் பயன்படுத்தி மதீனாவாசிகளை ஒழித்துவிடலாம் என்று அபூஜஹ்ல் முடிவு செய்திருந்தார். போருக்குப் படையும் படைக்கலன்களும்தானே தேவை! அவையிருக்கும்போது என்ன வேண்டிக்கிடக்கிறது என அபூஜஹ்லை ஆணவம் பிடித்து ஆட்டியது.

வணிகக்குழுதான் தப்பிவிட்டதே மதீனா திரும்பிவிட வேண்டியதுதானே! ஏன் மதீனாவாசிகள் மக்காவாசிகளை நோக்கிப் போர் செய்யப் புறப்பட்டார்கள்?

அபூஜஹ்ல் சந்தர்ப்பத்தைப் பயன்படுத்தியதுபோல் அல்லாஹ் சந்தர்ப்பத்தைப் பயன்படுத்தினான். மனிதனின் திட்டம் பலிக்குமா? மகத்தான இறைவனின் திட்டம் பலிக்குமா?

செங்கடலோரம் ஹிஜிரி இரண்டு ஸஃபர் மாதத்தில் குறைஷி வணிகர்களை வழிமறிக்கச் சென்றபோதே போர் புரிவதற்கான முதல் ஆணை இறைவனால் பிறப்பிக்கப்பட்டுவிட்டது.

‘எவர்களுக்கு எதிராகப் போர் புரியப்படுகின்றதோ அவர்களுக்கு அனுமதி அளிக்கப்பட்டுவிட்டது. ஏனெனில் அவர்கள் கொடுமைப்படுத்தப்பட்டிருக்கிறார்கள். மேலும் திண்ணமாக அல்லாஹ் அவர்களுக்கு உதவி செய்ய ஆற்றல் பெற்றவனாக இருக்கின்றான். தங்களின் வீடுகளைவிட்டு அவர்கள் நியாயமின்றி வெளியேற்றப்பட்டார்கள். ‘அல்லாஹ்தான் எங்கள் இறைவன்’ என்று அவர்கள் கூறியதுதான் அவர்கள் செய்த குற்றம்.’

(திருக்குர்ஆன் 22: 3940)

முஸ்லிம்கள் கொடுமைப்படுத்தப்படக் காரணம், அவர்கள் ‘அல்லாஹ்தான் எங்கள் இறைவன்’ எனக் கூறியதே! கொடுமைப்படுத்தப்பட்ட அவர்கள் கொள்கைக்காகப் போராடியே தீர வேண்டிய கட்டாயத்துக்கு ஆளானார்கள்.

அதற்கான அரியவாய்ப்பு பத்ருவில் காத்திருந்தது.

மதீனாவிலிருந்து புறப்பட்டுச் சென்ற முஸ்லிம்கள் வணிகக்குழுவை வளைத்துப் பிடிப்பதா? பத்ருவில் குழுமியிருக்கும் குறைஷிப்படையை எதிர் கொள்வதா? என்ற யோசனையில் இருந்தனர்.

வணிகக்குழுவை வளைத்துப்பிடித்தால் பொருள்கள் கிடைக்கும். குறைஷிப்படையோடு போரிட்டால் வெற்றி கிடைக்குமா? தோல்வி கிடைக்குமா?

அகிலங்களின் அதிபதி வெற்றிக்கணக்குப் போட்டுவிட்டான்! முஸ்லிம்களுக்கு வெற்றியைத் தரப்போவதாக வாக்களித்துவிட்டான்.

‘இதனையும் நினைத்துப் பாருங்கள்: ‘இரு கூட்டத்தாரில் ஒரு கூட்டம் நிச்சயம் உங்கள் கைக்குக் கிடைத்துவிடுவர்’ என்று அல்லாஹ் உங்களிடம் வாக்குறுதி அளித்தான். ஆனால் நிராயுதபாணிகளான கூட்டத்தினர் உங்களுக்குக் கிடைக்க வேண்டும் என நீங்கள் விரும்பினீர்கள். ஆனால், அல்லாஹ்வோ தன் வாக்குகளால் சத்தியத்தைச் சத்தியம் என்று காட்டவும் நிராகரிப்பாளர்களை வேரறுக்கவுமே நாடியிருந்தான். ஏனெனில், சத்தியம் சத்தியம்தான் என்றும் அசத்தியம் அசத்தியம்தான் என்றும் தெளிவாக்கிட வேண்டும் என்பதற்காக!’

(திருக்குர்ஆன் 8: 78)

இறைவனின் நாட்டப்படி முஸ்லிம்கள் பத்ருப் போரில் சத்தியத்தை நிலைநாட்டினர்; அசத்தியத்தை வீழ்த்தினர்.

போர் புரியும் வீரம், எதிர்த்து நிற்கும் வல்லமை, போர் வியூகம் மூன்றும் இருந்தாலே போதும், போரில் வெற்றி பெற்றுவிடலாம். இவைமூன்றுக்கும் மேலாக இறைவனின் ஆசியிருந்ததாலேயே ஆயிரம் பேரை முன்னூறு பேர் வென்றனர்.

பத்ருப் போர், பள்ளிவாசலில் அணிகளாக நின்றவர்களை போர் அணிகளாகக் கொண்டு வந்து நிறுத்தியது. ஆன்மிகக் குழு அரசியல் குழுவாக மாறத் தொடங்கியது. தொழுபவர்கள் இறைவனைப் பற்றித்தான் பேசுவார்கள் என்பதை மாற்றி அவர்கள் தோளுயர்த்தி வாள்களை வீசுவார்கள் என்பதை நிரூபித்தது.

ஆணவக்காரர்கள் அழிவார்கள்; அக்கிரமக்காரர்கள் அகற்றப்படுவார்கள்; அசத்தியவாதிகள் பின்வாங்கிச் செல்வார்கள்; அயோக்கியர்கள் மூலையில் முடங்குவார்கள்; ஏகாதிபத்தியவாதிகள் இல்லாமல் போவார்கள் என்பதை நிரூபித்துக்காட்டியது பத்ருப் போர்!

புனிதப்போர் சாதாரண மனிதர்களுக்கு எதிரான போரல்ல; சமத்துவத்துக்கு எதிரானவர்களையும் சர்வாதிகாரிகளையும் அழித்தொழிக்கும் போர்!

ஆண்டான்அடிமை, மேலோன்கீழோன், உயர்ந்தவன் தாழ்ந்தவன், கறுப்பன் சிவப்பன், பணக்காரன் ஏழை எனச் சமுதாயம் பிரிக்கப்படும்போதெல்லாம் போராட்டம் எழும். அப்போராட்டங்களில் பலவீனமானவர்களோடுதான் முஸ்லிம்கள் இருப்பர். இதைத்தான் பத்ருப் போர் உலகுக்கு எடுத்துக்காட்டியது.

பத்ருப் போரோடு போர் முடிந்துவிடவில்லை. அண்ணலாரின் காலத்திலும் அதன் பின்னும் பல போர்கள் நடந்துள்ளன. போர்களும் போராட்டங்களும் ஓய்வதில்லை!

முஸ்லிம்கள் புனிதப் போராளிகள்! அவர்கள் இறைவனின் சேனை!

‘இறைநம்பிக்கை கொண்டவர்களே! ஏதேனும் ஒரு குழுவினரோடு நீங்கள் போரிடும்போது நிலைகுலையாமல் இருங்கள். மேலும், அல்லாஹ்வை அதிகமாக நினைவுகூருங்கள்! நீங்கள் வெற்றி அடையலாம்!’

(திருக்குர்ஆன் 8: 45)

திருக்குர்ஆன் சொல்லும் கருத்துகள் எக்காலத்துக்கும் உரியவை. அது சொல்லும் பல கருத்துகள் நடைமுறைப்படுத்தப்படுவதுபோல் தீனை நிலைநாட்ட, புனிதப்போர் தேவையெனில் முஸ்லிம்கள் கட்டாயம் போராளிகளாக வேண்டும்! அசத்தியம் அழிக்கப்படும்வரை போராட்டம் தொடரும்.

பத்ருப் போர், புனிதப் போருக்கு அடித்தளம் போட்டுக் கொடுத்தது; இலக்கணமாக அமைந்தது. அந்த அடித்தளம் இன்றும் பின்பற்றப்படுகிறது; அந்த இலக்கணம் புனிதப் போர்க்காவியம் எழுதப் பயன்படுகிறது.

‘உங்களோடு போர்புரிபவர்களுடன் நீங்களும் அல்லாஹ்வின் பாதையில் போர் புரியுங்கள். ஆனால், நீங்கள் வரம்பு மீறாதீர்கள். ஏனெனில், வரம்பு மீறுபவர்களை அல்லாஹ் நேசிப்பதில்லை.’

(திருக்குர்ஆன் 2: 190)

எடுத்ததெற்கெல்லாம் இஸ்லாம் போர் புரியக் கூறவில்லை. எதிரிகள் போர்புரிய வருகிறார்களா, அப்போது போர்புரியுங்கள். எதிரிகள் போர் புரிய திட்டமிடுகிறார்களா, அப்போது போர்புரியுங்கள். எதிரிகள் போர் புரியும் எண்ணங்கொண்டிருக்கிறார்களா, அப்போதும் போர் புரியுங்கள்.

பத்ருப் போர் எதிரிகள் போர் புரிய ஆர்ப்பரித்துவந்தபோது எடுக்கப்பட்ட எதிர் நடவடிக்கை!

‘ஒரு கூட்டத்தைக் கொண்டு இன்னொரு கூட்டத்தாரை அல்லாஹ் அழிக்காவிட்டால், பூமி குழப்பத்தால் சீர் குலைந்து போயிருக்கும்!’

(திருக்குர்ஆன் 2: 251)

போர் புரிய கட்டளையிடும் இஸ்லாம் அநியாயமாகச் செய்யப்படும் கொலைகளை ஆதரிக்கவில்லை. நியாயமின்றி ஒருவரைக் கொலை செய்வது எல்லா மனிதர்களையும் கொலை செய்வதற்கு ஒப்பாகும் என இஸ்லாம் கூறுகிறது.

போர் தொடுக்கப்பட்டவர்கள், யாதொரு குற்றமுமின்றி வெளியேற்றப்பட்டவர்கள் ஆகியோருக்கு எதிர்த்துப்போரிட அனுமதியுண்டு. பத்ருப் போரில் அதுதான் நடந்தது.

‘இறைவழியில் புனிதப் போர் புரிவது இறைநம்பிக்கையாளனுக்கு உலகிலுள்ள அனைத்துப் பொருள்களையும் விடப் பிரியமானதாகும்.’

(திருக்குர்ஆன் 9: 24)

## உஹது மலைக்காற்று!

உஹது மலை உச்சியிலே உலவிக் கொண்டிருந்த ஊதக்காற்றுக்கு உடை மாற்றும் நேரம்.

உலாவந்த நிலா மேகத்துக்குள் மறைந்து கொண்டது. பனிச்சட்டையை மாற்றிக் கொண்ட காற்று சீரான சட்டையைப் போட்டுக் கொண்டது.

ஊதக்காற்று சீதளக் காற்றாக மாறியபோது அதன் பயணம் வடக்கை நோக்கி இருந்தது.

அப்போது மதீனாவிலிருந்து எழுந்து வந்த குரல் காற்றின் கன்னங்களை வருடியது.

‘அல்லாஹு அக்பர்... அல்லாஹு அக்பர் இறைவன் பெரியவன்... இறைவன் பெரியவன்’ என்ற பிலாலின் குரல் மஸ்ஜித் நபவியிலிருந்து எழுந்து நான்கு திக்குகளிலும் தொழுகைக்கான அழைப்பை அலைமோதச் செய்து கொண்டிருந்தது.

மதீனாவின் எல்லையை அடைந்ததோ இல்லையோ சீதளக் காற்றுக்கு சிறகு முளைத்தது, விரைந்தோடிய காற்று அண்ணலாரின் இல்லங்களுக்குள் சென்று சென்று வந்தது.

ஈச்சமரக் கீற்றுகளால் வேயப்பட்ட அந்த இல்லங்கள் மண் மதில்களால் ஆனவை. மஸ்ஜிதுந் நபவியின் மேற்கிலிருந்த இல்லத் தொகுப்பில் ஒரே அளவிலான பல அறைகள் இருந்தன. அறைத் தடுப்பாக ஈச்சமரத்தட்டிகளும் பச்சை செங்கற்களும் திகழ்ந்தன. பத்தடிக்குப் பத்தடி என்பார்களே அந்த அளவிலான அறைகள்.

பள்ளிவாசலை அடுத்திருந்த முதல் அறையில் ஆயிஷா, இரண்டாவது அறையில் ஹஃப்ஸா, மூன்றாவது அறையில் ஸவ்தா என இறைநம்பிக்கையாளர்களின் அன்னையர்கள் வாழ்ந்தார்கள்.

இல்லங்களுக்குள் நுழைந்து பார்த்த காற்று ஏமாற்றத்துடன் திரும்பியது.

அடுத்து அக்காற்று அண்ணலாரின் பாசமகள் ஃபாத்திமாவின் இல்லத்துள் நுழைந்தது. அங்கு ஃபாத்திமாவும் இல்லை.

அண்ணலாரைத் தொடர்ந்து மகளிரெல்லாம் வைகறைத் தொழுகைக்காக மஸ்ஜிதுந் நபவிக்குச் சென்றுள்ளது இப்போதுதான் காற்றுக்குப் புரிந்தது.

பள்ளிவாசலுக்குச் சென்று பார்க்கலாமே என்றெண்ணிய காற்று அண்ணலாரின் அண்டைவீட்டார் முன் நின்றது. அப்போதுதான் அண்டைவீட்டுக்காரர்களான ஸஅத் இப்னு உபாதா, ஸஅத் இப்னு முஆத், அமாரா இப்னு ஹஸ்ம், அபூஅய்யூம் ஆகியோர் பள்ளிவாசலுக்குப் புறப்பட்டுக் கொண்டிருந்தார்கள்.

பள்ளிவாசல் வீதியில் நின்ற காற்று அண்ணலாரின் தோழர்கள் தங்கியிருந்த திண்ணைக்கு வந்தது. தோழர்கள் அப்போதுதான் பள்ளிவாசலை நோக்கி நடை பயிலத் தொடங்கியிருந்தார்கள்.

அவர்கள் இன்று முஸ்லிம்களாக இருந்தாலும் அவர்களோடு ஒரு நாடோ, ஒரு குலமோ சம்பந்தப்பட்டிருந்தது. பல்வேறுவகை மலர்கள்; ஒரு சரத்தில்! ஈரானிலிருந்து வந்த ஸல்மான் ஃபார்ஸி, ரோம தேசத்திலிருந்து வந்த ஸுஹைப், அபிசீனியா தந்த கறுப்புத் தங்கம் பிலால், தவ்ஸ் குலத்தைச் சேர்ந்த அபூஹுரைரா, குறைஷிகுலத்து ஸஅத் இப்னு அப்பாஸ் என திண்ணைத் தோழர்கள் பலரும் பள்ளிவாசலுள் நுழைந்தார்கள்.

காற்றும் நுழைந்தது.

இகாமத் சொல்லப்பட வைகறைத் தொழுகை நடத்தி முடிக்கப்பட்டது.

தொழுகையை நடத்தி முடித்த அண்ணலார் பிரார்த்தனைக்குப் பின் சிற்றுரை ஒன்றை நிகழ்த்தினார். இறைவனை வாழ்த்திய அண்ணலார் ஒரு முக்கிய கருத்தை எடுத்துரைத்தனார்.

‘அவ்ஸ் கஸ்ரஜ் என இருந்தவர்களும் குறைஷிகளாக இருந்தவர்களும் இப்போது முஸ்லிம்களாக மாறிவிட்டோம். யத்ரிப்வாசிகள் மக்காவாசிகள் எனப் பிரிந்திருந்தோர் இப்போது ஒரே கூடாரத்தின் அடியில் கூடிவிட்டோம். ஆதரவு தந்தவர்களும் ஆதரவு தேடி வந்தவர்களும் இப்போது ஒரே சமுதாயமாக மாறிவிட்டோம். இங்கே யத்ரிபில் வாழ்பவர்கள் உழவுத் தொழிலைச் செய்பவர்கள். மக்காவிலிருந்து வந்து இங்கே வாழ்பவர்கள் வணிகத்தை மேற்கொண்டோர். இப்போது இங்கு புதிய சூழல் உருவாகியுள்ளது.

மக்காவாசிகள் யத்ரிப்வாசிகளோடு இணைந்துவிட்டதால் அவர்கள் உழவுத் தொழிலையும் மேற்கொள்ளும் நிலை. யத்ரிப்வாசிகள் மக்காவாசிகளோடு ஒன்றிப் பிணைந்து விட்டதால் வணிகத்தையும் கற்றுக்கொள்ள வேண்டிய நிலை’ எனக் கூறிய அண்ணலார் இனி எவ்வாறெல்லாம் அன்ஸாரிகளும் முஹாஜிர்களும் நடந்து கொள்ள வேண்டும் எனப் பேசிக் கொண்டிருந்தார்.

பள்ளிவாசலுக்குள் இருந்து அண்ணலாரின் பேச்சைக் கேட்டுக் கொண்டிருந்த காற்றுக்கு இருளைக் கிழிக்க கட்டியங்கூறும் கீழைவான் சிவப்பைக் காண ஆசைவந்தது; அது மதீனாவின் கிழக்குப் பக்கமாக ஓடிப்போய் பார்த்தது.

அண்ணலாரின் உரை நிறைவுற்றிருந்தது. தோழர் ஒருவர் ‘என்ன காற்றைக் காணோம்? அதிகாலையிலேயே புழுங்குகிறது’ என்றார்.

‘ஆமாம்’ என மற்றொரு தோழர் சொல்லி முடிக்கும் முன்பே பள்ளிவாசலின் கூரையை அசைத்த காற்று உட்புறம் சென்று அண்ணலாரை ஆசைதீர பார்த்துக் கொண்டிருந்தது.

அண்ணலார் பள்ளிவாசலை விட்டு வெளியேறி தோழர்களுடன் பேசிக்கொண்டே தம் இல்லத்தை நோக்கி நடந்தார்.

செம்பு சேராத பொன்மேனி; சீதள நிலவாகத் தோன்றும் முகம்; நடுத்தரமான உயரம்; கச்சிதமான தலை; கறுமையும் அடர்த்தியும் கொண்டு கழுத்துவரை தொங்கும் கற்றைக் குழல்; தோற்றப் பொலிவுக்கு மேலும் அழகூட்டும் அகலமான நெற்றி; தொங்கும் பிறையாக வளைந்து அடர்த்தியாகவும் தனித்தனியாகவும் காட்சி தரும் மெல்லிய புருவங்கள்; பொருத்தமான மூடிகளாகப் பொருந்தித் திறக்கும் இமைகள்; வெண்ணிலவில் கருமணியாகக் கண்கள்; காண்பவரைக் கவர்ந்திழுக்கும் வெண்திரையில் சிவப்புக் கோடுகள்; வெட்கமும் நாணமும் கலந்து மனத்தைக் கவரும் சூதில்லாத பார்வை; நீண்ட எடுப்பான மூக்கு; இதமான மொழி பேசும் இதழ்கள்; புன்னகை தவழும் பல்வரிசை; முக தீபகற்பத்தில் மூன்று பக்க தாடி; எழில் தவழும் நீண்ட கழுத்து; விரிந்த மார்பு; உயர்ந்த தோள்கள்; உறுதியான கரங்கள்; அகலமான மணிக்கட்டுகள்; மெல்லிய விரித்த உள்ளங்கைகள்; அளவான விரல்கள்; உருண்டு திரண்ட கால்கள்; வார்க்கப்பட்டதுபோல் வாய்ந்த குதிகால்கள்; முன்பக்கம் இலேசாகக் குனிந்து அழுத்தி வைத்து நடக்கும் பாதங்கள்; மேட்டிலிருந்து பள்ளத்தை நோக்கி இறங்குவதுபோன்ற நடை.

புறஎழில் அழகு போற்றத்தக்கவையாக இருக்க அக எழிலையும் பார்ப்போமா?

உண்மை பேசுதல், ஒவ்வொரு வேலையையும் நேர்மையுடன் செய்தல், வம்புகளை விட்டு விலகியிருத்தல், சண்டை சச்சரவுகளைத் தவிர்த்தல், தனிமையில் அமர்ந்து சிந்தனை செய்தல் எனப் பட்டியல் நீளும். பார்ப்பவர்கள் முதல் பார்வையிலேயே ஈர்க்கப்படுவார்கள்.

அண்ணலார் தம் இல்லம் வர, விடைபெற்றார்; தோழர்கள் தம்தம் இடங்களுக்குச் சென்றனர்.

முன்பே அண்ணலார் முடிவெடுத்திருந்தபடி அன்றையப் பொழுதை அவர்கள் ஆயிஷா வீட்டில் கழிக்க வேண்டும். அதன்படி அண்ணலார் முதல் வீட்டுக்குச் சென்றனர்.

தொழுதுவிட்டு முன்னரே வந்திருந்த ஆயிஷா அண்ணலாரை வரவேற்றார். அண்ணலாரின்மீது அளவற்ற அன்பு கொண்டிருந்த காற்று இணையர் இருவருக்கும் இடையே புகுந்து இதம் பாடல் பாடிக் கொண்டிருந்தது.

‘கோடுபோட்ட சட்டை உங்களுக்குப் பொருத்தமாக இல்லை. கழட்டி வைத்துவிடுங்கள்’ என்றார் ஆயிஷா, அண்ணலாரின் புதுச் சட்டையைப் பார்த்து.

‘யெமனிலிருந்து கொண்டுவந்தது இந்தச் சட்டை; இது எனக்குப் பொருத்தமாக இல்லையா!’

‘ஆளை மாற்றிக் காட்டும் சட்டை உங்களுக்கு வேண்டாம். நீங்கள் இதை அப்துல்லாஹ் இப்னு உபைக்குக் கொடுத்துவிடுங்கள்.’

‘இறைவன் அளித்த ஏகத்துவத்தை ஏற்றுக் கொள்வதில் தடுமாறிக் கொண்டிருக்கும் இப்னு உபை நாம் கொடுக்கும் பருத்தி ஆடையை ஏற்றுக் கொள்வாரா?’ எனப் புன்னகைத்தார் அண்ணலார்.

அண்ணலார் அன்னையாருடன் பேசிக் கொண்டிருந்தார். அன்னையார் காலை உணவுக்கான ஏற்பாடுகளைச் செய்து கொண்டிருந்தார்.

மரக்கட்டிலில் அமர்ந்த வண்ணம் அண்ணலார் சுருட்டி வைக்கப்பட்ட தோலாலான படுக்கையைப் பார்த்துக் கொண்டிருந்தனர். ஈச்சமர நார்கள் நிறைக்கப்பட்ட தலையணை, தண்ணீர் குடிக்கும் குவளை, அளவை மரக்குவளை ‘சாஉ’, மரப்பாத்திரம், தண்ணீர்க் குடுவை, எண்ணெய்ப் போத்தல், கண்ணாடி, சீப்பு, சுர்மா குச்சி, அத்தர்

சீசா, போர்வை, சாக்கு என அவை ஒவ்வொன்றும் அதனதன் இடத்தில் இருந்தன.

ஆயிஷா கோதுமை மாவை எடுத்துக் கொண்டு ரொட்டி தயார் செய்ய வெளியில் வந்தார். அண்ணலாரின் இல்ல வளாகத்தில் யாருக்கும் தனித்தனி அடுப்புகள் கிடையாது. வெளியில் வைக்கப்பட்டிருந்த ஒரே அடுப்பில்தான் அனைவரும் சமைத்துக்கொள்ள வேண்டும்.

அந்த அடுப்பு கூட நபித்தோழர் ஸஅத் இப்னு ஸராரா அண்ணலாருக்கு அன்பளிப்பாக வழங்கிய அடுப்பு.

சலிக்காமல் பேசிக்கொண்டிருந்துவிட்டு ரொட்டி செய்ய வெளியில் வந்த அன்னையார் மாவைக் காட்டி 'சலிக்காத மாவு' என்றார். 'அதில் செய்யும் ரொட்டியைத்தான் நான் விரும்புகிறேன். அதனால்தான் நம் வீட்டில் சல்லடை இல்லை' என்றனார் நபிகள்.

அன்னையார் ரொட்டி செய்து முடித்திருந்தார். ரொட்டிக்கு தொட்டுக்கொள்ள 'ஸுரைத்' எனும் குழம்புச் சாறும் தயாரித்திருந்தார்.

அண்ணலாருக்கு மிகவும் பிடித்த குழம்பு 'ஸுரைத்'. ஸுரைத்தில் ரொட்டியை ஊற வைத்து எடுத்துவிட்டால் அண்ணலார் அதை விருப்பத்தோடு உண்பார்.

'பெண்மணிகளில் சிறந்தவர் ஆயிஷா. உணவுவகைகளில் சிறந்தது ஸுரைத்' என அண்ணலார் புகழ்ந்துரைப்பார்.

'ஆயிஷா, சென்றமுறை நீர் சுரைக்காயில் ஆட்டுக்கால்களைப் போட்டு சமைத்திருந்தீர். அதில் கால் இருந்தது கை (காய்) இல்லை' என அண்ணலார் மொழிந்தபோது அன்னையார் சிரித்துவிட்டார்.

உணவுகளில் சிறந்த உணவான ஸுரைத்தில் ஊறிய ரொட்டிகளை அண்ணலார் உண்டபோது காற்று வேகமாக வீசியது. அண்ணலார் பூசியிருந்த அத்தரின் வாசனையை காற்று வாரிப் பூசிக் கொண்டது.

'ஸுரைத்தை ஃபாத்திமாவுக்கும் கொடுக்கலாமே!' என அண்ணலார் சொல்லி முடிக்கும் முன்பே ஃபாத்திமாவுக்குக் கொடுக்க அன்னையார் தயாராக வைத்திருந்த ஸுரைத் அண்ணலார் கரங்களை அடைந்தது.

ஸுரைத்தை எடுத்துக்கொண்டு அண்ணலார் அடுத்திருந்த ஃபாத்திமாவின் இல்லம் சென்றார். மகளாரிடம் ஸுரைத்தைக் கொடுத்துவிட்டுப் பேசிக் கொண்டிருந்த அண்ணலார் திண்ணைத்

தோழர்களிடம் சென்றார்.

அப்போது திண்ணைத் தோழர்களிடமும் ஸுரைத் வந்திருந்தது. அதைப் பார்த்த அண்ணலாருக்கு ஆயிஷாவின் செயலைப் பாராட்டத் தோன்றியது.

அப்போது அங்கே சில முஹாஜிர்களும் அன்ஸாரிகளும் வந்தனர். அண்ணலாருடன் உரையாடிக் கொண்டிருந்த அவர்களுடைய பேச்சு ஸல்மான் ஃபார்ஸி முஹாஜிரா அன்ஸாரியா என்ற அடையாளத்தை நோக்கிச் சென்றது.

‘ஸல்மான் நம்மைப்போல் தம் வீட்டைத் துறந்து வந்தவர். அதனால் அவர் நம் குழுவைச் சேர்ந்தவர்’ என முஹாஜிர்கள் கூறினர்.

‘இல்லை; அவர் ஏற்கெனவே யத்ரிபில் தங்கியிருந்தவர். எனவே அவர் நமது குழுவைச் சேர்ந்தவர்’ என அன்ஸாரிகள் கூறினர்.

ஸல்மான் ஃபார்ஸி புன்னகைத்த வண்ணம் அண்ணலாரைப் பார்த்தார். அண்ணலார் அனைவரின் முகங்களையும் பார்த்து ‘ஸல்மான் அவரோ இவரோ அல்லர்; நம் குடும்பத்தைச் சேர்ந்தவர்’ என்றனர்.

‘அண்ணலார் சொல்வது பெருமைபடத்தக்கதுதான் என்றாலும் நான் இஸ்லாத்தின் மகன் ஸல்மான் (ஸல்மான் இப்னு இஸ்லாம்) என்பதில் பெருமைப்படுகிறேன், பெரும் மகிழ்ச்சியடைகிறேன்’ என ஸல்மான் மொழிந்ததைக் கேட்ட அண்ணலார் ‘அல்ஹம்துலில்லாஹ்’ எனக் கூறி விடைபெற்றார்.

அங்கிருந்து புறப்பட்ட அண்ணலார் தம் மற்ற துணைவியர்களையும் சந்தித்துவிட்டு மஸ்ஜித் நபவிக்குள் சென்றார்.

அண்ணலாரைப் பின் தொடர்ந்து சென்ற காற்று வெப்பத்தை வெளியில் உதறித்தள்ளிவிட்டுப் பள்ளிவாசலுக்குள் நுழைந்தது. அண்ணலாரைச் சுற்றி சுற்றி வந்தது.

அண்ணலார் உடலை வலப்பக்கமாகச் சாய்த்து கையால் தலையைத் தாங்கிய வண்ணம் சயனித்திருந்தார். மதியத் தொழுகைக்கு இன்னும் நேரமிருந்தது.

அப்போது இருவர் ஒட்டகத்தைப் பக்கத்திலுள்ள மரத்தில் கட்டிவிட்டு பள்ளிவாசலை நோக்கி வந்து கொண்டிருந்தனர். அவர்களின் வருகையைக் கண்ணுற்ற பிலால் பள்ளிவாசலுக்கு வெளியில் வந்தார்.

பின்னர் மூவரும் பேசிக்கொண்டே அண்ணலார் சயனித்திருந்த இடத்துக்கு வந்தபோது மூன்று திண்ணைத் தோழர்கள் பள்ளிவாசலுக்குள் நுழைந்து கொண்டிருந்தனர்.

சாய்ந்திருந்த அண்ணலார் எழுந்து வந்து புதியவர்களை வரவேற்றார். முகமன் கூறிய அண்ணலார் அவர்களை அமரச் சொல்லி அளவளாவத் தொடங்கினார்.

‘நாங்கள் பஹ்ரினிலிருந்து வருகிறோம். நாங்களிருவரும் சகோதரர்கள். எங்கள் குடும்பத்தினரும் எங்களைச் சேர்ந்தவர்களும் இயற்கையை வணங்கிக் கொண்டிருக்கிறோம். சிலை வணக்கம் எங்களிடையே கிடையாது. எங்களைக் கடந்து சென்ற வணிகர்கள் உங்களைப் பற்றியும் உங்களுடைய மார்க்கத்தைப் பற்றியும் சொன்னார்கள். நாங்கள் எங்களுக்குள் கலந்து பேசி உங்களைச் சந்திக்க முடிவெடுத்தோம்’ என வந்தவர்களில் ஒருவர் சொல்லிக் கொண்டிருந்தார்.

‘உங்களைப் பார்க்காமலேயே எங்களுக்கு உங்கள் மேல் அளவற்ற அன்பிருந்தது. இப்போது அவ்வன்பு அளவுக்கு அதிகமாகிவிட்டது. உங்களின் நிழலுக்கு வந்த எங்களுக்கு சொர்க்கம் கிடைக்குமல்லவா!’ என இரண்டாவது தோழர் கேட்டார்.

‘இறைநம்பிக்கையும் தொழுகையும் நற்செயல்களும் உங்களுக்குச் சொர்க்கத்தைப் பெற்றுத் தரும்’ எனக் கூறிய அண்ணலாரிடம் பஹ்ரின் சகோதரர்கள் பைஅத் உறுதிமொழி அளித்தார்கள்.

அண்ணலாரைக் கட்டித் தழுவிய சகோதரர்கள் திண்ணைத் தோழர்களையும் கட்டித் தழுவினார்கள்.

பிலாலின் வழிகாட்டலில் பஹ்ரின் சகோதரர்கள் உடல் கழுவி, உடை மாற்றிக் கொண்டார்கள்.

அப்போது சூரியன் மேலேறி மேற்கில் இறங்கத் தொடங்கியிருந்தது. பிலால் பெருங்குரல் எழுப்பி பகல் தொழுகைக்கான அழைப்பை விடுத்தார்.

பள்ளிவாசல் நிரம்பியது. அண்ணலார் தொழுகையை நிறைவேற்றி வைத்தார். தொழுகைக்குப் பின் பள்ளிவாசலின் முன்புறத்தில் விருந்தினர்களுக்கான உணவு வழங்கப்பட ஏற்பாடாகியிருந்தது.

பிலாலும் இளைஞர் சிலரும் ஏற்பாடுகளைச் செய்தனர். அண்ணலாரின் இல்லங்களிலிருந்து உணவு வரவழைக்கப்பட்டது.

அண்ணலாரும் அவர்களுடன் அமர்ந்து உணவுண்டார்.

மாலைத் தொழுகைவரை அண்ணலாருடன் பஹ்ரின் சகோதரர்கள் உரையாடிக் கொண்டிருந்தனர். அவர்களைச் சூழ நபித்தோழர்கள் பலரும் இருந்தனர்.

‘எங்களுக்கு மார்க்கத்தை விரிவாக சொல்லித்தர ஒரு தோழரை அனுப்ப வேண்டும்’ என பஹ்ரின் தோழர்கள் கேட்க அண்ணலார் புன்னகைத்தபடி மறுமொழி கூறினார்.

‘நீங்கள் இருவரும் இங்கேயே சில நாட்கள் தங்கி இஸ்லாத்தின் அடிப்படைகளைத் தெரிந்து கொண்டு சென்று பஹ்ரினில் உள்ளவர்களுக்குச் சொல்லுங்கள். ஜமாஅத் விரிவடையும்போது வேண்டுமானால் இங்கிருந்து ஒருவரை அனுப்பி விரிவான அழைப்பைச் செய்யலாம்’ என அண்ணலார் கூற பஹ்ரின் சகோதரர்கள் அவ்வாறே செய்யலாம் என ஒப்புக் கொண்டனர்.

மாலைத் தொழுகைக்குப் பின் அண்ணலார் வீட்டுக்குச் சென்றார். ஆயிஷாவிடம் வந்திருக்கும் விருந்தினரைப் பற்றிக் கூறினார்.

மாலைவானம் மந்தகாசமாக சிரித்துக் கொண்டிருந்தது. அதிகாலையில் புறப்பட்ட காற்று சுற்றிச் சுற்றி வீசு தென்றலாக மாறிச் சிரித்தது. மாலையும் இரவும் சந்திக்கும் நேரத்துக்கு வரவேற்புக் கூறிக் கொண்டிருந்தது.

அண்ணலார் மையிருட்டாகும் முன்பே பள்ளிவாசலுக்குள் சென்றார். அன்ஸாரிகள், முஹாஜிர்கள் என அனைவரும் அந்திமுனைத் தொழுகைக்காக குழுமினர். பஹ்ரின் சகோதரர்களும் அங்கேயே இருந்தனர்.

அப்போது அங்கே நபித்தோழர் உபாதா இப்னு ஸாயித் வந்தார். அவரை பஹ்ரின் சகோதரர்களுக்கு அறிமுகப்படுத்திய அண்ணலார் ‘இவர்தான் திண்ணைத் தோழர்களின் ஆசான். திருக்குர்ஆன் வசனங்களை இவர்தான் தோழர்களுக்குச் சொல்லிக் கொடுத்து வருகிறார். இவரிடமே நீங்களும் கற்றுக் கொள்ளுங்கள்’ என்றார்.

சூர்யன் தன் கதிர்களைச் சுருட்டிக் கொள்ள இருள் பூவுலகை வருடிக் கொள்ள அந்தித் தொழுகைக்கான அழைப்பை பிலால் விடுத்தார்.

பிலாலின் குரலுக்காகக் காத்திருந்த காற்று பேரொலியை மதீனாவின் இல்லங்களிலும் ஈச்சமரத் தோட்டங்களிலும் கொண்டு

சேர்த்தது.

அண்ணலார் தொழுகையை முன்னின்று நடத்தினார். தோழர்கள் அண்ணலாரைத் தொடர்ந்து தொழுதனர்.

தொழுகை நிறைவேறியபின் இரு கூடைகள் நிறைய கொடி முந்திரியும் பேரீச்சம் பழங்களும் பள்ளிவாசலுக்கு அன்பளிப்பாக வந்தன. அண்ணலார் அவற்றை அங்கிருந்த அனைவருக்கும் வழங்கினார்.

அதன்பின் அண்ணலார் நோயுற்றிருந்த நபித்தோழர் ஒருவரைக் காணச் சென்றார். அப்போது அண்ணலாருடன் அபூபக்கரும் உமரும் சென்றனர்.

‘உங்களுடைய நலத்துக்காக நாங்கள் பிரார்த்திக்கின்றோம்’ என அண்ணலார் அருமைத் தோழர்கள் இருவருடன் சேர்ந்து பிரார்த்தித்தார்.

பிரார்த்தித்த பின் அவர்களிடையே எந்தெந்த பிரார்த்தனைகள் அல்லாஹ்வால் மறுக்கப்படாத பிரார்த்தனைகள் என்ற உரையாடல் உருவாகியது.

‘அநீதி இழைக்கப்பட்டவரின் பிரார்த்தனை, பயணத்தில் இருப்பவரின் பிரார்த்தனை, தம் குழந்தைகளுக்காக ஒரு தந்தை செய்யும் பிரார்த்தனை’ என அண்ணலார் மொழிந்தார்.

அவர்கள் நோயுற்றவரிடம் விடைபெற்றுக் கொண்டு தம் இல்லங்களுக்குச் செல்லவில்லை. நேராக பள்ளிவாசலை நோக்கி நடந்தார்கள்.

அவர்கள் நடந்துவரும்போது பஹ்ரின் சகோதரர்களின் இரவு உணவு பற்றிய பேச்சு வந்தது. அபூபக்கரே இரு விருந்தாளிகளுக்கும் உணவளிப்பதாகக் கூறினார்.

‘என்ன உணவு?’

‘ஹைஸ்...’

அண்ணலாருக்கு மிகப் பிடித்தமான உணவு ஹைஸ். பேரீச்சம் பழங்கள், நெய், சத்துமாவு கலந்து செய்யப்படும் ஹைஸ் விருந்தினருக்கான சிறந்த உணவு.

ஹைஸ் அண்ணலாருக்கு மிகப் பிடித்தமான உணவு என்பதை அறிந்திருந்த அபூபக்கர் ‘தாங்களும் இரவுச் சாப்பாட்டுக்கு வரவேண்டும்’ என அண்ணலாரைக் கேட்டுக் கொண்டார்.

‘இன்ஷா அல்லாஹ்.’

அவர்கள் உரையாடிக்கொண்டே பள்ளிவாசலுக்குள் நுழைந்தனர். அப்போது அந்தித் தொழுகையை நிறைவேற்றிய தோழர்களில் சிலர் இரவுத் தொழுகைக்காகக் காத்திருந்தனர். அவர்களோடு உரையாடிய அண்ணலார் ‘அந்தித் தொழுகையை நிறைவேற்றிவிட்டு இரவுத் தொழுகைக்காக காத்திருப்பதன் சிறப்பை’ பற்றி எடுத்துக்கூறினார்.

பேச்சுவாக்கில் நேற்று சிரியா செல்லும் வழியிலுள்ள தினச்சந்தைக்கு சென்று வந்ததைப் பற்றியும் நாளை கூபா பள்ளிவாசலுக்கு செல்லவிருப்பதைப் பற்றியும் அண்ணலார் மிகச் சாதாரணமாகக் கூறினார்.

காற்று மழைக்காற்றாக மாறியது; பொட்டுப் பொட்டாக மழைமேகம் தூறியது.

பிலாலின் அழைப்புக் குரல் மழைக்காற்றோடு மோதியது. மழையைப் பொருட்படுத்தாமல் மஸ்ஜித் நபவியில் பெருங்கூட்டம் கூடியது.

அண்ணலார் இரவுத் தொழுகையை நிறைவேற்றினார். அபூபக்கர், பஹ்ரின் சகோதரர்கள் புடைசூழ இரவு உணவைச் சாப்பிட அண்ணலார் புறப்பட்டார்.

தூறிய மழைத்துளிகளைக் காற்று உஹது மலைச்சாரலுக்குக் கொண்டு சென்றது. உறங்காத காற்று உஹது மலைக்கு ஒருநாளின் கதையைச் சொன்னது.

அண்ணலார் இரவு உணவு உண்டபின் மிக விரைவாக உறங்கச் சென்றார். அதற்கான ஆயத்தங்களை ஆயிஷா செய்து வைத்திருந்தார்.

விரைவாக தூங்கினால்தான் நடுநிசித் தொழுகை தஹஜ்ஜுத்துக்காக அண்ணலார் எழுந்திருக்க முடியும்.

## பத்ருக்குப் பின்...

‘எவர்களுக்கு எதிராகப் போர் புரியப்படுகின்றதோ அவர்களுக்கு அமைதியளிக்கப் பட்டுவிட்டது. ஏனெனில், அவர்கள் கொடுமைப்படுத்தப்பட்டிருக்கின்றார்கள். மேலும், திண்ணமாக அல்லாஹ் அவர்களுக்கு உதவி செய்ய ஆற்றல் பெற்றவனாக இருக்கின்றான்.’

(திருக்குர்ஆன் 22: 39)

கொடுமைப்படுத்தப்பட்ட முஸ்லிம்கள் பொறுமையுடன் அமைதிகாத்து வந்தனர். பல்வேறு வகைப் பேச்சுகளாலும் செயல்களாலும் காயம்பட்ட முஸ்லிம்கள் விடிவு வரும் எனக் காத்துக்கிடந்தனர்.

இறைவன் முஸ்லிம்களுக்கு நல்லருள் பாலித்தான். எதிரிகளை எதிர்த்துப் போரிட ஆணையிட்டான். அப்போரில் அவர்களுக்கு உதவி செய்வதாகக் கூறியதைப் போலவே உதவி செய்து வெற்றியைப் பெற்றுத்தந்தான்.

அண்ணலாரின் ஒவ்வொரு அசைவையும் திருக்குர்ஆனே செய்ய வைத்தது. முஸ்லிம்கள் அனைவரையும் அண்ணலாரின் மூலம் இறைவனே வழிநடத்தினான்.

பத்ருப் போருக்கு முன் வியூகங்கள் வகுக்கவும் உளவு பார்க்கவும் வழிமறிக்கவும் மிரட்டவும் வழிவகுத்தவன் இறைவன்தான்.

நூறுபேர், ஐம்பது பேர் அதற்கொரு தலைவர் என முஸ்லிம்கள் யெமனிலிருந்து சிரியாவரையுள்ள வாசனைத் திரவிய சாலையில் சென்று குறைஷிகளை உளவு பார்த்தும் மிரட்டியும் தங்களைத் தாங்களே போர் முனைக்கு நகர்த்திச் சென்றார்கள்.

ஹம்ஸா, உபைதா பின் ஹாரிஸா, ஸஃது இப்னு அபீவக்காஸ், அப்துல்லாஹ் இப்னு ஜஹ்ஷ், அண்ணலார் ஆகியோர் தலைமையில் முஸ்லிம் குழுக்கள் களத்தில் இறங்கின. அதே சமயம் மதீனாவைச் சுற்றியிருந்த மக்களிடம் நட்புடன் நடந்து உடன்படிக்கைகள் செய்து கொண்டன.

மக்காவிலிருந்து குறைஷிகளின் படை புறப்பட்டு வந்ததையடுத்து முஸ்லிம்கள் பத்ருவில் பாளையம் இறங்கினர். அது மேட்டுப்பாளையமாக அமைந்தது; மேன்மையான வெற்றியும் தந்தது.

இப்போர் யாரோ இரு குழுக்களுக்குள் நடந்த போரல்ல; உறவுகளுக்குள் நடந்த போர். முஸ்லிம்களின் படையில் அண்ணலார் இருந்தார் என்றால் குறைஷிகளின் படையில் அண்ணலாரின் சித்தப்பா அப்பாஸ் இருந்தார். இவ்வாறு தந்தை மகன், அண்ணன் தம்பி, மாமன் மச்சான் என உறவுகளைச் சொல்லிக் கொண்டே போகலாம்.

குறைஷிகளில் மிகப் பிரபலமாக விளங்கிய தலைவர்களெல்லாம் களத்துக்கு வந்திருந்தனர். ஷம்ஸ் கோத்திரத்து சகோதரர்கள் உத்பா

ஷைபா, நவ்பலிலிருந்து ஹாரித், துஐமா, அப்த் அத்தாரிலிருந்து நள்ரு, மக்ஸூமிலிருந்து அபூஜஹ்ல், ஜுமாஹ்லிருந்து உமையா, ஆமிரிலிருந்து ஸுஹைல் ஆகியோர் போருக்கு வந்திருந்தனர்.

இவர்களில் உத்பா, ஷைபா, உமையா, துஐமா, அபூஜஹ்ல் ஆகியோர் பத்ருப் போரில் கொல்லப்பட்டனர்.

பத்ருவில் கிடைத்த வெற்றி சாதாரணவெற்றியல்ல; அதை வழங்கியவன் அல்லாஹ்!

> ‘நிச்சயமாக நான் உங்களோடு இருக்கின்றேன். எனவே நம்பிக்கையாளர்களை நீங்கள் உறுதியாக இருக்கச் செய்யுங்கள். இதோ! நிராகரிப்பாளர்களின் உள்ளங்களில் பீதியை ஏற்படுத்திவிடுகின்றேன். எனவே, நீங்கள் அவர்களுடைய பிடரிகளில் தாக்குங்கள். அவர்களின் ஒவ்வொரு விரல் மூட்டுகளிலும் அடியுங்கள்.’

(திருக்கர்ஆன் 8: 12)

இறைவன் எதிரிகளிடம் ஏற்படுத்திய பீதி அவர்களை வீழச் செய்தது. உலக வரலாற்றில் ஒரு சிறுபடை மிகப் பெரும்படையை வென்ற வரலாற்றை பத்ருப் போரே பதிவு செய்துள்ளது.

> ‘இப்போது அல்லாஹ் உங்கள் சுமையைக் குறைத்துவிட்டான். இப்பொழுதும் உங்களிடம் பலவீனம் இருப்பதை அவன் அறிவான். எனவே, உங்களில் நூறுபேர் உறுதி குலையாதவர்களாக இருந்தால் இருநூறு பேரை அவர்கள் வென்றுவிடுவார்கள். அத்தகையோர் உங்களில் ஆயிரம் பேர் இருந்தால் அல்லாஹ்வின் அனுமதி கொண்டு இரண்டாயிரம் பேரை அவர்கள் வென்றுவிடுவார்கள். மேலும் அல்லாஹ் பொறுமையாளர்களுடன் இருக்கின்றான்.’

(திருக்குர்ஆன் 8: 66)

அல்லாஹ் பொறுமையாளர்களின் பக்கம் நின்றான். எனவே பொறுமையாளர்கள் வெற்றி பெற்றார்கள். பொறுமையாளர்கள் இறைவனின் நெறியைப் பின்பற்றியவர்கள். எனவே இறைவனின் படையாக விளங்கினார்கள். எனவே அவர்கள் வெற்றி பெற்றார்கள்.

குறைஷிகளில் இறந்துபோன எழுபது பேரும் ஒரு கிணற்றில் போட்டுப் புதைக்கப்பட்டார்கள். சிறைப்பிடிக்கப்பட்ட எழுபது பேர்

மதீனாவுக்குக் கொண்டு செல்லப்பட்டனர். தோற்ற குறைஷிகள் புழுதி படிந்த உடல்களோடு மக்கா போய்ச் சேர்ந்தனர். மக்காவின் தெருக்களெங்கும் அழுகுரல்கள் கேட்டன.

சிறைப்பிடிக்கப்பட்டவர்களின் இல்லங்களிலும் கூக்குரல்கள். அவர்கள் உயிரோடிருக்கின்றனரா, இல்லை மரணத்தைத் தழுவிட்டனரா என அறியாத உறவும் சுற்றமும் அழுது புலம்பின.

சிறைப்பட்டோரில் சிலர் மிக முக்கியமானவர்கள். அவர்களில் அண்ணலாரின் சிறிய தந்தை அப்பாசும் இருந்தார்; மருமகன் அபுல் ஆசும் இருந்தார். அண்ணலாரின் ஒன்றுவிட்ட சகோதரர்கள் அகீல், நவ்பலும் இருந்தனர். ஸைனபின் கணவர், ஆமிரின் தலைவரும் அண்ணலாரின் துணைவியர் ஸவ்தாவின் ஒன்றுவிட்ட சகோதரருமான ஸுஹைலும் இருந்தார்.

கைது செய்யப்பட்டவர்களும் கைது செய்தவர்களும் யாரெனத் தெரியும்போது உள்ளத்துக்குள் சிறுசலனம் ஏற்படலாம். அதை கொள்கை மாற்றிவிடும். பழம் மார்க்கமும் புதுமார்க்கமுமே சண்டையிட்டுக் கொண்டன. அசத்தியமும் சத்தியமும் சமர் புரிந்து கொண்டன. உறவுக்கோ உதிரத் தொடர்புக்கோ எவ்விதச் சம்பந்தமும் கிடையாது.

சிறைப்பிடிக்கப்பட்டவர்களில் மிகவும் ஆபத்தானவர்கள் இருவர் இருந்தனர். அவர்கள் எக்காலத்திலும் திருந்தக் கூடியவர்கள் அல்லர் எனக் கணித்த அண்ணலார் அவர்களுக்கு மரண தண்டனை விதித்தார். அவர்கள் அப்த் அத்தாரின் நள்ரு, அப்த் ஷம்ஷின் உக்பா!

> ‘நீங்கள் போரில் கைப்பற்றிய பொருள்களை உண்ணுங்கள்; அவை அனுமதிக்கப்பட்டவையும் தூய்மையானவையுமாகும்.’

(திருக்குர்ஆன் 8: 69)

கைப்பற்றப்பட்ட பொருள்களும் கைதிகளும் முஸ்லிம்களுக்குப் பிரித்துக் கொடுக்கப்பட்டனர். அண்ணலார் போரில் கிடைத்தவற்றைப் பங்கீடு செய்வதிலும் போர்க்கைதிகளை நடத்துவதிலும் முன் மாதிரியாகத் திகழ்ந்தனர்.

பத்ருப் போரில் வெற்றி பெற்ற செய்தியை அப்துல்லாஹ் இப்னு ரவாஹா மேலை மதீனாவுக்கும். ஜைத் கீழை மதீனாவுக்கும் எடுத்துச் சென்று மொழிந்தனர்.

வெற்றிச் செய்தியைக் கூறுவதற்கு முன் ஜைதுக்கு ஒரு சோகச் செய்தி கிடைத்தது. அண்ணலாரின் மகளார் ருகையா மரணித்த செய்தியே அந்தச் சோகச் செய்தி! ருகையாவின் மரணச் செய்தியைவிட மிகவும் அதிகமான சோகத்தைத் தரும் செய்தி அண்ணன் தம்பிகளான அவ்பும் முஅவ்விதும் பத்ருப் போரில் மாண்ட செய்தி! செய்தி கேட்ட சகோதரர்களின் அன்னை அப்ரா, அடைந்த துன்பம் அளவுக்கதிகமானது.

அடுத்து ஜைத் பத்ருப் போரில் ஷஹீதான ஹாரிதா இப்னு ஸுரகாவின் தாயார் ருபைய்யிடம் மரணச் செய்தியைச் சொன்னபோது பெற்ற வயிறு பற்றியெரிந்தது.

முஸ்லிம்களின் சார்பில் போரில் இறந்து போயிருந்த 14 பேர்களின் இல்லங்களில் மட்டுமல்ல ஒட்டுமொத்த முஸ்லிம்களின் இல்லங்களிலும் சோகம் சூழ்ந்திருந்தது. மஸ்ஜித் நபவி தொழுகைகளில் ஒரு கனத்த சோகம் பரவியிருந்தது.

சிறைப்பிடிக்கப்பட்ட கைதிகளை என்ன செய்வதென அண்ணலார் தம் தோழர்களுடன் கலந்தாலோசித்தார். உமர், அவர்களைக் கொன்று விடலாம் என்றார். அபூபக்கரோ பிணைத் தொகை வாங்கி விடுவிக்கலாம் என்றார். அண்ணலார் அபூபக்கர் கூறியதை ஏற்றார்.

மக்கத்துக் குறைஷிகளின் உறவினரும் சொந்தக்காரர்களும் போருக்கு வந்தவர்களின் கதியென்ன என்பதைத் தெரிந்துகொள்ள அடுத்தடுத்து வந்தனர். எழுபது பேர் இறந்ததையும் எழுபது பேர் சிறைப்பட்டதையும் அறிந்தவர்கள் கவலைப்பட்டனர். பிணைத் தொகை கொண்டுவந்தோர் கைதிகளை மீட்டுச் சென்றனர்.

ஆமிரின் தலைவர் ஸுஹைல் நாலாயிரம் திர்ஹம் கொடுக்கப்பட்டு மீட்கப்பட்டார். அண்ணலாரின் சிறிய தந்தை, ஒன்றுவிட்ட சகோதரர்கள் அகீல், நவ்பல் அவர்களது கூட்டுறவாளர் உத்பா ஆகியோரும் பிணைத் தொகை கொடுக்கப்பட்டதால் விடுதலை பெற்றனர்.

முஸ்லிமாகி மதீனாவிலிருந்த முஸ் அப்பின் சகோதரர் அபூஅஸீஸ் கூட அவருடைய தாயார் பிணைத் தொகை கொடுத்ததால் விடுதலையானார்.

அண்ணலாரின் மருமகனை மீட்க பிணைத் தொகைக்குப் பதிலாக கோமேதகக் கற்களாலான ஒரு கழுத்து மாலையை அபுல் ஆஸின் மனைவி ஸைனப் அனுப்பியிருந்தார். அம்மாலை, கதிஜா பிராட்டியார்

அணிந்திருந்த மாலை. அதைப் பார்த்த அண்ணலாருக்குப் பிராட்டியாரின் நினைவுகள் கண்முன் வந்தன; கண்களில் நீர் கசிந்தன.

அண்ணலாரின் தோழர்கள் அம்மாலையை வாங்க மறுத்தனர்.

‘அபுல் ஆஸ்! நீரோ இதுவரை முஸ்லிமாகவில்லை. உம்முடைய மனைவி ஸைனபோ முஸ்லிமாகியிருக்கிறார். இஸ்லாத்தின்படி ஒரு முஸ்லிம் பெண் வேறொரு முஸ்லிமல்லாத கணவரோடு வாழ்வது மரபல்ல. எனவே, நீர் ஸைனபை மதீனாவுக்கு அனுப்பிவிடும்’ என அண்ணலார் கூற அபுல் ஆஸ் பிணைத் தொகைக்கான கழுத்து மாலை பெறப்படாத நிலையிலேயே விடுதலை பெற்றார்.

மக்ஸூம்களின் தலைவராயிருந்த வலீதின் புதல்வர் இளைய வலீத். அண்ணலார் கேட்டுக் கொண்டதற்கு இணங்க தலைவர் வலீதின் ஆயுதங்களும் கவசங்களும் பிணைத் தொகைக்குப் பதிலாக ஏற்கப்பட்டு விடுதலை செய்யப்பட்டார். இதயத்தில் இஸ்லாத்தைப் பதித்திருந்த இளைய வலீத் மக்கா சென்று மீண்டுவந்து அண்ணலாரிடம் உறுதிமொழி ஏற்றது ஒரு தனிக்கதை!

கைது செய்யப்பட்டவர்களில் நாலாயிரம் திர்ஹம்கள் கொடுக்க முடியாமல் சிலர் இருந்தனர். அவர்களில் கல்வியறிவு பெற்றவர்களை கல்வியறிவில்லா மதீனாவாசிகளுக்குக் கற்றுக் கொடுத்துவிட்டு விடுதலை பெறும்படி அண்ணலார் பணித்தார்.

எல்லா வகைகளிலும் முன்மாதிரியாகத் திகழ்ந்த அண்ணலார், எல்லாத் துறைகளிலும் முன்னுதாரணமாய்த் திகழ்ந்த அண்ணலார் கைதிகளை விடுவிப்பதில்கூட ஒரு புதிய மாதிரியைக் கொண்டு வந்தார்.

## பொரிமாவுச் சண்டை!

பத்ருப் போரில் முஸ்லிம்கள் பெற்ற வெற்றி அரபகத்தின் பெரிய சந்தைகளிலும் சிறிய சந்தைகளிலும் பேசப்பட்டன. இவ்வெற்றியை உண்மைக்குக் கிடைத்த வெற்றியாக நடுநிலையாளர்கள் கணிக்க, குறைஷிகள் அதை தம் தோல்வியாக நினைக்கவில்லை; வெற்றி வாய்ப்பை இழந்ததாகப் பேசிக் கொண்டனர்.

அவர்கள் நெஞ்சில் நிராசை நிறைந்திருந்தது; வெளிக்காட்டவில்லை! அச்சம் சூழ்ந்திருந்தது; அதையும் அவர்கள் கண்ணால்கூட காட்டிக் கொள்ளவில்லை. என்றாலும் குறைஷிகள் துவண்டு போயிருந்தனர். குறைஷிகளைப் பார்த்து யூதர்கள் வாழ்க்கை வியூகத்தை மாற்றிக் கொள்ளலாமா என எண்ணினர். நயவஞ்சகர்கள்

பதுங்கிப் பாய நினைத்தனர்.

ஒரு நாளல்ல, இரு நாளல்ல! முப்பது நாள்கள் குறைஷிகள் அழுது புலம்பிக் கொண்டிருந்தனர். கொல்லப்பட்டவர்களில் அபூஜஹ்ல் போன்ற தலைவர்களும் இருந்ததால் அவர்களின் சோகம் ரெட்டிப்பாகியிருந்தது. பத்ருவில் ஏற்பட்ட தோல்வியை எண்ணிப் பார்த்த சிலர் தலையில் மண்ணை வாரிப் போட்டுக் கொண்டு அழுதனர்.

அவர்கள் சோகத்தைப் பாடலாக வடித்து ஒப்பாரி வைத்தனர். தெருக்களெங்கும் பத்ருப் போரைப் பற்றியே பேசினர். தாருந்நத்வாவில் கூடிப் பேசிய தலைவர்கள் பேச்சில் தெம்பில்லை.

அரை யூதக்கவிஞர் கஅப் பின் அல்அஷ்ரப் மதீனாவிலிருந்து மக்கா வந்து அபூஜஹ்ல் இறப்பையும் பத்ருப் போர் நடப்பையும் பற்றி இரங்கல் பா பாடினார். குறைஷிகளை முஸ்லிம்களுக்கு எதிராக உசுப்பிவிட்டார்.

‘சிங்கம் நீங்கள்,

சிறுநரி அவர்கள்!

ராஜாளி நீங்கள்,

கோட்டான் அவர்கள்!

சிங்கம் சிறைப்படுமா?

ராஜாளி தோற்குமா?

சீறி எழுங்கள்

சிறுநரியைக் கொல்லுங்கள்?’

குறைஷிகள் அழுகையும் துக்கமும் நாளடைவில் மாறின. நடந்ததெல்லாம் விதியென எண்ணி வேறு வேலைகளில் ஈடுபட்டார்கள். அதே சமயம் முஸ்லிம்களைக் கருவறுப்பது எப்படி என்பதைப் பற்றிச் சிந்தித்துக் கொண்டே இருந்தார்கள்.

குறைஷிகள் உயிரிழப்பைப் பொறுத்துக்கொண்டு அமைதியடையவில்லை. அவர்கள் நீறுபூத்த நெருப்பாக இருந்தார்கள். தங்கள் வாள்களையும் கேடயங்களையும் துடைத்து வைத்தார்கள். வில்லை முறுக்கேற்றி அம்புகளைத் தயாரிக்கத் தொடங்கினார்கள்.

மொட்டையடித்திருந்த பெண்களின் தலைகளில் முடிவளர ஆரம்பித்திருந்தது. என்றாலும் அவர்கள் ‘நறுமணம் பூசுவதில்லை, நல்ல

உடை அணிவதில்லை, அலங்காரம் செய்வதில்லை! பழிக்குப் பழி வாங்கும்வரை நல்லுணவு உண்பதில்லை!' என்ற முடிவுடன் இருந்தார்கள்.

'பழிக்குப் பழி வாங்கும்வரை ஓய மாட்டோம், உறங்கமாட்டோம், சரியாக உண்ண மாட்டோம்' என ஆண்கள் சபதம் செய்தனர்.

இவற்றுக்கெல்லாம் மேலாக அபூசுப்யான் 'முஹம்மதை வீழ்த்தாதவரை குளிப்பதில்லை' என சத்தியம் செய்து சூளுரைத்தார்.

குறைஷிகள் போருக்கு ஆயத்தமாகினர். வாள், கேடயம், வில், அம்பு போன்ற போர்க்கலன்கள் தயாரிக்கப்பட்டுக் குவிக்கப்பட்டன. வாகனங்கள் சேகரிக்கப்பட்டன.

பத்ருப் போருக்கு முன் சிரியாவிலிருந்து வந்திருந்த வணிகக் குழுவின் முதலீடெல்லாம் தாருந்நத்வாவில் இருந்தன. முதலீடை மட்டும் உரியவர்களிடம் சேர்த்துவிட்டு லாபத்தைப் போர்ச் செலவுக்காகப் பயன்படுத்துவது என தாருந்நத்வாவில் தலைவர்கள் முடிவு செய்தனர்.

பத்ருப் போரில் அபூசுப்யானின் மகன் கொல்லப்பட்டிருந்தான். எனவே, அவரின் வேதனையும் பழிவாங்கும் உணர்ச்சியும் அதிகமாக இருந்தன.

பத்ருப் போரில் ஈடுபட்ட முஸ்லிம்களின் படைபலம் பிரமாண்டமானது அல்ல. குறைஷிகளின் படைபலம் இன்னும் அதிகமாக்கப்பட்டால் முஸ்லிம்களை ஊதித் தள்ளிவிடலாம். உறுதி வாய்ந்த வீரர்கள் மட்டும் போதாது; தகுதி வாய்ந்த தலைவர்கள் வேண்டும்.

இதற்குக் காலம் கனிய வேண்டும். ஆனால் அபூசுப்யான் ஆத்திரம் கொண்டு உடனடியாக மதீனாவைத் தாக்கத் திட்டமிட்டார். அவருடைய வேட்கையெல்லாம் அண்ணலாரைக் கொல்வதே! அண்ணலாரைக் கொன்றுவிட்டால் இஸ்லாமிய இயக்கம் இல்லாமல் போய்விடும் என அவர் மனப்பால் குடித்தார்.

அபூசுப்யான் இருநூறு மக்காவாசிகளைத் திரட்டிக்கொண்டு மதீனா நோக்கி விரைந்தார்.

திடீர் படையெடுப்பென்பதால் மதீனாவுக்குச் செய்தி தெரியாது. நேராக நகருக்குள் நுழைந்து அண்ணலார் இருக்குமிடத்துக்கே சென்று பழிக்குப் பழி வாங்கி விடலாம் எனப் பாய்ந்து சென்றார்.

மதீனாவை அடைவதற்கு முன்பே அபூசுப்யானின் கோபம்

வெடிக்கத் தொடங்கியது. ஊர் எல்லையிலுள்ள ஒரு தோட்டத்தில் அன்ஸாரி ஒருவரும் அவருடைய வேலையாளும் தோட்ட வேலைகள் செய்து கொண்டிருந்தனர்.

அவர்களைச் சூழ்ந்த அபூசுப்யானும் அவருடைய ஆட்களும் கொலை பாதகச்செயலை செய்தனர். அங்கிருந்த வீடுகளைக் கொளுத்தினர்; பேரீச்சை மரங்களை வெட்டிச் சாய்த்தனர்.

அபூசுப்யான் நோக்கம் குறைப்பிரசவம் ஆனது! அவர் மதீனாவுக்குள் செல்லாமல் பதறித் துடித்தபடி மீண்டும் மக்காவை நோக்கி ஓடினார்.

அபூசுப்யானின் அடாவடிச் செயல் மதீனாவை எட்டியது. அண்ணலார் உடனே சில பேராளிகளை அழைத்து தப்பித்து ஓடியவர்களைப் பிடித்துவர அனுப்பினார்.

அபூசுப்யானின் குதிரைகள் விரைந்தோடியது என்றால் அண்ணலார் அனுப்பிய குதிரை வீரர்கள் பறந்தோடின.

புழுதி பறக்கப் பின் தொடரும் குதிரை வீரர்களைக் கண்டு அபூசுப்யானும் அவருடைய ஆட்களும் அச்சத்தோடு விரைந்தனர். பின் தொடர்வோர் கையில் மாட்டிக் கொள்வோம் எனப் பயந்தவர்கள் தம் குதிரைகளிலிருந்த பொரி மாவு மூட்டைகளைக் கீழே தள்ளிவிட்டு ஓடினர்.

உணவுக்காக வைத்திருந்த பொரிமாவு அரபியில் ‘ஸ்வீக்’ என அழைக்கப்படும். எனவே இந்நிகழ்ச்சி ‘ஸ்வீக் மாவுச் சண்டை’ எனக் கூறப்படுகிறது.

குதிரைகளிலிருந்து தள்ளிவிடப்பட்ட மூட்டைகள் கிழிந்து, மாவு பாலைவெளியில் பறந்து பனிப்படலம்போல் தோன்றியது.

மாவின் வெண்மையும் பாலையின் புழுதியும் சேர வெட்டவெளி திரையிட்டது போலானது. அபூசுப்யான் தன் ஆட்களோடு தப்பித்து ஓடிவிட்டார்.

இது ஹிஜிரி இரண்டு, துல் ஹஜ் மாதத்தில் நடந்தது.

# 21. போருக்குப் பின் மக்கா!

## போருக்குப் பின் மக்கா...!

அபூசுப்யான் சிரியாவிலிருந்து கொண்டு வந்திருந்த வணிகப் பொருள்களை மக்காவில் சேர்த்துவிட்டு மதீனா நோக்கிப் புறப்பட்டார்.

அவருக்கு அபூஜஹ்லின் வேகம் பிடித்தாலும் கோபம் பிடிப்பதில்லை. ஆத்திரக்காரனுக்கு புத்திக் குறைவு என்பதை நடைமுறையில் கண்ட அவர் அபூஜஹ்லைப் போருக்குப் போகாமல் திரும்பச் சொல்லித்தான் செய்தி அனுப்பினார். ஆனால் அபூஜஹ்ல் திரும்பவில்லை. அவருடன் சென்ற பலரும் திரும்பவில்லை; சிலர் திரும்பினர்.

ஸுஹ்ராக் கோத்திரத்தாரும் மேலும் சிலரும் போர் செய்ய விரும்பாமல் மக்காவுக்குத் திரும்பியிருந்தனர். செய்தியறிந்த அபூசுப்யான் மதீனாவை நோக்கிச் சென்றபோது போரில் தோற்ற குறைஷியர்கள் மக்காவை நோக்கி ஓடிவந்து கொண்டிருந்தார்கள்.

அவர்கள் சொன்ன செய்திகள் அபூசுப்யானை அதிர்ச்சிக்குள்ளாக்கின.

அபூஜஹ்ல், உத்பா, ஷைபா, உமையா போன்றோரின் மரணச் செய்தியை விட அவருடைய புதல்வன் ஹன்ஸலாவின் இறப்பும் இன்னொரு புதல்வன் அம்ருடைய கைதும் அவரை வாய்விட்டு அழச் செய்தன.

அபூசுப்யான் மக்காவுக்குத் திரும்பி தன் துன்பங்களை லாத், உஸ்ஸாவிடம் சொல்லச் சென்றால் அப்போது அவருடைய இளவல் நவ்பல் கைது செய்யப்பட்ட செய்தி கிடைத்தது.

கஅபாவுக்குச் செல்லும் வழியில் அபூசுப்யான் தன்னுடைய சிறிய தந்தை அபூலஹபைச் சந்தித்தார். அபூலஹப் பத்ருப் போரைப் பற்றிக் கேட்ட கேள்விகளுக்கு அபூசுப்யான் வாய்விட்டு அழாமல் பதில் சொல்ல பெரும்பாடு பட்டார்.

‘எல்லாம் போச்சு. நம்முடைய கௌரவம், நம் மூதாதையருடைய குலக்கௌரவம், மக்கா நகரின் கௌரவம், நம் தெய்வங்கள் தேவதைகளின் கௌரவம் எல்லாம் போச்சு. நம்முடைய கௌரவம் மிக்க தலைவர்களின் உயிர்களெல்லாம் காணாமல் போய்விட்டன. என்னுடைய மகன் ஹன்ஸலா... என்னுடைய இன்னொரு மகன் அம்ரு... என்னுடைய தம்பி நவ்பல்...’ எனச் சொல்லிய அபூசுப்யான் வார்த்தைகளை முடிக்காமல் தட்டுத்தடுமாறினார்.

அபூலஹப் தலையில் அடித்துக் கொண்டார். ‘எல்லாம் அந்த அப்துல்லாஹ்வின் மகனால் வந்தது’ எனச் சொல்லிய அபூலஹப் அப்போது அங்கிருந்த தன் தம்பி அப்பாஸின் மனைவி உம்முல் பத்லைப் பார்த்தார்.

உம்முல் பத்ல் தங்களுடைய அடிமை அபூராபீயுடன் அமர்ந்து அம்புகளை உருவாக்கிக் கொண்டிருந்தார். வேட்டைக்காரரான அப்பாசின் தேவைக்கு அந்த அம்புகள் பயன்படும்.

கண்களைத் துடைத்துக் கொண்டு அபூசுப்யான் சென்றபின் அபூலஹப் உரத்த குரலில் சொன்னார்: நான் போருக்குப் போயிருந்தால் அப்துல்லாஹ்வின் மகனை குறிவைத்துத் தாக்கிக் கதையை முடித்திருப்பேன்.

இதைக்கேட்ட அபூராபீ ‘எல்லோரும் போருக்குச் சென்றபோது நீங்களோ உங்களுக்குப் பதிலாக உங்களிடம் கடன்பட்ட மக்ஸூமியை அனுப்பினீர்கள். இப்போதோ...’ எனக் கூற கோபமுற்ற அபூலஹப் கொந்தளித்து அபூராபீயை நையப்புடைத்தார். பெருத்த சரீரம் கொண்ட அவர் சிறுத்த உடலைக் கொண்ட அபூராபீயின் மேல் உட்கார்ந்து கொண்டார்.

இக்காட்சியைக் கண்ட உம்முல் பத்ல் அங்கு கிடந்த ஒரு பெருந்தடியை எடுத்து அபூலஹபின் மண்டையில் அடித்தார். இரத்தம் பீரிட்டது; அபூலஹப் மயங்கி விழுந்தார்.

உம்முல் பத்ல் அடித்த அந்த அடி மரண அடியானது. அதுவே அவருடைய உயிரைப் பறிக்கக் காரணமானது.

குறைஷிகளின் முக்கிய தலைவர்களெல்லாம் மரணம் அடைந்ததால் அபூசுப்யான் தலைவர் ஆனார். அவர் குறைஷிகளைக் கூட்டிவைத்து தைரியம் கூறி அடுத்த ஆண்டு ரமளான் மாதம் முஸ்லிம்களைக் கருவறுப்போம் என சபதம் செய்தார்.

‘சிறைப்படுத்தப்பட்டவர்களை மீட்பதில் அவசரம் காட்ட

வேண்டாம். மெதுவாகவே செயல்படுங்கள். பிணைத்தொகையாக நாலாயிரம் திர்ஹங்கள் கேட்கிறார்களாம். குறைத்துக் கொடுத்து மீட்கப் பாருங்கள். ஏதாவது உறவைச் சொல்லி பிணைத்தொகை கொடுக்காமலேயே மீட்கப் பாருங்கள். நான் என்னுடைய மகன் அம்ருவை மீட்கப் போவதில்லை. அவன் அங்கேயே இருப்பான்' என அபூசுப்யான் சொன்னபோது குறைஷிகள் ஆச்சர்யப்பட்டனர்.

ஆமிர் கோத்திரத் தலைவர் ஸுஹைல் மதீனாவில் பிணைத்தொகை கொடுத்து மக்காவுக்கு மீண்டு வந்திருந்தார்.

கவலைகளையும் புலம்பல்களையும் தவிர்த்துவிட்டு மீண்டும் மதீனா நோக்கிப் போர் செய்யத் துடித்துக் கொண்டிருந்த குறைஷிகளின் திட உள்ளங்களைக் கண்டு ஸுஹைல் ஆச்சர்யப்பட்டார்.

அபூசுப்யான் சிரியாவிலிருந்து கொண்டு வந்திருந்த வணிகப் பொருள்களின் லாபம் அனைத்தும் பொதுநிதியாக்கப்பட்டன. அதன் மூலம் ஆயுதங்கள் சேகரிக்கவும் வாகனங்களை வாங்கவும் ஏற்பாடுகள் செய்யப்பட்டன.

பெண்களும் கூட போர் ஏற்பாடுகளில் பங்கு பெற்றனர். அபூசுப்யானின் மனைவிகளில் ஒருத்தியான ஹிந்த் போர்க்களம் செல்லத் தயாரானார். அவருடைய தந்தை உத்பா, சிறிய தந்தை ஷைபா, சகோதரர் வலீத் ஆகியோர் பத்ருவில் களப்பலியாகியிருந்தனர். அவர்களுடைய மரணத்துக்குப் பழிதீர்க்கும்விதமாக ஹிந்த் அண்ணலாரின் சிறிய தந்தை ஹம்ஸாவை அழித்தொழிக்கத் திட்டம் தீட்டியிருந்தார். ஹம்ஸாவை ஹிந்த் குறிவைக்கக் காரணம், அவர்தான் சிறிய தந்தையைக் கொன்றவர்; தந்தைக்கு மரண அடிகொடுத்தவர்.

குறைஷிகள் கவலையை விட்டனர்; கண்ணீரைத் துடைத்தனர். அதே சமயம் அபூசுப்யான் கேட்டுக் கொண்டதற்கிணங்க அவர்கள் சிறைப்பட்டவர்களை மீட்காமல் இருக்கவில்லை. பொற்காசுகளோடும் வெள்ளிக்காசுகளோடும் அவர்கள் மதீனாவுக்கு ஓடினர்.

கடைசிவரை அபூசுப்யான் தன் மகனை மீட்க மதீனா செல்லவில்லை!

புனித யாத்திரை காலத்தில் மக்காவுக்கு வந்த ஒரு முதிய அவ்ஸ் குலத்தவரை அபூசுப்யான் தடுத்து வைத்துக்கொண்டு அதற்குப் பதிலாக தன் மகனின் விடுதலையை வேண்டி நின்றார்.

அண்ணலார் அவ்ஸ்களின் உறவினைப் பேண எண்ணி

அபூசுப்யானின் மகன் அம்ருவை விடுதலை செய்தார்.

அண்ணலாரின் மருமகன் அபுல்ஆஸ் மக்காவுக்கு வந்தவுடன் மதீனாவில் மொழிந்துவந்தபடி தன்னுடைய மனைவி ஸைனபை அண்ணலாரின் இருப்பிடத்துக்கு அனுப்ப ஆவன செய்தார். பிரயாணத்துக்கான ஏற்பாடுகளைச் செய்த அபுல் ஆஸ் ஸைனபுக்குத் துணையாக தன்னுடைய இளவல் கினானாவை அனுப்பிவைத்தார்.

ஸைனபின் புலம் பெயர்தலைத் தெரிந்துகொண்ட குறைஷிகள் வழிமறித்தனர். கினானா வில்லின் நாணை முறுக்கேற்றினார். செய்தியறிந்து ஓடோடிவந்த அபூசுப்யான் ‘நாங்கள் தோல்வியுற்றது உண்மைதான். மக்கள் அனைவரும் நிலைகுலைந்து போயிருக்கும் நிலையில் நீங்கள் புலம் பெயர்வது எங்களைக் கேவலப்படுத்துவதாகும். உங்களைப் பார்த்து மேலும் சிலர் மதீனா செல்ல வழிவகுத்து விடாதீர்கள். நீங்கள் பட்டப்பகலில் பகிரங்கமாகச் செல்ல வேண்டாம். இரவில் மறைவாகச் செல்லுங்கள்’ எனக் கூற கினானா வில்லைத் தோளில் போட்டார்.

மறுநாள் நடுநிசியில் ஸைனப் பயணம் புறப்பட்டார்.

## போருக்குப் பின் மதீனா...!

பத்ருவிலிருந்து வந்த அண்ணலாரை மகளார் ருகையாவின் மரணம் வருத்தமடைய வைத்தது. முஹாஜிர்களில் ஆறுபேரும் அன்ஸாரிகளில் எட்டுப்பேரும் ஷஹீதாகியிருந்தனர்; வீரமரணமடைந்திருந்தனர். மகளாரின் இழப்பை ஒதுக்கிவைத்துவிட்டு பதினான்கு பேரின் இல்லங்களுக்குச் சென்று அண்ணலார் ஆறுதல் கூறினார்.

அண்ணலார் மனைவியை இழந்த தம் மருமகன் உத்மானுக்கு தம்முடைய இன்னொரு மகள் உம்மு குல்தூமை மணம் முடித்துக் கொடுத்தார்.

அதன்பின் அண்ணலார் தம் அருமை மகள் பாத்திமாவுக்கு அலீயை மணம் முடித்துவைத்தார். அலீ பாத்திமா, இருவரும் அண்ணலாரின் தூரத்து உறவினரும் நஜ்ஜாரினத் தோழருமான ஹாரிதா வழங்கிய இல்லத்தில் வசிக்கத் தொடங்கினர்.

திண்ணைத் தோழர்களின் நலன்களைப் பேணுவதில் பாத்திமா பெரும் பங்காற்றினார். அவருடைய திருமணத்துக்குப்பின் அவர்களுடைய நலனில் அண்ணலார் பெரும் அக்கறை எடுத்துக் கொண்டார். அண்ணலாருக்கு உதவியாக ஸபிய்யாவும் ஆயிஷாவும்

இருந்தனர்.

அண்ணலாருக்கும் அண்ணலார் குடும்பத்தாருக்கும் தொண்டு செய்வதை சிலர் பெரும் பேறாகக் கருதினார்கள்.

உமரின் மைத்துனர் உத்மான் இப்னு மஸ்ஊன், அவருடைய மனைவி கவ்லா, ஜைதின் மனைவி உம்மு அய்மன் ஆகியோர் அண்ணலாரின் குடும்ப உறுப்பினர்கள் போலவே செயல்பட்டனர்.

உம்மு ஸுலைம், தன்னுடைய பத்தே வயதான மகன் அனஸை அண்ணலாருக்குப் பணிவிடை செய்ய வழங்கினார். அவரும் அவருடைய இரண்டாம் கணவர் அபூதல்ஹாவும் கூட அண்ணலாரின் குடும்பத்தாருக்கு துணையாக இருந்தனர்.

இப்னு மஸ்ஊத் அண்ணலாருக்கு மிக நெருக்கமாகயிருந்து நிழல் போலவே தொடர்ந்தார்.

அண்ணலாரின் சிறிய தந்தை அப்பாஸ் மக்காவுக்குச் சென்றபின் அவர் தன்னுடைய அடிமை அபூராபியை அன்பளிப்பாக அனுப்பியிருந்தார். இஸ்லாத்தை ஏற்றிருந்த அபூராபியை அண்ணலார் விடுதலை செய்துவிட்டார். பண்புமிக்க அபூராபி அண்ணலாரைப் பாசமிகு தந்தையைப்போல் பாவித்தார்.

கி.பி. 625இல் ஒரு நாள்

ஓர் அன்ஸாரி யூதர்களின் உரையாடலிருந்து கேட்டு வந்த ஒரு கமுக்கமான செய்தியை அண்ணலாரிடம் சொன்னார்.

ஒரு லட்சம் திர்ஹங்கள் மதிப்புள்ள வெள்ளிப் பாளங்களும் வெள்ளியால் செய்த பொருள்களும் நஜ்த் வழியாக ஈராக்குக்குச் செல்கிறது என்பதே அந்த கமுக்கமான செய்தி.

பத்ருப் போருக்குப் பின் குறைஷிகள் மதீனாவை ஒட்டிய பாதைகளிலோ செங்கடலை அடுத்த பாதைகளிலோ செல்வதில்லை. சிரியாப் பயணத்தைக் குறைத்துக்கொண்ட அவர்கள் வேறுவழியில் ஈராக்குக்குப் பயணம் செய்து கொண்டிருந்தனர்.

மதீனாவை மேற்கில் விட்டு ஹிஜாஸ் மாநிலத்தை எட்டிப் பார்க்காமலேயே நஜ்த் வழியாக ஈராக் சென்றனர். பனூ ஆமிர், பனூ ஸுலைம், பனூ கதபான், பனூ அஸத் மக்கள் வாழும் பிரதேசங்களைக் கடந்து காதிஸ்யாவைத் தொட்டு ஈராக் சென்றனர்.

அன்ஸாரித் தோழர் சொன்ன செய்தியைக் கேட்ட அண்ணலார் ஒரு

திட்டம் போட்டு ஜைதை அழைத்து திட்டத்தை நிறைவேற்ற வழிவகைகளைக் கூறி நஜ்த் பெருவெளிக்கு அனுப்பினார். ஜைதுடன் நூறு குதிரை வீரர்கள் சென்றனர்.

ஸப்வானின் தலைமையில் சென்ற வெள்ளிப்பாளங்களைத் தாங்கிய ஒட்டகங்கள் கராதா என்னும் இடத்தில் ஓய்வெடுக்கத் தங்கின.

அங்கு அவர்கள் ஒரு சிறு பாலைவனச் சோலையிலே தங்கினர். அதிகமான ஆட்களும் இல்லை; அதிகமான ஒட்டகங்களும் இல்லை.

அப்போது திடீரென ஜைதின் குதிரைப்படை குறைஷி வணிகர்களைச் சூழ்ந்தது. கழுகளவுப் படைக்குக் குறைஷியர் கோழிக்குஞ்சு!

எதிர்பாராத தாக்குதலில் நிலைகுலைந்த குறைஷிகள் ஒட்டகங்களையும் பொருள்களையும் விட்டுவிட்டு ஓட்டம் பிடித்தனர். ஸப்வானும் சிலரும் தப்பியோட மிகச் சிலர் சிறைப்பிடிக்கப்பட்டனர். ஜைத் வெள்ளிப் பாளங்களோடும் ஒட்டகங்களோடும் கைதான சிலரோடும் மதீனாவுக்கு வந்தார்.

இந்நிகழ்வுக்குப் பின்னர்தான் அண்ணலார் உமரின் அருமைப் புதல்வி ஹப்ஸாவை மணம் முடித்துக் கொண்டார்.

ஹப்ஸாவின் கணவர் குனைஸ் அபிசீனியா சென்றுவந்த முஸ்லிம்களில் ஒருவர். அவர் அபிசீனியா சென்றுவந்தபின்பே ஹம்ஸாவை மணந்திருந்தார். திடீரென குனைஸ் மரணமடைய ஹப்ஸா பதினெட்டு வயதில் கைம்பெண் ஆனார்.

கைம்பெண் ஹப்ஸாவுக்கு தந்தை உமர் உத்மானை, அபூபக்கரை மணமகனாக்க விழைந்தார். இறைவன் அண்ணலாரை மணமகனாக்க உறுதி எடுத்தபின் அவர்களெல்லாம் எப்படி மணமகன் ஆவர்?

அண்ணலார் விருப்பப்படி ஹப்ஸாவின் திருமணம் மிக எளிமையாக நடந்தது.

சௌதா, ஆயிஷா இல்லங்களை அடுத்துள்ள இல்லத்தில் ஹப்ஸா இல்லற வாழ்க்கையைத் தொடங்கினார்.

ஹப்ஸா தன் தந்தையைப் போலவே எழுதப்படிக்கத் தெரிந்தவர். கல்வியறிவில்லாத அந்தக் கறுப்பு நிலாக்காலத்தில் உமரின் குடும்பத்தார் கல்வியறிவு பெற்றவர்களாகத் திகழ்ந்துள்ளனர். உமரின் தங்கை பாத்திமா அன்றொருநாள் திருக்குர்ஆனை ஓதிக் கொண்டிருக்கும் போதுதானே உமர் தன் தங்கை வீட்டில் அத்துமீறிச்

சென்றார்.

## உமைரும் ஸஃப்வானும்

பத்ருப் போரின் வெற்றியைத் தொடர்ந்து கைதான குறைஷியரை மீட்க மதீனாவுக்கு வந்தவர்கள் மனச்சஞ்சலத்தோடு இருந்தாலும் அவர்களின் மன ஓரத்தில் அண்ணலார் நம்மைச் சேர்ந்தவர் என்ற எண்ணம் எழாமல் இருந்திருக்க முடியாது. அதே சமயம் அண்ணலாரிடம் பிணைத் தொகையைக் கொடுத்து குரோதத்தோடு பேசியவர்களும் உண்டு.

ஜுமாஹ் கோத்திரத்தைச் சேர்ந்த உபை அவர்களில் ஒருவர். அவருடைய சகோதரர் உமையாவும் நண்பர் உக்பாவும் பத்ருப் போரில் உயிரிழந்திருந்தனர். அவருடைய மகனை மீட்க வந்த உபை ‘மக்காவில் பிறந்த நீர், மக்கா மக்களையே கொன்றொழித்துள்ளீர். என்னிடம் அவ்த் எனும் பெயரில் ஒரு குதிரையுள்ளது. வலிமைமிக்க அதன் மேலேறிவந்து உம்மை நான் ஒருநாள் கொல்வேன்’ என்றார்.

‘அல்லாஹ்வின் நாட்டமிருப்பின் நான் உம்மைக் கொல்வேன்’ என்றார் அண்ணலார்.

உபை மட்டுமல்ல, உபையின் குடும்பமே அண்ணலாரை அழித்தொழிக்கத் திட்டம் போட்டது. உபையின் சகோதரர்களின் புதல்வர்களான ஸப்வானும் உமைரும் கஅபாவில் அமர்ந்த வண்ணம் அண்ணலாரைப் பலிவாங்கத் துடித்துக் கொண்டிருந்தனர்.

ஜுமாஹ் கோத்திரத் தலைவராகும் வாய்ப்பை ஸப்வான் பெற்றிருந்தார். அவருடைய ஒன்றுவிட்ட சகோதரர்தான் உமைர். உமைர் வறுமையில் வாடினார். அவருடைய மகன் மதீனாவில் சிறைப்பட்டிருந்தார். மகனை மீட்கப் பொருளில்லாத உமைர் அதிகமான மன உளைச்சலோடு காணப்பட்டார்.

‘என்னுடைய கடன்களும் என் குடும்பத்தைக் கவனிக்க ஆளில்லையே என்ற கவலையும் இல்லையானால் நான் அந்த முஹம்மதைக் கொன்றழித்துவிடுவேன்’ என உமைர் ஸப்வானிடம் கூறினார்.

‘அருமைச் சகோதரரே! உம்முடைய கடன்களை நானே அடைப்பேன். உம்முடைய குடும்பத்தை நானே காப்பேன். உம்முடைய மகனை மீட்கப் போவதாகச் சொல்லி மதீனாவுக்குப் புறப்படும். அங்கு சென்று முஹம்மதைக் கொன்றழித்துவிடும்’ என்ற ஸப்வான் நஞ்சு

தோய்ந்த வாளைக் கொடுத்து மதீனாவுக்கு அனுப்பினார்.

மதீனாவை அடைந்த உமைர் அண்ணலாரைத் தேடிக் கொண்டு மஸ்ஜித் நபவிக்கு வந்து சேர்ந்தார். அங்கிருந்து உமர் உமைரிடம் அவர் மக்காவிலிருந்து வந்த நோக்கம் என்னவென்பதைக் கேட்டார். தன்னுடைய மகனை மீட்பதற்காக வந்துள்ளதாகக் கூறிய உமைர் அண்ணலார் அமர்ந்திருந்த இடம் நோக்கிச் சென்றார்.

மகனை மீட்க வந்தவர் வாளோடு வந்திருக்கிறாரே என சந்தேகப்பட்ட உமர் உமைரைத் தொடர்ந்து சென்றார். உமருடன் அங்கிருந்த தோழர்களும் சேர்ந்து சென்றனர். அண்ணலாருக்கு முகமன் கூறிய உமைரிடம் அவர் வந்த காரணத்தைக் கூறும்படிக் கேட்கப்பட்டது. மகனை மீட்க வந்தவராகக் கூறிய உமைரின் பார்வையில் காக்கையும் கழுகும் மாறி மாறித் தென்பட்டன.

‘உமைர்! நீர் வந்ததோ மகனை மீட்க, உடன் கொண்டுவந்திருப்பதோ நஞ்சு தோய்ந்த வாள்! வந்த காரணத்தை மறைக்காமல் கூறும்’ என அண்ணலார் வினவினார்.

‘எனக்குத் துணை யாருமில்லை. என் துணையாக இந்த வாள் இருக்கக்கூடாதா? எங்களுடைய வாள்கள் எல்லாமே முனை மழுங்கிப் போய்விட்டனவே!’ என உமைர் விரக்தியுடன் கூறினார்.

‘நீர் வந்த காரணத்தை நான் இப்போது உமக்குக் கூறுகிறேன்’ என்ற அண்ணலார், ஸப்வானோடு உமைர் மக்காவில் பேசிக் கொண்டிருந்ததையும் உமைர் மதீனாவுக்கு வந்திருக்கும் நோக்கத்தையும் கூறினார்.

உமர் உமைரிடமிருந்த வாளைப் பறித்து அவரைத் தம் பலம்மிக்க கையால் வளைத்துப் பிடித்தார்.

‘ஸப்வானும் நானும் கமுக்கமாக தனித்திருந்தே பேசினோம். இருவரும் யாரிடமும் சொல்லக் கூடாதெனவும் சத்தியம் செய்து கொண்டோம். இது எப்படி உங்களுக்குத் தெரிந்தது?’ என உமைர் கேட்டார். அவர் கண்களில் பீதி தெரிந்தது.

‘உமர், நீர் உமைரை எதுவும் செய்துவிட வேண்டாம். அவரை விட்டுவிடும். அவரை அழைத்துச் சென்று அவருடைய மகனைக் காட்டும். அவர் விருப்பப்பட்டால் அவரிடம் இஸ்லாத்தைப் பற்றிக் கூறும். திருக்குர்ஆனை ஓதிக்காட்டச் செய்யும்’ என அண்ணலார் கூறினார்.

உமைரோடு சென்ற உமர் அண்ணலார் சொன்னதைச் செய்தார். உமைர் முஸ்லிமாக மாற அதிகநாள் செல்லவில்லை.

மக்கா சென்ற உமைர் ஸப்வானிடம் நடந்ததைக் கூற, 'துரோகி... துரோகி' என ஒன்றுவிட்ட சகோதரர் குதித்தார்; உறவே இல்லையென ஒதுங்கிக் கொண்டார்.

'வாழத் தெரியாத கோழை' என உமைர் கருதப்பட்டாலும் வாழ்ந்தும் வாழ்ந்து காட்டியும் முன்மாதிரி மனிதராகிப் போனார்.

அவர் துணிந்து மக்காவிலேயே பலருக்கு இஸ்லாத்தைப் பற்றிச் சொன்னார். பின்னர் அவர் முஹாஜிராக மதீனாவுக்குப் பயணம் புறப்பட்டுச் சென்றார்.

## மூன்று தாக்குதல்கள்!

பத்ருப் போருக்குப்பின் மதீனாவைச் சூழ்ந்திருந்த கோத்திரங்கள் முஸ்லிம்களோடு இணைந்து வாழ உடன்படிக்கைகள் செய்து கொண்டன. சிரியா சென்ற வாசனைத் திரவிய சாலையின் வடக்குப் பகுதியிலுள்ள கோத்திரங்களும் அண்ணலாரோடு கை கோர்த்தன.

பனூ முஸைனா, பனூ ஜுஹைனா, பனூ குதாஅ, பனூ ஜுத்ஆம், பனூ பலீ ஆகிய கோத்திரங்கள் செங்கடலோரப் பாதையில் அதிகமாக இருந்தனர். முந்தைய கால குறைஷிகள் அகாபா வளைகுடா வரையுள்ள இனக்குழுக்களோடு உறவாடியும் தங்கியுமே தம் வர்த்தகத்தை வெற்றிகரமாக நடத்திவந்தனர். பத்ருப் போருக்குப் பின் சிரியாப் பாதையிலுள்ள இனக்குழுக்கள் அண்ணலாரோடு இணைய குறைஷிகளுக்கு அச்சம், பயம், பீதி வந்து வாணிபப் பாதையை மாற்ற வேண்டியதானது.

நஜ்த் பிரதேசம் வழியாகச் செல்வது தூரம் அதிகமானது மட்டுமல்ல, தொல்லை மிக்கதும் கூட. வாசனைத் திரவிய சாலையில் ஆங்காங்கு கிணறுகளும் சோலைகளும் இருந்தன. நஜ்த் பாதையில் தண்ணீருக்காகவே சில ஒட்டகங்களை ஒதுக்க வேண்டியிருந்தது.

வெள்ளிப்பாளக் கொள்ளைக்குப்பின் குறைஷியர்கள் நஜ்த் பிரதேசத்திலிருந்த ஸுலைம், கத்தபான் இனக்குழுக்களுடன் நேசத்தோடு உறவு கொண்டாடினர். மேலும் அவர்களை முஸ்லிம்களுக்கு எதிராக செயல்படவும் தூண்டினர்.

இத்தகைய தூண்டுதல்கள் மூலம் ஸுலைம்கள் இருமுறையும்

கத்தபான்கள் ஒருமுறையும் முஸ்லிம்களோடு மோதத் தயாராயினர். மூன்று மோதல்களையும் முன்பே அறிந்திருந்த அண்ணலார் அவர்கள் மோதத் தயாரான இடத்துக்கு முன்னரே முஸ்லிம்களை அனுப்பியதால் மோதல்கள் நிகழாமல் போயின.

தப்பியோடிய அவர்கள் தம் பிரதேசங்களுக்குள் அடங்கிக்கிடக்காமல் மோதலைத் தொடரவே விரும்பினர். அதற்கான திட்டங்களை வகுத்தனர். குறைஷிகளும் அவர்களைத் தொடர்ந்து தூண்டிக் கொண்டே இருந்தனர்.

அண்ணலார் வரம்பு மீறிப் போய்க்கொண்டிருந்த பழங்குடி மக்களின் பிரதேசத்துக்குள்ளேயே நுழைந்து போரிட ஆயத்தமானார்.

அப்போது தஅலபா, முஹாரிப் கிளைகள் முஸ்லிம்களோடு மோதவரும் செய்தி அண்ணலாருக்குக் கிடைத்தது. அவர்கள் நஜ்தின் வடபுறமிருந்த குன்றுகளிடையே பதுங்கியபடி போர் செய்ய ஆயத்தங்கள் செய்துகொண்டிருந்தனர். அண்ணலாரே தலைமைதாங்கி நேரடியாக அவர்களை நோக்கிப் படையை நடத்திச் சென்றார். அண்ணலாருக்கு அண்மையில் முஸ்லிமான தஅலபா கிளையைச் சேர்ந்த ஒருவர் வழிகாட்டினார்.

முஸ்லிம்கள் முஹாரிப்களைத் தேடி குன்றுகளின் மேல் ஏறினர். அப்போது பெருமழை பெய்தது. அண்ணலாரும் தோழர்களும் முழுமையாக நனைந்தனர்.

அண்ணலார் தம் அங்கிகளைக் கழற்றி ஒரு மரத்தின் மேல் காயப்போட்டுக் கொண்டிருந்தபோது முஹாரிப்களின் தலைவர் தூத்தூர் வாளை நீட்டியபடி அண்ணலாரின் முன் நின்றார்.

‘படையின் முன்தான் தளபதிகள் செல்வர்’, நீரோ பின்னால் நிற்கிறீர்! உம்மை இப்போது காப்பாற்றுபவர் யார்?’ என தூத்தூர் கேட்டார்.

‘அல்லாஹ்’ என்றார் அண்ணலார். அப்போது கண்களை மறைக்கும் அளவுக்குத் தொடர்மழை பொழிந்தது. அப்போது சூரியனே வெடித்துச் சிதறியது போன்ற மின்வெட்டு! யாரோ ஒருவர் தன்னைப் பிடித்துப் பின்னால் தள்ளுவதுபோல் உணர்ந்த தூத்தூர் தடுக்கிவிழுந்தார். வாள் கீழே விழ என்ன நடக்கிறது எனத் தெரியாமல் கண்களைக் கசக்கினார். கண்களில் எரிச்சல், கண்களை மூடி மூடித் திறந்தார். கண்களிலிருந்து ஆவிபறந்தது.

மீண்டும் கண்களைக் கசக்கியபடி அண்ணலாரைப் பார்த்த தூத்தூர்

'என்னைக் கொன்றுவிடாதீர், என்னைக் கொன்றுவிடாதீர்' என அலறினார்.

அண்ணலாரின் கையில் கூர்வாள் மின்னியது. 'முஹாரிப்பே! இப்போது உம்மைக் காப்பவர் யார்?' என அண்ணலார் கேட்டார்.

'யாருமில்லை!' என்றார் தூத்தூர்.

'இப்போது உம்மைக் காப்பவனும் அல்லாஹ்தான்!' என்ற அண்ணலார் வாளை தூத்தூரிடம் கொடுத்தார்.

வாளைப் பெற்ற தூத்தூர் அண்ணலாருக்கு நன்றி கூறியபோது அண்ணலார் அவரை அல்லாஹ்வுக்கு நன்றி கூறச் சொன்னார்.

அப்போது மழை ஓய்ந்திருந்தது. முஹாரிப்களைத் தேடிச் சென்ற முஸ்லிம்கள் குன்றுகளிலிருந்து திரும்பிவந்து கொண்டிருந்தனர்.

தூத்தூர் அண்ணலாரிடம் இஸ்லாத்தைப் பற்றிய செய்திகளைக் கேட்டுத் தெரிந்து கொண்டிருந்தார்.

நஜ்திலிருந்து மதீனா வந்த அண்ணலாருக்கு கவிஞன் கஅப் இப்னு அஷ்ரப் பற்றிய செய்தி கிடைத்தது.

மக்காவிலிருந்தபடி குறைஷிகளோடு உறவாடிக் கொண்டிருந்த கஅப் ஏதோ தீய எண்ணத்தோடு மதீனாவின் பனூ நதீர்களின் கோட்டைக்கு வந்திருந்தார்.

தாயி கோத்திரத்து அரபிக்கும் பனூ நதீர் யூதப் பெண்ணுக்கும் பிறந்த கஅப் இப்னு அஷ்ரப் தன்னை பனூ நதீர் என்றே அடையாளப் படுத்திக் கொண்டார். செல்வமும், செல்வாக்கும் பெற்றிருந்த கஅபுக்கு கவிதை கைகட்டிச் சேவகம் புரிந்தது.

பத்ருப் போருக்குப்பின் மக்கா சென்ற கஅப், உத்பா, ஷைபா, அபூஜஹ்ல் ஆகியோருக்கு இரங்கற்பா பாடினார். கஅபாவில் ராத்திரிகளை கவிராத்திரிகள் ஆக்கினார். எவர் பாடலையும்விட இவர் பாடல்கள் சொல்லம்புகள்! வில்லம்புகள் அம்புறாத் தூணியில் இருக்கும் அளவுக்குத்தான் பாயும். இவருடைய வாய்த் தூணியிலிருந்து எடுத்து எறியப்படும் அம்புகளோ கணக்கற்றுப் பாய்ந்து கொண்டேயிருக்கும்.

யூத அணுக்கள் அஷ்ரபின் மகனை ஆக்கிரமித்திருந்ததால் அவர் முஸ்லிம்களுக்கு எதிராக குறைஷிகள் செயல்பட கொம்பு சீவி விட்டார்.

மக்காவிலிருந்தபடி அண்ணலார்மீது வன்மங்காட்டிய கஅப் பனூ நதீர்களின் கோட்டைக்கு வந்தது முஸ்லிம்களின் கோட்டையை

நோக்கிச் சொல்லம்புகளை வீசவே!

சொல்லம்புகளை வீசினால் வீசட்டும், ஆனால் பனூ நதீர்களை உசுப்பிவிட்டு வில்லம்புகளை வீசச் செய்யும் வேலைகளைச் செய்து கொண்டிருந்தார்.

‘கஅப் கவிதை பாடுவதைப் பற்றி நான் கவலைப்படவில்லை. ஆனால் அவர் கயமையான காரியங்கள் புரிகிறார். அவை எம் இயக்கத்துக்கு எதிரானவை!’ என அண்ணலார் மொழிய முஹம்மது இப்னு மஸ்லமா எனும் அன்ஸாரித் தோழர் ‘கஅபின் கதையை முடித்துவிடலாம் தானே!’ என அண்ணலாரிடம் கேட்டார்.

இப்னு மஸ்லமா ஸஅத் இப்னு முஆதின் கோத்திரத்தார். அண்ணலார் ஸஅத்தைக்கண்டு பேசிட இப்னு மஸ்லமாவைப் பணித்தார்.

இப்னு மஸ்லமா, இப்னு முஆத் ஆகிய இருவருடன் மேலும் நான்குபேர் சேர்ந்து கஅபின் கதையை முடித்தனர்.

## கோட்டைவிட்ட கைனுகா யூதர்கள்!

பத்ருப் போரில் கிடைத்த வெற்றியால் முஸ்லிம்கள் மகிழ்ச்சியோடு இருக்க முடியவில்லை. எழுபது குறைஷிகளின் மரணங்கள் எழுபது குடும்பங்களை மட்டுமா இழப்புக்கு ஆளாக்கும், குறைந்தது எழுநூறுபேரையாவது பாதிக்கக்கூடிய இழப்பு, குறைஷிகளைப் பொறுத்தவரை ஏழாயிரம் பேரையல்ல, மக்கா குறைஷிகள் அனைவரையும் பாதித்தது. அதன் எதிர்வினை முஸ்லிம்களை எப்போது வேண்டுமானாலும் சுடலாம். குலம், கோத்திரம், குடும்பச் சண்டைகள் என்றாலே தலைமுறை தலைமுறையாக கொதிநிலை குறையாமல் சண்டைபோட்டுக் கொள்ளும் அரபுகள் கொள்கை, கோட்பாடுகளுக்காகப் போடும் சண்டையைக் குறைவாக மதிப்பிடுவார்களா, என்ன?

மூதாதையரின் வழிமுறைகளை முழுதுமாக மாற்றிவிடத் துடிக்கும் ஏகத்துவக்காரர்களை இனிமேலும் விட்டுவைத்தால் பாரம்பர்யம் அழிந்துவிடும். யத்ரிபில் ஆட்சியாளராக மாறியிருக்கும் முஸ்லிம்கள் பெரும்படை திரட்டி மக்காவுக்குள் நுழைந்தால் கஅபாவிலுள்ள சிலைகள் தகர்க்கப்பட்டு பழைய கலாச்சாரம் குழிதோண்டி புதைக்கப்படும்.

புதிய கலாச்சாரக்காரர்கள் தம்மைப் புரட்டிப்போடும் முன்னர்

குறைஷிகள் அவர்களைப் பிணமாக்கிப் புரட்டிப் போடத் திட்டமிட்டனர்.

குறைஷிகள்தான் இறைநிராகரிப்பாளர்கள்; இஸ்லாத்துக்கு எதிரானவர்கள். யூதர்களோ இறைவேதக்காரர்கள், தூதுத்துவம், மறுமையை நம்புபவர்கள்! இவர்கள் இஸ்லாத்தோடு உறவு பாராட்டாமல் இறைநிராகரிப்பாளர்களான குறைஷிகளோடு உறவாடக் காரணம் என்ன?

புதிய மார்க்கத்தினர் நாளடைவில் ஒன்றுமில்லாமல் போய்விடுவர் எனக் கருதி தற்காலிக உறவை வளர்த்த யூதர்கள் முஸ்லிம்கள் வளர்வதைக் கண்டு வழக்கம்போல் கீழறுப்பு வேலைகளைத் தொடங்கினர். புதிய மார்க்கத்தை வளரவிட்டால் தங்களுடைய யூதமார்க்கம் அழிவினைச் சந்திக்கும் என நம்பிய யூதர்கள் இறைமறுப்பாளர்களான குறைஷிகளோடு கைகோர்த்தார்கள்.

பனூநளீர்களின் தலைவர்களில் ஒருவரும் கவிஞருமான கஅப்பின் அஷ்ரப் மக்கா குறைஷிகளை முஸ்லிம்களுக்கு எதிராகத் தூண்டிவிட்டார். கஅபின் கயமைத்தனங்கள் பற்றிய செய்திகள் மதீனாவை அடைந்தும் அண்ணலார் பொறுமையுடன் செயல்பட்டார்.

பனூநளீர்கள் மதீனாவின் புறநகர்ப் பகுதியில் வாழ்ந்தனர். பனூ கைனுகா கூட்டத்தினர் மதீனாவுக்கு அருகில் தென்புறத்தில் வாழ்ந்தனர். இவர்கள் அவ்ஸ்களின் கூட்டுறவாளர்கள்.

பனூ கைனுகா யூதர்களின் தலைவர்கள் வஞ்சகர்களின் தலைவரும் கஸ்ரஜ் கோத்திர முதல்வருமான இப்னு உபையின் நேசமிகு நண்பர்கள்.

பனூகைனுகா யூதர்கள் பத்ருப் போருக்குப்பின் எவ்வண்ணம் உள்ளனர் எனப் பார்த்து வர அண்ணலார் திட்டமிட்டார். அதற்குக் காரணம் அண்மையில் இறங்கிய திருக்குர்ஆன் வசனங்கள்.

> ‘(உடன்படிக்கை செய்து கொண்டு) ஏதாவது ஒரு கூட்டத்தினர் உம்மிடம் நம்பிக்கைத் துரோகமாக நடந்து கொள்வார்களோ என்று நீர் அஞ்சினால் (அவர்களின் உடன் படிக்கையை) வெளிப்படையாக அவர்களிடமே எறிந்துவிடும். திண்ணமாக, அல்லாஹ் நம்பிக்கைத் துரோகம் செய்பவர்களை நேசிப்பதில்லை.’

(திருக்குர்ஆன் 8: 58)

பனூ கைனுகாவின் கடைத்தெருவுக்குச் சென்ற அண்ணலார்

எதிர்பார்த்ததற்கு மாறாக அவர்களின் பேச்சும் செயல்களும் காணப்பட்டன. பத்ருப் போர் அவர்களிடையே அற்புதத்தைத் தோற்றுவிக்கவில்லை; அற்பத்தனத்தை தோற்றுவித்திருந்தது.

‘பத்ருப் போரில் பெற்ற வெற்றியால் எதனை நீர் சாதித்தீர்? போரில் கிடைத்த பொருள்களும் பிணைத் தொகைகளுமே உமக்குக் கிடைத்தவை. அதனால் மதிமயங்கிப் போகாதீர். அது போரைப் பற்றிய அகரம் தெரியாதவர்களோடு நடத்தப்பட்ட தெருச் சண்டை. நீர் எங்களோடு மோதிப் பார்த்தால் போர் இலக்கணத்தின் சிகரத்தைக் காட்டுவோம்’ என பனூ கைனுகாக்கள் கூறியபோது அண்ணலார் ஆத்திரப்படவில்லை, அமைதியோடு திரும்பிச் சென்றார்.

பனூகைனுகாக்கள் பொடிவைத்தே பேசுவர்; காரணம், அவர்கள் பொற்கொல்லர்கள்.

விநாச காலம் வரும்போது விபரீத புத்தி வந்தே தீரும்!

பனூ கைனுகாக்கள் முஸ்லிம்களோடு முரண்பட்டது பகிரங்கமாகவே வெளிப்பட்டது. அவர்கள் முஸ்லிம்கள் மேல் கொண்டிருந்த மதிப்பச்சம் இல்லாமல் போனது.

பனூ கைனுகாக்களின் கடைவீதிக்கு வந்து யூதப் பொற்கொல்லரிடம் நகையைப் பழுது பார்க்கக் கொடுத்த ஒரு முஸ்லிம் பெண் கேவலமாக அவமதிக்கப்பட்டார். முஸ்லிம் பெண்ணைக் கேவலமாகப் பேசிய யூதப் பொற்கொல்லரை ஓர் அன்ஸாரித் தோழர் கண்டிக்க, மூண்டது சண்டை. யூதர் அடிக்க, முஸ்லிமும் அடிக்க, கூடியது கூட்டம். முஸ்லிமின் கைக்கு வந்த சுத்தியல் யூதரைக் கொன்றது. அதே சுத்தியல் யூதர்களின் கைகளில் மாறி மாறிச் சென்று முஸ்லிமைக் கொன்றது.

அது யூதர்களின் கடைத்தெரு என்பதால் யூதர்கள் பெருவாரியாகக் கூடி நின்றனர். கொலைச் செய்தி மதீனா நகருக்குள் செல்ல முஸ்லிம்களின் அணி யூதக் கடைத்தெருவுக்கு வந்தது.

இரு தரப்பிலும் ரத்தம் சிந்தப்பட்டது. இந்நிலையில் உடன்படிக்கையாளரான பனூ கைனுகாக்கள் அண்ணலாரை அணுகியிருக்க வேண்டும். ஆனால் அவர்கள் அண்ணலாரை அணுகவில்லை. அவ்வாறு அணுகுவதை அவர்கள் தவிர்த்தனர்.

அவர்கள் அமைதியைப் பேண விரும்பவில்லை. அவர்கள் அடிதடிக்கு அச்சாரம் கொடுக்க ஆயத்தமானார்கள். அதற்காக அவர்கள் புதிய உடன்படிக்கையைப் புறந்தள்ளி பழைய உடன்படிக்கையாளரை

அணுகினார்கள்.

அவர்கள் இப்னு உபையையும் இப்னு ஸாமித்தையும் அணுகி முஸ்லிம்களை அழித்தொழிக்க ஆளுதவி கேட்டார்கள்.

பழைய மார்க்கத்தில் ஒரு காலும் புதிய மார்க்கத்தில் ஒரு காலும் வைத்திருந்த நயவஞ்சகர்கள் தங்களுக்கு உதவ முன்வந்தால் முஸ்லிம்களைப் பூண்டோடு அழித்துவிடலாம் என்ற பனூ கைனுகாக்கள் தற்காலிக ஏற்பாடாக கோட்டைக்குள் புகுந்து பாதுகாப்புத் தேடிக் கொண்டனர்.

தேவையான உணவுப் பொருள்களோடும் பொன், வெள்ளிப் பொருள்களோடும் பதுங்கிக் கொண்ட பனூ கைனுகாக்களுக்கு ஆளுதவி கிடைத்துவிடுமா?

யூதர்கள் மதீனாவை பழைய யத்ரிப் என எண்ணியே மோதலுக்குத் தயாரானார்கள். இன்று முஸ்லிம்களாகியிருந்தாலும் பழைய அவ்ஸ் கஸ்ரஜ்களாக இருப்பார்கள் என நினைத்தே இப்னு உபை இப்னு ஸாமித் இருவரின் உதவியையும் கேட்டார்கள்.

யத்ரிப் மாறியிருந்தது; அது மதீனாவாக மாறியிருந்தது. அவ்ஸ் கஸ்ரஜ் மாறியிருந்தனர்; அவர்கள் முஸ்லிம்களாக மாறியிருந்தனர்.

அரபு இனமா, யூத இனமா என வரும்போது இப்னு உபையும் இப்னு ஸாமித்தும் யார் பக்கம் சேர்வார்கள்! அரபுக்கள் பக்கம் தானே அவர்கள் நிற்பார்கள்!

அண்ணலார் வருகைக்கு முன்னிருந்த அவ்ஸ் கஸ்ரஜ் யூத ஒப்பந்தங்கள் மதிப்பிழந்திருக்கும்போது பழைய ஒப்பந்தப்படி உதவி செய்ய முஸ்லிம்களாக இருந்தாலும் தம் உடன் பிறப்புகளுக்கு எதிராகப் போரிட பழைய யத்ரிப் தலைவர்கள் பைத்தியகாரர்களா?

இரு ஆண்டுகளுக்கு முன்னிருந்த நிலை வேறு, பின்னுள்ள நிலை வேறு. இஸ்லாம் வலுப்பெற்று நிற்கும் நிலையில் யூதர்களுக்காகப் பரிந்து பேசினாலோ, கச்சை கட்டினாலோ தங்களுக்கு அழிமானந்தான் என எண்ணிய பழைய யத்ரிப் தலைவர்கள் நடு நிலைமை வகித்தார்கள்.

கேட்ட, படை உதவி கிடைக்காத பனூ கைனுகாக்கள் கோட்டைக்குள் இருந்தபடி தவித்தார்கள். அவர்களின் பெண்கள் போட்ட கூச்சலும் பிள்ளைகள் அழுத அழுகையும் கோட்டைச் செங்கற்களை அசைத்தன.

பனூ கைனுகாக்களின் உள்ளங்கள் அசைய இரு கிழமைகள்

பிடித்தன.

> ‘போரில் அவர்களை நீர் சந்தித்தால் அவர்களைச் சின்னாபின்னமாய்ச் சிதற அடித்து அவர்களுக்குப் பின் வருவோரைத் திகிலடையச் செய்திட வேண்டும். (உடன்படிக்கையை மீறுவதால் ஏற்படும் தீய கதியினைக் கண்டு) அவர்கள் படிப்பினை பெறக்கூடும்.’

(திருக்குர்ஆன் 8: 57)

முஸ்லிம்களின் முற்றுகையை நீக்கும் படியும் பனூ கைனுகாக்கள் சரணடைவர் எனவும் பழைய யத்ரிப் தலைவர்கள் அண்ணலாரிடம் கூறினர்.

> ‘(நபியே!) பகைவர்கள் சமாதானத்தின் பக்கம் சாய்ந்தால், நீரும் அதற்குத் தயாராகிவிடும். இன்னும் அல்லாஹ்வையே முழுவதும் சார்ந்திருப்பீராக!’

(திருக்குர்ஆன் 8: 61)

அண்ணலார் சமாதானம் செய்துகொள்ள சம்மதித்தார். இப்னு உபையும் இப்னு ஸாமித்தும் சமாதான தூதுவர்களாக செயல்பட்டார்கள்.

பனூ கைனுகாக்களின் கயமையும் கபடமும் நாடறிந்தது. அண்ணலாரிடம் கைனுக்கா ராபியாய்த் திகழ்ந்து முஸ்லிமான அப்துல்லாஹ் இப்னு ஸலாம் மிக விளக்கமாகவே கைனுகாக்களைப் பற்றிச் சொல்லியிருந்தார்.

பனூ கைனுகாக்களின் தூதர்களிடம் அண்ணலார் ‘உடன்படிக்கையை மீறுபவர்களுக்கு தவ்ராத் வேதம் என்ன தண்டனையை வழங்கும்படிச் சொல்லியுள்ளதோ, அதைத் தாராளமாக வழங்குங்கள்’ என்றார்.

தவ்ராத் கொண்டுவரப்பட்டது, அதன் பக்கங்கள் விரிக்கப்பட்டன.

‘உடன்படிக்கையை முறிப்பவர்களில் போர் வீரர்களின் தலைகள் கொய்யப்படவேண்டும். பொதுமக்கள் தம் இருப்பிடங்களை விட்டும் உடைமைகளை விட்டும் நாடு கடத்தப்படவேண்டும்!’

இப்னு உபையே வேதவாக்கைப் படித்தார். வேதவாக்கைக் கேட்ட அண்ணலார், ‘சிரச்சேதம் வேண்டாம். யாவரையும் நாடு

கடத்திவிடலாம்’ என்றார். இப்னு ஸாமித் பனூ கைனுகா யூதர்களை கோட்டையிலிருந்து அப்புறப்படுத்தினார்.

அரபகத்தின் வடமேற்கிலிருந்த வாதி அல்ஃகுராஅ எனுமிடத்தில் வாழ்ந்த யூதர்களிடம் அடைக்கலம் தேடிய பனூ கைனுகாக்கள் பின்னர் சிரியாவின் எல்லையில் குடியேறினர்.

கேடுகள் செய்வதும் அவற்றின் மூலம் கேவலம் தேடுவதும் பின்னர் கழுத்தில் கை வைக்கப்பட்டபின் நாட்டைவிட்டு ஓடுவதும் யூதர்களுக்கு யுகங்கள் தோறும் கிடைத்துக் கொண்டிருக்கும் கேடு கெட்ட வாய்ப்பு!

## 22. உஹது மலைப்போர்!

### உஹதை நோக்கி...

மக்காவிலிருந்து அண்ணலாருக்கு ஒரு கமுக்கமான செய்தி வந்திருந்தது. அதை அனுப்பியவர் அண்ணலாரின் சிறிய தந்தை அப்பாஸ்.

மூவாயிரம் பேர் கொண்ட மக்கத்துப்படை மதீனாவை நோக்கிப் புறப்படத் தயாராகி வருவதாக அச்செய்தி சொன்னது. அப்படையில் படைவீரர் தொகையளவுக்கு ஒட்டகங்களும் பொருள்களையும் பெண்களின் சிவிகைகளையும் தூக்கிச் செல்ல தனியாக ஒட்டகங்களும் அணிவகுத்து நிற்பதாகச் செய்தி சொன்னது. எழுநூறு கவசமணிந்தவர்களும் இருநூறு குதிரை வீரர்களும் மக்கத்துப் படையில் இடம் பெற்றிருப்பதாகவும் செய்தியில் குறிப்பிடப்பட்டிருந்தது.

கடிதம் மதீனாவை அடைந்தபோது மக்காவிலிருந்து குறைஷிப் படை புறப்பட்டிருந்தது.

படைத்தளபதியாக அபூசுப்யான் முன்வர குறைஷித் தலைவர்கள் பலரும் பின்தொடர்ந்து வந்தனர். அவர்களோடு அணி அணியாக மூவாயிரம் குறைஷிப் படையினர். பாலைவனப் பெருவெளியில் மனித ஆறு பெருக்கெடுத்தோடியது.

அபூசுப்யான் தன் முதல் மனைவியோடும் இரண்டாவது மனைவி ஹிந்துவோடும், ஸப்வானும் இரு மனைவியரோடு, மற்ற தலைவர்கள் தம் ஒவ்வொரு மனைவியோடு

முத்இம்பின் மகன் ஜுபைர் மக்காவில் தங்கிக்கொண்டு தனக்குப் பதிலாக வஹ்ஷீ எனும் அபிசீனிய அடிமையை அனுப்பியிருந்தார். ஈட்டியெறிவதில் வல்லமை பெற்றிருந்த வஹ்ஷியிடம் ஜுபைர் அண்ணலாரின் சிறிய தந்தை ஹம்ஸாவைக் கொன்றிடக் கூறியிருந்தார். அதைப்போலவே அபூசுப்யான் மனைவி ஹிந்த் ஹம்ஸாவையே கொல்லும்படிக் கூறியிருந்தார்.

மக்காவிலிருந்து புறப்பட்ட குறைஷிப் பெரும்படை செங்கடல்

ஓரமாகப் பயணம் செய்து வாசனைத் திரவிய பாதையைக் கிழக்கில் தள்ளி வடக்கு நோக்கிச் சென்றது. அப்படை ஓய்வெடுத்துத் தங்கிய இடத்துக்கும் மதீனாவுக்கும் கிழக்கு மேற்கில் ஐந்து கல் தொலைவிருக்கும். பின், வட கிழக்குப் புறமாக சில கற்கள் சென்று மதீனாவை தெற்கில் விட்டு வடக்கில் உள்ள உஹது மலையடிவாரத்தை அடைந்தது. அங்கேயே அப்படை பாசறை அமைத்துக் கொண்டது.

மதீனாவுக்குத் தெற்கில் நின்றுதான் குறைஷிப்படை பாசறை அமைத்திருக்க வேண்டும். ஏனோ அவர்கள் வடக்குத் திசைக்கு வந்து பாசறை அமைத்தனர். போர்த்தந்திரம்!

அண்ணலாரின் ஒற்றர்படை உஹத் மலையடிவாரச் செய்திகளை சொல்லியது. படைபலம், வாகன பலம், ஆயுத பலம் ஆகியவை அண்ணலாரை அதிசயப்பட வைத்தன.

குறைஷிகளோடு தகீப், கினானா போன்ற கோத்திரப் படைவீரர்களும் காணப்பட்டனர். பாசறையமைத்த படைவீரர்கள் உடனேயே போர் தொடுக்கத் தயாராகவில்லை. உணவு சமைக்கத் தயாரானார்கள். குதிரைகளையும் ஒட்டகங்களையும் தரிப்பிடத்தில் கட்டுபவர்களாகத் தெரியவில்லை. மலையடிவாரத்திலிருந்த பயிர் பச்சைகளில் மேயவிட்டார்கள்.

ஒற்றர்களின் செய்திகளால் எச்சரிக்கையடைந்த அண்ணலார் முஸ்லிம் சகோதரர்களைப் போருக்கு ஆயத்தப்படுத்துவதில் ஈடுபட்டார்.

அண்ணலாரின் ஆலோசனை சபை கூடியது. நகரின் பாதுகாவலைப் பலப்படுத்தி நகருக்குள்ளேயே இருந்து மதீனாவில் நுழைவோரோடு போர் புரிவதே சாலச் சிறந்தது என அண்ணலார் கூறினார். அப்துல்லாஹ் இப்னு உபை போன்ற மதில்மேல் பூனைகளும் அண்ணலார் சொன்ன கருத்தையே மொழிந்தனர். முஹாஜிர்களிலும் அன்ஸாரிகளிலும் இருந்த பழைய தோழர்கள் நகருக்குள்ளேயே இருந்து போரிடும் கருத்தை ஆதரித்தனர்.

ஆனால் இளைய சமுதாயமோ நகரைவிட்டு வெளியேறி உஹது மலையடிவாரத்துக்குச் சென்று போரிட விரும்பியது.

‘உஹத் மலையடிவாரம் சென்று போரிடுவதால் நகரும் மக்களும் பாதுகாப்பாக இருப்பர். குறைஷிப் படை கால்நடைகளை மேயவிட்டு அழிச்சாட்டியம் செய்ததற்கு எதிர்வினையாக நாம் அவர்களை நோக்கிச் செல்வதே சரியாக இருக்கும். மலையடிவாரத்தில் படையை நிறுத்திப் போரிடாமல் இருக்கும் அவர்களை நோக்கிப் போரிட நாம் சென்றால்

அவர்கள் அதிர்ச்சியடைவர்’ என இளைஞர்கள் சொன்ன கருத்து மேலோங்கியிருந்தது.

அனுபவசாலிகளான ஹம்ஸாவும் ஸஅத் இப்னு உபாதாவும் மற்றும் பலரும் இளைஞர்களின் கருத்தே சரியெனக் கூறினர். அவ்ஸ் குலத்தைச் சேர்ந்த கைதமா எனும் மூத்தவர் இளைஞர்களின் கருத்தையே ஆதரித்தார். இவருடைய புதல்வர் ஸஅத் பத்ருப் போரில் வீர மரணம் அடைந்தவர். கஸ்ரஜ் குலத்தைச் சேர்ந்த மாலிக் இப்னு ஸீனான் கைதமாவின் கருத்தையே கூறினார்.

அன்று வெள்ளிக்கிழமை

அன்றைய ஜும்ஆ சொற்பொழிவில் அண்ணலார் புனிதப் போர் பற்றியே விளக்கமாகப் பேசினார்.

> ‘எவர்கள் நமக்காக ஜிஹாத் (புனிதப் போர்) செய்கின்றார்களோ அவர்களுக்கு நாம் நம்முடைய வழிகளைக் காட்டுவோம். மேலும், திண்ணமாக அல்லாஹ் நற்பணியாற்றுபவர்களுடன் இருக்கின்றான்.’

(திருக்குர்ஆன் 29: 69)

‘போரிடும்போது குறிக்கோள்தான் அதிகப் பிரியமுடையதாக இருக்கவேண்டும், உயிரல்ல. மரணமும் வாழ்வும் அல்லாஹ்வின் கரங்களிலேயே உள்ளன. அவனது கட்டளை வராதவரை மரணம் வர முடியாது. அவனது கட்டளை வந்துவிட்டால் மரணம் வராமலிருக்காது. இந்த உண்மை நம் உள்ளத்தில் வலுவாகப் பதிய வேண்டும். அல்லாஹ்வின் உவப்பைப் பெறுவதும் மறுமையில் வெற்றியை அடைவதுமே நம் ஆசையாக இருக்க வேண்டும்; வேறு ஆசைகள் இருக்கவே கூடாது. இறைமார்க்கத்தை நிலைநாட்ட நம்மை நாமே முற்றிலும் அர்ப்பணித்துக்கொள்ளவேண்டும்’ என அண்ணலார் கூறிய வார்த்தைகள் முஸ்லிம்களை வலுப்படுத்தின.

மாலைத் தொழுகைக்குப்பின் மதீனத்துப் படை உஹது நோக்கிப் புறப்படத் தயாரானது. அண்ணலார் போர்க் கவசம் பூண்டு வாளேந்திப் புறப்பட்டார். அபூபக்கர், உமர் போன்ற அருமைத் தோழர்களும் வாளேந்திப் புறப்பட்டார்கள்.

அவ்ஸ்களின் கொடியை உஸைது பிடித்திருந்தார்; கஸ்ரஜ்களின் கொடியை ஹுபாப் பிடித்திருந்தார்; முஹாஜிர்களின் கொடியை முஸ்அப் பிடித்திருந்தார்.

ஆயிரம்பேர் கொண்ட அண்ணலாரின் படை வடக்கு நோக்கிச் சென்றது.

சூரியன் மறைந்து கொண்டிருக்க மதீனாவுக்கும் உஹதுக்கும் நடுவிலிருந்த ஷைகைன் எனுமிடத்தில் படை தங்கி அந்தித் தொழுகையைத் தொழுது முடித்தது.

இரவுத் தொழுகை, உணவு என வழக்கம்போல் செயல்பாடுகள் நிகழ்ந்தேறின. படைவீரர்கள் ஓய்வோ உறக்கமோ மேற்கொள்ளும்போது பாதுகாவலர்கள் மாறி மாறித் தம் பணியை மேற்கொண்டனர்.

அண்ணலார் நடு நிசித் தொழுகையைத் தொழுது கொண்டிருந்த போதும் பேச்சுச் சத்தம் கேட்டுக் கொண்டிருந்தது. அப்பேச்சுக்குரல் அப்துல்லாஹ் இப்னு உபை குழுவினரிடமிருந்து வந்துகொண்டிருந்தது. அவர் தம் சகாக்களுடன் நீண்டநேரம் ஆலோசனை நடத்திக் கொண்டிருந்தார்.

முழுமையாக இஸ்லாத்துக்குள் நுழையாதவரும் நகரைவிட்டு வெளியேறிப் போரிட விரும்பாதவருமான இப்னு உபை மதீனாவுக்குத் திரும்பிச் செல்ல தீர்மானித்தார்.

வெள்ளி முளைத்தது. வைகறைத் தொழுகை முடிந்தது. போராளிகள் புறப்பட ஆயத்தமானார்கள். ஆனால் இப்னு உபையோடு வஞ்சக சிகாமணிகள் மதீனாவை நோக்கிப் புறப்பட்டார்கள். அவர்களின் எண்ணிக்கை முந்நூறாக இருந்தது.

இப்னு உபை அண்ணலாரோடு எதுவும் பேசாமலேயே போருக்கு முன்பே புறமுதுகு காட்டிப் புறப்பட்டுவிட்டார். அன்ஸாரிகள் ‘என்ன செயல் இது? ஈனச் செயல் இது!’ என இப்னு உபையைக் கேட்க ‘சிறியாரிட்ட வெள்ளாமை, விளைந்தாலும் வீடு வந்து சேராது. உங்கள் தலைவர் சிறியவர்களின் சொல்கேட்டு நகரை விட்டுப் பொட்டல் காட்டுக்கு வந்துவிட்டார்’ எனக் கூறியபடி அவர் விரைந்தார்.

இப்னு உபையின் செயலைக் கண்ட அண்ணலார் சிறிதும் கலங்கவில்லை. அவர்கள் உள்ளத்தில் மேலும் வலுசேர்ந்தது. இறையருளை முழுமையாக நம்பிய அண்ணலார் உஹது நோக்கிப் படையை அணிவகுக்கச் செய்தார்.

உஹது மலை அடிவாரத்தை அடைந்த அண்ணலாரின் கண்களால் தொலைவிலிருந்த குறைஷிப்படையின் அளவைக் காண முடிந்தது.

ஆயிரக்கணக்கான ஒட்டகங்கள் நின்றும் படுத்தும் கிடக்க ஆயிரக்கணக்கான குறைஷிப் படைவீரர்களின் நடமாட்டம் நன்றாகவே தெரிந்தது.

வியூகங்கள் அமைத்துப் போரிடுவதைப் பற்றி விரிவாகப் பேசிய அண்ணலார் ஒவ்வொரு அணியும் நின்று போரிடுவதைக் கூறி அவற்றைக் காட்சிப்படுத்தினார்.

ஆர்வத்தோடு வியூகங்களின் அமைப்பைப் பற்றிக் கேட்ட முஸ்லிம் போர் வீரர்களிடமிருந்து அண்ணலார் மிகச் சிறந்த வில்லாளர்களைத் தெரிவு செய்தார்.

ஜைத், தமது ஒன்றுவிட்ட சகோதரர் கோத்திரமான ஸுஹ்ராவின் ஸஅத், உத்மான் இப்னு மஸ்ஊனின் மகன் சா இப் போன்ற போராளிகளை அண்ணலார் தம்முடன் வைத்துக் கொண்டார்.

மேலும் ஐம்பது வில்லாளர்களை ஒரு மேட்டில் நிற்கச் செய்து ‘குறைஷிகளின் குதிரைப் படையை நோக்கி உங்கள் அம்புகள் பாயட்டும். அவர்கள் எம் பின்னால் வந்து தாக்கிவிடாமல் இருக்க நீங்கள் அரணாக நிற்க வேண்டும். யுத்தத்தின் வெற்றியோ வீழ்ச்சியோ உங்களை நிலை குலைந்திட வைத்துவிடக் கூடாது. நீங்கள் இடம் பெயராது நின்று உங்கள் பணியைச் செய்ய வேண்டும். நம்படை வெற்றி பெறுமாயின் நீங்கள் அதில் பங்கேற்க வரவே கூடாது. நம் படை வீழ்ச்சியடையுமாயின் நீங்கள் உதவி செய்ய ஓடிவரக் கூடாது’ என அண்ணலார் மிக உறுதியாகவும் மிகத் தெளிவாகவும் யுத்த தந்திரத்தை உரைத்திருந்தார்.

வில்லாளர்களின் தலைவராக அப்துல்லாஹ் இப்னு ஜுபைரை நியமித்த அண்ணலார் தலைவரிடமும் மீண்டும் ஒருமுறை விற்போர் வியூகத்தைப் பற்றி விளக்கிக் கட்டளையிட்டார்.

இப்போரில் மதீனாவிலிருந்து மக்காவுக்கு ஓடிச் சென்ற துறவி அபூ ஆமிர் குறைஷிப் படையில் பங்கேற்றிருந்தார். அபூ ஆமிரின் மகன் ஹன்ஸலா இப்னு உபையின் மகள் ஜமீலாவை மணந்து புதுமணமகனாக முஸ்லிம்களின் படையில் நின்றிருந்தார்.

அண்ணலார் தம் வாட்களில் ஒன்றை தோழர்களில் யாருக்காவது வழங்க முன்வந்தார். அஷப் என்ற உமர், ஸுபைர் ஆகியோர் வாளைப்பெற்றிட முன்வந்தனர். ஆனால் அண்ணலார் அவ்வாளை கஸ்ரஜ்களைச் சேர்ந்த அபூ துஜானாவிடம் கொடுத்தார்.

## உஹதுப்போர்!

குறைஷிப்படை மூர்க்கத்துடன் நின்றது; பெரும்படையின் இருபுறமும் தலா நூறு குதிரை வீரர்கள் நின்றனர். வலதுபுறம் வலீதின் மகன் காலீதும் இடதுபுறம் அபூஜஹ்லின் மகன் இக்ரிமாவும் குதிரைப் படைத் தலைவர்களாக நின்றனர்.

தளபதியாக அபூசுப்யான், கொடிபிடிப்பவராக அப்த் அத்தாரின் தல்ஹா! தல்ஹாவின் அருகில் அவருடைய இரு சகோதரர்களும் நான்கு புதல்வர்களும் துணையாக நின்றனர். குறைஷியரின் கொடி வீழ்ந்துவிடக்கூடாது என்பதில் அவர்கள் கண்ணுங் கருத்துமாக இருந்தனர்.

குறைஷிப்படையின் எதிரில் அவ்ஸ் கஸ்ரஜ் கொடிகளோடு முஹாஜிர்களின் கொடி! முஹாஜிர்களின் கொடியை ஏந்தியிருந்த முஸ்அப் குறைஷிப்படையைக் கவனித்தார்.

அங்கே தந்தை என்றால் இங்கே மகன், அங்கே அண்ணன் என்றால் இங்கே தம்பி, அங்கே மாமன் என்றால் இங்கே மருமகன், அங்கே மச்சான் என்றால் இங்கே மைத்துனன் என உறவினர்கள் இரு பக்கங்களிலும் நின்றனர்!

முஸ்லிம்களின் படைக்கு தளபதியாக அண்ணலார் நின்றார்!

அவ்ஸ் கஸ்ரஜ் தோழர்களே முஸ்லிம்களின் படையில் முன்னணியில் நின்றனர். அவர்களை ஒதுங்கிச் செல்லும்படியும் முஹாஜிர்களோடு நாங்கள் சண்டையிடுவோம் உங்களோடு சண்டை செய்ய மாட்டோம் எனவும் அபூசுப்யான் சொன்னார்.

அபூசுப்யானின் பின்னால் நின்ற அபூஆமிர் முன்வந்து ‘ஒற்றுமையாக வாழ்ந்தோம் நம்மை ஒருவர் வந்து பிரித்துவிட்டார். என்றாலும் உங்கள் ரத்த பந்த உறவினன் நான். எனவே உங்களை என்னோடு சேரும்படி அழைக்கிறேன்’ என அன்ஸாரிகளை அழைத்தார்.

அபூ ஆமிருக்கு அன்ஸாரிகள் பதிலேதும் கூறவில்லை. ஹன்ஸலா தந்தையின் பேச்சைக் கேட்டு தலைகுனிந்தார். எங்கிருந்தோ வந்து விழுந்த கற்கள் அபூ ஆமிரை படையினருக்குள் பதுங்கச் செய்தன.

கொட்டோசை காதைப் பிளந்தது. குறைஷிப்படையினரை குஷிப்படுத்த வந்த ஹிந்தும் மேலும் பல பெண்களும் பழைய யுத்தப் பாடல்களைப் பாடினர். ஓர் இளம்பெண் புதிய பாடலைப் பாடினாள்:

வெட்டிச் சாயுங்கள்
வெகுமதி தருவோம்;
கொன்று குவியுங்கள்
கொடைபல நல்குவோம்.
களம் வெல்லும் கரத்துக்கு
கள்மொந்தை தருவோம்;
விளைத்திடும் வெற்றிக்கு
விளை நிலம் அளிப்போம்.

இருபடைகளும் நெருங்கின. அண்ணலாரின் குதிரைப்படை வீரர்கள் தொடுத்த அம்புகள் குறைஷிகளின் குதிரைகளைக் கனைக்க வைத்தன. கொட்டோசை மெலிய, குதிரைகளின் கத்தல்கள் மரண ஒலியாய்க் கேட்டன.

குறைஷிப்படையிலிருந்து தல்ஹா வெளியில் வந்து தனிமனிதர் மோதலுக்குத் தயாரானார். அலீ தல்ஹாவை வீழ்த்தத் தயாரானார். அலீயின் வாள் வீச்சில் தல்ஹா மூச்சும் பேச்சுமிழந்தார்.

தல்ஹாவின் சகோதரர் வாளோடு முன்வந்தார். அவரை எதிர் கொள்ள ஹம்ஸா வந்தார். தல்ஹாவின் சகோதரர் வாள் எங்கோ போய் விழுந்தது. வாளை எடுக்கப் போனவரை ஹம்ஸா வாள் கொண்டு வீழ்த்தினார்.

தல்ஹாவின் இரண்டாம் சகோதரர் ஈட்டியேந்தி வந்தார். ஸுஹ்ராவின் ஸஅத் ஈட்டியைச் சுழற்ற அது எதிரியின் கழுத்தில் பாய்ந்து நரம்புகளை அறுத்தது.

அடுத்து தல்ஹாவின் மூன்று புதல்வர்கள் அடுத்தடுத்து ஆயுதமேந்திவர அலீ, ஸுபைர், ஆஸிம் ஆகியோரால் கொல்லப்பட்டனர்.

போர்க்களத்துக்கு குறைஷிப்பெண்கள் மட்டும் வரவில்லை, மதீனத்துப் பெண்களும் வந்திருந்தனர்.

இரண்டாம் அகபா ஒப்பந்தத்தில் பங்கேற்ற இரு பெண்களில் ஒருவரான நுஸைபா, அனஸின் தாயார் உம்மு ஸுலைம் ஆகிய இருவரும் போர்க்களத்துக்கு வந்திருந்தனர்.

தல்ஹாவின் நான்காவது புதல்வரை எதிர்த்து ஹம்ஸா வாளேந்தி

போரிட்டுக் கொண்டிருந்தார். அப்போது அபிசீனிய வஹ்ஷி, ஹிந்த் ஏவிய செயலை முடிக்க அணியமானார். ஹம்ஸாவின் வாள் தல்ஹாவின் புதல்வரை மாய்த்த மறுகணம் வஹ்ஷி வீசிய ஈட்டி ஹம்ஸாவின் மார்பைப் பிளந்து சென்றது.

தல்ஹாவின் கடைசிப் புதல்வரும் மரணத்தைத் தழுவிய பின்னர் தல்ஹாவின் அபிசீனிய அடிமை குறைஷிகளின் கொடியை ஏந்தி வந்தார். அப்போது முஸ்லிம்களின் கை ஓங்கியிருந்தது.

அபூதுஜானா அண்ணலாரின் வாளோடும் சிகப்புத் தலைப்பாகையோடும் குறைஷிகளைக் கதிகலங்கச் செய்து கொண்டிருந்தார். வெண்ணிறத் தலைப்பாகையில் அலீ, மஞ்சள் தலைப்பாகையில் ஸுபைர், பச்சைத் தலைப்பாகையில் ஹுபாப்!

அபூ ஆமிரின் புதல்வர் ஹன்ஸலா முன்வந்து அபூசுப்யானை நோக்கி வாளைத் தூக்கினார். வாள் வீச்சிலிருந்து அபூசுப்யான் தப்ப ஹன்ஸலாவை லய்த் கோத்திரத்தவர் ஒருவர் ஈட்டியால் கொன்றார்.

தொடக்கத்தில் வெற்றிகளை ஈட்டிய மதீனத்துப்படை குறைஷிப்படையை பின்வாங்கச் செய்தது. ஹம்ஸா, ஹன்ஸலா என சிலர் இறக்க போர்க்களம் புகைமூட்டத்துக்குப் பின்தள்ளப்பட்டது போலிருந்தது. போர் நிலவரத்தை எவராலும் கணிக்க முடியவில்லை.

குறைஷியரின் படையமைப்பில் ஒருமுனை முற்றாகத் தகர்ந்து போகும்வரை முஸ்லிம்களின் படை முன்னேறிச் சென்றது. குறைஷியரின் பாசறையை அடைந்த முஸ்லிம்கள் அங்கிருந்த பொருள்களைச் சூறையாடினர்.

தாழ்ந்த பகுதியில் நடந்த சூறையாடலை மேட்டுப் பகுதியிலிருந்த முஸ்லிம் வில் வீரர்கள் கவனிக்கத் தவறவில்லை. தம்படை வெற்றியை ஈட்டி விட்டது, அதன்பின் எதிரியின் பொருள்களைச் சூறையாடுகிறது என எண்ணிய வில்லாளர்கள் பொருளாசையால் ஆட்டுவிக்கப்பட்டார்கள்.

அவர்களின் தலைவர் அப்துல்லாஹ் இப்னு ஜுபைர் அண்ணலார் இட்ட கட்டளையை எடுத்துக் கூறியும் வில்லாளர்களில் நாற்பது பேர் சூறையாடும் ஆசையுடன் குறைஷிகளின் பாசறையை நோக்கி ஓடினார்கள்.

அண்ணலாரின் சொல்லை மீறி நாற்பது பேர் சென்றபின்பும் பத்து வில்லாளர்களும் அவர்களின் தலைவரும் அண்ணலாரிட்ட கட்டளையை மீறாது நின்று கொண்டிருந்தனர்.

முஸ்லிம் வில்லாளர்படையின் விரிசலை நன்கு கவனித்த காலித் பின் வலீத் கிடைத்த வாய்ப்பைப் பயன்படுத்திக் கொண்டார்.

முஸ்லிம்களின் படைக்கு அரணாக நின்ற பத்து வில்லாளர்களும் அவர்களின் தலைவரும் வீர மரணம் அடைய முஸ்லிம்படை கிடுக்கிப் பிடிக்குள் மாட்டியது.

புதிதாக ஏற்பட்ட ஆபத்தைக் களைய அலீயும் தோழர்களும் முயன்றனர். முஸ்லிம்களின் படை திட்டுத்திட்டாக நின்றது. அண்ணலாரை எதிரிப்படை சூழவிருந்த சூழலில் முக்கிய தோழர்கள் அண்ணலாருக்குப் பாதுகாப்பாக நின்றார்கள்.

மதீனாவின் மேற்கில் வாழ்ந்த நாடோடி கோத்திரமான முஸைனாவிலிருந்து முஸ்லிமான இரு தோழர்கள் போருக்கு வந்திருந்தனர். அவர்களின் பெயர்கள்: வஹ்ப், ஹாரிது.

வஹ்ப் மிகச் சிறந்த போராளி. அண்ணலாரைத் தாக்க வந்த குறைஷிகளின் குதிரைப்படையைச் சின்னாபின்னமாக்கிய வஹ்ப் இறுதியில் வீர மரணமடைந்தார்.

பின்னர் அன்ஸாரிகளில் ஐவர் அண்ணலாருக்குப் பாதுகாப்பாக நின்று சண்டையிட்டு வீர மரணமடைந்தனர். அதன்பின் அவ்விடத்துக்கு அலீ, ஸுபைர், தல்ஹா, அபூ துஜானா ஆகியோர் வந்தனர். அப்போது குறைஷியரில் யாரோ ஒருவர் வீசிய கல் அண்ணலாரின் கீழுதட்டைக் கிழித்து பல்லொன்றையும் உடைத்தது.

போரின் நிலைமை புதிராகியிருந்த சூழலில் அண்ணலாருக்கு மேலும் பாதுகாப்பளிக்க ஸுஹ்ராவின் ஸஅதும் ஹாரிதும் இப்னு ஸிம்மாவும் வந்தனர். அவர்கள் அண்ணலாருக்குப் பாதுகாப்பளித்தபடியே போரிட்டனர்.

குறைஷிப்படையில் அவர்களின் அண்டை கோத்திரத்து இப்னு காமியா எனும் மல்லர் அண்ணலாரைத் தேடி அழித்தொழிக்கும் எண்ணத்துடன் வந்தார்.

இப்னு காமியா அண்ணலாரைக் குறிபார்த்து கூரிய வாளை வீசினார். அவ்வாளைத் தடுத்த தல்ஹாவின் கை விரல்கள் அறுபட்டன. எனினும் அவ்வாள் அண்ணலாரின் தலைக்கவசத்தை உராய்ந்து சென்றது. அவ்வுராய்வில் கவசத்தின் வளையங்கள் அண்ணலாரின் கன்னத்தில் பதிந்தன. அண்ணலார் அதிர்ச்சியுற்று தரையில் சாய்ந்தார்.

வாளை வீசிய வேகத்தில் குதிரையில் பறந்து சென்ற இப்னு

காமியா அண்ணலார் கொல்லப்பட்டு விட்டார் எனக் கூறிய செய்தி போர்க்களத்தை ஒரு வலம் வந்தது.

தரையில் விழுந்த அண்ணலாரைத் தாங்கிப்பிடித்த தோழர்கள் அண்ணலாருக்கு பாதுகாப்பளிக்க வேண்டிய ஏற்பாடுகளைச் செய்தனர்.

அப்போதும் குறைஷி வீரர்கள் வாளோடு வந்தனர். மக்ஸூமின் ஷம்மாஸ் அவர்களோடு போரிட்டு வீர மரணமடைந்தார். இவர் அண்ணலாரால் ‘உலவும் கேடயம்’ என அழைக்கப்பட்டவர்.

அனஸின் தாயார் உம்மு ஸுலைமோடு நின்று அண்ணலாருக்குப் பாதுகாப்பளித்த வீராங்கனை நுஸைபா வாளேந்தி நின்றார். அண்ணலார் பாதுகாப்பாக மலைமேல் கொண்டு செல்லப்பட்டார்.

அங்கு வைத்து அண்ணலாரின் கன்னத்தில் பதித்திருந்த வளையங்களை அபூ உபைதா தம் பற்களால் கடித்து எடுத்தார். பீரிட்ட குருதியை கஸ்ரஜின் மாலிக் வாயை வைத்து உறிஞ்சி எடுத்தார்.

அதன்பின் அண்ணலாரும் தோழர்களும் மலையிலிருந்து இறங்கி கணவாய்ப் பாதையில் சென்று கொண்டிருந்தனர். அப்போது அவ்வழியாகச் சென்ற முஸ்லிம் சகோதரர்களில் கஅப் இப்னு மாலிக் அண்ணலாரை அடையாளம் கண்டு கொண்டார்.

‘இதோ! அண்ணலார், அருமைத் தலைவர் முஹம்மது நபி (ஸல்)!’ என முழங்கிய கஅபின் முழக்கம் செவிவழி சென்று வாய்வழியாக குறைஷிப்படை நின்ற போர்க்களம் வரை போய்ச் சேர்ந்தது.

குறைஷிப் படையோடு களத்தில் நின்ற உமையாவின் சகோதரர் உபைக்கு அண்ணலார் உயிரோடிருக்கும் செய்தி அதிர்ச்சியைத் தந்தது. உபை அண்ணலார் மரணித்துவிட்டதாக நம்பியிருந்தார்.

இந்த உபைதான் பத்ருப் போர்க் கைதியை அண்ணலாரிடம் மீட்க வந்தபோது ‘அவ்த்’ எனும் குதிரை மீதேறி வந்து அண்ணலாரைக் கொல்வதாகக் கூறி சூளுரைத்துச் சென்றவர்.

அதே உபை, அதே அவ்த் குதிரை! அவ்திலிருந்தபடியே உபை அண்ணலாரைக் கொல்லப் புறப்பட்டார். அவ்த் பறந்து சென்று அண்ணலாரை அடைந்தது. உபை உருவிய வாளுடன் அண்ணலாரைக் கொல்லச் சென்றார். தோழர்கள் அண்ணலாருக்குப் பாதுகாப்பளித்தனர்.

உபையின் வாள் பேசுமுன் வாய் பேசியது, திமிராகப் பேசினார்; அன்று சொன்னதை இன்று நிறைவேற்றப் போவதாக சொன்னார்.

அண்ணலார் சிறிதுகூட தாமதிக்கவில்லை. அருகிலிருந்த தோழரிடமிருந்து ஈட்டியை வாங்கி உபையின் குரல்வளையைக் குறிபார்த்துப் பாய்ச்சினார். குதிரையிலிருந்து கீழே விழாமலேயே ‘செத்தேன்; செத்தேன். அன்று சொன்னபடி என்னால் பழிவாங்க முடியவில்லை. அவர் பழிவாங்கி விட்டார்’ எனக் கத்திய உபை குதிரையில் சரிந்தபடி பறந்தோடினார். உபையின் உயிர்ப்பறவையும் பறந்தோடியது.

போர்க்களத்தில் புகுந்த ஹிந்த் போன்றோர், வீரமரணமடைந்த முஸ்லிம்களின் உடல் பாகங்களை வெட்டியெறிந்தனர். ஹம்ஸாவின் ஈரல் குலையை ஹிந்த் கடித்து செய்த சபதத்தை நிறைவேற்றினார். வஹ்ஷிக்கும் பொன்னும் பொருளும் கொடுத்தார்.

அண்ணலாரும் தோழர்களும் தற்காலிகமாக ஓரிடத்தில் தங்கி போர்க்களம் காலியானபின் உஹது மலையடிவாரத்துக்கு வந்தனர். அதற்கு முன் குறைஷிப் படை செல்லும் திக்கை ஒற்றர் மூலம் அண்ணலார் அறிந்திருந்தார்.

குறைஷிகளில் 22 பேரும் முஸ்லிம்களில் 65 பேரும் இறந்திருக்க, அண்ணலாரும் மேலும் பல தோழர்களும் காயம்பட்டிருக்க உஹதுப்போரில் யாருக்கு வெற்றி? குறைஷிகளுக்கு இழப்புகள் குறைவாகயிருக்கும்போது அவர்களுக்குத் தோல்வி சொந்தமாகாது. பெரும்படையோடு வந்த அவர்களுக்குத்தான் வெற்றியென்றால் அவர்கள் மதீனாவை நோக்கிச் செல்லாமல் ஏன் மக்காவை நோக்கிச் சென்றனர்?

பெரும்படை நடத்தியும் முஸ்லிம்களை முழுமையாக அழிக்க முடியாமல் போனதால் உஹதுப் போர் குறைஷிகளுக்குத் தோல்வி மனப்பான்மையைத் தந்ததா? இல்லை, அண்ணலாரிடமிருந்து பிரிந்து சென்ற இப்னு உபையின் அணி மதீனாவை அரண் செய்துள்ளது. அங்கு சென்றால் மதீனாவின் மக்கள் அனைவரும் சேர்ந்து தங்களைச் சின்னாபின்னமாக்கிவிடுவார்கள் என்ற தவறான ஒற்றறிதலா? எது அவர்களை மதீனாவை நோக்கி நடக்கத் தடுத்தது?

போர்க்களம் சென்ற அண்ணலார் வீர மரணம் அடைந்த ஹம்ஸா, ஹன்ஸலா, முஸ்அப், அப்துல்லாஹ் இப்னு ஜஹ்ஷ் ஆகிய 22 பேரை நல்லடக்கம் செய்தார்.

ஹம்ஸாவின் மூக்கு, காதுகள் என உடலின் பாகங்கள் சிதைக்கப்பட்டிருந்தது அண்ணலாரை அதிக அளவில் துன்பப்பட

வைத்தது.

## உஹதுப் போருக்குப் பின்...!

பத்ருப் போருக்குப் பின் இஸ்லாத்தை நோக்கி வருகை தந்த பழங்குடி மக்கள் உஹதுப் போருக்குப் பின் இஸ்லாத்தின் உறவைத் துண்டித்துக்கொண்டதோடு எதிரிகளாகவும் மாறினர்.

ஹிஜ்ரி நான்காம் ஆண்டு முஹர்ரம் மாதத்தில் ஒருநாள் குத்ன் பகுதியிலிருந்த ஜுஃபீத் எனும் குலத்தார் மதீனாவைத் தாக்க ஆயுதங்களோடு வந்தனர். அவர்களை எதிர்க்க அண்ணலார் நபித்தோழர் அபூசல்மாவை அனுப்பி வைத்தனர். முஸ்லிம்களின் படை ஜுஃபீத் குலத்தாரை மிக எளிதாக விரட்டியடித்தது. தாக்க வந்தவர்கள் தாக்குப்பிடிக்க முடியாமல் ஓட்டம் பிடித்தனர்.

அதன்பின் உர்னா மலைத் தொடரில் வாழ்ந்துவந்த லஹ்யான் எனும் குலத்தார் மதீனாமீது தாக்குதல் நடத்த முயன்றனர். நபித்தோழர் அப்துல்லாஹ் பின் அனீஸ் தலைமையேற்ற முஸ்லிம்களின் படை லஹ்யான் குலத்தாரை புறமுதுகிட்டு ஓடச் செய்தது. லஹ்யான் குலத்தலைவர் சுஃப்யான் கொல்லப்பட்டார்.

ஹிஜ்ரி நான்காம் ஆண்டு ஸஃபர் மாதத்தில் கிலாப் குலத் தலைவர் அபூபர்ரா தம் குலமக்களுக்கு இஸ்லாத்தைப் பற்றி எடுத்துக் கூற ஒரு குழுவை அனுப்ப அண்ணலாரிடம் கேட்டுக் கொண்டார்.

அண்ணலார் அவருடன் எழுபது நபித்தோழர்களை அனுப்பி வைத்தார். அவர்களில் பலர் திண்ணைத் தோழர்கள்.

அபூபர்ரா அப்போது தம் மக்களிடையே செல்வாக்கு இழந்திருந்தார். ஆமிர் பின் துஃபைல் என்பார் பெருந்தலைவராகியிருந்தார். அவர் எழுபது நபித்தோழர்களைச் சுற்றிவளைக்கச் செய்து 69 தோழர்களைக் கொலை செய்ய காரணமானார்.

எழுபது பேரில் அம்ரு பின் உமய்யாவை மட்டும் விடுதலை செய்தார். அம்ருவிடம் ‘என் தாய் ஓர் அடிமையை விடுதலை செய்வதாக நேர்ச்சை செய்திருந்தாள். எனவே நான் உன்னை விடுதலை செய்கிறேன்’ எனக் கூறி விடுதலை செய்தார்.

அம்ரு பின் உமய்யா மதீனாவை நோக்கித் திரும்பிக் கொண்டிருந்தபோது வழியில் ஆமிருடைய குலத்தைச் சேர்ந்த

இருவரைப் பழிக்குப் பழி வாங்கிவிட்டார். அண்ணலாருக்கு இச்செய்தி கிடைத்தபோது பெரும் வேதனையாக இருந்தது. காரணம் அண்ணலார் ஆமிருடைய குலத்தாருக்குப் பாதுகாப்புத் தருவதாக வாக்களித்திருந்தார். எனவே, இருவரின் ரத்தத்துக்கும் அண்ணலார் ஈட்டுத் தொகை தருவதாக அறிவித்தார்.

ஆமிருடைய குஸைமாவின் மகளே அண்ணலாரின் துணைவியார் ஜைனப். பத்ருப் போரில் உயிரிழந்த உபைதாவின் மனைவி இவர்.

ஜுஃபீத், கிலாப் பழங்குடி மக்கள் முஸ்லிம்களைப் பழிவாங்கியதைப்போல மேலும் இருகுலங்கள் முஸ்லிம்களை அழைப்புப் பணி செய்வதற்காக அழைத்துச் சென்றனர். சென்ற பத்துப் பேர்களோடு சண்டை செய்த பழங்குடியினர் ஏழு பேரைக் கொலை செய்தனர். மூன்று பேரை மக்காவுக்குக் கொண்டு சென்று விற்றுவிட்டனர்.

விற்கப்பட்ட தோழர்களில் குபைப், ஜைத் இருவரும் பிரபலமானவர்கள். குபைப் உஹதுப் போரில் ஹாரிஸ் பின் ஆமிர் என்பவர் உயிரிழக்கக் காரணமானவர். ஆகவே குபைபை விலைக்கு வாங்கிய ஹாரிஸ் பின் ஆமிரின் புதல்வர்கள் அவரைக் கொன்றுவிட்டனர். இதே போன்று ஜைதை விலைக்கு வாங்கிய ஸப்வான் பின் உமய்யா அவரையும் கொன்று விட்டார்.

அண்ணலார் மதீனாவுக்கு வந்த பின்னர் யூதர்களோடு உடன்படிக்கைகள் செய்து கொண்டார். அவை மதீனாவின் குடிமக்கள் என்றவகையில் உறவையும் நெருக்கத்தையும் தரவும் அந்நியர் படையெடுத்து வந்தால் சேர்ந்து போரிடவும் வழிவகைகளைக் கூறின. தனிமனித சுதந்திரம், மத சுதந்திரம் ஆகியவற்றையும் அவை பாதுகாக்கும் வகையில் இருந்தன.

யூத மக்கள் உடன்படிக்கைகளை கவசம் என எண்ணிய வேளையில் யூத மத அறிஞர்கள் இஸ்லாம் தம்முடைய யூத மதத்துக்கு விலங்காகி விட்டதோ என சந்தேகம் கொண்டனர்.

அவ்ஸ் கஸ்ரஜ் மக்களிடையே யூதர்கள் தங்களைக் கௌரவமிக்கவர்களாகக் காட்டிக் கொண்டிருந்தனர்; யத்ரிப்வாசிகளும் அவர்களை மேம்பட்ட மனிதர்களாகக் கருதினர். யத்ரிப்வாசிகள் மதீனாவாசிகளாகிவிட்ட பின்னர் மேம்பட்ட மனிதர்களெல்லாம் சர்வ சாதாரண மனிதர்களாகி விட்டனர்.

யூதர்களின் தவறான மதக்கண்ணோட்டம், சமயப்பண்பு, அவர்கள்

கடைப்பிடித்த வணிகம் நோக்கம் கொண்ட இறைபக்தி ஆகியவை இஸ்லாத்தின் நுழைவால் வெட்ட வெளிச்சமாகி விட்டன.

அண்ணலாரின் அறிவுரைகளைக் கேட்டு மக்களுக்கு உண்மையான மார்க்கப்பற்று, உண்மையான இறைபக்தியின் பொருள் எல்லாமே சர்வசாதாரணமாக விளங்கியபோது யூத குருக்களின் முக்கியத்துவம் குறைந்தது.

அதே சமயம் யூத சமுதாயத்தைப் பற்றி இறங்கிய திருக்குர்ஆன் வசனங்கள் இலக்கணம் மீறியவர்களின் தலைவர்கள் முன் இடிகளாக இறங்கின.

> ‘அவர்கள், பொய்யுரைகளைச் செவியேற்பவர்களும் தடுக்கப்பட்ட பொருள்களை அதிகம் உண்பவர்களுமாவார்கள்.’

(திருக்குர்ஆன் 5: 42)

> ‘வட்டி அவர்களுக்குத் தடை செய்யப்பட்டிருக்க அதனை அவர்கள் வாங்கிக் கொண்டிருப்பதாலும் மக்களின் சொத்துக்களை அவர்கள் விழுங்கிக் கொண்டிருப்பதாலும் (முன்பு) அவர்களுக்கு அனுமதிக்கப்பட்டிருந்த பல தூய்மையான நல்ல பொருள்களை அவர்கள்மீது நாம் தடை செய்துவிட்டோம்.’

(திருக்குர்ஆன் 6: 161)

> ‘வேதம் அருளப்பட்டவர்களில் ஒரு பிரிவினர் உங்களை நேரிய வழியிலிருந்து பிறழச் செய்திட வேண்டும் என விரும்புகிறார்கள். ஆயினும் அவர்கள் தங்களைத் தாங்களே வழிகேட்டில் ஆழ்த்திக் கொள்கிறார்கள். ஆனால் இதனை அவர்கள் உணர்வதில்லை!’

(திருக்குர்ஆன் 3: 69)

> ‘வேதத்தைப் படிக்கும்போது தம் நாவுகளை அவர்கள் (யூதர்கள்) சுழற்றுகின்றார்கள். அவர்கள் படிக்கின்ற யாவும் வேதத்தில் உள்ளவையே என்று நீங்கள் எண்ணிக் கொள்ள வேண்டும் என்பதற்காக! உண்மையாதெனில், அவர்கள் படிப்பவை வேதத்திலுள்ளவையல்ல.’

(திருக்குர்அன் 3: 78)

‘நாங்கள் அல்லாஹ்வின் புதல்வர்கள்; மேலும், அவனது அன்பிற்குரியவர்கள்’ என்றெல்லாம் யூதர்களும் கிறிஸ்துவர்களும் கூறுகின்றார்கள். அவர்களிடம் நீர் கேளும்: அவ்வாறாயின் உங்களின் பாவச் செயல்களுக்காக அவன் ஏன் உங்களுக்குத் தண்டனை அளிக்கின்றான்?’

(திருக்குர்ஆன் 5: 18)

‘ஒரு யூதராகவோ ஒரு கிறிஸ்துவராகவோ இல்லாத எவரும் சுவனம் (சொர்க்கம்) புகமாட்டார்’ என்று அவர்கள் கூறுகின்றார்கள். இவை அவர்களின் நப்பாசைகளே ஆகும்.’

(திருக்குர்ஆன் 2: 111)

இத்தகைய இறைவசனங்கள் இலக்கணம் மீறிய யூதர்களுக்கு சாட்டையடிகளாக விளங்கின. அவர்கள், இஸ்லாத்தை அழித்தொழிக்க எண்ணினர்; அவர்களுடைய வழக்கமான கீழறுப்பு வேலைகளைத் தொடங்கினர்.

ஓரிறைவன், மறுமை, தூதுத்துவம் போன்றவற்றோடு ஒத்துப் போன யூதர்கள் தொழுகை திசை மாறியபோது துடித்துப்போனார்கள்.

இது காலம்வரை ஜெரூசலத்திலுள்ள அல் அக்ஸாவையே முன்னோக்கித் தொழுது வந்த முஸ்லிம்கள் மதீனாவுக்குப் புலம் பெயர்ந்த பதினேழு மாதங்கள் கழிந்தபின் மக்காவிலுள்ள கஅபத்துல்லாவை நோக்கித் தொழத் தொடங்கினார்கள்.

இறையாணை வந்தபின்பே கிப்லா தொழு திசை மாறியது.

‘மக்களில் அறிவீனர்கள், (இவர்களுக்கு என்ன நேர்ந்துவிட்டது!) இவர்கள் எந்தக் கிப்லாவை முன்னோக்கிக் கொண்டிருந்தார்களோ அதிலிருந்து (திடீரென) திருப்பியது எது?’ என நிச்சயம் கேட்பார்கள். (நபியே! அவர்களிடம்) சொல்வீராக: கிழக்கு, மேற்கு அனைத்தும் அல்லாஹ்வுக்கே உரியவையாகும். தான் நாடுகின்றவர்களை அவன் நேரான வழியில் செலுத்துகின்றான்.’

(திருக்குர்ஆன் 2: 142)

மக்களில் அறிவீனர்கள் எனத் திருக்குர்ஆன் குறிப்பிட்டது யூதர்களையும்தான்; எனவே அவர்கள் கேள்வி கேட்டார்கள்.

தொடக்கத்தில் இஸ்லாத்தை ஆதரித்து அதை தம்மடிக்குள் வைத்துக் கொள்ளலாம் என்ற எண்ணம் கலைந்தபோது அவர்கள் இஸ்லாத்தை இல்லாமலாக்கத் திட்டமிட்டனர்; அதன்படி செயல்பட்டனர்.

## பனூ நளீர் யூதர்கள்!

பனூ நளீர் யூதர்கள் மதீனாவுக்கருகில் வாழ்ந்தார்கள். இவர்கள் நஜ்தின் பனூ ஆமிர்களின் கூட்டுறவாளர்கள்.

அண்ணலார் பர்ரா என்பவரோடு அனுப்பிய எழுபது அழைப்பாளர்களில் 69 பேரை ஆமிர் பின் துஃபைல் கொன்றுவிட்டு அம்ருபின் உமய்யாவை மட்டும் உயிர்ப் பிச்சையளித்து அனுப்பினார். அம்ரு வரும் வழியில் இரு ஆமிர்களைக் கொன்றுவிட்டார். ஆமிர்களுக்கு அண்ணலார் பாதுகாப்புத் தருவதாக வாக்களித்திருந்தால் அவர்களுக்கு ரத்தக் கிரயம் கொடுக்க வேண்டியதாயிருந்தது.

அந்த ரத்தக்கிரயத்தை ஆமிர்களின் கூட்டுறவாளர்களான பனூநளீர் மூலம் கொடுக்கவே அண்ணலார் யூதக்குடியிருப்புக்குச் சென்றார். அண்ணலாருடன் அப்போது அபூபக்கர், உமர் ஆகிய நபித்தோழர்களும் இருந்தனர்.

பனூ நளீர் தலைவர்களில் ஒருவரான ஹுயை அண்ணலாரை வரவேற்று மொழிந்த செய்தியைக் கேட்டார் . ஆமிர்களுக்குரிய ரத்தக் கிரயத்தை உரியவர்களுக்குச் சேர்ப்பதாகக் கூறிய ஹுயை விருந்துண்டு செல்ல வேண்டினார். அண்ணலாரும் சம்மதித்து தங்கி தம் தோழர்களுடன் உரையாடிக் கொண்டிருந்தார்.

அப்போது சமையற்காரர்களிடம் ஏதோ சொல்லச் செல்வதாகக் கூறி உள்ளே சென்ற ஹுயை சிறிது நேரத்தில் திரும்பினார்.

உள்ளே சென்ற போதிருந்த ஹுயையின் கண்களுக்கும் உள்ளே சென்று விட்டு வந்த ஹுயையின் கண்களுக்கும் வேறுபாடு தெரிந்தது. சமாதானப்புறா, கள்ளப்பருந்து!

அண்ணலார் முன் அப்போது வானவர்க்கோன் ஜிப்ரீல் யாருக்கும் தெரியாமல் வந்து சமையல்கூடத்தில் நஞ்சு கலக்கப்படுவதைப் பற்றி அறிவித்துச் சென்றார்.

அங்கிருந்து அண்ணலார் அகல, அடுத்து நபித்தோழர்களும் அகன்றனர். மஸ்ஜித் நபவியில் சந்தித்துக் கொண்ட தோழர்களிடம்

அண்ணலார் பனூ நளீர் செய்த விஷயத்தைப் பற்றிக் கூறினார். உமர் உறுமினார்; அபூபக்கர் அமைதியோடிருந்து ஆவன செய்வோம் என்றார்.

அவ்ஸ்களின் முக்கிய பிரமுகரும் கஅப் இப்னு அல் அஷ்ரபின் கதையை முடித்த செயல் வீரருமான முஹம்மத் இப்னு மஸ்லமா அழைக்கப்பட்டு ஆலோசனை நடந்தது.

இப்னு மஸ்லமா, பனூ நளீர் யூதர்களிடம் சென்று அண்ணலார் மொழிந்ததைக் கூறினார்.

‘நீங்கள் அண்ணலாரைக் கொல்லத் திட்டமிட்டதின் மூலம் நீங்கள் எங்களோடு செய்துகொண்ட உடன்படிக்கையை முறித்து விட்டீர்கள். உடன்படிக்கையை மீறியவர்கள் என்ன தண்டனைக்கு ஆளாவார்கள் என்பது நீங்கள் அறிந்ததே. ஆகவே நீங்கள் பத்து நாட்களுக்குள் மதீனாவின் எல்லையை விட்டு வெளியேற வேண்டும். இல்லையேல், என்ன நடக்கும் என்பதை நீங்கள் அறியாதவர்களில்லை’ என்று மஸ்லமாவின் மைந்தர் கூறியது யூதர்களை அச்சப்பட வைத்தது.

‘அவ்ஸ்களில் ஒருவர் இத்தகைய பொல்லாத செய்தியைக் கொண்டு வருவார் என நாங்கள் எதிர்பார்க்கவில்லை’ என்றார் ஹுயை.

‘இதயங்கள் மாறிவிட்டன’ என்றார் இப்னு மஸ்லமா.

பனூ நளீர்கள் தமது குடியிருப்புகளிலிருந்து வெளியேறத் தயாரானபோது நயவஞ்சக நாயகன் இப்னு உபை அவர்கள் வெளியேற வேண்டாமெனத் தடுத்ததோடு வேண்டிய உதவிகளைச் செய்வதாக வாக்குறுதியளித்தார். நயவஞ்சகத்தை வஞ்சகம் நம்பியது, ஹுயை இப்னு உபையை நம்பினார். எனவே ஹுயை நளீர்களை வெளியேற வேண்டாமெனக் கேட்டுக் கொண்டார்.

கத்தபான்களிடமும் ஹுயை தூதனுப்பி உதவி கேட்டார்.

இப்னு உபை வகையறாக்களும் பனூ குரைளா யூதர்களும் கத்தபான் காட்டரபிகளும் தமக்குத் துணையாக வரும்போது முஸ்லிம்களை ஒரு கை பார்க்கலாம் என ஹுயை கனவு கண்டார்.

ஹுயை வெளியேற முடியாதெனக் கூறி தன் தம்பியைத் தூதனுப்பினார். அண்ணலார் நளீர்கள்மீது போர்ப் பிரகடனம் செய்தார்.

முஸ்லிம்களின் படை பனூ நளீர் பிரதேசத்தைச் சூழ்ந்தது. நளீர்கள் கோட்டைக்குள் இருந்தனர். முஸ்லிம்கள் கோட்டையைச் சூழ்ந்தனர்.

பத்து நாட்கள் பறந்தன.

# 23. அகழிப்போர்

## மதீனாவை நோக்கி மாபெரும் படை!

பத்ருப் போரில் தோல்வியுற்றும் உஹதுப் போரில் வெற்றியோ தோல்வியோ பெறாமல் மக்காவை நோக்கித் திரும்பியும் இருந்த குறைஷிகளுக்கு முஸ்லிம்கள் அச்சம் அளிப்பவர்களாகவே விளங்கினர். வேட்டைக்குச் செல்வதையும் வீண் சண்டைகள் செய்வதையும் வாடிக்கையாகக் கொண்டிருந்த குறைஷிகளுக்கு யுத்தம் புரிவது ஒவ்வாமையைக் கொடுத்தது. வேட்டைக்கு வில்லும் அம்புகளும் போதும். வீண் சண்டைகளுக்கு வாளோ கத்தியோ போதும். யுத்தங்களுக்கோ வில், அம்புகளும் வாள்கேடயங்களும் ஒட்டகம் குதிரைகளும், உணவுப் பொருள்களும் அதிகமாகத் தேவைப்பட்டன.

வேட்டையில் பறவையோ மிருகமோ சாகும்; வீண் சண்டையில் ஒரு சிலரே செத்து மடிவர். போரென்றால் உயிரிழப்புகள் அதிகம்!

இரு யுத்தங்கள் தந்த படிப்பினைகள் குறைஷிகளை சிறிது காலம் அமைதியோடு வாழ வழிவகுத்தன.

நீறு பூத்த நெருப்பாக இருந்த குறைஷிகளிடம் பனூநளீர் யூதர்கள் பெருங்காற்றாகப் புகுந்தனர்.

மதீனாவிலிருந்து நாடு கடத்தப்பட்ட பனூ நளீர்கள் முஸ்லிம்களைப் பழிவாங்கத் துடித்துக் கொண்டிருந்தனர். எதிரிக்கு எதிரி நண்பன் என்ற இலக்கணத்தைக் கைக் கொண்டனர்.

பனூநளீர் யூதர்களின் தலைவர்களான ஹுயை இப்னு அக்தப் என்பவனும் சலாம் இப்னு அபில் ஹுகைக் என்பவனும் மக்காவுக்குச் சென்று குறைஷிகளுக்குக் கொம்பு சீவி விட்டனர்.

‘உங்களுக்கும் எங்களுக்கும் உள்ள உறவு நீண்ட வரலாற்றைக் கொண்டது. உங்களுக்கு ஓர் ஆபத்தென்றால் அது எங்களுக்கும் வந்ததாகக் கருதுகிறோம். நீங்கள் ஒரு துளி ரத்தத்துக்காக ஒருபடி ரத்தத்தை எடுப்பவர்கள் என்பதை நாங்கள் நன்றாகவே அறிவோம். உஹதுப் போரில் நீங்கள் பெற்ற வெற்றியைப் பற்றி அரபுலகமே

பாராட்டிக் கொண்டிருக்கிறது. போரில் முகம் கிழிக்கப்பட்ட உங்கள் எதிரிகளின் தலைவர் அகம் கிழிந்துபோய்க்கிடக்கிறார். நீங்கள் மீண்டும் போர் புரியச் சென்றால் முஸ்லிம்கள் முகவரியற்றுப் போய்விடுவார்கள். உங்களுடைய துணைக்கு நாங்கள் வருகிறோம். இப்போது உங்களை நாடி நாங்கள் வந்ததே அதற்காகத்தான். நாம் ஓர் உடன்படிக்கை செய்து கொண்டு புறப்பட்டால் யத்ரிபை வீழ்த்திவிடலாம்; முஸ்லிம்களை முகம் குப்புற வீழச் செய்து அவர்கள் இருந்த சுவடேயில்லாத ஒரு நிலையைக் கொண்டு வரலாம்' என பனூநளீர்த் தலைவர்கள் கூற குறைஷிகள் யோசித்தனர்.

'நாங்களோ எந்த வேதமும் இல்லாதவர்கள். லாத் உஸ்ஸாவும் எங்களுடைய மூதாதையரின் வழிமுறைகளும் எங்களுக்குப் போதும். உங்களுக்கோ ஒரு வேதம் இருக்கிறது. எனவே எங்களுக்கோ உங்களுக்கோ எந்த வேதமும் தேவையில்லை; முஹம்மதுடைய வேதமும் தேவையில்லை. இப்போது நமக்கு முஹம்மதே பொது எதிரி. அவரை அழித்தொழிப்பதே நாம் செய்ய வேண்டிய கட்டாயக் கடமை' என்ற குறைஷிகள் பனூ நளீர்த் தலைவர்களோடு உடன்படிக்கை செய்து கொண்டனர்.

பனூ நளீர்த் தலைவர்கள் இஸ்லாமிய எதிர்ப்பை மக்காவில் மட்டும் ஏற்படுத்தவில்லை. திட்டமிட்டு அவர்கள் அரபகத்தின் பல பகுதிகளிலுமிருந்த காட்டரபிகளிடம் சென்று அண்ணலாருக்கு எதிரான நிலைப்பாட்டை எடுக்க ஆவன செய்தார்கள்.

பிள்ளைப் பூச்சியைப்போல் மறைந்து கிடக்கும் யூதர்கள் சந்தர்ப்பத்தைப் பயன்படுத்தித் தேளாக மாறிவிடுவார்கள். இதை அவர்கள் காலங்கள் தோறும் நிரூபித்தே வருகிறார்கள்.

நஜ்த் பெருவெளியிலிருந்த சிறிய, பெரிய இனக்குழுக்கள் அனைத்தையும் மதீனாவுக்கு எதிராகப் போரிடப் புறப்படும் செயலைச் செய்ய யூதர்கள் பொறுப்பேற்றார்கள்.

சில இனக்குழுக்கள் மதீனாவை வஞ்சம் தீர்ப்பவையாக இருந்தன. அவற்றைத் தூண்டி விட சில சொற்களே போதும். அதே சில இனக்குழுக்கள் வஞ்சம் தீர்க்க வேண்டிய குழுக்களாக இருக்காது. அவற்றிடம் யூதர்கள் லஞ்சத்தைப் பயன்படுத்தினர்.

பனூ அஸத் மக்கள் நிபந்தனையின்றி குறைஷியர் அணியில் சேர்ந்தனர்.

பனூ ஸுலைம் கோத்திர மக்களில் 700 பேரே சேர்ந்தனர். இதை

விட அதிகம் சேர்க்கும் வாய்ப்பில்லாமல் போய்விட்டது. காரணம் மஊனா கிணற்றடியில் நடந்த படுகொலைகளுக்குப் பின் ஸுலைம்களில் பலர் இஸ்லாத்தின் பக்கம் சாய்ந்துவிட்டனர்.

ஸுலைம்களின் தென்புறக் கோத்திரமான பனூ ஆமிர்கள் அண்ணலாருடன் செய்து கொண்ட ஒப்பந்தத்தின் காரணமாக முஸ்லிம்களோடு தொடர்ந்து கூட்டுறவைப் பேணிக் காத்தனர்.

பனூ கத்தபான்களிடம் சென்ற பனூ நளீர்த் தலைவர்கள் ‘குறைஷிகளோடு நாங்களும் மேலும் சில இனக்குழுக்களும் உடன்படிக்கை செய்து கொண்டுள்ளோம். யத்ரிபிலுள்ள முஸ்லிம்கள்மீது போர்த் தொடுக்கவே இந்த உடன்படிக்கை செய்யப்பட்டுள்ளது. நீங்கள் எங்களோடு சேர்ந்து முஸ்லிம்களை அழிக்க முன்வந்தால் நாங்கள் உங்களுக்குக் கைபரில் கிடைக்கும் மகசூலில் பாதியைத் தருவோம்’ என்றனர்.

கத்தபான்களின் கிளைக் கோத்திரங்களான பஸாரா, முர்ரா, அஷ்ஜா மக்களில் பலரும் சேர கத்தபான் வீரர்களின் எண்ணிக்கை இரண்டாயிரத்தைத் தாண்டியது. அவர்களில் முன்னூறு குதிரைப் படை வீரர்கள் இருந்தனர்.

கத்தபான்களும் நளீர் யூதர்களும் வடக்கேயிருந்து தெற்கு நோக்கி வருவதென்றும் நஜ்தைச் சேர்ந்த இனக்குழுக்கள் கிழக்கிலிருந்து மேற்கு

குறைஷியரும் அவர்களுடைய தோழர்களும் அணிசேர நாலாயிரம் பேர் கொண்ட பெரும்படையாக மாறியிருந்தனர். அவர்களில் முன்னூறு குதிரைப்படையினரும் இருந்தனர்.

மதீனாவுக்கு வடக்கிலிருந்தும் கிழக்கிலிருந்தும் வருவோர் ஆறாயிரம் பேர் என நளீர்கள் கணக்கிட்டிருந்தனர். அவர்களோடு குறைஷிப்படை நான்காயிரமும் சேர மொத்தம் பத்தாயிரம் படை வீரர்கள்!

மதீனா தாங்குமா?

## அகழிப்போர்!

மக்காவிலிருந்து அண்ணலாரின் சிறிய தந்தை அப்பாஸிடமிருந்து செய்தி வந்தது.

குஸாஅவின் சில குதிரை வீரர்கள் அப்பாஸின் செய்தியை மதீனாவுக்குக் கொண்டு வந்து சேர்த்தனர்.

குறைஷிகளின் ஏற்பாடுகள், அவர்களிடம் சேர்ந்துள்ளோர், படைபலம், ஆயுத, வாகன பலம் ஆகியவற்றைப் பற்றி குஸாஅ குதிரை வீரர்கள் அண்ணலாரிடம் கூறினார்.

அண்ணலார் உடனே மஸ்ஜித் நபவியில் கூடிய கூட்டத்தில் குறைஷிகளின் படையெடுப்பைப் பற்றியும் அப்படையெடுப்புக்கு நளீர்கள் மூளை பலமாக உள்ளதைப் பற்றியும் அவர்களோடு சேர்ந்து வருவோர் பற்றியும் விளக்கமாகக் கூறினர்.

முஸ்லிம்களுக்கு உஹதுப்போர் ஒரு பாடமாக அமைந்திருந்தது. எனவே அவர்கள் நகரை விட்டு வெளியேறிப்போய் போர் புரிய விரும்பவில்லை. நபித்தோழர்கள் தம் கருத்துகளை மிகத் தெளிவாகக் கூறினர். சொன்ன கருத்துகள் ஒவ்வொன்றும் அலசி ஆராயப்பட்டன. அதன் சாதக பாதகங்கள் விரிவாகப் பேசப்பட்டன.

இறுதியாக ஸல்மான் பார்ஸி சொன்ன போர்த்திட்டம் ஏற்கப்பட்டது. குறைஷிகள் மதீனாவை நோக்கி வந்தால் எவ்வாறு அவர்களை எதிர்கொள்வது என்பதைப் பற்றி ஏற்கெனவே யோசித்து வைத்திருப்பார்போலும் அவர். அத்தகைய கனகச்சிதமான திட்டம்! அத்திட்டம் அலசி ஆராயப்பட்டது.

ஆன்மிகத் தேடலில் ஈடுபட்ட சல்மான் பார்ஸி பாரசீகத்திலிருந்து புறப்பட்டு சிரியா வந்து கிறிஸ்துவராகி ஒரு பாதிரியாரிடம் பணிபுரிந்து வந்தார். பாதிரியார் மரணமடையும் தறுவாயில் ஸல்மான் வேறொரு மதகுருவிடம் அனுப்பிவைக்கப்பட்டார்.

தேவாலயங்களும் மதக்குருக்களும் ஸல்மானின் தேடலை நிறைவு செய்யவில்லை. அவர் சந்தித்த ஒரு முதிய மதகுரு ‘இறைத்தூதர் ஒருவர் அரபகத்தில் தோன்றுவார். அவர் வாழுமிடம் இரு குன்றுகளுக்கிடையேயுள்ள பேரீச்சம் மரங்கள் சூழ்ந்த இடம்’ எனக் கூறியிருந்தார். ஆகவே ஸல்மான் அரபகத்துக்கு வந்தபோது அவரோடு வந்த வணிகர்கள் அவரை ஒரு யூதருக்கு விற்றுவிட்டனர். அவரை அண்ணலார்தான் மீட்டெடுத்துத் திண்ணைத் தோழராக்கியிருந்தார்.

மதீனா நகரின் நான்கு புறமும் அகழி தோண்டப்பட வேண்டியதில்லை. வடக்கேயிருந்த மேட்டுப் பகுதியிலிருந்து கிழக்கிலிருந்த வீடுகளின் மதில்வரை அகழி தோண்டினால்போதும். நகரின் தெற்கு எல்லையில் அமைந்திருந்த தொடர்ச்சியான கோட்டை போன்ற வீடுகள் பெரும் அரணாக நின்றன. வடமேற்புலத்தில் நின்ற குன்றுகள் இயற்கை அரணாக விளங்கின. இவற்றுள் ஸால் எனும்

குன்றை அகழியின் உட்புறத்தில் கொண்டுவர வேண்டியிருந்தது.

அகழி தோண்டிப் பாதுகாப்புப் பெற்று போரிடுவது, அரபகம் காணாத ஒரு போர் முறை. இப்போர் முறை பாரசீகத்தில் கடைப்பிடிக்கப்படுவதாகக் கூறிய ஸல்மான் பார்ஸியே திட்டத்தைச் செயல்படுத்துவதிலும் முன்னணி வகித்தார்.

பத்தடி அகலத்தில் அகழி தோண்டினால் போதும், அது குறைஷிப்படை தாண்ட முடியாததாக அமைந்துவிடும். அதை ஒரு வேளை ஓடிவரும் குதிரை தாண்டிவிடலாம். எனவே, ஓடிவரும் குதிரையும் தாண்டா வண்ணம் மிக அகலமாகக் குழி தோண்டப்பட்டது.

காலமோ குறுகியது. கடுமையான பணி. அண்ணலாரும் தோழர்களும் இரபு பகல் பாராமல் அகழி தோண்டினார்கள்.

ஸல்மான் பார்ஸி குரைளாக்களின் தோட்டங்களில் பணியாற்றியிருந்ததால் பெற்ற அனுபவம் அகழி தோண்டுவதில் உதவியது. குரைளாக்களிடமிருந்து மண்வெட்டி, கடப்பாரை, கூடைகள் போன்றவை பெறப்பட்டிருந்தன.

அகழியைத் தோண்டத் தோண்ட ஆர்வம் அதிகமானது. அகழியில் வெறும் மண்மட்டும் வரவில்லை; பாறைகள் கூட எதிர்ப்பட்டன. கற்களை அப்புறப்படுத்திய தோழர்கள் பாறைகளைப் பிளக்கப் பெரும்பாடு பட்டனர்.

12,000 முழ நீளம் 9 முழ அகலத்தில் அகழி தோண்டி முடிக்கப்பட்டது. ஆயிரக்கணக்கான தோழர்கள் மேற்கொண்ட அகழி தோண்டும் பணி முடிய பத்து நாட்கள் பிடித்தன.

உஹதுப்போருக்கு வந்தது போலவே குறைஷிப்படை செங்கடலோரப் பாதையில் சென்று, மதீனாவுக்கு வடக்கில் போய் நின்று, பின் தெற்கு நோக்கி வந்தது.

உஹதுப்போரின்போது மதீனாவின் முஸ்லிம்படை உஹது மலையடிவாரத்தில் குறைஷிகளைச் சந்தித்தது. இப்போது முஸ்லிம்படை மதீனாவுக்குள்ளேயே இருந்ததால் குறைஷிப்படை உஹதில் நிற்காமல் மதீனாவை நோக்கிச் சென்றது.

மதீனாவில் வடக்கு எல்லையை அடைந்த குறைஷிப்படை அங்கு தோண்டப்பட்டிருந்த அகழியைக் கண்டு மலைத்துப் போய்நின்றது. குதிரைகளாலேயே தாண்ட முடியாத அகழிக்குழியை மனிதரால் எப்படித் தாண்ட முடியும்? காட்டரபிகளான கத்தபான் வீரர்கள் கூட

கைபிசைந்து நின்றார்கள்!

கோட்டைக் கதவுகளைத் தகர்க்கலாம்; குழித் தொடரால் போடப்பட்ட கோட்டைத் தகர்க்க முடியுமா? தூர்க்கலாம்.

தூர்க்க கல்லும் மண்ணும் வேண்டும். தோண்டப்பட்ட கல்லும் மண்ணும் அகழிக்குத் தென்புறம் கொட்டிக் கிடக்க, குறைஷிப்படை வடக்கில் நின்று வாடிக் கொண்டிருந்தது.

அகழியைத் தாண்ட முடியுமா என்ற ஆராய்ச்சியில் குறைஷிப்படை ஈடுபட்டுக் கொண்டிருக்க, கத்தபான்கள் அகழிக்கரை முழுதும் ஆவேசத்தோடு ஓடினர். எங்காவது இடைவெளியிருக்கிறதா எங்கேயாவது தாண்டக்கூடிய அளவில் பள்ளமிருக்கிறதா என அவர்கள் தேடியலைந்தனர்.

எங்கும் தாண்டக்கூடிய அளவில் பள்ளமில்லை. தாண்டினால் பள்ளத்தில் விழ வேண்டும். விழுந்தால் பள்ளத்திலிருந்து மேலே வர முடியாது.

குறைஷிப்படை குழம்பிப் போய் நின்றது. குதிரைப்படை வீரர்கள் மதீனாவைச் சுற்றிச் சுற்றி வந்தனர். எங்கும் நகருக்குள் நுழையும் பாதை தெரியவில்லை.

நஜ்திலிருந்து வந்த பழங்குடியின மக்களின் படை மதீனாவின் கிழக்குப் பகுதியில் நின்று இயற்கை அரணை எதுவும் செய்ய முடியாமல் அகன்றது. அது சிறிது சிறிதாக நகன்று சென்று வடக்கில் நின்ற குறைஷிப்படையோடு சேர்ந்து கொண்டது. குறைஷிப்படை பள்ளத்தைக் கண்டு பயந்து போய் நின்ற நிலையில் பழங்குடியினப் படையால் என்ன செய்ய முடியும்? அது பள்ளத்தைக் கண்டு உள்ளம் பதறிப் போய் நின்றது.

உயர் தளபதியாக வந்திருந்த அபூசுப்யான் யோசித்து யோசித்து தலையைச் சொரிந்தார். தம் துணைவர்களுடன் ஆலோசித்து ஆலோசித்து எந்த முடிவுக்கும் வராமல் திண்டாடினார்.

குதிரைப்படைக்குத் தலைமையேற்றிருந்த காலிதும் இக்ரிமாவும் குதிரைகளால் அகழியைத் தாண்ட முடியுமா எனக் கணக்குப் போட்டனர். அப்படித் தாண்டினால் ஒன்று அவர்கள் குதிரைகளோடு குழியில் விழ வேண்டும் அல்லது தாண்டிய பின் முஸ்லிம் படையின் வில்லுக்கு இரையாக வேண்டும்.

முஸ்லிம்களின் வில்வீரர்கள் வில்லும் அம்போடும் நிற்பது

நன்றாகவே தெரிந்தது. அப்போது குறைஷிகளை நோக்கி எச்சரிக்கை செய்வதுபோல் சில அம்புகள் முஸ்லிம்களின் படையிலிருந்து பறந்துவந்து குறைஷிப்படை முன் விழுந்தன.

பத்தாயிரம் பேர் பதைபதைத்துப் போய் நிற்க மூவாயிரம் முஸ்லிம்கள் குறைஷிகளின் நிலையைக் கண்டு வேடிக்கை பார்த்துக் கொண்டிருந்தனர்.

இடைவெளிவிட்டு அம்புகள் மட்டும் இருபக்கங்களிலிருந்தும் பாய்ந்தன. முஸ்லிம்களின் ஸஅத் இப்னு முஆத்தின் கையில் பாய்ந்த அம்பு பெரும் காயத்தை ஏற்படுத்தியது. குறைஷிகளின் குதிரைகளில் சில காயமடைந்தன.

மதீனாவுக்குள் நுழைந்துவிட்டால் போதும், குறைஷிப்படை முஸ்லிம்படையை வென்றெடுத்துவிடும்! மதீனாவுக்குள் நுழைவதெப்படி? வடக்கே அகழி, மேற்கிலும் கிழக்கிலும் குன்றுகள், தெற்கே ஈர்மலை!

அகழியின் தென்பகுதியில் முஸ்லிம்களின் முழுப்படையும் நிற்க மேற்கு கிழக்கிலிருந்த குன்றுகளையும் தெற்கிலிருந்த ஈர்மலையையும் தாண்டி எதிரிகள் வந்தால் எதிர்த்துத் தாக்க சில முஸ்லிம் வில் வீரர்கள் நிறுத்தப்பட்டிருந்தனர்.

தெற்கிலிருந்த ஈர்மலையின் வடக்கு அடிவாரத்தில்தான் பனூ குரைளாக்கள் வாழ்ந்தனர். பனூ குரைளாக்களைத் தம் வசப்படுத்த எண்ணிய பனூ நளீர்த் தலைவர் ஹுயை அபூசுப்யானோடு ஆலோசித்தார்.

அண்ணலாரோடு பனூ குரைளாக்கள் ஒப்பந்தம் செய்து கொண்டு கூட்டுறவாளர்களாக விளங்கினர். அவர்களை அண்ணலாரிடமிருந்து பிரிப்பது எப்படி?

பனூ குரைளாத் தலைவர் கஅப் இப்னு அஸதைச் சந்திக்க ஹுயை கமுக்கமாகச் சென்றார். கஅப் ஹுயையைச் சந்திக்க மறுத்தார். பின்னர் ஹுயையின் வேண்டுதலை ஏற்று கஅப் சந்திக்க ஒத்துக் கொண்டார்.

நளீர் குரைளாக்களின் யூத உறவுகளையும் தம் மார்க்கம் வளர முஸ்லிம்களின் புது மார்க்கம் தடையாகும் என்பதையும் விளக்கிய ஹுயை முஸ்லிம்களோடு செய்து கொண்ட ஒப்பந்தத்தை முறிக்கும்படி வேண்டிநின்றார்.

கஅப் சிறிதுகூட அசைந்து கொடுக்கவில்லை; ஹுயை தன்

முயற்சியைக் கைவிடவில்லை.

ஹுயைக்கு தென்புறத்திலுள்ள குரைளாக்களின் குடியிருப்பு வழியாக மதீனாவுக்குள் நுழைய வேண்டும். அதற்காக அவர் கஅபிடம் மிக சாதுர்யமாகப் பேசினார்.

‘பனூ கைனுகாக்களும் பனூ நளீர்களும் மதீனாவிலிருந்து விரட்டப்பட்டுவிட்டனர். அதைப்போல் நீங்களும் ஒருநாள் விரட்டப்படுவீர்கள். அதற்குள் நீங்கள் எங்களோடு சேர்ந்து முஸ்லிம்களை அழித்துவிட முன்வர வேண்டும். இப்போது குறைஷிகள் முஸ்லிம்களை அழித்துவிடப் பத்தாயிரம் பேரோடு வந்து நிற்கிறார்கள். இம்முறை அது கட்டாயம் நிறைவேறும்’ எனக் கூறிய ஹுயை குறைஷிப்படையோடு வந்துள்ள நளீர்கள், கத்தபான்கள், கினானாக்கள் பற்றிய வர்ணனையை மிக விளக்கமாகக் கூறினார்.

‘முஸ்லிம்கள் வடக்கே அமைந்துள்ள அகழிக்குப் பின் படையை நிறுத்தியிருந்தாலும் அவர்கள் எங்கள் குடியிருப்புக்கு வடக்கேயுள்ள பேரீச்சம் தோட்டங்களிலும் பதுங்கியுள்ளார்கள். எங்கள் குடியிருப்புக்கு மேற்கேயுள்ள கூபாவிலும் அவர்களின் ஆட்கள் இருக்கிறார்கள். நீர் எப்படி இங்கு வந்தீர்?’ என கஅப் ஹுயையைக் கேட்டார்.

‘மதீனாவின் வடக்கிலிருந்து கிழக்கே சென்று பின் அந்நகரைத் தொடாமல் தெற்கே பயணம் செய்து உங்களுடைய கோட்டைக்கு வந்துள்ளேன். நீர் எம்மோடு இணைந்து செயல்பட சம்மதித்தால் எம் படையை நான் வந்த வழியிலேயே கொண்டுவந்து உம்முடைய குடியிருப்புகளைத் தாண்டி பேரீச்சம் பழத் தோட்டங்களைப் பிளந்து மதீனாவுக்குள் நுழைய வைத்துவிடுவேன். பின்னர் மதீனாவில் மரண ஓலந்தான் கேட்கும்’ என ஹுயை சொன்னபோது கஅபின் கண்களில் அந்தக் காட்சி தோன்றி ஒப்பந்த மீறலைச் செய்ய உந்தித்தள்ளியது.

ஹுயையின் வஞ்சக வலையில் கஅப் விழுந்த செய்தி அண்ணலாரை எட்டியது. ஒற்றர்கள் சொன்ன செய்தி உண்மைதானா என அறிந்து வர அண்ணலார் அத்தை மகன் சபிய்யாவின் அன்பு மகன் ஸுபைரை அனுப்பி வைத்தார். அவரோடு அன்ஸாரிகளின் ஸஅத் பின் உபாதாவும் ஸஅத் பின் முஆதும் உஸைதும் சென்றனர்.

குரைளாக்களின் கோட்டையை அடைந்த முஸ்லிம் தோழர்கள் நால்வருக்கும் ஹுயையின் சதிவலையில் கஅப் சிக்கியிருப்பது தெரியவந்தது. கஅப் திமிராகப் பேசினார். தமக்கும் முஸ்லிம்களுக்கும் எவ்வித ஒப்பந்தமும் கிடையாது என நெஞ்சை நிமிர்த்திச் சொன்னார்.

அவர் கண் முன் மதீனா குறைஷிப்படையிடம் மண்டியிட்டுக் கிடப்பதுபோல் தோன்றியது.

அண்ணலார் குறைளாக்களைச் சந்திக்க நால்வர் அணியை அனுப்பியபோது, செய்தி உண்மையானால் அதைப் பகிரங்கமாகக் கூற வேண்டாம். கமுக்கமாக சங்கேதமொழியில் கூறவும் எனக் சொல்லி அனுப்பியிருந்தார்.

அண்ணலார் மொழிந்ததற்கிணங்க நால்வரணி அண்ணலாரிடம் வந்து ‘காராவும் அதல்லும்’ எனக் கூறியது. அண்ணலார் அதன் பொருளை உடன் புரிந்து கொண்டார்.

குபைபுக்கும் அவரது தோழர்களுக்கும் துரோகமிழைத்த ஹுதைலைச் சேர்ந்த இரு கோத்திரங்களே காராவும் அதல்லும். அவர்களை அன்றைய முஸ்லிம்கள் துரோகச் சின்னமாகக் குறிப்பிட்டனர்.

குறைளாக்களின் துரோகத்தையறிந்த அண்ணலார் மிக விரைவாகச் செயல்பட்டார். ஹுயை அகழியின் முன் கைபிசைந்து நிற்கும் குறைஷிப்படையில் ஓரணியைக் கூட்டிக் கொண்டு குறைளாக்களின் கோட்டைக்குச் செல்வார். பின் அங்கிருந்து மதீனாவைப் பிடிக்க மாபெரும் படையெடுப்பை நடத்துவார் என்பதை உணர்ந்த அண்ணலார் முஸ்லிம் படையிலிருந்த கணிசமான போராளிகளை மதீனாவின் தென்பகுதியில் பாதுகாப்புக்காக அனுப்பிவைத்தார்.

ஹுயை அபூசுப்யானிடம் ‘குறைளாக்கள் நம்முடன் ஒத்துழைக்க சம்மதித்துவிட்டனர். எனவே நம் படையைத் தெற்கே கொண்டு சென்று மதீனாவுக்குள் நுழையலாம்’ எனக் கூறினார்.

‘குறைளாக்கள் முஸ்லிம்களோடு செய்து கொண்டுள்ள உடன்படிக்கையை மீறுவதுபோல் நம்மோடு நடித்து நாம் அனுப்பி வைக்கும் படையை மதீனாவுக்குள் வரச் செய்து, பின்னர் முஸ்லிம்களோடு சேர்ந்து கிடுக்கிப் போட்டால் என்ன செய்வது? நம் படை சின்னா பின்னப் பட்டுவிடுமே!’ எனத் தன் அச்சத்தை அபூசுப்யான் கூற குறைளாக்கள் கோட்டை வழி போர் ஏற்பாடு தடைப்பட்டது. இதற்குள் முஸ்லிம்கள் தென் மதீனாவின் பாதுகாப்பை வலுப்படுத்தினர்.

நாட்கள் நகர்ந்தன

குறைஷிப்படைக்குப் பல்வேறு சங்கடங்கள்; பகலில் வெயிலில் காய்ந்து இரவில் குளிரில் உடல் நடுங்கினர். உணவு இருப்பு குறைந்தது.

ஒட்டகங்களுக்கும் குதிரைகளுக்கும் தீனிப்பஞ்சம்.

முஸ்லிம்களுக்கும் பல சங்கடங்கள். அகழி அகலமாயிருந்தாலும் எங்காவது ஓரிடத்தைச் சரிசெய்து தாண்டிவிடும் சாத்தியமிருந்தது. முஸ்லிம்களின் படை அகழியின் நீண்ட பகுதியை இரவு பகல் பாராது கண்காணிக்க வேண்டியிருந்தது.

அம்ரு என்பவரும் இக்ரிமாவும் மேலும் இருவரும் அகலம் குறைவான கிழக்குப் பகுதியிலிருந்து அகழியைத் தாண்டிவிட்டனர்.

அலீ அம்ருவைக் கொன்றுவிட்டார். இக்ரிமாவும் மற்றும் இருவரும் முஸ்லிம்களின் அம்புகளைச் சந்திக்க முடியாமல் வந்த வழியே தப்பி ஓடினர்.

மக்ஸூமின் நவ்வல் அகழியைத் தாண்ட முயன்று குதிரையோடு குழியில் விழுந்து மரணத்தைத் தழுவினார்.

முஸ்லிம்கள் அன்றாடக் கடன்களைச் செய்வதிலும் கடமையான தொழுகைகளை நிறைவேற்றுவதிலும் சிரமப்பட்டார்கள். உணவுப் பற்றாக்குறை வேறு! குரைளாக்களின் உதவியோடு குறைஷிப்படை மதீனாவின் பெண்களையும் பிள்ளைகளையும் சிறைப் பிடித்து விடுமோ என்ற பயம் வேறு!

அண்ணலார் பல்வேறு வகையிலும் யோசித்து ஒரு முடிவுக்கு வந்தார். அம்முடிவின் படி அண்ணலார் எதிரிப் படையினரிடையே பிரிவினை செய்ய விழைந்தார்.

முதலில் குறைஷிப்படையில் வலுவானவர்களாக நின்றிருந்த கத்தபான்களை தம் கைக்குள் போட நினைத்தார். மதீனாவின் பேரீச்சம் பழ மகசூலில் மூன்றில் ஒரு பங்கைக் கத்தபான்களுக்குக் கொடுப்பதாகவும் எனவே போரிலிருந்து விலகிச் செல்லும்படியும் கூறி அண்ணலார் ஒருவரைத் தூது அனுப்பினார்.

கத்தபான்களோ இரண்டில் ஒரு பங்கைக் கேட்டனர். அண்ணலார் மூன்றில் ஒரு பங்கே தருவோம் என உறுதியாகக் கூறினார்.

இதைக் கேள்விப்பட்ட அன்ஸாரிகள் ‘நாங்கள் நேர்வழியை அடையும் முன்பு கூட கத்தபான்களுக்கு ஒரு பேரீச்சம் பழத்தைக் கூட இலவசமாகக் கொடுத்ததில்லை. இப்போதோ நாங்கள் நேர்வழியில் நிற்கின்றோம். நாம் வெல்வோம், இறையருளால் வெல்வோம். எனவே நாம் ஒரு பழத்தையல்ல சிறு பிஞ்சைக்கூட கத்தபான்களுக்குக் கொடுக்கத் தேவையில்லை’ எனக் கூற அண்ணலாரும் தோழர்களின்

வார்த்தைக்குச் சம்மதித்தார்.

கத்தபான்களை முழுவதுமாக குறைஷிப்படையிலிருந்து பிரிக்க முடியாவிட்டாலும் அவர்களின் கிளைகளைத் தறிக்கலாம் என அண்ணலார் எண்ணிக் கொண்டிருந்தபோது நுஐம் வந்து சேர்ந்தார்.

பஸாரா, முர்ரா, அஷ்ஜா என மூன்று கிளைகள் இணைந்ததே கத்தபான் கோத்திரம். இவர்களில் அஷ்ஜா கிளையைச் சேர்ந்தவர் நுஐம்.

பத்ருப் போருக்குப் பின் குறைஷிகளால் பேரம்பேசி முஸ்லிம்களிடம் அனுப்பப்பட்டவர் நுஐம். முஸ்லிம்கள் மீண்டும் பத்ருவுக்கு வராமலிருக்க இருபது ஒட்டகங்கள் தருவதாக குறைஷிகளால் மதீனாவுக்கு அனுப்பப்பட்டவர். நுஐமால் முஸ்லிம்கள் பத்ரு நோக்கிச் செல்வதை நிறுத்த முடியவில்லை. இருபது ஒட்டகங்களைப் பெற முடியாது போன நுஐம் இஸ்லாமிய ஒளியைப் பெற இறைவன் அருளினான்.

அந்த நுஐம்தான் அண்ணலாரிடம் வந்து ‘என்ன செய்ய வேண்டும் எம்பெருமானாரே! இறைவனுக்காகவும் இறைவனின் தூதருக்காகவும் என்னவெல்லாம் செய்ய வேண்டுமோ செய்வேன்’ எனக் கூறி நின்றார்.

அண்ணலார் அவரிடம் எதிரில் நிற்கும் கலப்புப் படையினரிடம் பிரிவினை செய்யச் சொன்னார். யூதர்கள் குறைஷிகளிடையேயிருந்த நடுத்தரச் சமுதாயம் கத்தபான்கள். அந்தக் கத்தபான்களிடையே தோன்றிய நுஐம் போன்றவர்கள் இங்குமங்கும் அலைந்து திரிபவர்கள். எனவே நுஐம் போன்றவர்களைப் பெரும்பாலான சமுதாயங்கள் நன்கறியும். அவரும் பலரையும் அறிவார்.

நுஐம் முதலில் பனூ குரைளாக்களிடம் சென்றார். அதன் தலைவர் கஅப்பைக் கண்டு பேசினார். ‘ஒப்பந்தப்படி நீங்கள் நகரைத் தாக்க வந்த குறைஷிகளை எதிர்த்துப் போரிட வேண்டும். அவ்வாறு செய்யாமல் கோட்டைக்குள் வாழ்ந்த நீங்கள் ஹுயை நம்பி முஸ்லிம்களைப் பகைக்க யூத மதந்தான் காரணமா? பத்தாயிரம் பேர் படையெடுத்து வந்ததால் வெற்றி குறைஷிகளுக்குத்தான் என நம்பிவிட்டீர்களா? அவர்கள் அகழிக்கு முன்னே கைபிசைந்து மெய் சோர்ந்து நிற்கிறார்கள். அகழியைத் தாண்ட முயன்றவர்கள் குதிரைகளோடு குழியில் விழுந்து அலறுகிறார்கள். எங்காவது ஓர் இடத்தில் அகழியைத் தாண்டியவர்கள் மார்பில் பாய்ந்த அம்பை அகற்ற முடியாமல் செத்துமடிகிறார்கள். சத்தியமாக வெற்றி பத்தாயிரம் பேருக்கல்ல; மூவாயிரம் பேருக்கே!

மூவாயிரம் பேர் வெற்றி பெற்றால் ஒப்பந்தத்தை முறித்துக் கொண்ட உங்கள் கதி என்னவாகும்? எனவே நீங்கள் குறைஷிகளிடையேயுள்ள சில தலைவர்களைப் பணயமாகப் பெற்றுக் கொண்டு உங்கள் வேலைகளைத் தொடங்குங்கள்' என்ற நுஐமின் பேச்சு குரைளாக்களை திசை திருப்பியது.

அடுத்து நுஐம் குறைஷிகள் படைத்தளபதி அபூசுப்யானிடம் சென்றார்; தனக்குத் தெரிந்த செய்திகள் என சிலவற்றைச் சொன்னார்.

'குறைஷியரின் பெருந்தலைவரே! நளீர்களை நம்பி வந்த நீங்கள் இப்போது குரைளாக்களை நம்பி மோசம் போகப் போகிறீர்கள்! உங்களுக்கு உதவுவதாகச் சொல்லியனுப்பியுள்ள அவர்கள் இப்போது முஸ்லிம்களோடு பேசிவருகிறார்கள். தாம் ஹுயையிடம் சொல்லியனுப்பியதெல்லாம் வெறும் பேச்சு என்றும் அவர்களை முஸ்லிம்களிடம் பணியவைக்கச் செய்த தந்திரம் என்றும் கூறியுள்ளனர். அவர்கள் உங்களுக்கு உதவி செய்ய உங்கள் தலைவர்களில் சிலரைப் பணயமாகக் கேட்கவுள்ளார்கள். பணயமாகப் பெறும் உங்கள் தலைவர்களை அவர்கள் முஸ்லிம்களிடம் அளித்து சிரமறுக்கச் செய்துவிடத் திட்டமிட்டுள்ளனர். உங்களின் தலைவர்களை நீங்கள் இழப்பதின் மூலம் உங்கள் படை, தளபதிகளின்றிச் சிதறிவிடும் என குரைளாக்களும் முஸ்லிம்களும் எண்ணுகின்றனர். எனவே நீங்கள் பணயமாக எவரையும் அனுப்பிவிடாதீர்கள். பொதுவாக நீங்கள் மொத்த யூதர்களையும் நம்பி மோசமடைந்துவிடாதீர்கள். இது கமுக்கமான செய்தி; நான் சொன்னதாக யாரிடமும் கூறிவிட வேண்டாம்' என நுஐம் சொன்னது நம்பிக்கைக்குரிய செய்தியாக இருந்தது.

அபூசுப்யான் நுஐம் கூறியதை நம்பினார். அதைப்போல் கத்தபான்களிடமும் நுஐம் சென்று மொழிந்ததை அவர்களும் நம்பினர். தம் இனத்தோழர் பொய் சொல்லமாட்டார், தமக்கே நன்மை செய்வார் என நம்பிய கத்தபான்கள் நுஐமைப் பெரிதும் பாராட்டினர்; உபசரித்தனர்.

அபூசுப்யான் இக்ரிமாவை பனூகுரைளாக்களிடம் அனுப்பினார். இக்ரிமா, நாளையப் போரில் கலந்து கொள்ள குரைளாக்களை அழைத்தார்.

'நாளை ஸப்பத்தினம்! எங்களுடைய புனித நாள்! அந்நாளில் வாளேந்த மாட்டோம், வில்லேந்த மாட்டோம்' என கஅப் கூறியபோது இக்ரிமாவின் நெஞ்சத்தில் சந்தேக அலைகள்!

அச்சந்தேக அலைகளைச் சிறிதாக்கி அப்போது ஆழிப்பேரலைபோல் கஅப் சொன்னார்: யுத்தத்தில் கலந்துகொள்ள நீங்கள் உங்களின் தலைவர்களில் சிலரை எமக்குப் பணயமாகத்தர வேண்டும். அப்போதுதான் யுத்த முடிவு எதுவாகயிருந்தாலும் எங்களுக்குப் பாதுகாப்புக் கிடைக்கும்!

கஅப் கூறியதை அபூசுப்யான் ஹுயையிடம் கூறினார். ஹுயையும் 'நாளை சனிக்கிழமை, ஸப்பத்தினம் போரிடக் கூடாத புனித நாள். எனவே ஞாயிறன்று குரைளாக்கள் கொல்லைப் புறத்திலிருந்து போரிடப் புறப்பட்டுவருவார்கள்' என்றார்.

பனூ குரைளாக்கள் குறைஷிப்படையோடு கைகோர்க்க பணயமாகத் தலைவர்களைக் கேட்டுக் கொண்டிருந்தனர். குறைஷிகள் பணயமாக உயிர்ப் பொருள்களைத் தருவதாக இல்லை!

ஹுயை உலுக்கி எடுக்கப்பட்டதால் குரைளாக்களின் கோட்டைக்குச் சென்றார். கோட்டை திறக்கப்படவில்லை.

இரண்டு வாரங்கள் கடந்துவிட்டன

குதிரைகளுக்குத் தீவனமில்லை; அவை புரண்டு எழக்கூட முடியாது பலவீனமடைந்திருந்தன; சில செத்தன! ஒட்டகங்களின் கதையும் குதிரைகளின் கதைதான்!

கத்தபான்களின் வயிறு காய்ந்தது; முகம் சுருங்கியது; கை கால்கள் நடுங்கின.

கத்தபான்கள், முஸ்லிம்களால் தம் மார்க்கத்துக்கு ஆபத்து என எண்ணிப் போரிட வந்தவர்கள் அல்லர். அவர்கள் குறைஷியர் கொடுத்த பொருளுக்காகவும் போரில் கிடைக்கும் கொள்ளைப் பொருளுக்காகவும் வந்தவர்கள்.

போர் நடப்பதாகத் தெரியவில்லை; போர் நடந்தாலும் போரில் வெற்றி கிடைப்பதாகத் தெரியவில்லை. அவர்கள் மனஞ்சோர்ந்தார்கள். அவர்களுக்கு முஸ்லிம்களின் கொள்கை தெரிந்திருக்குமானால் போருக்கு வந்திருக்க மாட்டார்கள். புதிய மார்க்கத்தில் இணைய வந்திருப்பார்கள்.

கத்தபான்கள் தங்கள் குதிகால்களைப் பார்த்துக் கொண்டார்கள்.

குதிகால்களைப் பார்த்த அவர்கள் தங்களின் பட்டினி கிடக்கும் குதிரைகளைப் பார்த்தார்கள். அவர்களின் பார்வை தாம் வந்த திசையை நோக்கித் திருப்பியது.

அகழிப்போர் தொடங்காமல் தொடங்கி 27ஆவது நாள்

பெரும்மழை, பேரோசைகளோடு சூறாவளி! வானமேறிவந்த கடல் மழையாகக் கொட்டுவது போலிருந்தது. தொடர்ந்த மழையில் பகலும் தெரியவில்லை, இரவும் தெரியவில்லை.

கூடாரங்கள் கிழிந்தன; பல கூடாரங்கள் சாய்ந்தன. இருக்கவும் இடமில்லை; நிற்கவும் முடியவில்லை; தூக்கமின்றித் தவித்தனர்.

மாமழை நின்று கதிரவன் காட்சி தந்தபோது பாசறையே காலியாகியிருந்தது. கூடாரங்கள் தரையோடு தரையாகக் கிடந்தன.

சில ஒட்டகங்களும் குதிரைகளும் சாய்ந்து கிடந்தன.

அகழி நிரம்பியிருந்தது. குறைஷிப்படை இருந்திருக்குமாயின் அகழியில் நீந்தி அக்கரையை அடைந்து வாளை நீட்டியிருப்பர்.

> ‘நம்பிக்கையாளர்களே! (அண்மையில்) அல்லாஹ் உங்களுக்குச் செய்திருக்கின்ற பேருதவியை நினைவுகூருங்கள்: எதிரிப்படையினர் உங்களைத் தாக்க வந்தபோது நாம் அவர்கள்மீது ஒரு கடும் புயற்காற்றை ஏவினோம். உங்கள் கண்களுக்குத் தென்படாத படைகளையும் அனுப்பினோம். அப்போது நீங்கள் செய்து கொண்டிருந்தவற்றையெல்லாம் அல்லாஹ் பார்த்துக் கொண்டுதான் இருந்தான்.’

(திருக்குர்ஆன் 33: 9)

## குரைளாக்களின் அழிவு!

அகழிப்போர் முடிந்தவுடன் அண்ணலார் பனூகுரைளாக்களின் ஒப்பந்த மீறலுக்காக நடவடிக்கை எடுக்க அவர்களின் கோட்டையைச் சுற்றி முற்றுகையிடச் செய்தார்.

அம்முற்றுகை பதினைந்து நாட்கள் நடந்தது. ஏற்கெனவே பனூ கைனுகா, பனூ நளீர்கள் செய்த ஒப்பந்த மீறலுக்காகவும் கீழறுப்பு வேலைகளுக்காகவும் மதீனாவிலிருந்து அப்புறப்படுத்தப்பட்டிருந்தனர். இப்போது மீதமிருந்த குரைளாக்கள் யூத புத்தியைக்காட்ட...!

முற்றுகையைத் தவிர்த்துக்கொள்ள வேண்டி குரைளாக்களின் தலைவர் கஅப் முஸ்லிம்களாகி விடுவோமா என தம் மக்களிடம் கேட்க, அவர்கள் சம்மதிக்கவில்லை. தவ்ராத் வேதத்தையும் மூஸா நபிகளாரின் கட்டளைகளையும் தவிர்த்து வேறு வேதத்தையோ வேறு நபியையோ

பின்பற்ற மாட்டோம் எனக் குறைளாக்கள் கூறிவிட்டனர்.

அப்படியானால் என்ன செய்வதென யோசித்த குறைளாக்கள் அன்ஸாரிகளில் முக்கியமானவரும் அவ்ஸ்களின் தலைவருமான ஸஅத் இப்னு முஆதை நடுவராக்க விரும்பினர். அண்ணலாரும் ஸஅதின் தீர்ப்பைக் கேட்கச் சம்மதித்தார்.

அவ்ஸ்களின் நெருங்கிய தோழர்கள் பனூ குறைளாக்கள். கஸ்ரஜ்களின் நெருங்கிய தோழர்கள் பனூ கைனுகாக்கள்.

முந்தைய ஒரு பிரச்னையில் பனூ கைனுகாக்களுக்குக் காட்டப்பட்டது போன்ற ஒரு கருணை பனூ குறைளாக்களுக்கும் காட்டப்பட வேண்டுமென அவ்ஸ்கள் விரும்பினர்.

அவ்ஸ்களின் தலைவர் என்ன சொல்வார், என்ன செய்வார் என மதீனாவே விழிதிறந்து பார்த்தது.

அகழிப்போரில் கையில் காயம்பட்டு அதிகமான குருதியைக் கொட்டியிருந்த ஸஅத் யூதர்களின் வேதமான தவ்ராத்தைக் கொண்டுவரச் செய்தார்.

முதிய வயதும் முதிர்ச்சியும் பெற்றிருந்த ஸஅத் கைவலியோடு தவ்ராத் வேதத்தை வாங்கி குறைளாக்களின் தலைவர் கஅபிடம் கொடுத்து 'ஒப்பந்தத்தை மீறி உள்ளுக்குள் இருந்தபடியே உடன்படிக்கையை முறித்து கூட்டுறவுக்காரரைக் கொல்ல முயல்பவருக்கான தண்டனை பற்றி தவ்ராத் என்ன சொல்கிறது எனப் படியுங்கள்' என்றார்.

கஅப் தவ்ராத்தைப் புரட்டினார்; முன்பின் பார்த்தார். தவ்ராத்தைப் புதிதாகப் பார்ப்பதுபோல் புரட்டிப் புரட்டிப் பார்த்தார். உடன்படிக்கையை மீறுபவர்க்கு என்ன தண்டனை, அதை மீறிக் கூட்டுறவாளரைக் கொல்ல முயன்றால் என்ன தண்டனை என்பதையெல்லாம் கஅப் நன்கறிவார். அவை பற்றிய செய்திகள் தவ்ராத்தில் எங்கேயுள்ளன என்பதையும் தெளிவாக அறிவார். என்றாலும் அவர் தெரியாததைப்போல் தேடினார். பின் எழுத்துக் கூட்டி எழுத்துக் கூட்டிப் படித்தார். கண்களில் கண்ணீர் சுரந்தது, கைகள் ஆடின; கால்கள் வலுவிழந்தன.

'உடன்படிக்கையைத் தாமாக முறித்து கூட்டுறவாக இருந்தவரை எதிர்த்துப் போரிட்டால் அதைச் செய்யும் மக்களில் ஆடவர்க்கு மரண தண்டனை அளிக்கப்பட்டு பெண்களும் பிள்ளைகளும் சிறைப்பிடிக்கப்பட வேண்டும்!'

தவ்ராத் வேதம் சொல்லும் தண்டனையைப் படித்து முடித்த கஅப் கூறினார்: இஸ்ரவேலின் மக்களுக்கு எதிராக இறைவன் தனது வேதத்திலேயே ஒரு கட்டளையை ஒரு நியதியை ஒரு படுகொலையை நிறைவேற்றக் கூறியுள்ளான். இறைவனின் ஆணையை மீற முடியாதவர்களாக உள்ளோம்.

ஆண்களுக்கு மரண தண்டனை, பெண்களுக்கும் பிள்ளைகளுக்கும் அடிமை வாழ்வு.

பெண்களும் பிள்ளைகளும் தத்தம் சொத்துக்களுடன் முற்றுகையில் பங்கேற்ற முஸ்லிம்களுக்குப் பகிர்ந்து கொடுக்கப்பட்டனர். இவர்களில் பலரை கைபரிலிருந்து வந்த பனூ நளீர்கள் பிணைத்தொகை கொடுத்து விடுவித்துச் சென்றனர்.

பனூ குரைளாக்களை பனூ நளீர்கள் மீட்டுச் சென்றது வியப்புக்குரியதல்ல. அவர்கள் நளீர்கள், குரைளாக்கள், கைனுகாக்கள் எனப் பிரிந்து வாழ்ந்தாலும் இனத்தாலும் குணத்தாலும் ஒத்த மனத்தாலும் யூத சமுதாயத்தினரே! அவர்கள் தங்களுக்குள் உறவும் கொள்வினை, கொடுப்பினையும் வைத்திருந்தார்கள்.

நளீர்களது ஸைதின் மகளான ரைஹானா குரைளாக்களுள் ஒருவரை மணந்திருந்தார். யூதப் பெண்களும் பிள்ளைகளும் முஸ்லிம்களுக்குப் பங்காகக் கிடைத்தபோது அண்ணலாரின் பங்கில் கிடைத்தவரே ரைஹானா!

அண்ணலாருக்குக் கிடைத்த அடிமைப் பெண் ரைஹானா அண்ணலாரின் சிறிய தாயார் ஸல்மாவின் பொறுப்பில் விடப்பட்டார்; ஸல்மா குரைளாக்களோடு ஏற்கெனவே நல்ல உறவை வளர்த்திருந்தார்.

ஸல்மாவின் வீட்டில் முன்பு தஞ்சமடைந்த யூதமத ரிபாஆவும் அவரது பனூஹத்ல் உறவினரும் ஏற்கெனவே இஸ்லாத்தைத் தழுவியிருந்தனர்.

இஸ்லாத்தை ஏற்க விரும்பாத ரைஹானா நாளடைவில் இஸ்லாமிய கருத்துகளால் கவரப்பட்டார். இதற்குக் காரணம் ஸல்மா மட்டுமல்ல, ரிபாஆவும் அவரது தோழருமாவர்.

இஸ்லாத்தை ஏற்க விரும்பாத ரைஹானா இஸ்லாத்தை ஏற்றது இறைவனின் பேரருள். பேரருளைப் பெற்ற ரைஹானாவுக்கு அண்ணலாரின் பேரன்பு கிடைத்தது. அடிமைப்பெண் ரைஹானா அன்புத் துணைவியானார்.

பனூ நளீர்களின் ஸைதின் புதல்வி ரைஹானா அண்ணலாரோடு ஐந்து ஆண்டுகள் இருந்தார்.

## முஸ்தலீக் போர் முடிந்தபின்...!

அகழியுத்தம் முடிவடைந்து ஐந்து மாதங்கள் கழித்து சிரியாவிலிருந்து வந்த வணிகக் குழுவை முஸ்லிம்கள் வழிமறித்து கொள்ளையிட்டனர்.

கொள்ளைப் பொருளின் விலைமதிப்பு அதிகம். அதில் ஸப்வானுக்குச் சொந்தமான வெள்ளிப் பாளங்களும் இருந்தன.

170 குதிரைகளோடு ஜைதின் தலைமையில் சென்ற படை குறைஷிகளின் பொருள்களைக் கொள்ளையிட்டு மதீனாவுக்குக் கொண்டுவந்தது. வணிகக் குழுவிலிருந்த பலர் சிறைப்பிடிக்கப்பட்டனர்; சிலர் தப்பியோடினர்.

தப்பியோடியவர்களுள் அண்ணலாரின் முதல் மருமகன் அபுல் ஆசும் இருந்தார். அவர் தன் மனைவி ஸைனபைத் தேடி மதீனாவுக்குள் நுழைந்திருந்தார்.

அபுல் ஆஸ்தான் கொள்ளையடிக்கப்பட்ட வணிகக் குழுவின் தலைவரென்ற தகவல் ஸைனப் மூலம் அண்ணலாரையும் முஸ்லிம்களையும் எட்டியது. முஸ்லிம்கள் கொள்ளையடிக்கப்பட்ட பொருள்களைத் திருப்பிக் கொடுக்க முன்வர அபுல் ஆஸ் மனம் மாறினார்.

மக்கா சென்ற அபுல் ஆஸ் மதீனா வந்து முஸ்லிமாகி ஸைனபோடு வாழத் தொடங்கினார்.

அபுல் ஆஸின் வணிகக் குழு கொள்ளையடிக்கப்பட்டபின் குறைஷிகள் செங்கடலோரப் பாதையில் செல்ல விரும்பினர். அதற்காக அப்பாதையிலிருந்த குஸாஅக்களின் பனூ முஸ்தலீக் கிளையாரைக் கைக்குள் போட்டுக்கொண்டு மதீனாவைத் தாக்கத் தூண்டினர்.

பனூ முஸ்தலீக் தவிர மற்ற குஸாஅ கிளைகள் அண்ணலாரோடு உறவு கொண்டிருந்தனர். பனூ முஸ்தலீக்குகள் மதீனாவைத் தாக்கப் போகும் செய்தியறிந்த அண்ணலார் வழமைப்படி குகைக்குள்ளே சிங்கத்தைச் சந்திக்க சென்றார்.

அண்ணலார் பனூ முஸ்தலீக் கிளையினர் தண்ணீரெடுக்கும் கிணற்றருகே பாசறையை அமைக்க மோதல் தொடங்கியது.

முஸ்லிம்களில் ஒருவரும் முஸ்தலீக்குகளில் பத்துப்பேரும் மரணமடைய எதிரிகள் சரணடைந்தனர்.

இரு நூறு குடும்பங்கள் சிறைப்பிடிக்கப்பட்டனர். இரண்டாயிரம் ஒட்டகங்கள், ஐயாயிரம் செம்மறியாடுகள், எண்ணற்ற ஆடுகள் போரின் வெற்றியால் கிடைத்தன.

பனூ முஸ்தலீக் குலத்தாரைத் தோல்வியுறச் செய்தபின்னர், இஸ்லாமியப் படைகள் முரைஸிஃ எனும் கிணற்றருகே உள்ள ஓர் ஊரில் தங்கியிருந்தனர். அப்போது தண்ணீர் அள்ளும் வாளியை எடுப்பதில் இருவருக்குத் தகராறு.

இருவரில் ஒருவர் ஜஹ்ஜாஹ் பின் மஸ்ஊதுல் கிஃபாரி. உமர் (ரலி) அவர்களின் குதிரையைப் பராமரித்து வந்த பணியாளரான தோழர் ஒரு முஹாஜிர். இன்னொருவர் ஸினான் பின் வப்ரு அல் ஜுஹனி. இவர் கஸ்ரஜ் குலத்தாருடன் ஒப்பந்தம் செய்து கொண்டிருந்த ஒரு கோத்திரத்தைச் சேர்ந்தவர், ஓர் அன்ஸாரி.

வாய்ச்சண்டை கைச்சண்டையானது. ஜஹ்ஜாஹ் ஸினானை எட்டி உதைத்துவிட்டார். இதனால் பெரும் அவமானம் அடைந்த ஸினான் அன்ஸாரிகளை உதவிக்கு அழைத்தார். ஜஹ்ஜாஹ் முஹாஜிர்களை துணைக்கு அழைத்தார்.

வெறும் வாய்க்கு அவல்! கிணற்றடிச் சண்டையைப் பற்றிக் கேள்விப்பட்ட அப்துல்லாஹ் இப்னு உபை அவ்ஸ்கஸ்ரஜ் குலத்தாரைத் தூண்டி விட்டார். அன்ஸாரிகளும் முஹாஜிர்களும் கிணற்றைச் சூழ்ந்தனர். தனிமனிதர் தகராறு குழு மோதலாக உருவாக இருந்தது. ஒன்றாக நின்று எதிரிகளை வென்றவர்கள் இரண்டாக உடைந்து போக காத்திருந்தனர்.

கிணற்றடியிலிருந்த கூட்டத்தையும் எழுந்த கூச்சலையும் கேட்ட அண்ணலார் தீக்குரல் கேட்ட இடத்தை நோக்கி விரைந்தார்.

‘என்ன இங்கே கூட்டம்? ஏன் எழுந்தது கூச்சல்? அஞ்ஞான கால கூச்சல் போட்டு அங்கேயே மீண்டும் செல்ல ஆசை வந்துவிட்டதா? இதை விட்டுவிடுங்கள். இது மிக அருவருக்கத்தக்க இழி செயலாகும்’ என அண்ணலார் கூற, இருதரப்பையும் சேர்ந்த பெரியார்கள் பகைமை நெருப்பை சமாதான நீரூற்றி அணைத்தனர். ஸினான், ஜஹ்ஜாஹ்வை மன்னித்து சமரசம் செய்து கொண்டார்.

சமரசத்தை விரும்பாது சண்டையை விரும்பிய அப்துல்லாஹ் பின் உபையின் ஆட்கள் நிராசை அடைந்தனர். அவர்கள்

அப்துல்லாஹ்விடம் வந்து ‘உம்மையே நாங்கள் நம்பியிருந்தோம், நீரோ நெருப்பாக இல்லாமல் சாம்பலாகப் போய்விட்டீர். சாதி சனத்துக்கு உதவாமல் நாதியற்றவர்களுக்கு உதவப் போய்விட்டீர்’ என கடுமையாகப் பேசினார்கள்.

கிணற்றடிச் சமரசத்தால் கொதித்துப் போயிருந்த அப்துல்லாஹ் எரிமலைக் குழம்பானார். ‘செய்யக் கூடாததையெல்லாம் செய்துவிட்டு, இப்போது என்னிடம் முறையிட்டு என்ன பயன்? நாட்டைக் கொடுத்தீர்கள், வீட்டைக் கொடுத்தீர்கள். வெறும் கை வீசி வந்தவர்களுக்கு நிலத்தையும் நிதியையும் கொடுத்தீர்கள். பங்காளியாகவும் கூட்டாளியாகவும் ஆக்கிக் கொண்டீர்கள். இப்போதோ பகையாளியாகி நிற்கிறார்கள். நீங்கள் செய்த செயல்களுக்கான எதிர்வினைகளே இவை. நாயைக் குளிப்பாட்டி நடுவீட்டில் வைத்த கதையாகிவிட்டது. நாய் குரைக்க மட்டும் செய்யவில்லை; கடிக்கவும் தயாராகிவிட்டது. இறைவன்மீது ஆணை! மதீனா திரும்பிச் சென்றபின் நம்மில் கண்ணியமுள்ளவர்கள் இந்தக் கேவலமானவர்களை வெளியேற்றிவிடுவார்கள்’ என தன் சகாக்களிடம் கூறினார்.

இதைக் கேள்விப்பட்ட அண்ணலார் போர்க்களத்துக்கு வந்தவர்கள் வாய்க்களத்துக்குச் செல்வதை விரும்பவில்லை. தங்கியிருந்தால்தானே தர்க்கங்கள் எழும் என்பதைப் புரிந்து ஓய்வுக்காக இறங்கிய படையை பயணம் செய்யும்படிச் செய்தார்.

படை புறப்பட்டது. ஆனால் வழக்கப்படி அது படை புறப்படும் நேரமில்லை. புறப்பட்ட படை தொடர்ச்சியாக 30 மணி நேரம் இரவுபகல் பாராது நடந்து கொண்டே இருந்தது. இவ்வாறு நெடுநேரம் அண்ணலார் பயணிக்க அனுமதித்ததில்லை.

முரைசிஃ கிணற்றடித் தகராறு எல்லோருக்கும் தெரிந்துவிடக் கூடாதென அண்ணலார் எண்ணினார். ஆனால், அது அன்ஸாரிகள் அனைவருக்கும் தெரிந்துவிட்டது. சிலர் அப்துல்லாஹ் இப்னு உபையிடம் ‘நீர் அண்ணலாரிடம் சென்று மன்னிப்புக் கோரும்’ என்றனர்.

‘அவர்மீது நம்பிக்கை கொள்ளச் சொன்னீர்கள்; நான் நம்பிக்கை கொண்டேன். என் செல்வத்துக்கு ஜகாத் கொடுக்க வேண்டுமென்று கூறினீர்கள்; நான் ஜகாத்தும் கொடுத்துவிட்டேன். நான் இப்போது முஹம்மதுக்கு ஸஜ்தா சிர வணக்கம் செய்வது ஒன்றுதான் பாக்கி’ என அப்துல்லாஹ் இப்னு உபை சொன்னபோது அவர் தன் நிலையிலிருந்து

தாழ்ந்தார்; அன்ஸாரிகளின் நெஞ்சங்களிலிருந்து வீழ்ந்தார்.

வீழ்ந்த அந்த இருகால் பிராணி நயவஞ்சகத்தின் மறுவடிவம்!

இப்னு உபையால் எதுவும் செய்ய முடியவில்லை. கத்தபான்களைக் காணோம்; பனூ குரைளாக்கள் பதுங்கிக் கொண்டனர்.

நளீர்களின் கோட்டையைச் சுற்றியிருந்த பேரீச்சை மரங்களில் சிலவற்றை அண்ணலார் வெட்டி வீழ்த்தச் செய்தனர்.

பேரீச்சை தரும் வளத்திலேயே வளமாக வாழ்ந்த நளீர்கள் மரம் வெட்டப்படுவதை அறிந்து தங்களையே முஸ்லிம்கள் வெட்டுவதாக உணர்ந்தனர்.

புலம் பெயர்ந்து சென்றாலும் பழச்சோலையும் நிலமும் தங்களுடையது என எண்ணியிருந்த நளீர்கள் எதுவுமே சொந்தமில்லையென அறிந்தபோது அண்ணலாரை அழிக்க நஞ்சைக் கலக்கக் காரணமான ஹுயையைச் சபித்தனர்.

இரு வாரங்கள் கடந்தன.

சக கோத்திரங்கள் பஞ்சாயத்து செய்து நளீர்களைப் புலம் பெயரத் தூண்டினர்.

‘உங்களது நிலத்தை விட்டு நீங்குங்கள். உங்கள் ஒட்டகங்கள் சுமக்கும் அளவுக்குப் போதுமான பொருள்களோடு செல்லுங்கள். ஆயுதங்களையும் கவசங்களையும் விட்டுச் செல்லுங்கள்’ என்ற இறுதி அறிவிப்பில் தம் உயிர்களைக் காப்பாற்றிக் கொள்ள எண்ணிய நளீர்கள் அழுத கண்களோடும் ஆறாத மனப்புண்ணோடும் மதீனாவைத் துறந்து பயணம் புறப்பட்டனர்.

ஹுயை கை பிசைந்து நின்றார்...

ஒட்டகங்களில் விலை உயர்ந்த பொருள்கள் ஏற்றப்பட்டன. நளீர்களின் தலைகளிலும் கைகளிலும் பொருள்கள் இருந்தன. நளீர் பெண்மணிகளின் தலை முதல் கால்வரை உயர் ஆபரணங்கள் மின்னின.

அவ்ஸ்களும் கஸ்ரஜ்களும் வெறும் கையும் காலுமாயிருக்க யூதர்களிடமோ தங்கச் சுரங்கங்களே இருந்தன. மாபெரும் செல்வர்களாக வாழ்கின்றனர் எனப் பேசப்பட்ட நளீர்களின் செல்வச் செழிப்பு புலம் பெயர்தலில் தெரிந்தது.

நளீர்கள் மதீனத்துத் தோட்டங்களைத்தான் விட்டுச் சென்றனர். ஆனால் அவர்களுக்கு மதீனாவுக்கு வடபுலத்திலுள்ள பிரதேசங்களில்

தோட்டந்துரவுகள் இருந்தன.

நளீர்களில் பலர் கைபரில் குடியேறினர். மேலும் பலர் வடக்கே சென்று ஜெரிகோவிலும் தென் சிரியாவிலும் குடியேறினர்.

பனூ நளீர்கள் விட்டுச் சென்ற பகுதியில் ஏழை முஹாஜிர்கள் குடியேற்றப்பட்டனர்; இரு ஏழை அன்ஸாரிகளுக்கும் அங்கு குடியிருக்க இடம் அளிக்கப்பட்டது.

## நயவஞ்சகம்!

அப்துல்லாஹ் பின் உபை பின் ஸலூல்

இவர் அன்று யத்ரிபில் வாழ்ந்த மக்களிடையே செல்வமும் செல்வாக்கும் பெற்றிருந்தவர். கஸ்ரஜ் கலத்தைச் சேர்ந்த இவர் காரியங்களைச் சாதித்துக்கொள்ள கட்சி மாறக்கூடியவர். கடலும் ஆறும் சங்கமிக்கும் நீர்ப்பரப்பில் வாழும் ஆற்றுவாய்ச் சுறா போன்றவர்.

அன்று யத்ரிபில் வாழ்ந்த குலங்களில் அவுஸ் குலமும் கஸ்ரஜ் குலமும் அடிக்கடி அடிதடியில் இறங்கிவிடும். சின்ன பிரச்னை என்றாலும் சிலிர்த்தெழுந்துவிடுவர். சிறு கீறல் உடலில் விழுந்தால் போதும், சிரம் அறுக்கக் கிளம்பிவிடுவர். காலைமிதித்தால் போதும், கழுத்தைத் திருகி கடைத்தெருவில் போட்டுவிடுவர்.

அவுஸ் கஸ்ரஜ் குலங்களின் மோதல்களையும் சாதல்களையும் முடிவுக்குக் கொண்டுவர இரு குலத்தாரும் இரவு பகல் பாராது முயன்று இறுதிக் கட்டத்தை அடைந்தனர்.

இரு குலங்களும் பகையை மறந்து உறவு கொள்ள கஸ்ரஜ் குலத்தலைவர் அப்துல்லாஹ் பின் உபையை பெருந்தலைவராக ஏற்றுக் கொள்வதே அந்த இறுதிக் கட்ட முடிவு.

இம்முடிவு எட்டியபோது யத்ரிபில் இஸ்லாம் கால் ஊன்றத் தொடங்கியிருந்தது. அவுஸ் கஸ்ரஜ் குலத்தின் முக்கியமானவர்களில் சிலர் சத்தியப் பாதையில் லட்சியப் பயணம் செய்து கொண்டிருந்தார்கள். சில மாதங்களில் இஸ்லாம் யத்ரிபில் சிம்மாசனத்தில் அமர்ந்து விடக் கூடிய சூழல்.

மகுடம் சூடக்காத்திருந்த மன்னருக்கோ மயக்கமும் தயக்கமும், மக்களெல்லாம் இஸ்லாத்தை ஆரத்தழுவிவிட்டால் அப்துல்லாஹ் பின் உபை யாருக்கு அரசனாவார்? எனவே காற்றடிக்கும் பக்கம் சேர்ந்தார். கபடத்தோடு முஸ்லிம்களைக் கட்டியணைக்க கைகோர்த்தார்.

அப்துல்லாஹ் பின் உபை நினைத்தது நடக்கவில்லை. அண்ணலார் யத்ரிப் வந்ததால் அவர் தலைமைத்துவம் கிடைக்காமல் தடுமாறினார்; அவ்வப்போது தள்ளாடினார். நயவஞ்சகமே அவர்!

பத்ருப் போருக்குப் பின் பனூ கைனுகா யூதர்களின் பகிரங்கமான ஒப்பந்த மீறலுக்காக அண்ணலார் அணியினர் போர் தொடுத்தபோது யூதர்களை ஆதரித்து நயவஞ்சகம் நாடகம் ஆடியது.

நயவஞ்சகர்களைப் பற்றி திருக்குர்அன் மொழிவதைக் கேளுங்கள்:

> ‘இந்த நயவஞ்சகர்கள் நிச்சயம் பொய்யர்கள் என்பதற்கு அல்லாஹ் சாட்சியம் அளிக்கின்றான். இவர்கள் தங்களுடைய ‘சத்தியங்களைக்’ கேடயமாக்கிக் கொண்டிருக்கிறார்கள். இவ்விதமாக அல்லாஹ்வின் வழியிலிருந்து தாங்களும் விலகி, பிற மக்களையும் அதில் (செல்லவிடாமல்) தடுக்கின்றார்கள். இவர்கள் செய்து கொண்டிருப்பவை எத்துணை மோசமான செயல்! இவை அனைத்துக்கும் காரணம், இவர் நம்பிக்கை கொண்டு பின்னர் நிராகரித்துவிட்டதுதான் இதனால் அவர்களின் உள்ளங்களின்மீது முத்திரையிடப்பட்டுவிட்டது. இனி அவர்கள் எதனையும் புரிந்து கொள்வதில்லை.’

(திருக்குர்ஆன் 63: 13)

உஹதுப் போரின்போது அப்துல்லாஹ் பின் உபை செய்த கீழறுப்பு வேலை கேவலத்திலும் கேவலமானது. துரோகச் செயல் எனும் சொல்லுக்குப் பொருளானது.

யத்ரிப் மதீனாவாக மாறியிருந்தது. இளைஞர்கள் குறைஷிகளை எதிர்க்கப் புறநகர் சென்று போரிடுவதென மொழிந்ததால் அண்ணலார் போரை உஹதை நோக்கி நகர்த்தினார். இதைக் காரணமாகக் கூறி வஞ்சகம் வலை விரித்தது.

மூவாயிரம் பேராகத் திரண்டு வந்த குறைஷியரை எதிர்க்க ஆயிரம் பேராகத் திரண்டு சென்ற முஸ்லிம்களில் முன்னூறு பேர் அப்துல்லாஹ் பின் உபையின் அணியில் முகமூடி கழற்றி...

மூவாயிரம் பேரை எதிர்த்து எழுநூறு இஸ்லாமிய இயக்கத்தினர்! வெற்றியா தோல்வியா எனத் தெரியாத போர் முடிவு!

இஸ்லாத்துக்குள் நுழைந்தும் நுழையாமலும் வெளியேறியும் வெளியேறாமலும் செயல்பட்டுக் கொண்டிருந்த மனிதப் பிராணியான

அப்துல்லாஹ் பின் உபை விசித்திரமான பகல் வேஷக்காரர்; நயவஞ்சக நாடக இயக்குநர்.

ஹிஜ்ரி நான்காம் ஆண்டில் நடந்த பனூநளீர் போரிலும் அவர் நயவஞ்சக நாடகமாடினார். இஸ்லாத்தின் பக்கம் நிற்காமல் அவர் எதிரிகளின் பக்கம் நின்றார்.

பதுங்கிப் பதுங்கியே செயல்புரிந்து கொண்டிருந்த நயவஞ்சகனும் நண்பர்களும் பனூ முஸ்தலீக் போரில் பங்கு கொண்டனர்.

இந்தச் சந்தர்ப்பத்தில் அவர்கள் இருபெரும் குழப்பங்களை உண்டாக்கினார்கள்.

இதற்கு முன்பே அண்ணலாரின் வளர்ப்பு மகன் அஸத் பின் ஹாரிஸா அத்தை மகள் ஸைனப் பின்து ஜஹ்ஷ்யை விவாகரத்து செய்திட அண்ணலார் வளர்ப்பு மகன் மனைவியை மணந்து கொண்டதைப் பற்றி அவதூறு பேசியிருந்தார்கள்.

இப்போது இரண்டாவது கீழறுப்புத் தாக்குதல். அதில் இருவிதக் குழப்பக் கணைகள்.

அன்று ஒரு முஹாஜிருக்கும் ஓர் அன்ஸாரிக்கும் இடையே நடந்த மிகச் சாதாரணமான ஒரு தகராறை பெரும் குழப்பமாக மாற்றிட நயவஞ்சகர்களின் தலைவர் முயன்றார். மதீனா சென்ற பின் கண்ணியமிக்கோர் கேவலமானவர்களை விரட்டிவிடுவர் என உபை திமிரோடு சொன்னார்.

போரின் வெற்றியை அவரால் பொறுத்துக் கொள்ள முடியவில்லை.

நயவஞ்சகர்களின் கம்பீரம், கவர்ச்சி பற்றிக் கூறும் திருக்குர்ஆன் அவர்களை உருவகமும் செய்கிறது கேளுங்கள்.

> ‘நீர் இவர்களைப் பார்த்தால் இவர்களின் உடலமைப்பு உமக்குக் கம்பீரமாகத் தெரியும். இவர்கள் பேச ஆரம்பித்தால் நீர் இவர்களுடைய பேச்சைக் கேட்டுக்கொண்டே இருந்துவிடுவீர். ஆனால், உண்மையில் இவர்கள், சுவரில் சாய்த்து வைக்கப்பட்டிருக்கும் மரக்கட்டைகளைப் போன்றவர்கள். இவர்கள் ஒவ்வோர் உரத்த சப்தத்தையும் தங்களுக்கு எதிரானதாய்க் கருதுகின்றனர். இவர்கள்தாம் கடும் பகைவர்களாவர். இவர்களைக் குறித்து எச்சரிக்கையாய் இரும். அல்லாஹ் இவர்களை நாசமாக்கட்டும். இவர்கள் எங்கோ திசை மாறிச் சென்று கொண்டிருக்கின்றார்கள்’

(திருக்குர்ஆன் 63: 4)

நயவஞ்சகர் அப்துல்லாஹ் பின் உபை தன் நண்பர்களுடன் மதீனாவின் எல்லையில் நுழைந்தபோது வாளேந்தி அவருடைய மகன் இளைய அப்துல்லாஹ் முகஞ்சிவந்து நின்றார்.

‘மதீனா திரும்பியவுடன் கண்ணியமானவர்கள் கேவலமானவர்களை வெளியேற்றிவிடுவர் என நீர் கூறியிருந்தீர். கண்ணியம் உமக்கு உரியதா, அல்லது அல்லாஹ்வுக்கும் அவனுடைய தூதருக்கும் உரியதா என்பது இப்போது தெரிந்துவிடும்! இறைவன்மீது ஆணையாக, அண்ணலார் அனுமதிக்காதவரை நீர் மதீனாவுக்குள் நுழைய முடியாது’ என இளைய அப்துல்லாஹ் கடுமையாகக் கூறினார்.

இதனைக் கேட்டு நயவஞ்சகம் கஸ்ரஜ் குலத்தாரிடம் முறையிட்டது. அப்போது யாரும் எதுவும் பேசவில்லை. கஸ்ரஜ் குலத்தார் திகைத்து நின்றனர். உபை உடைந்து போய் நின்றார். இளைய அப்துல்லாஹ் இரும்பு மனிதராகத் திகழ்ந்தார்.

தந்தையின் தலையைச் சீவ நின்ற இளைய அப்துல்லாஹ்வைப் பற்றிய செய்தி அண்ணலாரை எட்டியது.

‘கேவலப்பட்டுப் போய் நிற்கும் வஞ்சகத்தை வாளேந்தி நிற்கும் கண்ணியம் அனுமதிக்கட்டும்’ என அண்ணலார் சொல்லியனுப்ப ‘அண்ணலாரின் ஆணையால் உயிர் பிழைத்தீர்’ எனச் சொல்லி இளைய அப்துல்லாஹ் வழிவிட வஞ்சகர் குழு வாய்மூடி மெய் குறுகி மதீனாவுக்குள் நுழைந்தது.

## 24. நிலவில் களங்கம்?

### கோமேதக மாலையும் கூறப்பட்ட அவதூறும்!

பனூ முஸ்தலிக் போர் முடித்து அண்ணலாரின் படை முரைசிஃ கிணற்றருகேயுள்ள ஊரில் தங்கியதும் அங்கு ஏற்பட்ட முஹாஜிர் அன்ஸார் சிறுமோதலும் அதைத்தொடர்ந்து அண்ணலார் படையைக் கிளப்பி தொடர்ந்து 30 மணி நேரம் பயணிக்கச் செய்ததும் ஒரு குறிப்பிடத்தக்க இஸ்லாமிய வரலாற்று நிகழ்வு.

அவ்வரலாற்று நிகழ்வின் முடிவாக மதீனாவுக்கு முந்திய ஓர் தங்கலில் அண்ணலாரின் துணைவியார் ஆயிஷாவுக்கு ஏற்பட்ட சோதனை ஒற்றைக்காலில் ஈட்டி முனையில் நிற்பதற்குச் சமமானது.

பாலைமணல் படுத்துக்கிடக்க பனிக்காற்று வீசிக் கொண்டிருந்தது. வெள்ளிமுளைக்க வெகு நேரமிருந்தது. விருட்டென ஏதோ ஒரு பறவை பறந்து சென்றது.

போருக்கு சென்று திரும்பிய அணியில் சில பெண்களும் இருந்தனர். அவர்களில் அண்ணலாரின் துணைவியார் ஆயிஷா ஒருவர்.

படை பாடியிறங்கிய புறத்தே ஒரு கிணறு இருந்தது. அந்தக் கிணற்றைத் தாண்டியிருந்த மணற்குன்றுகளுக்குப் பின்னால் ஆயிஷா சென்றார். காலைக்கடன் முடித்து படையருகில் வந்தபோது கழுத்திலிருந்து மணி மாலையைக் காணோம்.

கூடாரங்கள் பிரிக்கப்பட்டுக் கொண்டிருந்தன. குதிரைகளும் ஒட்டகங்களும் எழுப்பப்பட்டுக் கொண்டிருந்தன. படைவீரர்கள் மூட்டை முடிச்சுகளைக் கட்டிக் கொண்டிருந்தனர்.

ஆயிஷா மணி மாலையைத் தேடி மணற்குன்றுகளுக்குச் சென்றார். காரிருளில் மணற்பரப்பு மங்கிக் கிடந்தது. காரிருளே காரிருளைக் கிழித்து ஒளிவீசிக் கொண்டிருந்தது. கண்களில் பேரொளி கிளம்பி மணலில் ஒளி பாய்ச்சியது.

நீண்ட நேரத்தேடலுக்குப் பின் மணிமாலை கிடைத்தது. மணி

மாலையுடன் வந்த ஆயிஷா படையணியைக் காணாது திகைத்து நின்றார்.

கண்ணுக்கெட்டிய தூரம்வரை படையணியைக் காணோம். இருட்டே எங்கும் இருந்தது.

‘படைகள் புறப்பட்டிருக்கலாம்; நான் பயணம் செய்த பல்லக்கு காலியாகியிருக்கும்போது, எப்படித் தூக்கிச் சென்றார்கள்!’ என்ற ஐயம் ஆயிஷாவுக்கு எழுந்தது.

‘மெல்லிய நான் பயணிப்பதற்கும் காலியாக பல்லக்கு இருப்பதற்கும் வித்தியாசம் தெரியவில்லையா?’ என யோசித்த அன்னையார் கலங்கி நிற்காமல் படை நடந்த தடத்தில் தம் பயணத்தைத் தொடர்ந்தார்.

அப்போது வெள்ளி முளைத்திருந்தது. பனிக்காற்று கனம் குறைந்து இதமான காற்றாக மாறியிருந்தது.

வழியில் சில மணற்குன்றுகள், இரு ஈச்சமரங்கள். அங்கு அமர்ந்த அன்னையார் அசதியில் கண்ணயர்ந்துவிட்டார்.

‘இன்னாலில்லாஹி வ இன்ன இலைஹி ராஜிஊன்.... இறைத்தூதரின் மனைவி இங்கே’ என்ற ஆச்சர்யக்குரல் கேட்டு அன்னையார் கண்விழித்தார்.

எதிரில் ஸப்வான் பின் முஅத்துலுஸ்ஸுலமி நின்று கொண்டிருந்தார். பர்தா முகத்திரை தொடர்பான சட்டம் வருவதற்கு முன் அவர் அன்னையாரைப் பார்த்திருந்ததால் அடையாளம் தெரிந்திருந்தார்.

ஸப்வான் பதுருப்போரில் கலந்து கொண்டவர்களில் ஒருவர். அவர் அன்னையாருக்கு முன்பே அறிமுகமானவர்தான்.

‘நான் நீண்ட நேரம் தூங்கும் பழக்கமுடையவன். படைகள் மூன்றாம் ஜாமத்தொடக்கத்திலேயே புறப்பட்டுவிட்டன போலும். நான் நன்கு உறங்கி விட்டதால் படையோடு செல்ல முடியவில்லை’ என்ற ஸப்வான் அன்னையார் அருகில் ஒட்டகத்தை உட்காரவைத்துவிட்டு ஒதுங்கி நின்று கொண்டார்.

கடிவாளத்தைப் பிடித்துக் கொண்டு ஸப்வான் நடக்க ஒட்டகத்தின் மேல் ஆயிஷா

பயணம் தொடர்ந்தது. படையணிகளை எட்ட முடியவில்லை.

கதிரவன் உச்சிக்கு வந்துவிட்டான் உச்சியிலிருந்த கதிரவன் இறங்கத் தொடங்கியபோது படையணிகள் கண்ணில் பட்டனர். அவர்கள் வழியில் தங்கியிருந்தார்கள்.

ஸப்வானையும் அன்னையாரையும் பார்த்தவர்கள், நடந்த நிகழ்வைக் கேட்டுத் தெரிந்து கொண்டார்கள்.

முரைசியில் நடந்த நிகழ்வால் மூக்குடைந்து போயிருந்து அப்துல்லாஹ் இப்னு உபையும் அவன் சகாக்களும் அன்னையார்மீது அபாண்டம் சுமத்தினார்கள். சொல்லில் நஞ்சைக் கலந்து பலரின் நெஞ்சைக் கெடுத்தார்கள்.

அண்ணலாரின் காதுக்கெட்டிய அவதூறு அன்னையாரை எட்டவில்லை.

முஸ்தலிக்கிலிருந்து வந்த அன்னையார் நோய்வாய்ப்பட்டார். ஒரு மாதம் வரை அவர் தாய்வீட்டில் தங்கியிருந்தார்.

மிஸ்தஹ் பின் அஸாஸா என்பவரின் அன்னையார்தான் ஆயிஷா மீது கூறப்பட்ட அவதூறையும் அதன் தொடர்பான கட்டுக்கதைகளையும் சொன்னார். அதைக் கேட்ட ஆயிஷா மனம் தளர்ந்து போனார். இரவு முழுவதும் அழுது கொண்டே இருந்தார்.

நோய்வாய்ப்பட்ட அன்னையை அண்ணலார் சென்று பார்க்கவுமில்லை, சுகம் கேட்டு ஆளனுப்பவுமில்லை.

அப்துல்லாஹ் இப்னு உபையின் நாக்கு தேள்கொடுக்கானது; நட்டுவாக்காலி ஆனது; நாகப்பாம்பானது.

மனவருத்தமடைந்த அண்ணலார் ‘முஸ்லிம்களே! உங்களுக்கெல்லாம் தெரிந்த செய்திதான். அந்த மனிதனின் தாக்குதலிலிருந்து என் கண்ணியத்தைக் காப்பாற்றக் கூடியவர் யார்? அவனோ என் வீட்டார்மீது அபாண்டம் சுமத்தி அளவுக்கு மீறி எனக்குத் துன்பமளித்துள்ளான். இறைவன்மீது ஆணையாக, நான் என் மனைவியிடம் எந்தத் தவறும் காணவில்லை. சம்பந்தப்படுத்திப் பேசப்படும் அந்த மனிதரிடமும் எந்தத் தவறையும் நான் காணவில்லை. அவர் என் இல்லத்துக்கு என்றுமே வந்ததில்லை’ என ஒருநாள் ஒரு சொற்பொழிவில் கூறினார்.

இதனைக் கேட்ட அவ்ஸ் குலத்தலைவர் உஸைதுப்னு ஹுளைர் ‘அல்லாஹ்வின் தூதரே! நீங்கள் குறிப்பிடும் அந்த மனிதன் எங்கள் குலத்தைச் சேர்ந்தவனாயிருந்தால் நாங்களே அவனுடைய தலையைக்

கொய்த்துவிடுகிறோம். இல்லை! அவன் எங்கள் சகோதரர்களான கஸ்ரஜ் குலத்தை சேர்ந்தவனாயிருந்தால் என்ன செய்ய வேண்டுமெனக் கூறுகிறீர்களோ அதைச் செய்கின்றோம்' என்றார்.

இதனைச் செவியேற்ற கஸ்ரஜ் குலத்தலைவர் ஸஃத்பின் உபாதா எழுந்துநின்று 'பொய் சொல்கின்றீர். நீர் அவனை ஒருபோதும் கொல்ல முடியாது' என்றார்.

சொல்லால் சுடப்பட்ட உஸை இப்னு ஹுளைர் 'நீர் ஒரு நயவஞ்சகர், அதனால்தான் நீர் நயவஞ்சகர்களை ஆதரிக்கின்றீர்' என்றார்.

அடுத்தடுத்து அவர்கள் சொல்லம்புகளை வீசினார்கள். தடித்த வார்த்தைகள் தள்ளுமுள்ளுவில் முடியுமோ என்ற சூழல்!

தொழுகைத் தளத்திலேயே கூச்சலும் குழப்பமும்! அண்ணலார் உரை மேடையில்தான் நின்றிருந்தார். நிலைமையை சீர் செய்ய மிம்பரிலிருந்து இறங்கிய அண்ணலார் அவ்ஸ் கஸ்ரஜ் குலத்தாரை அமைதியில் ஆழ்த்தினார்.

ஆயிஷா நாச்சியார் மீது அஜதூறு கூறிய நாக்கு யாருடையது என்பதை நாலு பேரும் அறிந்த இருந்தனர். அதை பகிரங்கப்படுத்திடவும் கண்டிக்கவும் உண்மையை உரத்துக் கூறிடவும் எல்லாம் வல்ல இறைவனை உரிய நேரத்தில் தன் திருவசனங்களை இறங்கி அருளினான்.

இந்த அவதூறைப் புனைந்து கொண்டு வந்தவர்கள் உங்களில் உள்ள ஒரு கும்பல்தான். இந்நிகழ்ச்சியினை உங்களுக்கு ஏற்பட்ட ஒரு தீங்காகக் கருதாதீர்கள். மாறாக, இதுவும் உங்களுக்கு நன்மையாகவே உள்ளது! அவர்களில் யார் எந்த அளவுக்கு அதில் பங்கேற்றார்களோ அந்த அளவுக்குப் பாவத்தை அவர்கள் சம்பாதித்துக் கொண்டனர். மேலும், அவர்களில் யார் இதில் பெரும் பங்கு வகித்தானோ அவனுக்குப் பெரும் தண்டனை இருக்கிறது.

நீங்கள் இதனைச் செவியுற்ற போதே நம்பிக்கையாளர்கஹான ஆண்களும் பெண்களும் தங்களைப் பற்றி ஏன் நல்லெண்ணம் கொள்ளவில்லை? இது ஓர் 'அப்பட்டமான அஜதூறு' என்று ஏன் அவர்கள் கூறிடவில்லை?

அவர்கள் (தங்களுடைய குற்றச்சாட்டை நிரூபிக்க) ஏன் நான்கு சாட்சிகளைக் கொண்டு வரவில்லை? அவ்வாறு அவர்கள் சாட்சிகளைக் கொண்டுவராத நிலையில் அல்லாஹ்விடத்தில் அவர்களே பொய்யர்கள்

ஆவர். (திருக்குர்ஆன் 24:1113)

## ஹுதைபியாவில்...

கி.பி. 627 ஹிஜ்ரி 6

ரமளான் மாத நோன்பு நோற்று ஷவ்வால் மாதத்தையும் மதீனாவிலேயே கழித்த அண்ணலார் வைகறைக்கு முன் கனவொன்றைக் கண்டார்.

‘தலை முழுவதையும் மழித்த வண்ணம் புனிதப் பயணத்துக்கான ஆடைகளுடன் காணப்பட்ட அண்ணலாரின் கையில் கஅபாவின் திறவுகோல் இருந்தது. அவர் கஅபாவுள் நுழைகின்றார்.’

இதுதான் கனவு!

நிகழும் ஷவ்வால் முடிந்தால் துல்கஅதா, துல்கஅதா முடிந்தால் துல்ஹஜ்! புனிதப் பயணத்துக்கு இருமாதங்கள் இருக்கும் நிலையில் அண்ணலார் கண்ட கனவு உம்ரா செய்யும் ஆசையை ஊட்டியது.

அண்ணலார் தாம் கண்ட கனவைத் தோழர்களிடம் கூறினார். உறவோரைப் பிரிந்திருந்த முஹாஜிர்களும் மக்கா செல்ல ஆசைப்பட்டிருந்த அன்ஸாரிகளும் புனிதப் பயணம் செய்ய ஆயத்தமாயினர்.

குர்பானி கொடுக்க எழுபது ஒட்டகங்கள் வாங்கப்பட்டன. அண்ணலாருடன் பயணம் வரும் மனைவியாக உம்மு ஸல்மா தேர்வு செய்யப்பட்டார். அகபா ஒப்பந்தத்தின்போது கலந்து கொண்ட கஸ்ரஜ் பெண்மணி நுஸைபாவும் உம்மு ஹானியும் பயணத்துக்கு ஆயத்தமாயினர்.

யாத்திரிகர்கள் ஒவ்வொருவரும் தம் வாள்களையும் வேட்டைக்கான ஆயுதங்களையும் கொண்டு செல்ல விரும்பியபோது அண்ணலார் நிராயுதபாணியாகவே செல்ல வேண்டுமெனக் கூறினார். அதன்படி யாத்திரிகர்கள் வெறுங்கையுடன் மரபுவழியான புனிதப் பயண உடையணிந்து புறப்பட்டார்.

அண்ணலார் பயணத்தைத் தொடங்குவதற்கு முன்பாகவே குஸாஅக்களின் கஅப் கிளைத் தோழர் ஒருவரை மக்காவில் நிலைமையறிய அனுப்பி வைத்தனர்.

அண்ணலார் மதீனாவிலிருந்து புறப்பட்ட செய்தி மக்காவை

எட்டியது. சஞ்சலங்கொண்ட குறைஷிகள் உடனே தம் ஆலோசனைக் கூட்டத்தைத் தாருந் நத்வாவில் நடத்தினர்.

‘முஸ்லிம்கள் உண்மையிலேயே புனிதப் பயணத்துக்காக வருகிறார்களா? இல்லை மக்காவைப் பிடிப்பதற்காக வருகிறார்களா?’ என குறைஷிகள் ஆராய்ச்சி நடத்தினர்.

‘புனிதப் பயணம் செய்வதுபோல் வந்து கஅபாவைக் கைப்பற்றிவிடுவார்கள்’ என்றார் ஒருவர். ‘புனிதப் பயணம் வருபரைத் தடுப்பது சரியல்ல, அது நமது மரபுமல்ல’ என்றார் இன்னொருவர். ‘போருக்கு வந்தால் அவர்களோடு பொருதலாம், இல்லையெனில் அவர்களைக் கஅபாவுக்குள் நுழைய விடலாம்’ என்றார் மூன்றாவது மனிதர்.

‘நமது எதிரிகள் அவர்கள், எனவே அவர்களை சுதந்திரமாக நுழையவிடக் கூடாது. பழைய மரபையெல்லாம் பேண வேண்டியதில்லை’ என்றார் ஸப்வான்.

‘முஸ்லிம்கள் கஅபாவுக்குள் கால்வைத்த செய்தி அரபகத்தைத் தாண்டியும் செல்லலாம். அவர்கள் நுழைந்தால் நமக்குத் தலைகுனிவுதான். அவர்கள் நம்முடைய பழைய மரபுப்படியே வந்து கஅபாவைத் தரிசித்தால் அவர்களுடைய மார்க்கம் இபுறாகீம் நபிகளாரின் மார்க்கம் என்பது மெய்யாகிவிடும். அவர்களைத் தடுத்து நிறுத்துவோம்’ என அபூசுப்யான் கூறியதை குறைஷிகள் அனைவரும் ஏற்றனர்.

உடனே, முஸ்லிம்களை வழிமறிக்க காலித் தலைமையில் இருநூறு குதிரை வீரர்களை அனுப்பினர். குதிரைகள் மூச்சிரைக்க சிரியாவுக்கு செல்லும் நெடுஞ்சாலையில் பறந்தன.

அண்ணலாரின் அணியினர் உஸ்பான் எனும் ஊரை அடைந்தனர். அப்போது மக்காவின் நிலைமையை அறிந்துவர அனுப்பப்பட்ட கஅப் கிளை குதிரைவீரர் செய்தியுடன் வந்து சேர்ந்தார்.

காலித் தலைமையில் முஸ்லிம்களை வழிமறிக்க வரும் குதிரைப் படை பற்றிய செய்தியைக் கேட்ட அண்ணலார் மக்காவுக்குச் செல்லும் மாற்றுப் பாதைப் பற்றி விசாரித்தார். அஸ்லம் கிளையைச் சேர்ந்த தோழர் செங்கடலோரப் பாதையில் அழைத்துச் செல்ல முன்வந்தார்.

மிகவும் கடினமான செங்கடலோரப் பாதையில் பயணித்த முஸ்லிம்கள் ஹுதைபியா எனும் இடத்தை அடைந்தனர்.

முஸ்லிம்களை எதிர்பார்த்து வந்த காலிதின் படைக்கு வேலையில்லாமல் போனது. மாற்று வழியில் முஸ்லிம்கள் சென்ற செய்தி கிடைக்க உடனே காலித் மக்காவுக்குச் சென்று குறைஷிகளை எச்சரித்தார்.

மக்காவுக்கு கீழே அமைந்திருந்த ஹுதைபியாவில் தங்கிய முஸ்லிம்கள் நன்றாக ஓய்வெடுத்துக் கொண்டனர்.

பகல் உணவுக்கான ஏற்பாடுகள் நடந்தன. அங்கு வாழ்ந்த பனூ குஸாஅ கோத்திரத்தைச் சேர்ந்தோர் முஸ்லிம்களின் உறவாளிகள். அவர்களில் இருவர் முஸ்லிம்களுக்குச் சில செம்மறியாடுகளையும் ஒட்டகங்களையும் அன்பளிப்புச் செய்திருந்தனர். அவை கறியாகி அடுப்பேறியிருந்தன.

பனூ குஸாஅக்களுக்கு எதிரானவர்கள் பனூ பக்ர்கள். இவர்கள் குறைஷிகளுடன் உறவு கொண்டிருந்தார்கள். பனூ பக்ர் ஒருவர் ஹுதைபியாவுக்கு வந்து ஒற்றறிந்து முஸ்லிம்கள் தங்கியுள்ள செய்தியை மக்காவிலுள்ள குறைஷிகளுக்குச் சொன்னார்.

அச்செய்தி கஅபா வளாகத்திலிருந்து கிளம்பி மக்கா முழுவதும் பரவியது.

அப்போது மக்காவில் குஸாஅக்களின் தலைவர்களில் ஒருவரான புதைல் இப்னு வர்காவுக்கும் முஸ்லிம்களின் வருகை பற்றிய செய்தி கிடைத்தது. அவர் தன் கிளைக் கோத்திரத்தாருடன் அண்ணலாரைக் காண ஹுதைபியா வந்து சேர்ந்தார். குஸாஅக்களின் கிளைக் கோத்திரங்கள் அஸ்லம், கஅப், முஸ்தலீக் ஆகியவையாகும்.

‘தங்களின் கடைசி மனிதர் சாகும்வரை முஸ்லிம்களை மக்காவுக்குள் நுழைய விடமாட்டோம் எனக் குறைஷிகள் கூறுகின்றனர்!’ என்ற தகவலை புதைல் அண்ணலாரிடம் கூறினார்.

‘அவர்களின் எண்ணம் தவறானது. நாங்கள் போரிடப் புறப்பட்டு வரவில்லை; புனித யாத்திரைக்காகவே வந்துள்ளோம். இதுவரை யாரும் கஅபாவைத் தரிசிக்கவந்தவரைத் தடுத்ததில்லை! அன்புத் தோழரே! எதுவும் நிலையானதில்லை. ஒரு காலத்தில் கஅபாவின் காவலர்களாக உங்களின் குஸாஅக்களே இருந்தனர். பின்னர் குறைஷிகள் வந்தனர். இறைவன் நினைத்தால் குறைஷிகள் மாறி வேறொரு குழுவினர் வரலாம்! இவற்றையெல்லாம் எண்ணிப் பார்க்க மறந்தே அவர்கள் பேசுகிறார்கள். அவர்களுக்கு அவகாசம் அளிக்கிறேன். ஒன்று அவர்கள் எங்களை அனுமதிக்க வேண்டும். இல்லையேல் நாங்கள் அவர்களின்

எதிர்ப்பை மீறி கஅபாவுக்குள் நுழைந்தே தீருவோம்' எனக் கூறிய அண்ணலாரின் எச்சரிக்கை செய்தியை புதைல் மக்காவுக்குக் கொண்டு சென்றார்.

அபூஜஹ்லின் மகன் இக்ரிமா செய்தியைக் கேட்டும் கேட்காததுபோல் இருந்தார். ஸப்வான் புதைலை புதையலைத் தோண்டுவதுபோல் தோண்டித் தோண்டி கேள்வி கேட்டார். புதைல் அண்ணலாரின் நோக்கம், நிலைப்பாடு பற்றி விளக்கமாகவே எடுத்துரைத்தார். தகீப் கோத்திரத்து குறைஷி நேசரான உர்வா ஹுதைபியாவுக்குச் சென்று அண்ணலாரைக் கண்டு எச்சரிக்க விரும்புவதாக சொன்னார்.

உர்வா தூதராகச் செல்லப் பொருத்தமானவரில்லை எனக் கருதிய குறைஷிகள் ஹுலைஸ் என்பாரைத் தூதராகத் தேர்ந்தெடுத்தனர்.

குறைஷிகளுக்கு கூட்டுறவாகியிருந்த நாடோடிக் கோத்திரங்களின் குழு 'அஹபீஷ்' எனப் பெயரிட்டு அழைக்கப்பட்டது. அதன் தலைவர்தான் ஹுலைஸ். கினானாவின் ஒரு கிளையான பனூ ஹாரிசைச் சேர்ந்த இவர்தான் பத்ருப் போரின்போது வீரமரணமடைந்த முஸ்லிம்களின் சடலங்களை அபூசுப்யான் சிதைத்து அவமதித்தபோது கண்டித்தவர்.

ஹுலைஸ் ஹுதைபியா வந்து அண்ணலாரைச் சந்தித்துப் பேசவேயில்லை. அவர் முன் காட்சியான குர்பானிக்கான அடையாளமிடப்பட்ட மிருகங்களே முஸ்லிம்களின் நோக்கத்தைப் பறைசாற்றுவதாக அமைந்தன.

மக்கா திரும்பிய ஹுலைஸ் 'முஸ்லிம்கள் புனித யாத்திரைக்காகவே வந்துள்ளனர். அவர்களைத் தடுப்பது முறையல்ல, அவர்களை அனுமதித்தே ஆக வேண்டும்' எனக் கூற குறைஷிகளின் மனங்களோடு முகங்களும் கோணலாகின.

ஹுலைஸ் போல குறைஷிகளின் அனுமதியுடன் செல்லாது தானாகவே ஹுதைபியா சென்று வந்த தகீபின் உர்வா குறைஷிகளைக் கொந்தளிக்க வைத்தார்.

'குறைஷிகளே! புதிய மார்க்கத்தைக் கூறும் முஹம்மது ஒரு குறைஷி என்பதை மறந்துவிடாதீர்கள். நான் கிஸ்ரா, சீசர், நஜ்ஜாஷி போன்ற ஆட்சியாளர்களின் முன் தூதுவராகச் சென்றுள்ளேன். மன்னாதி மன்னர்களான அவர்களைவிட நம் மண்ணின் மைந்தர் மகத்தான ஓரணியைப் பெற்றுள்ளார். அவ்வணியினர் அனைவருமே

தொண்டர்கள் அல்லர், தோழர்கள்! அந்தத் தோழர்களின் தோழரான முஹம்மதை நீங்கள் உதாசீனம் செய்தால் நீங்கள் நாளை உதாசீனம் செய்யப்படுவீர்கள்' என எச்சரித்ததைக் கேட்டு குறைஷிகள் எரிச்சலடைந்தனர்.

உர்வா ஹுதைபியாவில் இருந்தபோதே கஅப் கிளையின் கிராஷ் என்பார் அண்ணலாரின் தூதராக மக்காவுக்கு வந்தார். அவருடைய ஒட்டகத்தின் காலை வெட்டிய இக்ரிமா தம் சகாக்களுடன் சேர்ந்து அவரைக் கொல்ல முயன்றார். ஹுலைஸ்தான் இக்ரிமாவைத் தடுத்து கிராஷைக் காப்பாற்றித் திருப்பி அனுப்பினார்.

அதன்பின்னர் அண்ணலார் உத்மான் இப்னு அப்பானை குறைஷிகளிடம் தூதராக அனுப்பினார். கிராஷை விட உத்மான் மக்காவில் உறவினர் அதிகம் பெற்றவர். மிக எளிதில் உத்மான் மேல் கைவைத்துவிட முடியாது.

உத்மானை அவருடைய உறவுக்காரர்களான அப்த் ஷம்ஸ்களும் அவர்களைச் சேர்ந்தவர்களும் நன்கு வரவேற்றனர்.

'ஹுதைபியாவில் தங்கியிருக்கும் எவரும் கஅபாவுக்குள் காலடியெடுத்து வைக்க அனுமதிக்க மாட்டோம். நீர் வேண்டுமானால் வலம் வாரும், வணங்கும்' எனக் குறைஷிகள் கூற உத்மான் தனியாகக் கஅபா செல்ல விரும்பாது மக்காவை விட்டுக் கிளம்ப ஆயத்தமானார்.

அண்ணலாரின் மருமகனான உத்மான் மக்காவை விட்டு கிளம்பிக் கொண்டிருந்தபோது அவர் கொலை செய்யப்பட்டு விட்டார் என்ற வதந்தி மதீனாவை அடைந்தது.

## 25. உலகப்புகழ் தந்த உடன்படிக்கை!

### உடன்படிக்கை!

அரபகத்தில் மணற் கிணறுகளை வைத்தே பல ஊர்களின் பெயர்கள் அமைந்திருந்தன. ஹுதைபியா எனும் கிணறை வைத்தே ஊருக்கும் ஹுதைபியா எனப் பெயர் சூட்டப்பட்டிருந்தது.

மக்காவின் வடக்கில் மிக அண்மையில் ஹுதைபியா அமைந்திருந்ததால் அண்ணலார் தம் தூதரை அனுப்பி குறைஷியரின் எண்ணத்தை அறிந்து வரச் செய்தார்.

பண்பாடு மிக்க அண்ணலார் செய்த பண்பாடான செயலைக் குறைஷியர் மதிக்கவில்லை. தூதர்களை அவமானப்படுத்தினர்; தூதர்களில் ஒருவர் சென்ற குதிரையின் காலைவெட்டி அவரைத் தொல்லைக்குள்ளாக்கினர். இறுதியாக உத்மான் தூதராகச் சென்றபோது அவரைச் சிறைப்பிடித்தனர்.

அண்ணலாரிடம் வந்த குறைஷிகளின் தூதர்களோ எவ்விதத் துன்பத்துக்கும் ஆளாகவில்லை. பண்பாட்டோடு நடத்தப்பட்டு புனிதப் பயணம் தான் என்ற செய்தியைக் கொண்டு சென்றார்கள்.

உத்மான் சிறைப்பட்ட நிலையில் அவர் ஷஹீதானார் என்ற செய்தி அண்ணலாரை அதிர்ச்சியடைய வைத்தது. அண்ணலார் கருவேலமரத்தின் அடியில் வைத்துத் தம் தோழர்களிடம் ‘குறைஷியரை ரத்தம் சிந்தவைப்போம்’ என்ற உறுதிமொழியைப் பெற்றார். இந்தப் பைஅத்தின் பெயர் ‘பைஅத்துர் ரிள்வான்’ என்பதாகும்.

இந்த உறுதிமொழியை முதன் முதலில் எடுத்தவர் ஸினான். பனூ அஸத் பின் குஸைமா கோத்திரத்தைச் சார்ந்த ஸினான் அண்ணலாரின் வலக்கரத்தில் தன் வலக்கரத்தை வைத்து உறுதிமொழி எடுக்க அனைத்துத் தோழர்களும் உறுதிமொழி எடுத்தனர்.

இறுதியாக அண்ணலார் தம் இடக்கரத்தை உத்மானின் கரமெனக் கூறித் தம் வலக்கரத்தை அதன் மேல் வைத்து உறுதிமொழி எடுத்தார்.

மிகவும் குழப்பமான சூழல். உத்மான் ஷஹீதாகிவிட்டாரா இல்லையா எனத் தெரியவில்லை. ஆனால் முஸ்லிம்கள் கொந்தளித்திருப்பது குறைஷிகளுக்கு எட்டியது.

மக்காவும் ஹுதைபியாவும் 13 கல்தொலைவில் அருகருகே இருந்ததால் தூதர்களின் வருகையும் செல்கையும் எளிதாக இருந்தன; அதைப்போல செய்திகளும் இரு நகரங்களுக்கும் இயற்கையாகவும் செயற்கையாகவும் சென்று கொண்டிருந்தன.

தாருந் நத்வாவில் கூடிய குறைஷியர் ஓர் உடன்படிக்கையை உருவாக்கி ஸுஹைல் பின் அம்ரை ஹுதைபியாவுக்கு அனுப்பிவைத்தனர். உடன் ஸுஹைலின் ஆமிரி கோத்திரத்தைச் சேர்ந்த மிக்ராஸ், ஹுலைதிப் ஆகியோரையும் பங்கேற்க அனுப்பினர்.

ஸுஹைல் அறிவு நுட்பம் மிக்கவரும், நல்ல பேச்சாளருமாவார். ஹுதைபியா வந்த அவருக்கு வேலமரத்தின் கீழெடுக்கப்பட்ட உறுதிமொழியும் முஸ்லிம்களின் மூர்க்கச் சூழலும் தெரிய ‘உத்மான் உயிரோடிருக்கிறார். அவர் தன் சிறிய தந்தையின் மகன் அஃப்பான் பின் சயீது வீட்டில் தான் தங்கியுள்ளார்’ என அண்ணலாரிடம் சத்தியம் செய்து கூறினார்.

‘நீங்கள் போர் செய்ய வரவில்லை, புனிதப் பயணமே செய்ய வந்துள்ளீர்கள் என நாங்கள் எவ்வாறு நம்புவது? புனிதப் பயணத்துக்காக ஒன்றாக ஆயிரக்கணக்கானோரா திரண்டுவருவர்? குர்பானிக்கான மிருகங்களைக் கொண்டு வந்ததாலோ ஆயுதங்களையேந்தி வராததாலோ உங்கள் பயணத்தைக் குறைஷிகள் புனிதப் பயணம் என எப்படி நம்புவார்கள்? முன்னூறு பேரை வைத்து ஆயிரம் பேரை எதிர்க்கிறீர்கள்! ஆயிரம் பேரை வைத்துப் பத்தாயிரம் பேரோடு பொருதுகிறீர்கள்! குழிகளை வெட்டி வைத்துக் குறைஷிகளை கோமாளியாக்குகிறீர்கள்! நீங்கள் ஆயுதங்களைக் கையிலெடுக்காமலேயே மக்காவைப் பிடித்துவிடுவீர்கள். உங்கள் உள்ள வலிமையினாலேயே குறைஷிகளை ஒன்றுமில்லாமல் செய்துவிடுவீர்கள். எனவே உங்களை அனுமதிக்க உங்கள் மொழிப்படி புனிதப் பயணத்தை அனுமதிக்கக் குறைஷிகள் விரும்பவில்லை. அவர்கள் இவ்வாண்டு உங்களை மக்காவுக்குள் நுழைய விடமாட்டோம் என சபதமெடுத்துள்ளனர். இந்தச் சூழ்நிலையில் நான் சில நிபந்தனைகளோடு உங்களிடம் வந்துள்ளேன். நான் சொல்லப்போகும் நிபந்தனைகளால் உங்களுக்கும் நன்மையுண்டு; எங்களுக்கும் பாதுகாப்புண்டு’ என ஸுஹைல் தன் நாவன்மையையும் அறிவுக்

கூர்மையையும் மெய்ப்பித்தார்.

அண்ணலார் ‘ஸுஹைல் அந்த நிபந்தனைகளைக் கூறும்’ என்றார்.

ஸுஹைலோடு தூதுக்குழுவில் வந்த மிக்தாம் ‘நிபந்தனைகள் மிக எளிதானவையே, அவற்றைத் நீங்கள் ஏற்றுக் கொண்டால் ஒரு பெரும்போர் நின்றுவிடும். பல உயிர்கள் காப்பாற்றப்படும். ஒரு மாபெரும் புகழ் உங்களை வந்து சேரும்’ என்றார்.

‘நிபந்தனைகளைக் கூறுகிறேன்; ஏற்பதோ ஏற்காததோ உங்கள் விருப்பத்தைப் பொருத்தது. இவ்வாண்டு நீங்கள் தவாஃப் செய்யாமல் கஅபாவைச் சுற்றாமல் திரும்பிச் சென்றுவிடவேண்டும். அடுத்த ஆண்டு மக்கா வரும் நீங்கள் மூன்று நாட்கள் மட்டும் தங்கியிருந்து வெளியேறிவிட வேண்டும். அப்போது உறைவாளோடு மட்டும் வரலாம்; உறைவாளோடு வேறு ஆயுதங்களைக் கொண்டு வரக்கூடாது’ என்ற ஸுஹைலிடம் அண்ணலார் ‘நிபந்தனைகளின் பட்டியல் முடிந்ததா, இல்லை மேலும் இருக்கிறதா?’ எனக் கேட்க தோழர்கள் அமைதியுடன் நின்றனர்.

‘வணக்க வழிபாட்டைப் பற்றிய நிபந்தனைகள் முடிந்தன. நடைமுறைகள் பற்றிய நிபந்தனைகளைக் கூறுகிறேன். குறைஷிகளில் ஒருவன் முஸ்லிமாகி மதீனாவுக்கு வந்தால் அவனை நீங்கள் ஏற்காமல் மக்காவுக்குத் திருப்பியனுப்பிவிட வேண்டும். அதே சமயம் ஒரு முஸ்லிம் மதீனாவிலிருந்து மக்காவுக்கு வந்தால் அவனைத் திருப்பியனுப்ப மாட்டோம்’ என ஸுஹைல் குறைஷிகளின் சூதுமதியைக் கூற, அண்ணலார் கண்களை மூடிய வண்ணம் கேட்டுக் கொண்டிருந்தார். அப்போது முஸ்லிம்கள் நீதிக்குப் புறம்பான நிபந்தனையைக் கேட்டு நெஞ்சை நிமிர்த்தினர். எனினும் புயலைத் தென்றலாக்கினர்.

‘அடுத்தேதும் நிபந்தனை உண்டா?’ என அண்ணலார் கேட்க ‘இந்த ஒப்பந்தம் பத்தாண்டுகள்வரை செல்லும். யாரும் யாருடனும் மோத சிறு கம்பைக்கூட எடுக்கக்கூடாது! அரபகத்திலுள்ள எந்தக் குழுவினரும் எந்தக் குழுவினரோடும் உடன்படிக்கை செய்து கொள்ளலாம். மிக எளிதான நிபந்தனைகளே இவை! குறைஷிகள் உங்களுக்கு பல வகைகளில் விட்டுக் கொடுத்தே இந்நிபந்தனைகளை விதித்திருக்கிறார்கள். அவர்களைவிட மனதாலும் அறிவாலும் மக்கள் நேய உணர்வாலும் உயர்வாக உள்ள நீங்கள் கட்டாயம் மதிநுட்பத்துடன் நடந்து கொள்வீர்கள் என்பது எனக்கு நன்றாகவே தெரியும்’ என்ற ஸுஹைல் அண்ணலாரைத் தன் வாய்மொழிகளால் வழிநடத்தப் பார்த்தார். அண்ணலார் இறைமொழிக்காகக் காத்திருந்தார்.

இறைமொழி இறக்கப்படவில்லை. உடன்படிக்கையின் சாதக பாதகங்களை ஆழ்ந்து சிந்தித்துப் பார்த்த அண்ணலார் நிபந்தனைகளுக்குட்பட்டு அலீயைச் சமாதான பத்திரம் எழுதக் கூறினார்.

உமர் சீறியெழுந்தார், அண்ணலாரைச் சில கேள்விகள் கேட்டார். அண்ணலார் கூறிய பதில்களால் திருப்தியடையாத உமர், அபூபக்கரிடம் சில கேள்விகள் கேட்டார். அபூபக்கரோ ‘அண்ணலார் எதைச் செய்தாலும் அதில் இறைவனின் அருட்பேறு இருக்கும்’ என்றார்.

உமரின் நிலையில் பலர், அபூபக்கரின் நிலையில் சிலர்.

ஒப்பந்தப்பத்திரம் எழுதப்பட்டபோது அதில் அல்லாஹ்வின் பெயரால் எனவும் அல்லாஹ்வின் திருத்தூதர் எனவும் எழுதிட ஸுஹைல் ஒப்புக் கொள்ளவில்லை.

பிஸ்மிகல்லாஹும்ம

எனவும் அப்துல்லாஹ்வின் மகன் எனவும் ஒப்பந்தப்பத்திரம் எழுதிட ஸுஹைல் சொல்ல, அண்ணலார் ஏற்றார்.

ஒன்றல்ல இரண்டல்ல! பல விட்டுக் கொடுத்தலுக்குப் பின் ஒப்பந்தப் பத்திரம் எழுதப்பட்டது.

ஒப்பந்தப் பத்திரம் எழுதிக் கொண்டிருக்கும்போதே ஸுஹைலுக்கு சோதனை மகனின் உருவத்தில் வந்தது.

ஏற்கெனவே முஸ்லிமான காரணத்தால் விலங்கு பூட்டி வைக்கப்பட்டிருந்த ஸுஹைலின் புதல்வர் அபூஜந்தல் மக்காவிலிருந்து தப்பித்து ஹுதைபியா வந்து சேர்ந்தார்.

அபூஜந்தல் அண்ணலாரின் முன் வந்து நின்று ‘ஊருக்கு நியாயம் சொல்ல வந்து விட்டார், தன் மகனை விலங்கு போட்டு வைத்துவிட்டு! நான் என்ன குற்றம் செய்தேன்? இறைவனின் அடியாராகி முஸ்லிமானது பெரிய குற்றமா?’ எனக் கேள்விக்கணை எழுப்பினார்.

மகனின் வருகை ஸுஹைலுக்கு சங்கடத்தைத் தந்தது. அபூஜந்தலுக்கு விடுதலை, வேட்கையை விரைவுப்படுத்தியது. அண்ணலார் பேணிய தர்மத்துக்குச் சோதனையானது. தர்மமும் சங்கடமும்!

‘ஒப்பந்தப் பத்திரம் கைசாத்திடப் படாத சூழலில் அபூஜந்தல் ஒப்பந்தத்துக்கு உட்பட மாட்டார். அவரை எங்களோடு மதீனாவுக்கு

அழைத்துச் செல்வோம்' என்றார் அண்ணலார்.

'கைச்சாத்திடப் படவில்லையெனினும் வாயால் முடிவெடுக்கப்பட்டுள்ளதால், அது செல்லும். அபூஜந்தல் மதீனாவுக்குப் போகக் கூடாது. மக்காவுக்கே திரும்பிச் செல்ல வேண்டும்' என உறுதியுடன் ஸுஹைல் கூற அண்ணலார் இதற்கும் உடன்பட்டார்.

ஒப்பந்தப்பத்திரத்தில் ஸுஹைலும் அவரோடு வந்திருந்த மிக்ராஸ், ஸுவைதிப் ஆகியோரும் அபூஜந்தலைத் தொடர்ந்து வந்திருந்த ஸுஹைலின் மகன் அப்துல்லாஹ்வும் குறைஷிகளின் சார்பாகக் கைச்சாத்திட்டனர். முஸ்லிம்களின் சார்பாக அபூபக்கர், உமர், அலீ, அப்துர் ரஹ்மான் இப்னு அவ்ப், மஹ்மூத் இப்னு மஸ்லமா ஆகியோர் கைச்சாத்திட்டனர்.

இரத்தக் காயத்தோடும் வியர்வையோடும் நின்ற அபூஜந்தல் 'முஸ்லிம்களே! நீங்கள் என்னைத் தீயவர்களிடம் ஒப்படைக்கிறீர்கள்; நிராகரிப்பாளர்களிடம் எந்த நியாயத்தின் அடிப்படையில் என்னை ஒப்படைக்கிறீர்கள்' என அபயக் குரல் எழுப்பி நின்றார்.

முஸ்லிம்களின் மனோ நிலையும் அதுதான்! அவர்கள் பேசாமல் நின்றனர். உமர் அபூஜந்தல் அருகில் சென்று ஒரு வாளை அவரிடம் கொடுத்து 'இதனால் உம்மைப் பாதுகாத்துக் கொள்வீர்' என்றார்.

ஒப்பந்தம் கைசாத்திடப்பட்டபின்னரும் முஸ்லிம்களில் பலருக்கும் உம்ரா செய்ய மக்காவுக்குப் போக வேண்டும் என்ற எண்ணமே மேலோங்கியிருந்தது.

அண்ணலார் முஸ்லிம்களை ஹுதைபியாவிலேயே பிராணிகளைப் பலியிட்டு தலைகளை மழிக்கும்படிக் கூற எவருமே அதைச் செய்யத் தயாராகவில்லை.

தம்முடைய நிலையை உடன்சென்றிருந்த துணைவியார் உம்மு ஸல்மாவிடம் அண்ணலார் சொல்ல அன்னையார் ஓர் நல்ல ஆலோசனையைக் கூற, அவர் சொன்னது நடந்தது.

அண்ணலார் தம் குர்பானிக்கான ஒட்டகத்தைப் பலியிட்டார்; அடுத்துத் தலையை மழிக்க தோழர் கிராசைப் பயன்படுத்திக் கொண்டார். அண்ணலாரின் உம்ரா நிறைவேறுவதைக் கண்ட ஒவ்வொரு கூடாரமும் அசைவுக்குள்ளானது. பிராணிகள் பலியிடப்பட்டன; தலைகள் மழிக்கப்பட்டன.

உம்ரா செய்த நிறைவோடு முஸ்லிம்கள் மதீனாவை நோக்கிப்

புறப்பட்டனர். அவர்கள் திரும்பும்போது இறக்கப்பட்ட இறைவசனங்கள்தான் அல் ஃபத்ஹ் அத்தியாயத்தில் இடம் பெற்றுள்ளன.

## வெற்றியா? தோல்வியா?

ஹுதைபியா உடன்படிக்கைக்குப் பின் அருளப்பட்ட இறை அத்தியாயத்தின் பெயர் அல் ஃபத்ஹ், வெற்றியெனவே பொருள் தரும் இவ்வத்தியாயம் வெற்றி வாய்ப்பிழந்தபோது அருளப்பட்டது.

மக்கத்துக் குறைஷிகள் தான் முஸ்லிம்களை உம்ரா செய்யவிடாமல் தடுத்து நிறுத்தினர். அதை ஓர் உடன்படிக்கையின் மூலம் செய்தனர்; அதை அவர்கள் வெற்றியெனக் கொண்டாடினர். முஸ்லிம்களோ உம்ரா செய்யாமல் தடுக்கப்பட்டதைத் தோல்வியெனக் கருதினர்; துவண்டு போயினர்; தொங்கிய முகத்தோடு திரும்பினர்.

இறைவனோ ஹுதைபியா உடன்படிக்கையை வெற்றியெனச் சொல்கிறான்; வருங்கால வெற்றிகளுக்கு அச்சாரம் என்கிறான்.

> ‘(நபியே!) நாம் உமக்கு வெளிப்படையான வெற்றியை அளித்துவிட்டிருக்கிறோம். உம்முடைய முந்திய, பிந்திய குறைகளை அல்லாஹ் மன்னிப்பதற்காகவும் அவன் தனது அருட்கொடையை உம்மீது நிறைவு செய்து, உமக்கு நேர்வழியைக் காட்டுவதற்காகவும் இன்னும் மகத்தான உதவியை அவன் உமக்கு வழங்குவதற்காகவும் தான்! அவன் தான் இறைநம்பிக்கையாளர்களின் இதயங்களில் நிம்மதியை இறக்கியருளினான். அவர்கள் தங்களின் நம்பிக்கையுடன் இன்னும் அதிகமான நம்பிக்கையை ஏற்படுத்திக் கொள்வதற்காக! வானங்கள் மற்றும் பூமியிலுள்ள படைகள் யாவும் அல்லாஹ்வின் வல்லமையின் கீழ் உள்ளன.’

(திருக்குர்ஆன் 48: 14)

அண்ணலார் உடன்படிக்கைக்கு ஒத்துக் கொண்டபோது மறுத்துரைத்து வேண்டாமெனக் கூறிய முஸ்லிம்கள் மனத்துக்குள் வெகுண்டெழுந்திருந்தார்கள். அபூஜந்தல், அவருடைய தந்தையிடமே ஒப்படைக்கப்பட்டபோது வாளை ஏந்தி ஸுஹைலைக் கொன்றுவிடத் துடித்தனர். பின்னர் அண்ணலார் குர்பானி கொடுக்கச் சொன்னபோது கூடாரங்களிலேயே இருந்தார்கள். அதன்பின்னர் அண்ணலார் குர்பானி

கொடுக்க, அண்ணலாரைத் தொடர்ந்து அதை நிறைவேற்றினார்கள்.

சில மனங்கள் தான் உடனே மாறும், பல மனங்கள் மாற காலம் பிடிக்கும்.

> ‘உண்மையாதெனில், அல்லாஹ் தன் தூதருக்கு உண்மையான கனவையே காட்டியிருந்தான். அதுவே முற்றிலும் சத்தியத்துக்கு ஏற்பவே இருந்தது. அல்லாஹ் நாடினால் நிச்சயம் நீங்கள் சங்கைமிகு பள்ளிவாசலில் முழு அமைதியுடன் நுழைவீர்கள்; உங்கள் தலைமுடியை மழிப்பீர்கள் அல்லது குறைப்பீர்கள்; மேலும் உங்களுக்கு எந்த அச்சமும் இருக்காது. நீங்கள் எதை அறியாதிருந்தீர்களோ அதை அவன் அறிந்திருந்தான். எனவே அந்தக் கனவு நிறைவேறுவதற்கு முன்பாக அண்மையிலுள்ள இந்த வெற்றியை அவன் உங்களுக்கு வழங்கியுள்ளான்.’

(திருக்குர்ஆன் 48: 27)

அண்ணலார் கண்ட கனவைப் பற்றிக் கூறி உடன்படிக்கை வரை இவ்வசனம் பேசுகிறது. புனிதப் பயணம் குறைஷிகளின் குறைமதியால் ஒரு போராக மாறிவிடக் கூடாது என்பதற்காகவே இந்த உடன்படிக்கையை இறைவன் நிறைவேற்றச் செய்தான்.

> ‘இந்த இறைநிராகரிப்பாளர்கள் தங்களின் உள்ளங்களில் வைராக்கியத்தை மூட வைராக்கியத்தை ஏற்படுத்திக் கொண்டபோது அல்லாஹ் தன்னுடைய தூதர்மீதும் நம்பிக்கையாளர்கள்மீதும் நிம்மதியை இறக்கியருளினான். மேலும் இறைநம்பிக்கையாளர்களை இறையச்சமுள்ள வாக்கைப் பேணி நடப்போராக விளங்கச் செய்தான். அவர்கள்தாம் அதற்கு மிகவும் அருகதையுடையோராயும் உரிமையுடையோராயும் இருந்தார்கள். அல்லாஹ் ஒவ்வொன்றையும் நன்கு அறிந்தவனாக இருக்கின்றான்.’

(திருக்குர்ஆன் 48: 26)

இறைவன் மக்காவாசிகளைப் பற்றியும் மதீனாவாசிகளைப் பற்றியும் பேசுகிறான். தன் கட்சியில் முஸ்லிம்களையும் சைத்தானின் கட்சியில் குறைஷிகளையும் வைத்துப் பேசுகிறான்.

இறைவாக்குகளைப் பேணுவதில் முஸ்லிம்கள்தான் தகுதிபடைத்தவர்கள், உரிமையுடையவர்கள் எனப் பேசும் அல்லாஹ்,

அவர்களுக்கு ஹுதைபியா உடன்படிக்கையை வெற்றிக் கனியாகத்தான் ஆக்கினான்; ஆனால் அது வழங்கப்பட்டபோது காயாக இருந்து பின்னர் கனிந்தது.

இறைவன் முஸ்லிம்களின் பக்கம்தான் இருந்தான்; முஸ்லிம்களின் செயல்பாடுகளோடு தான் இணைந்தான்; முஸ்லிம்களின் முழு முகவரியாகவே திகழ்ந்தான்.

ஹுதைபியாவில் அண்ணலார் வேலமரத்தின் கீழ் உறுதிப் பிரமாணம் வாங்கினார்களே, அப்போது இறைவன் தானே அங்கிருந்து உறுதிப் பிரமாணம் வாங்கியதாகக் கூறுகிறான்.

> ‘(நபியே!) எவர்கள் உம்மிடம் உறுதிப் பிரமாணம் செய்து கொண்டிருந்தார்களோ அவர்கள் உண்மையில் அல்லாஹ்விடம் உறுதிப் பிரமாணம் செய்து கொண்டிருந்தவர்களாவர். அவர்களுடைய கைகள்மீது அல்லாஹ்வின் கை இருந்தது.’

(திருக்குர்ஆன் 48: 10)

வேலமரத்தின் கீழிருந்து அண்ணலார் தோழர்களிடம் உறுதிப் பிரமாணம் வாங்கியபோது அண்ணலாரின் கை கீழே இருக்க தோழர்களின் கைகள் மேலேதானே வைக்கப்பட்டு உறுதிப் பிரமாணங்கள் எடுக்கப்பட்டன. இறைவனோ தோழர்களின் கரங்கள் கீழேயிருக்க மேலே தன்கரம் இருந்ததாகச் சொல்கிறானே! எப்படி?

உறுதிப் பிரமாணம் எடுக்க வந்தவர்கள் எதைச் சொல்லி உறுதிப் பிரமாணம் எடுப்பது எனத் தெரியாதிருந்த நிலையில் இறைவனே உறுதிப் பிரமாணத்துக்கான காரணத்தை அறிந்திருந்ததால் இறைவனே உறுதிப் பிரமாணம் எடுத்துக் கொண்டான். பின்னர், அண்ணலார் உறுதிப் பிரமாணம் எடுத்துக் கொண்டபோதுதான் காரணம் புரிந்தது.

அல்லாஹ்வுக்கும் அண்ணலாருக்கும் உறுதிப் பிரமாணத்தின் காரணம் புரிந்திருந்தபோது தோழர்களுக்குப் புரியாதிருந்த நிலையில் அல்லாஹ்வோடு இணைந்து தோழர்கள் உறுதிப் பிரமாணம் எடுத்ததையே கைகளின் இருப்பிடத்தை மாற்றி இறைவன் கூறியுள்ளான்.

> ‘இறைநம்பிக்கையாளர்கள் உம்மிடம் அந்த மரத்துக்குக் கீழே சத்தியப் பிரமாணம் செய்து கொண்டிருந்தபோது அல்லாஹ் அவர்களைக் குறித்து திருப்தி கொண்டான். அவர்களின் உள்ளங்களின் நிலைமைகளை அவன் அறிந்திருந்தான். இதனால்

அவன் அவர்கள்மீது நிம்மதியை இறக்கியருளினான். விரைவில் கிடைக்கும் வெற்றியையும் அவர்களுக்கு வெகுமதியாக வழங்கினான்.’

(திருக்குர்ஆன் 48: 18)

நிம்மதியை இறக்கியருளிய இறைவன் வெகுமதிகள் பலவற்றையும் வெற்றிகளையும் வழங்கியதை வரலாறு இன்றுவரை கூறிக் கொண்டிருக்கிறது.

இறைநம்பிக்கையாளர்களின் நிலையை இறைவன் இன்ஜீலில் சொல்லப்பட்டுள்ள உவமையைக் கூறி எடுத்துரைக்கிறான்.

‘ஒரு பயிர்; அது முதலில் குருத்தை வெளிப்படுத்தியது. பின்னர் அதை வலுப்படுத்தியது; பின்னர் அது பருத்தது. பிறகு, அது தன்னுடைய தண்டின்மீது செவ்வனே நின்றது. உழவர்களை அது மகிழ்விப்பதற்காகவும் அவர்கள் பூத்துக் குலுங்குவதைக் கண்டு நிராகரிப்பாளர்கள் பொறாமை அடைவதற்காகவும்தான்!’

(திருக்குர்ஆன் 48: 29)

உவமையைச் சொல்லும் இறைவன் இறுதி வரிகளில் உழவர்களென்னும் உவமானத்தைச் சொல்லி அடுத்து அவர்களென்ற உவமேயத்தைக் கூறிய பின்னர் சொல்ல வந்த பொருளை விளக்க இறைநிராகரிப்பாளர்களைக் கொண்டு வந்து நிறுத்துகிறான்.

இதில் பயிர் இஸ்லாமிய சமுதாயம். அது இப்போது குருத்துவிட்டுக் கொண்டிருக்கிறது. அது, பின்னர் வலுவாகும்; பருக்கும்; தன்னுடைய தண்டின் மேலேயே நிற்கும். அப்போது அடிக்கும் காற்றிலே அது சாய்ந்துவிடாது; மாண்டு விடாது. அதுவரை பொறுமையாக இருக்க வேண்டும்.

தன் தண்டில் நின்று அந்தப் பயிர் பயனளிக்கும்போது அதை உற்பத்தி செய்த உழவர்கள் மகிழ்வார்கள்; இறைமறுப்பாளர்களான எதிரிகள் எரிச்சல் அடைவார்கள்.

காலம் வரும் காத்திருக்கத்தான் வேண்டும்; வழிகள் திறக்கும்வரை வேறு வழிகளை நோக்கிப் பயணிக்கத்தான் வேண்டும்.

ஹுதைபியா உடன்படிக்கை மாற்று வழிகளில் பயணிப்பதற்கான சந்திப்பாக இருந்தது. அந்தச் சந்திப்பிலிருந்து அண்ணலார் ஒரு புதிய

பயணத்தைத் தொடங்கினார்.

## உடன்படிக்கைக்குப் பின்....

ஃபத்வ் வெற்றி எனும் அத்தியாயத்தின் முதல் வசனத்தைக் கேட்ட மதீனாவின் நயவஞ்சகர்கள் சிரித்தார்கள். சாதாரணமாகச் சென்று கஅபாவைத் தரிசித்து உம்ரா செய்ய முடியாது திரும்பிய தோல்விப் பயணத்தை எவ்வாறு வெற்றியெனக் கூறுவது என்று கேலி பேசினார்கள்.

மான்வேட்டைக்குச் சென்று அம்புறாத்தூணியைக் காலியாக்கித் திரும்பியவர்கள் புலிவேட்டைக்குச் சென்று வென்று வந்ததாகப் பிதற்றுகிறார்கள் என நயவஞ்சகம் நா கூசாமல் பேசியது. யூதர்களையெல்லாம் கோழையாக்கிய முஸ்லிம்கள் குறைஷிகளிடம் உயிர்ப்பிச்சை பெற்று வந்திருக்கிறார்கள் என நாற்சந்தி சொல்லம்புகளை வீசியது.

காலப்போக்கில் ஹுதைபியா உடன்படிக்கை நயவஞ்சகத்தை நார் நாராகக் கிழித்துப் போட்டது. நாற்சந்தி நாக்குகளை அசையாமல் செய்தது.

அக்கால அரபகத்தில் ஓர் ஊரில் வாழும் ஒருவர் வேறொரு ஊருக்குக் குடியேறும்போது புதிய ஊரில் உள்ளவர் அவருக்குப் பொறுப்பேற்பார். அவ்வாறு அன்றைய மக்காவில் பனூ தகீபைச் சேர்ந்த குடும்பத்தார் பனூ ஸுஹ்ராக்களின் பொறுப்பில் குடியேறியிருந்தனர்.

அந்த பனூ தகீப்பைச் சேர்ந்த அபூ பசீர் இஸ்லாத்தைத் தழுவியதால் குறைஷிகளால் சிறை வைக்கப்பட்டிருந்தார். சிறை வைக்கப்பட்டிருந்த அபூ பசீர் மக்காவுக்கு ஓடிவந்திருந்தார்.

ஹுதைபியா ஒப்பந்தத்துக்குப் பின் நடந்தது இது. அப்போது அபூபசீரைத் தேடி மக்காவின் தூதுவர் ஒருவரும் முன்னாள் அடிமை கவுதரும் அண்ணலாரிடம் வந்தனர்.

அண்ணலார் அபூபசீரிடம் ஒப்பந்த விதிகளைக் கூறி தேடி வந்தவர்களோடு அனுப்பினார். ‘முதல் முடிச்சு இது. அண்ணலாரால் அவிழ்க்க முடியாத முடிச்சுகள் இன்னும் வரும்’ என்றது நயவஞ்சகம். அண்ணலாரால் அவிழ்க்க முடியாத முதல் முடிச்சை அல்லாஹ் அவிழ்த்தான்.

தூதுவரோடும் தூதுவரின் துணைவரோடும் சென்ற அபூபசீர் தூதுவரின் வாளைப் பறித்து வாளேந்தி வந்தவரையே வாளுக்குப் பலியாக்கினார். குருதி சிந்திய வாளையும் கொடூரமான ஆளையும் பார்த்த முன்னாள் அடிமை கவுதர் கால்கள் பிடரியில் பட மதீனாவுக்குத் திரும்ப ஓடினார்; அபூபசீரும் அவரைத் தொடர்ந்து ஓடினார்.

இருவருமே சேர்ந்த இடம் அண்ணலாரின் மன்றமே! அண்ணலார், அவர்களின் வருகையைக் கண்டு நடந்த நிகழ்ச்சியை ஊகித்திருந்தார். கவுதர் நடந்த கதையைச் சொல்ல, அண்ணலார் மீண்டும் அபூபசீரை அழைத்துச் செல்லச் சொல்ல சூழ்நிலை மாறியது. கவுதர் அழைத்துச் செல்ல அச்சப்பட்டார். அபூபசீர் ‘முஸ்லிம்களின் வாக்குறுதி முன்பே நிறைவேற்றப்பட்டுவிட்டது. இப்போது நான் மக்காவாசியுமல்ல, மதீனாவாசியுமல்ல, சுதந்திரமானவன்’ எனச் சொன்னார்.

அண்ணலார் ‘நீர் விரும்பிய இடம் செல்லலாம், கவுதரே சாட்சி’ எனக் கூற அபூபசீர் பறந்து சென்றார். அவர் செங்கடலின் கரையோரம் ஒரு புதுப்பட்டினத்தில் குடியேறினார். ஆளே இல்லாத அப்பட்டினத்தின் நிறுவனர் அபூபசீரே!

அபூபசீரின் கதை மக்காவில் மட்டுமல்ல, மதீனாவிலும் பரவியது. அண்ணலார் ஒப்பந்தத்தை மீறி மக்காவில் புதிய முஸ்லிம்களை ஏற்றுக்கொள்ளாத நிலையில் அபூபசீரின் புதுப்பட்டின மக்கள் தொகை கூடியது. அவர்கள் சிரியா சென்ற மக்காவின் வணிகக் குழுக்களைக் கொள்ளையிட்டு குதூகலமாக வாழ்ந்தார்கள். மக்காவின் குறைஷிகளுக்குத் தலைவலிபோய் நெஞ்சுவலி வந்தது.

உடன்படிக்கையின் வெற்றியாளர் ஸுஹைலின் திருமகன் அபூஜந்தல், மாவீரர் காலிதின் சகோதரர் வலீது என இளைய தளபதிகள் புதுப்பட்டினத்தில் பெருகினார்கள். அவர்களின் தொகை எழுபதுக்கும் மேலானது.

மதீனாவைப் பற்றிய எண்ணமே இல்லாமல் குறைஷிகள் அபூபசீரின் புதுப்பட்டினம் பற்றியே கவலைப்பட்டார்கள். சிரியாவுக்கு செல்லவும் முடியவில்லை, சிரியாவிலிருந்து வரவும் முடியவில்லை. அபூபசீர் அணியினர் குறைஷிகளின் குறுக்கைப் பிடிக்க, குறைஷிகள் எழுதுகோலைப் பிடித்தனர்.

அண்ணலாருக்கு அவர்கள் மடலெழுதி அபூபசீர் அணியினரை மதீனாவுக்குள் அழைத்துக் கொள்ள சம்மதம் தெரிவித்தனர். உடன்படிக்கை விதிகளை மதிக்க வேண்டிய குறைஷிகள் அவற்றில்

ஒன்றை விட்டுக் கொடுக்க வேண்டிய நிலைக்கு ஆளாயினர்.

மதீனாவிலிருந்து எவரும் மக்காவுக்குத் திரும்பிச் செல்லாத நிலையில் மக்காவிலிருந்து வந்தவரெல்லாம் திருப்பி அனுப்பப்பட்ட நிலையில் குறைஷிகளின் தலைகீழ்மாற்றம் யாரால் நிகழ்ந்தது. இறைவனால் அல்லவா?

அபூபசீருக்கு அண்ணலார் மதீனாவில் வந்து வாழ்ந்து கொள்ளும்படிக் கூறி எழுதிய கடிதம் கிடைத்தபோது அந்த இயக்க முன்னோடி மரணத்தறுவாயில் இருந்தார்.

மடலைப் படித்த அபூபசீர் பின்னர் மரணமடைய, அவருடைய தோழர்கள் அனைவரும் மதீனாவுக்கு இடம் பெயர்ந்தனர். இவ்வாறெல்லாம் நடக்கும் என்பதன் அச்சார செய்திதான் இறைவசனம் கூறும் ‘வெளிப்படையான வெற்றி’ என்பது!

இது வெளிப்படையான வெற்றி மட்டுமல்ல, மகத்தான வெற்றியுமாகும்.

> ‘(அவன் எதற்காக இவ்வாறெல்லாம் செய்துள்ளானெனில்) இறைநம்பிக்கையாளர் களான ஆண்களையும் பெண்களையும் நிரந்தரமாக வாழச் செய்வதற்காக! கீழே ஆறுகள் ஓடிக்கொண்டிருக்கும் சுவனங்களில் நுழையச் செய்வதற்காகவும் மேலும், அவர்களுடைய தீமைகளை அவர்களைவிட்டும் களைவதற்காகவும்தான். அல்லாஹ்விடத்தில் இது மகத்தான வெற்றியாக இருக்கிறது.’

(திருக்குர்ஆன் 48: 5)

மக்காவிலிருந்து மதீனா வரலாம்; முஸ்லிமாகியும் வரலாம், உறவு கொண்டாடி முஸ்லிமாகாமலும் வரலாம். மக்காவுக்குப் போகலாம்; உம்ரா செய்யவும் போகலாம்; உறவு கொண்டாடியும் போகலாம். இங்கிருந்து அங்கும் அங்கிருந்து இங்கும் அரபு மக்கள் சென்று வந்து உறவைப் பேணினார்கள். வார்த்தைகளில் இலக்கணமாக உரைக்கப்பட்ட இஸ்லாம் வாழ்க்கைப்பாடமாக மாறியிருந்ததைக் கண்ட குறைஷிகள் முஸ்லிம்களோடு கைகோர்த்தார்கள்; மெய்சேர்த்தார்கள். மனங்களில் மெய் சேர்த்து முஸ்லிம்களெனச் சொல்லிக்கொள்ள பேரவா கொண்ட அவர்கள் நாவுகளால் கலிமா சொன்னார்கள். முஸ்லிம்களின் எண்ணிக்கையைப் பெருக்கினார்கள்.

‘உங்களுக்கும் நீங்கள் (இன்று) யாருடன் பகையை

கொண்டிருக்கின்றீர்களோ அவர்களுக்குமிடையே அல்லாஹ் என்றைக்கேனும் அன்பை ஏற்படுத்தக்கூடும். அல்லாஹ் பேராற்றலுடையவன்; மேலும் அவன் பெரும் மன்னிப்பாளனாகவும் கருணை மிக்கவனாகவும் இருக்கின்றான்.'

(திருக்குர்ஆன் 60: 7)

'அல் மும்தஹினா பரிசோதனை' எனும் பொருளுள்ள அத்தியாயத்தின் இந்த இறைவசனம் உள்ளங்கை நெல்லிக்கனிபோல் நிரூபணம் ஆனது!

## அண்ணலார் அனுப்பிய முடங்கல்கள்

'(நபியே!) நாம் உம்மை அகிலத்தாருக்கு ஓர் அருட்கொடையாகவே அனுப்பியுள்ளோம்.'

(திருக்குர்ஆன் 21: 107)

பல்வேறு காலகட்டங்களில் பல்வேறு பிரதேசங்களில் இறைத்தூதர்கள் அனுப்பப்பட்டுள்ளர். அவர்கள், தம்மின மக்களிடையே மட்டுமே தூதுத்துவத்தை எடுத்துரைத்துள்ளனர்; தம் பிரதேசங்களில் மட்டுமே ஏகத்துவத்தை எடுத்துக் கூறியுள்ளனர்.

அண்ணலார் மட்டுமே அகிலமனைத்துக்கும் ஏகத்துவத்தை எடுத்துரைக்கப் பணிக்கப்பட்டார். வெள்ளையர் கறுப்பரென பிரிக்கப்பட்டவர்களுக்கும் அரபி அரபியல்லாதார் என பகுக்கப்பட்டவர்களுக்கும் இறைத்தூதராக அண்ணலார் அனுப்பப்பட்டார்.

எனவே, அண்ணலார் அகிலத்தார் அனைவருக்கும் இறைவனின் தூதை எடுத்துரைக்கும் முயற்சியில் ஈடுபட்டார்.

'பெரும்பேறு நிறைந்தவனாக இருக்கின்றான், தன்னுடைய அடியார்மீது (சத்தியத்தையும் அசத்தியத்தையும் பிரித்துக் காட்டும்) இந்த ஃபுர்கானை (குர்ஆனை) இறக்கி வைத்தவன். அகிலத்தார் அனைவருக்கும் (அவர்) எச்சரிக்கை செய்யக் கூடியவராக திகழவேண்டும் என்பதற்காக!'

(திருக்குர்ஆன் 25: 1)

திருக்குர்ஆன் விடுக்கும் செய்தி உலகளாவியதாகும். அது இன, நிற வேறுபாடுகளையும் புவியியல் எல்லைகளையும் தாண்டி நிற்கிறது.

ஹிஜ்ரி ஆறாமாண்டு

ஹுதைபியா உடன்படிக்கைக்குப் பின் ஏற்பட்ட ஓர் அமைதியான சூழ்நிலையில் அண்ணலார் அரபகத்துக்கு வெளியேயிருந்த ஆட்சியாளர்களுக்கு இஸ்லாத்தின் செய்தியை எடுத்துரைக்கத் தொடங்கினார்.

அதற்காக அண்ணலார் மடல்களை எழுதச் செய்து தம் தூதர்கள் மூலம் அனுப்பிவைத்தார்.

இருள் சூழ்ந்திருந்த நாடுகளை நோக்கி இஸ்லாமிய அழைப்பாளர்கள் பேரொளியை ஏந்திச் சென்றனர். உலக சகோதரத்துவம் பேசும் இஸ்லாமியக் கருத்துகளை இதயத்தில் சுமந்தவர்கள் ஆங்காங்குள்ள நாடுகளை நோக்கிப் பயணம் புறப்பட்டனர்.

அபிசீனியாவின் மன்னர் நஜ்ஜாஷியிடம் நபித்தோழர் அமர் பின் உமய்யா அல் அள்ளம்ரீ அண்ணலாரின் மடலைக் கொண்டு சென்றார். மடலைப் பெற்ற மன்னர் தூதுவரோடு கலந்துரையாடினார்; கலந்துறவாடினார்; அதன் தொடர்ச்சியாக இஸ்லாத்தை ஏற்றுக் கொண்டார்.

எகிப்தின் கிறிஸ்துவ ஆளுநர் முகவ்கிஸ்ஸுக்கு நபித்தோழர் ஹாத்திப் பின் அபீ பல்தஆ முடங்கல் கொண்டு சென்றார். தூதுவரை அன்போடு வரவேற்ற ஆளுநர் இஸ்லாத்தைப்பற்றிக் கேட்டுத் தெரிந்துகொண்டார். ஆனால், இஸ்லாத்தைத் தழுவவில்லை.

இஸ்லாத்தின் கருத்துகளை இதயத்தால் தழுவிய ஆளுநர் தூதுவர் மூலம் அண்ணலாருக்குப் பரிசுப் பொருள்களைக் கொடுத்தனுப்பினார்.

பொன்மணிமாலைகள், உயர் வகை மேலங்கிகள், இரு வண்ணக் குதிரைகள், இரு மட்டக் குதிரைகள் ஆகியவற்றோடு இரு காப்டிக் இன அழகிகளையும் ஆளுநர் பரிசுப் பொருள்களாக அனுப்பினார்.

பைஸாந்தியப் பேரரசின் சக்கரவர்த்தி ஹிரக்கலசுக்கு நபித்தோழர் திஹ்யா அல் கலபி ஓலையேந்திச் சென்றார். ஜெருசலத்திலிருந்த அவர் எதிர்ப்பேதும் கூறவில்லை; அதே சமயம் அவர் இஸ்லாத்தையும் ஏற்கவில்லை.

யமாமாவின் அதிபர் ஹவ்தா இப்னு அலிக்கு நபித்தோழர் சுலைத்

பின் அம்ர் அல் ஆமிரி மடல் கொண்டு சென்றார். மடலைக் கண்டு மகிழ்ச்சியைத் தெரிவித்த அதிபர் அண்ணலாரின் ராஜ்யத்தில் பாதியைக் கேட்டார். ராஜ்யம் கிடைத்தால் இஸ்லாத்தை ஏற்பதாகச் சொன்னார்.

சிரியாவின் பைஸாந்திய ஆளுநர் ஹாரித் கஸ்ஸானிக்கு அண்ணலாரின் நிருபம் கிடைத்தபோது கோபம் கொப்பளித்தது. தன்னுடைய படையை மதீனா நோக்கி அனுப்பப் போவதாகச் சொல்லிக் குதித்தார்.

ஓமன் அதிபர் ஜைபர் அப்துக்கு நபித்தோழர் அம்ர் பின் ஆஸ் கடிதம் கொண்டு சென்றார். ஓமன் அதிபர் தலையாட்டி மறுத்துவிட்டார். யெமனின் ஆளுநரும் அண்ணலாரின் நேர் வழியை மறுத்துவிட்டார்.

பாரசீகத்தின் கீழிருந்த அல் பஹ்ரினுக்கு நபித்தோழர் அலாஉ பின் அல் ஹஸ்ரமீ தூதுச் செய்தி கொண்டு சென்றார். அதன் ஆளுநர் முன்தீர் பின் ஸாவா அண்ணலாரின் கடிதத்தை பாரசீக மன்னருக்கு அனுப்பினார்.

பாரசீகப் பேரரசர் குஸ்ரு பர்வேசுக்கு அனுப்பப்பட்ட கடிதம் அவரைக் கோபப்பட வைத்தது. அல்லாஹ்வின் பெயர் சொல்லி எழுதப்பட்டதால் ஆத்திரப்பட்ட குஸ்ரு கடிதத்தைக் கிழித்தெறிந்தார்.

மதாயீன் தலைவர் கிஸ்ராவுக்கு நபித்தோழர் அப்துல்லாஹ் பின் ஹீதாபாவும் திமிஸ்கின் தலைவர் அல்ஹாரிஸ் பின் அபீசம்ருக்கு நபித்தோழர் ஷீஜாஉபின் வஹ்பும் மடல் கொண்டு சென்றனர். தலைவர்கள் இருவரும் பதிலேதும் சொல்லவில்லை.

## 26. கைபர் போருக்குப் பின்...

### கைபர் களத்தில்

ஹுதைபியா உடன்படிக்கைக்குப் பின் மதீனாவுக்குத் தெற்கில் அமைதி பூத்துக் குலுங்கியது. வடக்கிலோ கந்தகக் கிடங்காக கைபர் திகழ்ந்தது. அங்கு வாழ்ந்து கொண்டிருந்த யூதர்களும் வந்தேறிய யூதர்களும் கமுக்கமாக இஸ்லாத்தை நசுக்க ஏற்பாடுகளைச் செய்து கொண்டிருந்தனர்.

சிறுநரி, பெருநரி, குள்ள நரிகளெல்லாம் சேர்ந்து சிறுத்தைகளைக் கூட்டணியில் சேர்த்துக் கொண்டிருந்தன. பனூ நளீர்கள், பனூ கைனுகாக்கள், பனூ குரைளாக்கள் எல்லாம் சேர்ந்து காட்டரபிகளான கத்தபான்களோடு அணிசேர்ந்திருந்தார்கள்.

யூதர்களால் மதீனாவுக்கு உடனடியான ஆபத்து இல்லையென்றாலும் அவர்கள் குறைஷிகளைக் குழப்பி முஸ்லிம்களை அழிப்பதற்கு முன்நிற்பதை நிறுத்திக் கொள்ளவில்லை. யூத உறவினாலேயே கத்தபான்கள் குறைஷிகளோடு கைகோர்த்து நின்றார்கள்.

கைபர் மீதான முஸ்லிம்களின் படையெடுப்பு கமுக்கமாகவே இருந்தது. இப்படையெடுப்பைப் பற்றிக் கேள்விப்பட்ட குறைஷிகள் முஸ்லிம்கள் கைபரின் அரண்கள்படைகளின் வலிமையால் தோற்றோடி வரப்போகிறார்கள் என எண்ணினர். கைபர்வாசிகளோ தம் அரண்களும் பெரும் எண்ணிக்கையிலான படைகளும் கத்தபான்களும் கைகொடுப்பர் என நம்பினர்.

கைபர் யூதர்கள் பகைவர்கள்தான், என்றாலும் படைநடத்தி அவர்களைப் பணியவைக்க முஸ்லிம்கள் முயல மாட்டார்கள் என அரபகம் நம்பிய நிலையில் மதீனாவிலிருந்து படைபுறப்பட்டது.

கைபர் யூதர்களின் தலைவர்களில் ஒருவரான கினானா மிக அவசர கதியில் கத்தபான்களின் உதவி நாடிச் சென்றார். கைபரின் அந்த வருடத்திய அறுவடையில் பாதியை கினானா கத்தபான்களுக்குத் தர

ஒத்துக் கொள்ள, அவர்கள் நாலாயிரம் வீரர்களை அனுப்பச் சம்மதித்தனர்.

கைபர் வீரர்கள் பத்தாயிரம், கத்தபான் வீரர்கள் நாலாயிரம். பதினான்காயிரம் வீரர்களை வெல்ல மதீனாவின் வீரர்கள் ஆயிரத்து அறுநூறு பேர்.

பத்தாயிரம் கைபர் வீரர்களுக்கு முன் மானுட அரணாக நிற்கச் சம்மதித்த கத்தபான்கள் களத்துக்கு வரவில்லை. பத்தாயிரம் வீரர்களும் கோட்டைகளிலும் அரண்களிலும் வீடுகளிலும் பதுங்கியிருக்க கைபரின் முற்றத்தில் 1600 முஸ்லிம்கள் நின்றார்கள்.

> ‘அது அவர்களின் முற்றத்தில் இறங்கிவிடுமாயின், எவர்களுக்கு எச்சரிக்கை செய்யப்பட்டு விட்டதோ அவர்களுக்கு அந்நாள் மிகவும் கெட்டதொரு நாளாகிவிடும்.’

(திருக்குர்ஆன் 37: 177)

கெட்டதொரு நாளென்று தெரியாமலேயே கைபர்வாசிகள் வைகறையில் வெள்ளி முளைத்தபின் தம் தோட்டந்துரவுகளுக்குப் புறப்பட்டனர். எதிரில் முஸ்லிம்களின் படை! எதுவும் தோன்றாது திரும்பி தம் வீடுகளுக்குள் ஓடி ஒளிந்தனர்.

யூதர்களின் மலைபோன்ற கோட்டைகள், நீண்ட மதிலாக நின்ற அரண்கள், வலிவும் பொலிவும் மிக்க பெரிய வீடுகள் ஆகியவை நீண்ட நேரம் அமைதியாகத் திகழ்ந்தன. பின்னர் திடீரென அவை அம்புகளை வீசின.

வில் வித்தைக்காரர்களான கைபர்வாசிகள் களத்தினுள் வராமலேயே வில்லையேந்தி விளையாடுபவர்கள். அம்புகள் பாய்ந்துவரும் திசை தெரியுமே தவிர வில்லேந்திகளைக் காண முடியாது.

> ‘இவர்கள் எல்லோரும் ஒன்று திரண்டு (திறந்த களத்தில்) ஒருபோதும் உங்களுடன் போரிடமாட்டார்கள். போரிட்டாலும் அரண்களுடைய ஊர்களில் அமர்ந்து கொண்டோ சுவர்களுக்குப் பின்னர் ஒளிந்து கொண்டோதான் போரிடுவார்கள்.’

(திருக்குர்ஆன் 59: 14)

அரண்களுக்குப் பின் நின்றும் சுவர்களுக்குப் பின் மறைந்துகொண்டும் நடத்திய போர் ஆறு நாட்கள் நடந்தது.

ஆறாவது நாள் இரவு உமர் இரவுக் காவல் காத்தபோது உளவு பார்க்க வந்த யூதரொருவர் பிடிபட்டது முஸ்லிம்களுக்குச் சாதகமாக அமைந்தது. யூதர்களின் ஒற்றுமையின்மை, ஆயுதபலம், அவை இருக்கும் கோட்டை, எந்த நரம்பைத் தட்டினால் எந்தப் பகுதி செயலிழக்கும் என்ற செய்தியெல்லாம் கிடைத்தன.

> ‘அவர்கள் தங்களுக்கிடையே மோதிக் கொள்வதில் கடுமையாக உள்ளனர். இவர்கள் அனைவரும் ஒன்றுபட்டிருப்பதாகக் கருதுகின்றீர்கள். ஆனால், இவர்களுடைய இதயங்கள் சிதறிக்கிடக்கின்றன.’

(திருக்குர்ஆன் 59: 14)

முதல் நாள் முற்றுகையிலே இவ்வசனம் மெய்ப்பிக்கப்பட்டது. அண்மையிலிருந்த ஓர் அரணைத் தாக்கியபோது அந்த அரணிலிருந்து மட்டுமே அம்புகள் வந்து வீழ்ந்தன. அடுத்திருந்த அரண்களோ அமைதியோடு காணப்பட்டன. அவர்கள் சிதறிக் கிடந்தார்கள்; ஒன்றுபட்டு களத்தில் நின்று போராட துணிவின்றிக் கிடந்தார்கள்.

முஸ்லிம்கள் அல்லாஹ்வுடைய வழியில் ஈயத்தால் வார்க்கப்பட்ட சுவரைப் போன்று உறுதியாக அணிவகுத்து நின்று போரிட்டார்கள்.

முஸ்லிம்களின் அணியில் சிலர் அம்புக்காயம் பட்டார்கள். அவர்களின் காயங்களை ஆற்றுவதில் போரணியின் பின்னணியாக வந்திருந்த அண்ணலாரின் துணைவியார் உம்மு ஸல்மா, மாமி ஸபிய்யா, உம்மு ஐமன், நுஸைபா, அனஸின் தாயார் உம்மு ஸுலைம் ஆகியோர் பெரும் பங்காற்றினர்.

உளவாளியின் தகவல்களின்படி ஆயுதக் கோட்டை கைப்பற்றப்பட்டது. அதில் பல்வேறு புதிய ஆயுதங்கள் இருந்தன. அவற்றில் ஒன்று ஏவுகணை போன்று கற்களை ஏவும் கணை.

ஆயுதக் கோட்டை கைப்பற்றப்பட்டபின்னரும் அம்புகள் வந்து விழுந்து கொண்டிருந்தன. கைபர் வாசிகளின் நீராதாரம், உணவுவகை எங்கிருக்கின்றன எனக் கண்டறிய இரு நாட்கள் பிடித்தன. அவை துண்டிக்கப்பட கைபர்வாசிகள் சரணடையச் சம்மதித்தனர்.

பதினான்கு நாட்களுக்குப் பிறகு யூதர்களின் தலைவர் உடன்படிக்கை ஒன்றினைச் செய்ய சம்மதித்தார்.

‘எத்தனையோ சின்னஞ் சிறு கூட்டம் அல்லாஹ்வின் அனுமதி

கொண்டு பெரும் பெரும் கூட்டங்களை வெற்றி கொண்டிருக்கிறது. மேலும் அல்லாஹ் பொறுமையாளர்களுடனேயே இருக்கின்றான்.'

(திருக்குர்ஆன் 2: 249)

கால்களில் சக்கரங்களைக் கட்டிக் கொண்டு காலங்கள்தோறும் ஓடிக் கொண்டிருக்கும் யூதச் சமுதாயம் கைபரிலிருந்தும் ஓடச் சம்மதித்தது. தம்முடைய பொன் பொருள்களை விட்டு கோட்டைக் கொத்தளங்களைவிட்டு, நிலங்களைவிட்டு, கால்நடைகளை விட்டு அகலச் சம்மதித்தனர்.

கினானா, தன் மனைவி ஸபிய்யா அண்ணலாருக்குச் சாதகமாக நியாயத்தைக் கூறியதால் கைபரில் விட்டுச் செல்லப்பட்டார். பனூ குரைளாத் தலைவர் ஹுயையின் மகள் இவர். இளமையிலேயே மதீனாவில் வாழ்ந்த ஸபிய்யா அண்ணலாரின் வருகையையும் வளர்ச்சியையும் நன்கு அவதானித்தவர். போரில் பங்காகக் கிடைத்த இவரை பின்னர் அண்ணலார் மணம் முடித்துக் கொண்டார்.

கைபர் போரின் வெற்றிக்குப் பின் அளித்த விருந்தொன்றில்தான் ஸலாம் இப்னு மிஷ்காமின் என்ற யூதரின் மனைவி செம்மறியாட்டின் இறைச்சியில் நஞ்சைக் கலந்து கொடுத்தாள். அதைக் கடித்தவுடன் நஞ்சு கலந்திருப்பதையறிந்து அண்ணலார் விருந்தைத் தவிர்த்தார். எனினும் அவ்விதவைப் பெண்ணை மன்னித்துவிட்டார்.

## கைபரின் பின்

கைபரின் மீதான முற்றுகையைத் தொடர்ந்து இரு படையெடுப்புகள் யெமனை நோக்கி நடத்தப்பட்டன. இவை ஹவாஸின்களுக்கு எதிராக நடத்தப்பட்டவை; ஒரு படையெடுப்புக்கு உமரும் மற்றொரு படையெடுப்புக்கு அபூபக்கரும் தலைமையேற்றனர்.

மேலும் இரு படையெடுப்புகள் கத்தபான்களுக்கு எதிராகவும் மற்றும் இரு படையெடுப்புகள் முர்ராக்களுக்கு எதிராகவும் நடத்தப்பட்டன. கத்தபான்களும் முர்ராக்களும் அளவுக்கதிகமான உடல் வலிமையும் உள்ளத்தின் வலிமையும் படைத்தவர்கள்; வாளோடும் வில்லோடும் பிறந்தவர்கள்; அவற்றை விளையாட்டுப் பொருளாகக் கொண்டவர்கள். உடலில் ஆடையிருக்கிறதோ இல்லையோ முதுகில் அம்புறாத் தூணியிருக்கும். ரத்த ருசி கண்டவர்கள், வேட்டைப் பிரியர்கள்.

பதக் சோலையும் பதக் யூதக் குடியிருப்பும் அண்ணலாரின் கீழ் வந்திருந்தன. பதக் மக்களை முர்ராக்கள் சீண்டிப் பார்த்துக் கொண்டிருந்தார்கள். அண்ணலாரிடம் பதக்குகள் முறையிட முர்ராக்களை அடக்கி வைக்க வேண்டியிருந்தது. முர்ராக்களின் பலத்தையறியாது அவர்களை அடக்கச் சென்ற மதீனாவின் படைவீரர்கள் இருபது பேர் கொல்லப்பட்டனர். அடுத்து அனுப்பப்பட்ட இருநூறு வீரர்கள் முர்ராக்களை அடக்கினர்.

இப்படையெடுப்புக்கு கினானா கோத்திரத்தின் பனூ லைத் கோத்திரத்தைச் சேர்ந்த காலிப் இப்னு அப்துல்லாஹ் தளபதியாகச் சென்றார். போரின் முடிவில் ஒட்டகங்களும் செம்மறியாடுகளும் பெருமளவில் கிடைத்தன.

இப்போரில் அண்ணலார் பெரிதும் விரும்பி வளர்த்த இளைஞரும் ஜைதின் மகனுமான உஸாமாவும் கலந்து கொண்டார்.

உஸாமா விரட்டிச் சென்ற முர்ராக்களில் ஒருவர் ஆயுதத்தை இழந்து நின்று கலிமா ஷஹாதத் சொன்னபோதும் கொல்லப்பட்டார்.

இதையறிந்த தளபதி காலிப் மிகவும் வருத்தப்பட்டார். ‘அவர் உயிருக்குப் பயந்தே கலிமா சொன்னார்’ என்ற உஸாமாவின் வாய்மொழி மனச் சஞ்சலத்தைப் படையினரிடம் ஏற்படுத்தியது.

> ‘இறைநம்பிக்கையாளர்களே! நீங்கள் அல்லாஹ்வின் பாதையில் (ஜிஹாத் செய்யப்) புறப்படுவீர்களாயின் (பகைவனையும் நண்பனையும்) பிரித்தறிந்து கொள்ளுங்கள். மேலும் உங்களுக்கு ஸலாம் சொன்னவரைப் பார்த்து ‘நீ இறைநம்பிக்கை கொண்டவன் அல்லன்’ எனக் கூறாதீர்கள்.’

(திருக்குர்ஆன் 4: 94)

உஸாமாவின் செயலைக் கேட்ட அண்ணலார் ‘கலிமா சொன்னவரின் இதயத்தைப் பிளந்து அவர் சொல்வது உண்மையா பொய்யா என அறிய முடியாது’ எனக் கூற உஸமா மன்னிப்புக் கேட்டுக் கொண்டதோடு ‘இனிமேல் ஈமான் கொண்டவருக்கு எள் முனையும் காயம் உண்டாக்க மாட்டேன்’ என சபதம் எடுத்துக் கொண்டார்.

கைபர் போரில் கிடைத்த ஏராளமான பொருள்களும் கால்நடைகளும் அதன்பின் நடத்தப்பட்ட ஆறு முற்றுகைகளில் கிடைத்த கனீமத் பொருள்களும் ஹிஜாஸின் தோட்டங்களிலிருந்து கிடைத்த மகசூல்களும் அண்ணலாரிடம் குவிந்து கிடந்தன. மதீனாவாசிகளும்

செல்வச்செழிப்போடு காணப்பட்டனர்.

எளிமையாக வாழ்ந்த அண்ணலாரின் மனைவியரிடையே பொன்னும் பொருளும் பெரும் அசைவை ஏற்படுத்தின. இதைக் கேள்விப்பட்ட உமர் தன்னுடைய மகள் ஹப்ஸாவைப் பார்த்துக் கண்டித்தார்; ஒன்றுவிட்ட சகோதரி உம்மு ஸல்மாவுக்கும் அறிவுரை கூறினார்.

ஆயிஷா, ஸைனப் போன்றோரின் படகுகளும் ஆசை அலைகளால் ஆடத்தான் செய்தன.

இந்தச் சூழலில்தான் அண்ணலார், தமக்கு அன்பளிப்பாக எகிப்திய மன்னர் அனுப்பி வைத்த காப்டிக் இன பெண்ணடிமை மாரியத்துல் கிப்தியாவை மணந்து கொண்டார். புயல் பிரதேசத்தை விட்டு நீங்கி தென்றலடிக்கும் பிரதேசத்தில் பிரவேசித்தார்.

மாரியத்துல் கிப்தியாவின் பிரவேசம் சில மனைவியருக்கு முற்றிலுமாகப் பிடிக்கவில்லை. தம் வாழ்க்கைச் செலவுகளுக்காக மனைவியர் அதிகமாகக் கேட்டது அண்ணலாருக்குப் பிடிக்கவில்லை.

இந்நிலையில் அண்ணலார் தம் மனைவியரை மணவிலக்கு செய்துவிட்டதாக செய்தி பரவியது. செய்தியைப் பரப்ப நயவஞ்சகத்தின் நாவு தான் காரணம்!

உமர் அண்ணலாரைக் கண்டு ‘நீங்கள் உங்கள் மனைவிமார்களை மணவிலக்குச் செய்துவிட்டீர்களா?’ எனக் கேட்க, அண்ணலார் ‘இல்லை’ எனக் கூறினார்.

‘மக்காவில் நாம் பெண்களை அடக்கி வைத்திருந்தோம். மதீனா வந்தபின்னரே குறைஷிப் பெண்கள் இங்கு சுதந்திரமாக வாழ்ந்த பெண்களைப் பார்த்துக் கெட்டுவிட்டனர்’ என்று உமர் சொன்னபோது ‘எங்கள் மூதாதையர் ஸல்மா, என் அன்னை ஆமினா ஆகியோரும் யத்ரிப் வாசிகள் அல்லவா?’ எனச் சொல்ல ‘அடிமையாக வாழ விரும்பாதவர்கள் எனக் கூறவந்தேன்’ என்றார் உமர். அண்ணலார் புன்முறுவல் பூத்தார். உமர் உற்சாகமடைந்தார்.

அப்போது அண்ணலார் அண்மையில் இறங்கிய இறைவசனத்தை உமரிடம் ஓதிக் காட்டினர்.

‘நபியே! நீர் உம்முடைய மனைவிமார்களிடம் கூறிவிடும்: நீங்கள் உலக வாழ்வையும் அதன் அழகையும் விரும்புகிறீர்களென்றால், வாருங்கள்! நான் ஏதேனும் சிலவற்றைக் கொடுத்து அழகிய

முறையில் உங்களை அனுப்பிவிடுகின்றேன். ஆனால், நீங்கள் அல்லாஹ்வையும் அவனுடைய தூதரையும் மறுவுலகையும் நாடுகிறீர்களென்றால் (அறிந்து கொள்ளுங்கள்) உங்களில் நற்செயல் புரிபவர்களுக்கு அல்லாஹ் மகத்தான கூலியைத் தயார் செய்து வைத்துள்ளான்.'

(திருக்குர்ஆன் 33: 2829)

இறைவசனத்தைக் கேட்ட உமர் முதன் முதலில் ஆயிஷாவிடம் உரையாடினார். அவர் 'உறுதியாக நான் அல்லாஹ்வையும் அவனுடைய தூதரையும் இறுதி வீட்டையுமே விரும்புகிறேன்' என்றார்.

உம்மு ஹபீபா, உம்மு ஸல்மா, ஸைனப் ஆகியோரிடம் சென்ற உமர் ஆயிஷா அளித்த வாக்குமூலத்தையே அளிக்கக் கேட்டு ஆறுதல் அடைந்தார். தன்னுடைய மகள் ஹப்ஸாவிடம் தயங்கித் தயங்கிச் சென்ற உமருக்கு கேட்பதற்கு முன்பே பதில் கிடைத்தது பேராச்சர்யத்தைத் தந்தது.

அண்ணலார் தாம்மேற்கொண்ட சோதனைக்கு ஒரு மாத காலம் தவணை அளித்திருந்தார்.

அன்று இருபத்தியொன்பது இரவுகள் முடிந்திருந்தன. அண்ணலார் ஆயிஷாவின் இருப்பிடத்துக்குச் சென்றார். அண்ணலாரை வியப்போடு பார்த்த ஆயிஷா 'மாதமொன்று முடியவில்லையே!' என்றார்.

'இது இருபத்தியொன்பது நாட்களைக் கொண்ட மாதம், சந்திரக் கணக்கு சரிதானே!' என அண்ணலார் கூற, ஆயிஷா வான வெளியைப் பார்த்தார்.

அங்கு தலைப் பிறை தோன்றியிருந்தது.

## உம்ரா

ஹுதைபியா உடன்படிக்கையின்படி முஸ்லிம்கள் உம்ரா செய்ய வேண்டிய நாள் நெருங்கிக் கொண்டிருந்தது. மதீனா, குதூகலமாக குர்பானிக்கான கால்நடைகளையும் பொருள்களையும் சேகரித்துக் கொண்டிருந்தபோது மக்கா, முஸ்லிம்களின் வருகையை எண்ணிக் கவலைப்பட்டுக் கொண்டிருந்தது.

சிலைவணக்கக்காரர்கள் சிலைவணக்கத்தைவிட்டுவிட்டு ஓரிறைவனை வணங்கத் தொடங்கியவர்களைக் கண்டு அச்சப்படத்

தேவையில்லை. ஓரிறைக் கொள்கைக்காரர்கள் யார்? சிலை வணங்கிகளாக இருந்தவர்கள்தானே! சிலைவணங்கிகளின் சொந்தக்காரர்கள் தானே!

ஓரிறைக்காரர்களாக மாறிய போதும் கஅபாவுக்குள் இருக்கும் சிலைகளைத்தான் வணங்க மறுக்கிறார்களே தவிர இபுறாகீம் நபிகளார் காலத்து மரபுகளின்படி கஅபாவை தவாப் செய்வதை விட்டுவிடவில்லையே!

அபூசுப்யான் யார்? அண்ணலாரின் ஒன்றுவிட்ட பெரிய தந்தை ஹார்மின் மகன்தானே! முஸ்லிமாகாமலேயே மரணமடைந்த அபூதாலிப் யார்? அண்ணலாரைப் பேணி வளர்த்த அருமைப் பெரிய தந்தைதானே!

இவற்றையெல்லாம் எண்ணிப் பார்க்கவிடாது குறைஷிகளின் பழைய மதம் தடையாக நின்றது. உறவுகளைப் பகையாக்கி உதிரம் சிந்தவைத்தது.

இரண்டாயிரம் முஸ்லிம்கள் ‘லப்பைக் அல்லாஹும்ம லப்பைக்’ என முழங்கி மக்காவுக்குள் நுழைந்தபோது குறைஷிகள் தம் இல்லங்களை விட்டும் வெளியேறி அபூகுபைஸ் மலையின் உச்சியிலும் அடிவாரத்திலும் குவிந்து கிடந்தார்கள்.

முஸ்லிம்கள் மக்காவிலிருக்கும் மூன்று நாட்களும் குறைஷிகளுக்கு மலைமேல்தான் கூட்டாஞ்சோறு! மலையடிவாரத்தில்தான் கூடாரவாழ்வு! அவர்களின் கால்நடைகள் எழுப்பிய அபயக்குரல் ‘எங்கள் எஜமானர்களுக்கு ஹிதாயத்தைத்தா!’ என்பது போலிருந்தது.

அண்ணலார் கஸ்வாவின்மீது வீற்றிருக்க அப்துல்லாஹ் இப்னு ரவாஹா அதன்கடிவாளத்தைப் பிடித்து வந்தார். ஒட்டகங்களிலும் கால்நடையாகவும் வந்த இரண்டாயிரம் பேரும் புனித இல்லத்தை அடைந்தனர்.

மேலாடையும் கீழாடையுமே புனிதப் பயண ஆடை. அண்ணலார் மேலாடையை இடது தோளுக்கும் வலது இடுப்புக்குமாக ஆக்கினார். பின்னர் கஅபாவின் தென்கிழக்கு முனையை அடைந்து தம் கைக்கம்பால் கருநிறக் கல்லைத் தொட்டார். அதையடுத்து புனித இல்லத்தை ஏழுமுறை வலம்வந்து ஸபாக் குன்றின் அடிவாரத்தை அடைந்தார். பின் அங்கிருந்து ஸபாமர்வாக் குன்றுக்குமுள்ள இடைவெளியைக் கடந்தார். இவ்வாறு அண்ணலார் ஏழு முறை செய்தார்.

அண்ணலாரை முன்னோடியாக்கி முஸ்லிம்கள் அனைவரும் புனித

இல்லத்தை ஏழு முறை வலம் வந்து ஸபா மர்வாக் குன்றுகளிடையே ஏழுமுறை ஓடாமல் ஓடினார்.

மர்வாக்குன்றின் அடிவாரத்திலேயே குர்பானிக்கான கால்நடைகள் குவிக்கப்பட்டிருந்தன. அண்ணலார் ஓர் ஒட்டகத்தை அறுத்துப் பலியிட்டார். அடுத்தடுத்துப் பலியிடப்பட்ட கால்நடைகளால் மர்வாக்குன்றின் அடிவாரத்தில் ஒரு மாமிசக்குன்று உருவானது.

கால்நடைகளைப் பலியிட்டபின் பெரும்பாலான முஸ்லிம்கள் தலைகளை மழித்துக் கொண்டனர்; பின் குளித்தனர். மொட்டைத் தலைகளும் வெள்ளையாடைகளும் அங்கே முஸ்லிம்களை ஓரணியாக்கி யாவரும் ஒரே மாதிரியானவர்கள் என்ற உணர்வைக் கொடுத்தன.

உணவுக்கான ஏற்பாடுகள் நடந்து கொண்டிருக்க முஸ்லிம்கள் புனித இல்லத்துக்குள் போக விரும்பினர். ஆனால் புனித இல்லம் பூட்டிக் கிடந்தது. திறவுகோலைக் கேட்டுச் சென்றபோது குறைஷிகள் மனங்களைப் பூட்டிக் கொண்டு ‘உம்ராவின்போது புனித இல்லத்தில் நுழைவது கட்டாயமல்ல’ எனச் சொல்லி அனுப்பினர்.

சூரியன் உச்சியை அடைய அண்ணலார் பிலாலை அழைத்து கஅபாவின் உச்சியிலேறி தொழுகைக்கான அழைப்பை விடுக்கச் செய்தனர்.

‘அல்லாஹுஅக்பர் அல்லாஹுஅக்பர்’ என்ற பிலாலின் கணீர்க்குரல் அபூகுபைஸ் மலையுச்சியை அடைந்தது. மலையுச்சியிலிருந்து தோட்டந்துரவுகளில் எதிரொலித்தது.

முஸ்லிம்கள் தொழுதனர்; உணவுண்டனர். புதுக்கதைகளோடு பழங்கதைகள் பேசினர். ஆனால் அவர்கள் தம் பழைய இல்லங்களின் பக்கம்கூடப் போகவில்லை. கஅபா வளாகத்திலேயே அவர்கள் அண்ணலாருடன் கூடாரங்களில் தங்கியிருந்தனர். துணிந்தவர், மனங்கனிந்தவரென குறைஷிகளில் சிலர் வந்து முஸ்லிம்களோடு அமர்ந்து மகிழ்ச்சியோடு உரையாடிச் சென்றார்.

அவர்களில் அண்ணலாரின் சிறிய தந்தையார் அப்பாஸ் முக்கியமானவர். அவர் முஸ்லிம்கள் மக்காவில் தங்கிய மூன்று நாட்களிலும் அண்ணலாருடன் காணப்பட்டார். அப்போது அவர் தன் மனைவி உம்முல் பத்லின் சகோதரியும் விதவையுமான மைமூனாவை அண்ணலாருக்கு மணமகளாக்கும் எண்ணத்தைக் கூறினார். அண்ணலார் மணந்துகொள்ள சம்மதித்தபோதிலும் உம்ராவுக்கான மூன்று நாட்கள் முடிவடைந்துவிட்டன.

மூன்றாம் நாள் முடிவுறும் தருணம் ஹுதைபியா உடன்படிக்கையை உருவாக்கிய ஸுஹைலும் ஹுவைதிப்பும் அபூகுபைஸ் மலையிலிருந்து இறங்கி வந்தனர். அப்போது அண்ணலார் அன்ஸாரிகள் சிலருடன் உரையாடிக் கொண்டிருந்தார். அங்கு வந்த ஸுஹைலும் ஹுவைதிப்பும் முஸ்லிம்களைப் பார்த்து 'மூட்டை கட்டவில்லையா? மூன்றாவது நாள் முழுவதுமாகக் கடந்துவிட்டது!' எனக்கூறினர்.

'நாளை ஒரு மணவிழாவை இங்கேயே நடத்தலாம் என எண்ணியுள்ளோம். நீங்களெல்லாம் வந்து கலந்துகொண்டு விருந்துண்டால் பெரும் மகிழ்ச்சியடைவோம்' என்றார் அண்ணலார்.

'மணவிழாவோ விருந்தோ போகும் வழியில் வைத்துக் கொள்ளுங்கள். அபூகுபைஸ் மலை எங்களைப் போகச் சொல்லிவிட்டது. ஆகவே உங்களை மக்காவை விட்டுப் போகச் சொல்கிறோம்' என்றார் ஸுஹைல்.

முன்பே திட்டமிட்டபடி ஹம்ஸாவின் மகள் உமாராவை அலீ ஏற்பாட்டின்படி அண்ணலார் பாத்திமாவோடு சிவிகையில் ஏற்றி அனுப்பினார். அதன்பின் முஸ்லிம்கள் அனைவரும் அண்ணலாரோடு மதீனா நோக்கிப் புறப்பட்டனர்.

செல்லும் வழியில் ஸரிப் எனுமிடத்தில் அண்ணலார் மைமூனாவை மணந்து கொண்டார். இம்மணவிழாவின் மூலம் முஸ்லிம்களுக்கு மேலும் ஒரு பலம் கிடைத்தது. மைமூனாவும் உம்முல் பத்லும் தாய்வழியில் இரு சகோதரிகளைப் பெற்றிருந்தனர். அவர்கள் ஸல்மாவும் அஸ்மாவும். முந்திய இரு சகோதரிகளும் தந்தை வழியில் ஒரு சகோதரியைப் பெற்றிருந்தனர். அவர்தான் காலித் பின் வாலிதின் தாய் அஸ்மா.

மைமூனாவின் சகோதரி மகன் காலிதும் அம்ரு பின் ஆசும் தல்ஹாவின் மகன் உத்மானும் அலீயின் சகோதரர் அகீலும் முத்இம்மின் மகன் ஜுபைரும் மதீனாவை நோக்கி நடந்தனர்; இஸ்லாத்தைத் தழுவ மக்காவைத் துறந்தனர்.

## மூத்தா போர்

மக்காவை அண்ணலார் வென்று தம் ஆட்சியின் கீழ் கொண்டுவருவதற்கு முன்பே முஸ்லிம்களுக்கும் ரோமர்களுக்கும் மோதல் ஆரம்பமாகியிருந்தது.

அண்ணலார் ஒரு தூதுக்குழுவை சிரியாவின் தெற்கு எல்லைக்கு அனுப்பிவைத்தார். இஸ்லாமிய அழைப்பை ஏந்திச் சென்ற

முஸ்லிம்களின் குழுவை சிரியாவின் எல்லையில் வாழ்ந்த கிறிஸ்துவர்கள் கொலை செய்துவிட்டனர். அப்போது அங்கு ஆண்டு கொண்டிருந்தது ரோமானியப் பேரரசு.

பதினைந்து பேர் கொண்ட அக்குழுவிலிருந்த பதினான்கு பேர் வீரமரணம் அடைந்தனர்; ஒருவர் மட்டுமே உயிர் பிழைத்து மதீனா வந்தார். அவரின் பெயர் கஅப் பின் உமர் பிஃபாரி, அவர்தான் அங்குழுவின் தலைவர்.

இதே காலகட்டத்தில் புஸ்ரா நகரும் ரோமானியரின் ஆட்சியின் கீழ் இருந்தது. அந்நகரின் ஆட்சியாளர் ஷுரஹ்பீல். அவருக்கு இஸ்லாமிய அழைப்பை விடுக்க அண்ணலார் ஹாரிஸ் பின் உமைர் எனும் நபித்தோழரை அனுப்பி வைத்தார். ஆட்சியாளரோ தன் நெஞ்சத்தைத் திறப்பதற்கு மறுத்து தூது வந்த தோழரின் நெஞ்சைப் பிளந்தார்.

ஹிஜ்ரி 8, ஜமாஅதுல் ஊலா திங்கள்.

அண்ணலார் இஸ்லாமிய ஆட்சியதிகாரத்தைப் பிரகடனப்படுத்தவும் எதிரிகளுக்கு எச்சரிக்கை விடுக்கவும் விரும்பினார். அதற்காக மூவாயிரம் பேர் கொண்ட பெரும்படையை ஜைதின் தலைமையில் சிரியாவின் எல்லைக்கு அனுப்பிவைத்தார்.

இஸ்லாமிய அழைப்பை விடுக்க வருபவர் ஒருவர், இருவராக இருக்கலாம். பத்துப் பதினைந்து பேர் கொண்ட ஒரு சிறு குழுவாகவும் இருக்கலாம். ஆனால் அவர்களின் பின்னால் ஆயிரக்கணக்கான முஸ்லிம்கள் இருக்கிறார்கள் என்பதைப் பகிரங்கப்படுத்தவே முஸ்லிம்களின் படை வடக்கு நோக்கி நடந்தது.

மூவாயிரம் பேர் கொண்ட ஒரு பெரும் படை வருகிறது என அறிந்த புஸ்ராவின் ஆளுநர் ஜுரஹ்பீல் ஒரு லட்சம் பேர் கொண்ட படையை அழைத்துக் கொண்டு முஸ்லிம் படையை எதிர்க்கப் பயணமானார்.

அப்போது ரோமப் பேரரசர் சீசர், ஹம்மஸ் எனுமிடத்தில் மிகப் பெரும் படையோடு பாடி வீடு அமைத்திருந்தார். சீசர் தன் சகோதரர் தியோடர் என்பார் தலைமையில் ஒரு லட்சம் பேர் கொண்ட படையை முஸ்லிம்களை எதிர்க்க அனுப்பிவைத்தார்.

ஜுரஹ்பீலின் பெரும்படையில் ஒரு லட்சம் பேர், தியோடரின் சைனியத்தில் ஒரு லட்சம் பேர்! இரண்டு லட்சம் பேரை எதிர்கொள்ள மூவாயிரம் பேர் கொண்ட முஸ்லிம்களின் சத்தியப்படை!

மூத்தா எனுமிடத்தில் மோதல் தொடங்கியது. லட்சக்கணக்கான

கழுகுகளின் முன் ஆயிரக்கணக்கான ராஜாளிகள்! லட்சக்கணக்கான காண்டாமிருகங்களின் முன் ஆயிரக்கணக்கான சிறுத்தைகள்.

போர் தொடங்கியது

முதலில் கொடி பிடித்துவந்து போரிட்ட ஜைதும் அடுத்து வந்த ஜாபரும் அதற்கடுத்து வந்த அப்துல்லாஹ் இப்னு ரவாஹாவும் வீரமரணம் அடைந்தனர்.

தளபதிகளைத் தொடர்ந்து இழந்த முஸ்லிம்களின் படைக்கு அன்ஸாரியான தாபித் இப்னு அர்கம் தலைமையேற்றார்.

மோசமாகத் தோற்றுக் கொண்டிருந்த முஸ்லிம்களின் படை மீண்டும் வீறு கொண்டெழுந்தது. தாபித் தளபதிப் பொறுப்பை காலித்பின் வலீதிடம் ஒப்படைத்தார்.

முதல் நாள் போரில் மேலும் ஐவர் வீரமரணம் அடைந்தனர்.

இரண்டாம் நாள்போருக்கும் காலித் பின் வலீதே தலைமை தாங்கினார். வியூகங்கள் பல வகுத்தும் வெற்றிக்கான வாய்ப்பில்லை.

ராஜாளிகளாகவும் சிறுத்தைகளாகவும் உருவகப்படுத்தப்பட்ட முஸ்லிம்கள் எண்ணிக்கை பலம் இல்லாததால் தளபதியின் சொல்கேட்டு மதீனாவை நோக்கித் திரும்பி நடந்தனர்.

தன் வலிமையையும் மாற்றான் வலிமையையும் கணக்கிட்ட தளபதியின் முடிவுப்படி லட்சங்களின் முன் ஆயிரங்கள் பலியிடப்படவில்லை. அல்லாஹ்வின் வாள் சைபுல்லாஹ் என அழைக்கப்பட்ட காலித் பின் வலீத் அல்லாஹ்வின் எண்ணப்படி லட்சியப்படையை மதீனாவை நோக்கி நடக்கச் செய்தார்.

பத்ரு யுத்த வெற்றியை மதீனாவுக்குச் சொன்ன ஜைதும் அப்துல்லாஹ் இப்னு ரவாஹாவும் அபிசீனியாவில் நஜ்ஜாஷி மன்னரிடம் உரையாடிய ஜாபரும் இப்போது உயிரோடில்லை. அவர்கள் சொர்க்கத்தில் இருந்தார்கள்.

ஆனால் அவர்களுடைய இல்லங்களில் சோகம் சூழ்ந்திருந்தது.

அண்ணலார் முதலில் ஜாபரின் இல்லத்துக்குச் சென்று ஆறுதல் கூறினார். ஜாபரின் மூன்று புதல்வர்களையும் கட்டியணைத்த அண்ணலார் முத்தமிட்டார். அண்ணலாரால் பொங்கிவந்த அழுகையைக் கட்டுப்படுத்த முடியவில்லை. அங்கிருந்த பெண்கள் அஸ்மாவுக்கு ஆறுதல் கூறினர். ஜாபரைப் பற்றிய நினைவுகள்

அண்ணலாரை மிகவும் துன்பத்துக்குள்ளாக்கின.

ஜைதின் வீட்டுக்குச் சென்ற அண்ணலார் பீரிட்டுவந்த அழுகையை அடக்க முடியாமல் குலுங்கிக் குலுங்கி அழுதார். உம்மு அய்மனும் உஸாமாவும் ஜைதின் சிறிய மகளும் கண்ணீர்க்கடலில் மிதந்தார்கள். எங்கிருந்தோ வந்து கதிஜா பிராட்டியாரால் வளர்க்கப்பட்டு அண்ணலாருக்கு அன்பளிப்பாகக் கிடைத்த ஜைது சேரும் இடமறிந்து சேர்ந்து செஞ்சோற்றுக் கடனாற்றியவர்.

அப்துல்லாஹ் இப்னு ரவாஹா வீட்டுக்குச் சென்ற அண்ணலாரின் காதுகளில் வீரமரணமடைந்த கவிஞரின் கவிதை வரிகளே ஒலித்தன. அன்று மதீனாவுக்குள் வந்தபோது ஒட்டகத்தின் மூக்கணாங்கயிற்றைப் பிடித்துக் கொண்டுவந்த அப்துல்லாஹ், அப்துல்லாஹ் இப்னு உபை அண்ணலாரை அழைப்பியல் பணியைச் செய்ய வேண்டாமெனக் கூறியபோது அழைப்பியலை உரத்துக் கூறுங்கள் எனச் சொன்ன அப்துல்லாஹ் வீரமரணம் அடைந்தது அண்ணலாரின் மனத்தைச் சேதப்படுத்தியது.

மூத்தாவில் முஸ்லிம்களுக்கு ஏற்பட்ட தோல்வி வடபகுதி அரபுகளை இஸ்லாமிய அரசுக்கு எதிராக நடக்கத் தூண்டியது. பலீ, குதாஆ குழுக்கள் சிரியாவின் எல்லையில் பெரும்படையைச் சேர்த்திருப்பதாகவும் செய்திகள் வந்தன.

அண்ணலார் முன்னூறு பேர் கொண்ட படையை அம்ரின் தலைமையில் வடக்கு நோக்கி அனுப்பினார். அம்ருவை வழியிலுள்ள குழுக்களோடு நேசமாக நடக்கும்படியும் தேவைப்படின் போர்புரியும் படியும் அண்ணலார் அறிவுறுத்தியிருந்தார்.

அம்ருவின் தாய் பலீ இனத்தைச் சேர்ந்தவர். பலீ இன உறவில் அம்ருவுக்குக் கிடைத்த செய்தி பயனுள்ளதாக இருந்தது.

சிரியாவில் பெரும்படை இருந்தது உண்மைதான்! சிங்கத்தோடு சிறுத்தை மோத முடியுமா? அம்ரு உதவிப்படை கேட்டு அண்ணலாருக்குச் செய்தி அனுப்பினார்.

அபூஉபைதா தலைமையில் இருநூறு வீரர்கள் அம்ருவை நோக்கி வந்தனர். ஐநூறு பேர் கொண்ட படையுடன் சிரியாவுக்குள் நுழைந்த அம்ருவுக்கு அங்கு பெரும் படையில்லாதது பெரும் ஆச்சர்யமாக இருந்தது.

படையிருந்ததற்கான அடையாளங்கள் இல்லை. சிறு படையைத்தான் பெரும்படையாக வர்ணித்திருக்க வேண்டும்.

அம்ருவின் சிறுபடையை எதிரிகள் பெரும்படை என எண்ணி ஓடியிருக்க வேண்டும். ரோம சாம்ராஜ்யத்தின் படை துணைக்கு வந்தால் மதீனாவரை செல்லலாம் என எண்ணியிருந்த பழங்குடி அரபுகளின் படை கலைந்து சென்றிருந்தது.

அம்ருவும் அபூஉபைதாவும் போர் புரியாமலேயே வெற்றி வீரர்களாகத் திரும்பினர்.

## 27. மக்கா வெற்றி!

### ஒப்பந்த மீறல்

ஹுதைபியா ஒப்பந்தத்தின்படி அரபகத்தில் உள்ள எந்தக் குலமோ எந்தக் கோத்திரமோ எந்த கிறிஸ்துவக் குழுவோ எந்த நாடோடிக்குழுவோ எந்த யூதப் பிரிவோ யாரும் யாருடனும் உடன்படிக்கை செய்துகொள்ளலாம். உடன்படிக்கை செய்துகொள்வதன் முக்கிய நோக்கம் பாதுகாப்பே! ஒப்பந்தம் செய்த குழுக்களில் ஒன்றுக்கு ஆபத்தென்றால் மற்றொன்று உதவ வேண்டும். இது அக்கால அரபுலக வழக்கம்.

பனூ நளீர்கள் கத்தபான்களோடும் பனூ கைனுகாக்கள் கஸ்ரஜ்களோடும் பனூ குரைளாக்கள் அவ்ஸ்களோடும் முந்தைய காலங்களில் ஒப்பந்தங்கள் செய்திருந்தனர். மதீனாவின் இஸ்லாமிய ஆட்சி வந்தபின் செய்த ஒப்பந்தங்களும் மீறப்பட்டிருந்தன.

முஸ்லிம்கள் அபிசீனியாவுக்குப் புலம் பெயர்ந்து சென்றபோது குறைஷியர் கினானா வம்சத்தைச் சேர்ந்த பனூபக்ர்களோடு நட்புறவு கொண்டிருக்கவில்லை. குறைஷிகளின் கொடுமைகளால்தான் முஸ்லிம்கள் அபிசீனியாவுக்கும் பின் மதீனாவுக்கும் புலம் பெயரும் நிலை ஏற்பட்டதை பனூபக்ர்கள் நன்கறிந்தே இருந்தனர்.

காலம் சுழன்றது

ஹுதைபியா உடன்படிக்கைக்குப் பின் குறைஷிகளுக்கு ஆதரவு தேவைப்பட அவர்கள் பனூபக்ர்களோடு ஒப்பந்தம் செய்து கொண்டனர். பனூ பக்ர்களின் எதிரிகள் குஸஅக்களின் பனூ கஅப் பிரிவினர். எனவே குஸாஅக்கள் முஸ்லிம்களோடு ஒப்பந்தம் செய்துகொண்டனர். எதிரிக்கு எதிரி, நண்பன்!

பனூ பக்ர்களில் ஒரு குழுவினர் ஓர் இரவில் குஸாஅக்களோடு மோதி, ஒருவரைக் கொன்றுவிட்டனர். தொடர்ந்து நடந்த கலவரத்தின்போது குறைஷியர் பனூபக்ர்களுக்கு ஆயுத உதவியோடு ஆளுதவியும் செய்தனர். சில மோதல்கள் புனிதக் கஅபா

எல்லைக்குள்ளேயே நடந்தன. இரவு வேளைகளில் குறைஷியர் சிலரும் குஸாஅக்களோடு மோதினர்.

குஸாஅக்கள் உடனே மதீனாவுக்கு சில தூதுவர்களை அனுப்பி அண்ணலாரிடம் மக்காவில் நடந்தவற்றைக் கூறி உதவி கோரினர்.

அண்ணலார் குறைஷியரின் செயல்களைக் கேட்டு கொதித்தார்; மக்காவுக்கு வந்தே உதவுவதாகக் கூறி வாக்குறுதி கொடுத்தார். குஸாஅக்களின் தூதுவர்கள் மதீனா சென்றிருப்பதை அறிந்த குறைஷிகள் அபூசுப்யானை அண்ணலாரிடம் அனுப்பினர்.

அபூசுப்யான் அண்ணலாரின் இல்ல வாயிலை அடைந்தபோது குஸாஅக்களின் தூதுவர்கள் வெளியேறிக் கொண்டிருந்தனர். அபூசுப்யானின் முகம் செம்மையிழந்து வெளிரிக் கொண்டிருந்தது.

அண்ணலாரைப் பார்த்துப் பேசிய அபூசுப்யான் ஹுதைபியா உடன்படிக்கையை நீட்டிக்க வந்திருப்பதாகக் கூறினார்.

‘ஹுதைபியா உடன்படிக்கையின்போது உம் முகம் தெரியவில்லையே! மாறுவேடத்தில் வந்திருந்தீரா?’ என அண்ணலார் கேட்டார்.

‘அப்போது நான் சிரியாவுக்கு சென்றிருந்தேன். அங்கெல்லாம் உங்களைப் பற்றியும் உங்கள் இஸ்லாத்தைப் பற்றியுமே கேட்கிறார்கள்’ என்ற அபூசுப்யானிடம் ‘ஒப்பந்த விபரங்களெல்லாம் தெரியுமல்லவா?’ என அண்ணலார் கேட்டார்.

‘அப்படியென்றால், குறைஷிகள் பனூகுஸாஅக்களுக்கு கொல்லப்பட்டவருக்கான ரத்தக் கிரயத்தைக் கொடுக்க வேண்டும் இல்லையேல் பனூ பக்ர் கோத்திரத்துடனுள்ள உறவை முறித்துக்கொள்ள வேண்டும். இரண்டிலொன்றைச் செய்ய முடியவில்லையென்றால் மூன்றாவதாகச் செய்ய வேண்டியது ஹுதைபியாவில் எழுதப்பட்ட உடன்படிக்கையைச் செல்லுபடியற்றதாக ஆக்க வேண்டும்’ என அண்ணலார் உறுதியுடன் கூறினார்.

உமையாக்களின் தலைவராயிருந்த அபூசுப்யான் மக்கா சென்று அண்ணலார் மொழிந்ததைக் கூறியபோது ஆணவம் தலைக்கேறியிருந்த குறைஷிகள் உடன்படிக்கையை முறித்துக் கொண்டதாக அறிவித்தனர்.

அண்ணலாருக்கு குறைஷிகளின் செயலுக்கான பொருள் புரிந்தது. அண்ணலார் போருக்கான ஆயத்தங்களைச் செய்யத் தொடங்கினார்.

ஆனால் போர் யார்மீது தொடுக்கப்படுகிறது என்பது பகிரங்கமாகக் கூறப்படவில்லை.

ஹிஜ்ரி எட்டிலிருந்த சூழ்நிலையில் முஸ்லிம்களின் பெரும்படை எத்திசை நோக்கியும் செல்லலாம். சிரியாவை நோக்கியா, தகீபை நோக்கியா, ஹவாஸின்களுக்கு எதிராகவா, குறைஷிகளுக்கு எதிராகவா?

முஹாஜிரீன்கள் 700 பேர், அன்ஸாரிகள் 4000 பேர், நாடோடிக் குழுக்களிலிருந்து 5000க்கும் அதிகமான பேர்! மொத்தம் பத்தாயிரம் பேர் பட்டாளமாக நின்றார்கள்!

'யார் நமது எதிரி?' என்ற கேள்வி எல்லோரின் மனத்திலும் இருந்தது. படை தென்மேற்கில் பயணித்து குதைத்தை அடைந்தபோது பனூ ஸுலைம்களின் 900 பேர் கொண்ட குதிரைப் படையும் வந்து சேர்ந்து கொண்டது.

படையில் பங்கேற்று வந்த கவிஞர் கஅப் இப்னு மாலிக் அண்ணலாரின் அருகில் சென்று

'வீரர்களின் வாய்மௌனித்திருக்க

வீரவாள்கள் வினவுகின்றன,

தீரர்களின் நா உறையிருக்க

கூர்வாள்கள் கேட்கின்றன:

யாரெங்கள் பசிக்குத் தீனி?

யார்மார்பைக் கிழிக்க ஆணை?

கூறுங்கள் தோழமையே!

குருதிப் பசி அடங்கவில்லை!'

எனக் கவிதை பாட அண்ணலார் பதிலேதும் கூறாது புன்னகை பூத்தார்.

பத்ருப் போர்க் காலத்தைப் போல இப்போர்க் காலமும் ரமளான் மாதம்!

அண்ணலாரின் பெரும்படை மக்காவுக்கு அருகில் சென்று பாசறை அமைத்தது. அப்போதுதான் எல்லோருக்கும் மக்காதான் இலக்கு என்பது முழுமையாகப் புரிந்தது.

உடன்படிக்கையை முறித்ததற்குப் பின் அதை நீட்டிக்க முயன்றதில் தோல்வி கண்ட குறைஷிகள் தாருந்நத்வாவில் கூடி அண்ணலாருடன் சமரசம் பேசிட முடிவெடுத்தனர். மீண்டும் அபூசுப்யானே சமாதானத் தூதுவராக அண்ணலாரிடம் அனுப்பப்பட்டார்.

அபூசுப்யானோடு கதீஜா பிராட்டியாரின் மருமகன் ஹகீமும் அண்ணலாரோடு நட்புக் கொண்டிருந்த குஸாஅக்களின் புதைலும் சென்றனர்.

ஒப்பந்த மீறலைப் பற்றிய பேச்சின் முடிவில் ஹகீமும் புதைலும் அண்ணலார் கூறிய நியாயங்களைப் புரிந்துகொண்டனர். அபூசுப்யான் உறவோர்களுக்கிடையே போர் தேவையா என்றார்.

'பத்ருவில் உஹதில் அகழியில் நடந்ததெல்லாம் யாருக்கும் யாருக்கும் நடந்த யுத்தம்?' என அண்ணலார் கேட்டார். இதைக் கேட்ட ஹகீமும் புதைலும் அண்ணலாரின் கரம்பற்றி கலீமா ஷஹாதத்தைக் கூறி இஸ்லாத்தில் இணைந்தனர்.

இதைக் கண்டு மலைத்துப் போய்நின்ற அபூசுய்பானிடம் 'பத்தாயிரம் பேர் கொண்ட பட்டாளம் மக்காவுக்குள் நுழைந்தே தீரும். எதிர்த்தால் போர், எதிர்க்காவிட்டால் போரின்றி மக்கா ஏக இறைவனின் கையில் வரும். கஅபாவுக்குள் தங்கள் வீடுகளுக்குள், என் அனுதாபத்துக்குரிய அபூசுப்யானின் அரண்மனை போன்ற இல்லத்துக்குள் தஞ்சம் புகுவோர் தாக்கப்பட மாட்டார்கள்' எனக் கூறிய அண்ணலார் எச்சரிக்கையை உமையாக்களின் தலைவர் மூலம் மக்காவுக்கு அனுப்பினார்.

மணியோசை அது!

## துரோகமும் தியாகமும்!

அண்ணலார் தம் தோழர்கள் மூவருக்கு ஒரு கட்டளையைக் கூறினார். அம்மூவர் அலீ பின் அபூதாலிப், ஸுபைர் பின் அவ்வாம், அபூமர்ஸத் ஆவர்.

'நீங்கள் மூவரும் உடனே குதிரையேறி மக்கா செல்லும் பாதையிலுள்ள ரவ்ளத்து ஹாஜ் செல்லுங்கள். நீங்கள் அங்கு சென்றடையும்போது மக்காவுக்குச் செல்லும் ஒரு பெண்ணை ஒட்டகத்தில் காண்பீர்கள். அவள் ஒரு கடிதத்தை எடுத்துக்கொண்டு மக்காவிலுள்ள இறைநிராகரிப்பாளர்களுக்குக் கொடுக்கச் சென்று கொண்டிருக்கிறாள். அக்கடிதம் இங்குள்ள ஹாத்திப்பின்

அபீபல்த்தஆவால் கொடுத்தனுப்பப்பட்டுள்ளது. அதில் நம்மைப் பற்றிய கமுக்கமான செய்திகள் உள்ளன; எனவே அப்பெண்ணை வழிமறித்து அக்கடிதத்தைப் பெற்றுவாருங்கள்' என அண்ணலார் கட்டளையிட்டார்.

மூவரணி மக்கா நோக்கிச் சென்று ரவ்ளத்து ஹாஜ் எல்லையைத் தொட்டது. அங்கு அண்ணலார் மொழிந்தது போலவே ஒரு பெண் ஒட்டகத்தில் சென்றுகொண்டிருந்தாள். அவளிடம் கடிதத்தைப் பற்றிக் கேட்டபோது அவள். 'தவறான தகவலோடு வந்துள்ளீர்கள். கடிதமோ வேறு பொருள்களோ என்னிடம் இல்லை' என்றாள். 'அப்படியா சங்கதி. ஒட்டகத்தை உட்கார வைத்து சிவிகைக்குள் பார்க்கலாமா?' என மூவரணி கேட்க அவள் அதற்குச் சம்மதித்தாள்.

ஒட்டகம் உட்கார வைக்கப்பட்டது. அந்த நாயகி ஒட்டகத்திலிருந்து இறங்க, சிவிகை அலசப்பட்டது. எந்தவிதக் கடிதத்தையும் காணோம்.

'உம்மிடம் கடிதமிருப்பதாகச் சொல்லி அனுப்பிய எங்களின் தலைவர் என்றும் பொய்யுரைத்ததில்லை. இறைவன்மீதுஆணையாக, உம்மிடம் கடிதம் உள்ளது. அதை நீர் எடுத்துத் தந்துவிட்டால் பிரச்னை இல்லை. இல்லையேல் உம்முடைய ஆடைகள் களையப்பட்டு கடிதத்தைத் தேடி எடுக்க வேண்டிவரும்' என்றனர் அருமைத்தோழர்கள்.

எங்கே ஆடைகளைச் சோதனையிட்டு கடிதத்தைத் தேடி விடுவார்களோ என்ற பயம் அப்பெண்ணின் கண்களில் தெரிந்தது. எனவே அவளே இடுப்புக்கச்சைக்குள் மறைத்து வைத்திருந்த கடிதத்தை எடுத்துக் கொடுத்தாள்.

அக்கடிதம் மதீனா வந்து சேர்ந்தது. அதை அலீ அண்ணலாரிடம் படித்துக் காட்டினார். அக்கடிதத்தில் 'மதீனாவிலிருந்து புறப்பட்டு மக்காவுக்குப் பெரும்படை வரப்போகிறது' என்ற செய்தி எழுதப்பட்டிருந்தது.

செய்தியறிந்த மாவீரர் உமர் 'அல்லாஹ்வின் தூதரே! ஹாத்திப்பின் அபீ பல்த்தஆ அல்லாஹ்வுக்கும் அவனுடைய தூதருக்கும் இறைநம்பிக்கையார்களுக்கும் துரோகமிழைத்துவிட்டார். எனக்கு ஆணையிடுங்கள். அவரின் கழுத்தை கொய்துவிடுகிறேன்' என்றார்.

ஹாத்திப், அண்ணலார் முன் அழைத்துவரப்பட்டார். அண்ணலார் ஹாத்திபிடம் கடிதத்தைப் பற்றிக் கேட்டார்.

'அல்லாஹ்வின் தூதரே! நான் அல்லாஹ்வையோ இறைத்தூதரையோ நம்பாதவன் அல்லன். இதை நான் மதீனாவைக் காட்டிக் கொடுக்கச் செய்யவில்லை. மக்காவில் வாழும் என்

பலவீனமான உறவினர்களுக்காகச் செய்தேன். அங்கு என் உறவினர்கள் பாதுகாப்பற்றவர்களாக உள்ளனர். அவர்களை எச்சரிப்பதற்காகவே இக்கடிதத்தை எழுதினேன். வேறு நோக்கம் கிடையாது’ என ஹாத்திப் சொன்னார்.

‘உண்மையைத்தான் சொல்கிறீர்!’ எனக் கூறி அண்ணலார் புன்னகைத்தபோது, பிரச்னை தீர்ந்துவிட்டது எனத் தோழர்கள் எண்ணினர். ஆனால், அப்போது உமர் மீண்டும் கோபத்துடன் அண்ணலாரிடம் சிரமறுக்கும் ஆணையைக் கேட்டார்.

‘ஹாதிப்பின் இன்றைய செயலைப் பற்றி மட்டும் கணக்கில் எடுக்காதீர்கள். இவரின் முந்தையச் செயலையும் கணக்கில் எடுங்கள். இவர் பத்ருப் போர் வீரரல்லவா?’ என அண்ணலார் கூற தோழர்களிடையே அடித்த புயல் மென்தென்றலானது.

‘ஒரு வேளை அல்லாஹ் பத்ருப் போரில் கலந்து கொண்டவர்களிடம் ‘நீங்கள் விரும்பியதைச் செய்து கொள்ளுங்கள். சொர்க்கத்தை நான் உறுதியாக்கிவிட்டேன்’ என கூறியிருக்கலாம்’ என அண்ணலார் கூறியபோது ஹாதிப்பின் கண்களில் கண்ணீர் சுரந்தது.

அப்போது உமரின் கண்களிலும் நீர் அரும்பியது. ‘எல்லாவற்றையும் அல்லாஹ்வும் அவனுடைய தூதருமே நன்கறிந்தவர்கள்’ என்றார் உமர்.

அன்றைய துரோகம் மன்னிக்கப்பட்டு முந்தைய தியாகம் மதிக்கப்பட்டது.

‘மக்காவின் தலைவர்களுக்குச் செய்தி சொன்னால், அதன் மூலம் தாம் மதிக்கப்படுவோம். அவர்கள் தம் பலவீனமான உறவினர்களுக்கு உதவுவர்’ என எண்ணிய ஹாதிப்பின் செயலை இறைவனறிந்து எச்சரித்தான்.

ஹாத்திப்பின் அபீபல்த்தஆ இறைவனிடம் தாம் செய்த செயலுக்காகப் பாவமன்னிப்புக் கேட்டார்.

## மக்கா வெற்றி

பத்ருப் போர், உஹதுப்போர், அகழிப்போர் என எல்லாமே தற்காப்புப் போர்கள்தான். குறைஷிகள்தான் படையெடுத்து வந்தார்களே தவிர முஸ்லிம்கள் படை நடத்திச் செல்லவில்லை.

சில போர்கள் எதிரிகள் மதீனாவைத் தாக்க ஆயத்தமாகிக்

கொண்டிருக்கும்போதே சிங்கத்தின் குகைக்குள்ளேயே சென்று அதன் பிடரி மயிர் பிடித்துத் தூக்கியெறிந்த கதையாக இருந்தன.

குறைஷிகளின் கதை முடிக்கும் போராகக் கருதப்பட்ட ஹிஜ்ரி எட்டாம் வருடத்திய ரமளான் மாதப்போர் காரணப்போர். உடன்படிக்கையை மீறி குஸாஅக்களைக் கொன்றதற்காகத் தொடுக்கப்பட்ட போர்.

அகழிப்போரின்போதே ஆட்டங்கண்டிருந்த குறைஷிப்படை முஸ்லிம்களை அண்ணலார் போராளிகளாகவே வார்த்தெடுந்திருந்ததை அறிந்திருந்தது. பனூ கைனுகாக்களை வெளியேற்றியது, பனூ நளீர்களைப் பழிவாங்கியது, பனூ குரைளாக்களை வென்றது, கைபரைக் காலடியில் போட்டது, சிரியா வரை சென்று வந்தது போன்ற வாள்முனை வரலாறுகளெல்லாம் குறைஷியர் அறியாதவையல்ல.

சண்டைகளெல்லாம் அந்தக் கால சந்தைகளில் சந்தக் கவிகளாகப் பாடப்பட்டன. உக்காஸ்,மாகின்ன, ஜில் மஜால், பத்ர் போன்ற சிறிய நகரங்களிலெல்லாம் சந்தைகள் கூடின. சிறிய சிறிய சந்தைகளில் மட்டுமல்ல சிரியாவின் பெருஞ்சந்தையிலும் யெமனில் கூடிய வணிகர்களிடையேயும் புது மார்க்கத்தின் பொலிவும் வலிவும் பேசப்படும் பொருளாயின. அரபுலகக் கதை சொல்லிகள் இருட்டு இரவுகளில் இருட்டை விரட்ட வந்திருக்கும் இஸ்லாத்தைப் பற்றிய கதைகளைச் சொல்லிக் கொண்டிருந்தார்கள்.

மக்கா குறைஷிகள் இஸ்லாத்தைப் பற்றிப் பூச்சாண்டிக் கதை சொல்லிக் கொண்டிருக்க, அதே குறைஷிகளிலிருந்து பிறந்த இஸ்லாமியப் போராளிகள் மக்காவை வெல்ல படை நடத்தி வந்து கொண்டிருந்தார்கள்.

அண்ணலாரால் சைபுல்லாஹ் அல்லாஹ்வின் வாள் என அழைக்கப்பட்ட காலித் பின் வலீத், அண்ணலாரின அத்தை மகன் ஸுபைர், அபூபக்கர், அலீ, உமர், உத்மான், அபூ உபைதா, அம்ர் ஆகிய போராளிகளெல்லாம் யார்? குறைஷிகளல்லவா? இதனால்தான் அபூசுப்யான் ‘சொந்தங்களை அழிக்கவந்த சொந்தங்கள்’ எனக்கூறி நின்றார்.

கத்தபான்களின் அணி நாடோடி அணிகளின் முன்னணியாக வந்தது. அவர்களின் சின்னத்தை ஏந்தி வந்தவர் நாவன்மையால் குறைஷிப்படையைத் தகர்த்த நுஐம்.

முஹாஜிரீன்களையும் அன்ஸாரிகளையும் உள்ளடக்கிய

படையிலேயே அண்ணலார் வந்தார். கஸ்வாவில் அண்ணலார். வல இடப் பக்கங்களில் அபூபக்கரும் உஸைதும். மதீனாவாசிகளின் சின்னமேந்தி வந்தவர் ஸஅத் இப்னு உபாதா!

ஸஅத், ஸுபைர், அபூஉபைதா ஆகிய மூவரும் தெற்கு, வடக்கு, மேற்குப் புறங்களிலிருந்து மக்காவுக்குள் நுழைய காலித் கிழக்குப் புறமாக வந்து உள் நுழைந்தார்.

கிழக்குப் பகுதியில்தான் இக்ரிமா, ஸப்வான், ஸுஹைல் ஆகியோரோடு குறைஷிகள் சிலரும் பக்ர், ஹுதைல் கிளையினர் சிலரும் மோதலுக்குத் தயாராக இருந்தனர். முத்திக்குகளிலும் மக்கா வீழ, கிழக்குத் திக்கில் மட்டும் மோதல் நிகழ்ந்தது.

கவிஞர் கஅப் பின் மாலிக்கிடம் வாய்திறந்துகேட்ட வாள்கள் அங்கிருந்தன போலும்! மோதலில் முப்பது குறைஷிகளும் முஸ்லிம்களில் இருவரும் உயிரிழந்தனர். இக்ரிமாவும் ஸப்வானும் குதிரையிலேறி செங்கடலோரம் சென்று தப்பினர். ஸுஹைல் தன் வீட்டுக்குச் சென்று கதவைத் தாழிட்டுக் கொண்டார்.

இம்மோதலைப் பற்றியறிந்த அண்ணலார் கவலைப்பட்டார். எவ்வளவோ எச்சரித்திருந்தும் குறைஷிகள் வாளேந்தி வந்து போரிட்டு மடிந்ததைப் பற்றி காலிதிடம் கேட்டுத் தெரிந்து கொண்டார்.

மக்கா அமைதியாக இருந்தது. கஅபாவைச் சுற்றிலும் கூடாரங்கள். அங்கு ஆயிரக்கணக்கானோர் காணப்பட்டாலும் ஆரவாரமில்லை.

அங்கு காணப்பட்ட ஒரு கூடாரம் மிகவும் சிவப்பாகக் காணப்பட்டது. அதன் வாயிலருகே அண்ணலாரின் உதவியாளர் அபூராபீ நின்றிருந்தார். உள்ளே அண்ணலாரின் மனைவிமார்கள் உம்மு ஸலாமா, மைமூனாவோடு மகளார் பாத்திமா ஆகியோர் அண்ணலாரை எதிர்பார்த்துக் காத்திருந்தார்கள். அவர்களோடு அப்போது அண்ணலாரின் ஒன்றுவிட்ட சகோதரி உம்மு ஹானி உரையாடிக் கொண்டிருந்தார்.

அண்ணலார் வந்தவுடன் குளித்துவிட்டு உம்முஹானியிடம் உரையாடினார். பின்னர் ஓய்வெடுத்தார். பின்னர் தம்மைக் காண வந்தவர்களுடன் அளவளாவிவிட்டு அபூபக்கருடன் கஅபாவுக்குச் சென்றார்.

கஅபாவின் தென்கிழக்கு முனையை அடைந்த அண்ணலார் கரத்திலிருந்த கொம்பால் கருங்கல்லைத் தொட்டு இறைவனின் புகழ் கூறினார். அதன்பின் கஅபாவை ஏழுமுறை வலம் வந்தனர்.

வலம் வரல் முடிவுற அண்ணலார் கஅபா வளாகத்தில் நிறுத்தப்பட்டிருந்த 360 சிலைகளையும் வீழ்த்தினார். அண்ணலார் கரத்திலிருந்த நீண்ட கோலால் அவற்றை வீழ்த்தியபோது ‘சத்தியம் வந்து விட்டது. அசத்தியம் அழிந்துவிட்டது. திண்ணமாக அசத்தியம் அழியக்கூடியதே!’ (17: 81) என முழங்கினார்.

360 சிலைகள் தகர்க்கப்பட்டதுபோல் கஅபாவுக்குள் வரையப்பட்டிருந்த கடவுள் சித்திரங்களும் அழிக்கப்பட்டன. குறைஷிகளின் இல்லங்களில் இருந்த கடவுள் சிலைகளும் சித்திரங்களும் களையப்பட வேண்டுமென்ற கட்டளை பிறப்பிக்கப்பட்டது.

அண்ணலார், முந்தைய காலத்தில் இபுறாகீம் நபிகளார் நின்று தொழுத மகாமே இபுறாகீம் என்ற இடத்தில் நின்று தொழுதார். ஜம்ஜம் கிணற்றில் நீரருந்திய அண்ணலார் அடுத்து புனித ஆலயத்தைத் திறக்கச் செய்து தரிசித்தார். புனித ஆலயத்தைத் திறந்த உத்மான் இப்னு தல்ஹா தான் மரபுரீதியாக கஅபாவின் திறவுகோலுக்குரிய அப்து அத்தார் வகையறாவைச் சேர்ந்தவர்.

அண்ணலாருடன் உஸாமாவும் பிலாலும் கஅபாவுக்குள் சென்று வந்தனர். அண்ணலார் உத்மானிடமே கஅபாவின் சாவியைக் கொடுத்தார்.

அங்கிருந்தபடியே அண்ணலார் ‘அல்லாஹ்வுக்கே புகழனைத்தும்! அகிலங்களின் அதிபதியான அவனே தன்னுடைய அடிமைக்கு அளித்த வாக்குறுதியை நிறைவேற்றி தன்னை எதிர்த்தவரையெல்லாம் தனியே நின்று முறியடிக்க உதவிய அந்த ஏகனுக்கே எல்லாப் புகழும்!’ எனக் கூறி கண்ணீர் மல்க நின்றார்.

அதன் பின் அண்ணலார் அன்றொருநாள் இஸ்லாத்தை எடுத்துரைத்த ஸபா குன்றருகே சென்றார். அங்கே பள்ளிவாசலில் தஞ்சம் புகுந்தவர்கள், இல்லங்களில் பாதுகாப்புத் தேடியவர்கள், மலையடிவாரங்களுக்கு ஓடியவர்களெல்லாம் நின்றார்கள்.

‘அல்லாஹ்வைத் தவிர வணங்குவதற்குரியவன் யாருமில்லை. அவனே அகிலங்களின் அதிபதி. கடந்த காலத்தில் நாம் கடும் இருட்டில் வாழ்ந்தோம். இப்போது நாம் வெளிச்சத்துக்கு வந்து விட்டோம். கடந்தகால கர்வங்கள், ஆணவங்கள், உயர்வு தாழ்வுகள், பகைமை, பழிவாங்கும் எண்ணங்கள் அனைத்தையும் மண்ணுக்குள் மண்ணாக்கி விட்டோம். மனிதர்கள் அனைவரும் ஆதத்தின் வழித்தோன்றல்கள்;

உடன் பிறப்புக்கள். நம்மில் யாரும் யாருக்கும் அடிமையில்லை! உங்களுடைய கடந்த கால பாவங்களை மன்னிக்கப் பிரார்த்திக்கின்றேன்; நீங்களும் பிரார்த்தனை புரியுங்கள்' என அண்ணலார் கூடியிருந்தோரிடையே கூறினார்.

'அன்புக்குரிய எங்கள் உடன் பிறப்பே! அண்ணலெங்கோவே! இப்போது எங்களை நீங்கள் எவ்வாறு நடத்தப்போகிறீர்கள்' எனக் குறைஷியர் கேட்டனர்.

'நீங்களெல்லாம் விரும்பினால் இப்போதே கலிமா ஷஹாதத் சொல்லலாம். உங்களை நான் எப்படி நடத்த வேண்டுமென நீங்களே கூறுங்கள்!'

'சகோதரனைப்போல் பாவித்தால் போதும்!' எனப் பல குரல்கள்.

'சம்மதித்தேன்' எனக் கூறிய அண்ணலார் திருக்குர்ஆன் வசனங்களை ஓதினார்.

> 'மனிதர்களே! நாம் உங்களை ஓர் ஆணிலிருந்தும் பெண்ணிலிருந்தும் படைத்தோம். பிறகு நீங்கள் ஒருவருக்கொருவர் அறிமுகமாகிக் கொள்ளும் பொருட்டு உங்களைச் சமூகங்களாகவும் கோத்திரங்களாகவும் அமைத்தோம். உண்மையில் உங்கள் இறைவனிடம் அதிக கண்ணியம் வாய்ந்தவர் உங்களில் அதிக இறையச்சம் கொண்டவர்கள்தாம்.'

(திருக்குர்அன் 49: 13)

அதன்பின் அண்ணலார் மக்காவில் பதினைந்து நாட்கள் தங்கினார்.

அன்ஸாரிகளில் ஒருவரான முஆத் இப்னு ஜபலை மார்க்கப் பணிக்காக அண்ணலார் நியமித்தார். அண்ணலாரைச் சந்தித்த ஹிந்த், ஸப்வான், இக்ரிமாவின் மனைவி, அபூலஹபின் புத்திரர்கள் உத்பா முஅத்திப் எனப் பலர் இஸ்லாத்தில் இணைந்தனர். இவர்களின் வரிசையில் இக்ரிமாவும் இறுதியில் இணைந்து கொண்டார்.

## தபூக் போர்

ரோமாபுரிக்காரர்களை எதிர்த்து சாமான்யபுரிக்காரர்கள்!

மூத்தா போர் அரபுலக பழங்குடி மக்களிடையே புருவங்களை உயர்த்தச் செய்தது. அவர்களிடையே ஏற்பட்ட மதிப்பச்சம் அவர்களை இஸ்லாத்தின் பக்கம் நகரச் செய்தது. ஆயிரக்கணக்கான பழங்கு மக்கள்

இஸ்லாத்தைத் தழுவினர்.

பழங்குடி மக்களின் பார்வை இஸ்லாத்தின்மேல் படிந்ததுபோலவே ரோமப் படையினரின் பார்வையும் இஸ்லாத்தால் கவரப்பட்டது. ரோமப் படையின் தளபதி ஃபர்வா பின் அம்ரு அல்ஜுஃஸாமி என்பார் இஸ்லாத்தைப் பற்றிக் கேட்டுத் தெரிந்து முஸ்லிமானார்.

ஃபர்வா முஸ்லிமானதைக் கேள்விப்பட்ட சீசர் ‘உமக்குப் பதவி வேண்டுமானால் நீர் இஸ்லாத்தைத் துறக்கவேண்டும். இல்லையேல் நீர் உயிரைத் துறக்க வேண்டும்’ என்றார்.

‘எனக்கு ரோமத் தளபதி பதவி வேண்டாம். எனக்கு உங்களால் கிடைக்கும் உதவியைவிட நாளை கிடைக்கப் போகும் மறுமைப் பதவியே போதும்! போர் வெற்றிகள் நிரந்தரமானவையல்ல மறுமை வெற்றியே நிரந்தரமானது’ என்ற ஃபர்வாவை சீசர் கொலைக் களத்துக்கு அனுப்பினார்.

இஸ்லாத்தின் கொள்கை வலிமையும் அதை ஏற்றவர்களின் மனவலிமையும் அரபுகளைத் தாண்டி ரோமர்களையும் மெய்சிலிக்க வைத்தன.

மூத்தா போர் நடந்து முடிந்து இரு ஆண்டுகள் கழிந்திருந்தன.

‘சீசர் முஸ்லிம்களைப் பழிவாங்குவதற்காக ஒரு பெரும் படையை சிரியாவின் தெற்கு எல்லைக்கு அனுப்பியுள்ளார். ரோமானியர்கள் சிரியாவிலிருந்தவர்களோடு அரபகத்தின் வடஎல்லையில் வாழ்ந்த பழங்குடியினரையும் சேர்த்துப் போர்ப் பயிற்சி செய்து கொண்டிருக்கிறார்கள்’ என்ற வதந்தி மதீனாவை அடைந்தது.

சீசர் சிரியாவின் எல்லையைப் பலப்படுத்த நிறுத்திய சைன்யங்கள் பல்வேறு கட்டுக் கதைகளைப் பரப்பக் காரணமாயின.

படைவீரர்களுக்கு முன்பணமாக ஒரு மாதச் சம்பளம் கொடுக்கப்பட்டது என்பது மட்டுமே உண்மை. ரோமர்களின் பைஸாந்தியப் படை அரபகத்துக்குள் வரப்போகிறது என்பதோ பழங்குடி மக்களோடு பயிற்சி செய்கின்றது என்பதோ உண்மையில்லை.

சிரியாவின் எல்லையை ஒட்டி வாழ்ந்த லக்ம், ஜுஃத்ஆம், ஆமிலா கோத்திரங்கள் ரோமப் பேரரசோடு உறவும் கொள்ளவில்லை; பகையும் கொள்ளவில்லை. அவர்கள் தம் அன்றாட வாழ்க்கைப் போராட்டங்களில் கவனத்தைச் செலுத்தினர்.

ஜெரூசலத்தில் மீண்டும் புனித சிலுவையை நிறுவியது ரோமப்

பேரரசு பாரசீகத்தில் நிலை கொண்டதன் அடையாளமானது. இது ரோமப் பேரரசருக்குப் பெரும் மகிழ்வைத் தந்தது.

கான்ஸ்டாண்டி நோபிளுக்கு ஓர் அவசரப் பணிக்காகச் சென்று கொண்டிருந்த மன்னருக்கு சிரியாவுக்குத் தெற்கே வரும் எண்ணமெல்லாம் இல்லை. எகிப்தையும் பாரசீகத்தையும் நிர்வகிக்கவே மிகச் சிரமமாக இருந்தது. மன்னர் அரபகத்தில் ஏற்பட்டுக் கொண்டிருந்த எழுச்சியை நன்கறிந்திருந்தார். அண்ணலாரின் ஓரிறைக் கொள்கையை அவர் அபூசுப்யான் மூலம் அறிந்திருந்தார். இஸ்லாமியக் கொள்கை அவருக்குப் பிடித்திருந்தது. எனவே மதீனாவிலிருந்து முஸ்லிம்கள் சிரியா, பாரசீகம், எகிப்து என நுழையும் முன்பே அவர்களிடமே தாம் தடம் பதித்த பகுதிகளைக் கொடுத்து உறவுப்பாலம் அமைக்கலாம் என எண்ணினார். இதைத் தம் ஆலோசகர்களிடம் கூறியபோது ஆதரவு சிறிதும் எதிர்ப்பு அதிகமாகவும் இருக்கக் கண்டு தம் எண்ணத்தை மன்னர் கைவிட்டார்.

இந்தச் சூழலில் அண்ணலார் ரோமப்பெரும் படையைச் சந்திக்கும் துணிவுடன் இதுவரையில்லாத அளவிலுள்ள ஒரு பெரும் படையை ஆயத்தப்படுத்தினார்.

தெருச்சண்டைகள் போட்டுக் கொண்டிருந்த அரபுகள் போராளிகளாக மாறியிருந்தனர். எஜமானர்களும் அடிமைகளும் நிறைந்திருந்த சமுதாயம் சத்தியச் சமுதாயமாக மாறிவிட்டது. பயணத்துக்காக குதிரைகளையும் ஒட்டகங்களையும் பயன்படுத்தியவர்கள் போர்க்களப் பணிகளுக்காக அவற்றைப் பழக்கினார்கள். வேட்டைக்கு மட்டும் பயன்பட்ட வில்லும் அம்பும் கோட்டைகளைத் தகர்ப்பதற்கான கருவிகளாக மாறின. ஆளும் பேருமாக வாழ்ந்த இல்லங்கள் வாளும் கேடயமும் நிறைந்த வீடுகளாக மாறின. கத்திகளும் சுத்திகளும் தயாரிக்கப்பட்ட கொல்லன் பட்டறைகள் தலைக்கவசமும் மார்புக் கவசமும் தயாரிக்கப்படும் தொழிற்சாலையாக மாறின. வணிகப் பொருள்களில் சேராமலிருந்த வாள் முதல் அனைத்துப் படைக்கலன்களும் சந்தைப் பொருளாகின. சுவடிப் படிப்புகள் அருகியிருந்த ஊரில் ஆயுதப் பயிற்சிகள் ஆங்காங்கே நடந்தன.

வாள் வீச, வில்லைக் கையாள, குதிரையேற, ஒட்டகத்தைப் பயன்படுத்தத் தெரியாதவர்கள் எவருமில்லாத நிலையில் ஒவ்வொருவரும் போர் வீரர்களாக மட்டும் விளங்கவில்லை; போர்ப்படைத் தலைவர்களாகத் திகழ்ந்தார்கள்.

‘மூச்சிறைக்கப் பாய்ந்து ஓடுகின்றவை (குதிரைகள்)மீது சத்தியமாக! பின்னர் குளம்புகளிலிருந்து தீப்பொறியை எழுப்புகின்ற மேலும் அதிகாலையில் பாய்ந்து தாக்குதல் நடத்தி அதனால் புழுதியினைக் கிளப்பி மேலும் ஏதேனும் கூட்டத்தின் நடுவில் நுழைந்துவிடுகின்ற குதிரைகள்மீது சத்தியமாக!’

(திருக்குர்ஆன் 100: 15)

கி.பி. 630, அக்டோபர், முதல் வாரம்

இக்காலகட்டத்திலேயே அண்ணலார் ரோமப்படையை எதிர்க்க சிரியா செல்ல தம் படையை ஆயத்தப்படுத்தினார்.

கடுமையான வெப்பம்; தோட்டங்களில் கனிகள் அறுவடைக்காகக் காத்துக்கிடந்தன. அறுவடையை விட்டு வெப்பத்தில் பயணிக்க வேண்டிய சூழல். மதீனாவில் நான்குபேர் மட்டும் தங்கினர். அவர்கள் கஸ்ரஜ்களில் இருவர்; அவ்ஸ்களில் ஒருவர், நான்காமவர் கவிஞர் கஅப் இப்னு மாலிக்.

மதீனாவின் படையோடு உறவாகியிருந்த நாடோடி, பழங்குடி மக்களின் படையும் சேர்க்கப்பட்டது. படையை மட்டும் சேர்க்கவில்லை படைச் செலவுக்கான செல்வமும் சேர்க்கப்பட்டது. செல்வந்தர்கள் பலரும் வாரி வழங்கினர். உத்மான் மிகப் பெருந் தொகையை அளித்தார்.

மிகப் பெரும்படை சேர்ந்தது. முப்பதாயிரம் வீரர்கள், பத்தாயிரம் குதிரைகள்! பொறுப்பு அபூபக்கர் வசம்! மதீனா நகரம் அலீ வசம்!

மதீனாவை விட்டுப் படை புறப்பட்டது. பாலைவெளியைக் கடந்து, பாலைவனச் சோலைகளில் இளைப்பாறி, மதீனாவுக்கும் ஜெரூசலத்துக்கும் இடையிலுள்ள ஓர் ஊரில் படை பாசறை அமைத்தது.

மறுநாள் படை தபூக் பேரூரை அடைந்தது. அப்போது மதீனாவில் தங்கிய நால்வரில் கஸ்ரஜ் அபூகைதமா வந்து படையுடன் சேர்ந்து கொண்டார்.

தபூக்கைச் சுற்றியிருந்த நாலாபுறமும் அண்ணலார் ஒற்றர்களை அனுப்பிவைத்தார். ஒரு சிறுபடை கூட இல்லாத செய்தியை ஒற்றர்கள் வந்து கூறினர்.

இருபது நாட்கள் படை தபூக்கில் தங்கியிருந்தது. தொழுகை, உரையாடல், போர்ப் பயிற்சி என படை காலத்தை நன்கு பயன்படுத்தியது.

அண்ணலார் அகபா வளைகுடா முனையில் வாழ்ந்த ஒரு கிறிஸ்துவக் கோத்திரத்துடனும் அதன் கிழக்குக் கரையில் வாழ்ந்த ஒரு யூதக் கோத்திரத்துடனும் ஒப்பந்தங்கள் செய்து கொண்டார்.

தூமத் அல்ஜந்தலை ஆண்ட ஒரு கிறிஸ்துவத் தலைவர் உகைதிர் காலிதால் சிறைப்பிடிக்கப்பட்டார். அவர் அண்ணலாரைச் சந்தித்த பின் முஸ்லிமானார்.

# 28. இறுதிப் பேருரை

## இறுதிப் பேருரை!

அண்ணலார் புனிதப் பயணத்துக்கான ஏற்பாடுகளைச் செய்தார். மதீனத்து மக்களோடு அதனைச் சூழ்ந்திருந்த மக்களும் வடக்கேயிருந்த நாடோடிக் கோத்திரங்களும் புனிதப் பயணத்தைத் தொடங்க மஸ்ஜித் நபவியை மையமாகக் கொண்டனர்.

குர்பானிக்குரிய கால்நடைகளோடு குதிரைப்பயணிகள், ஒட்டகப் பயணிகள், கால் நடைப் பயணிகள் என முப்பதாயிரம் தோழர்கள் அண்ணலாரின் தலைமையில் புறப்பட்டனர். அண்ணலாரின் துணைவியர்கள் சிவிகைகளில் இருக்க அப்துர் ரஹ்மான் இப்னு அவ்ப், உத்மான் இப்னு அப்பான் ஆகிய இருவரும் பயணக்குழுவை வழி நடத்திச் சென்றனர். அபூபக்கர், உமர், அலீ, அபூஹுரைரா, பிலால் என ஆயிரக்கணக்கான தோழர்கள் அக்குழுவில் இருந்தனர்.

மதீனாவிலிருந்து புறப்பட்ட பத்தாவது நாள் மக்கா வெற்றியின்போது நுழைந்த கணவாயைப் பயணக்குழு அடைந்தது. வலது கையிலிருந்த கடிவாளத்தை இடது கைக்கு மாற்றி இருகைகளையும் உயர்த்தி ‘யா அல்லாஹ்! புனித ஆலயத்தின் புகழையும் மேன்மையையும் செல்வத்தையும் மக்களிடமிருக்கும் அதன் போற்றுதலையும் அருட்பேற்றையும் பக்தியையும் பெருக்கியருள்வாயாக!’ எனப் பிரார்த்தித்த வண்ணம் அண்ணலார் மக்காவுக்குள் நுழைந்தார்; பின்னர் கஅபாவுக்குள் காலடி எடுத்துவைத்தார்.

கஅபா, இபுராஹீம் நபிகளார் காலத்து கஅபாவாக விளங்கியது. சிலைகள் இல்லை, சித்திரங்கள் இல்லை. உருவமற்ற இறைவனின் ஒப்பற்ற ஆலயமாக கஅபா விளங்கியது.

பள்ளிவாசல் வளாகத்துக்குள் நுழைந்து ஏழுமுறை கஅபாவை வலம்வந்த அண்ணலார் மகாமே இபுறாகீம் தளத்தில் நின்றும் தொழுதார். பின்னர் ஸபா மர்வாவுக்கும் இடையில் ஏழுமுறை சென்றார். ஒவ்வோரிடத்திலும் அண்ணலார் இறைவசனங்களை ஓதினார்;

பிரார்த்தனை புரிந்தார். அண்ணலாருடன் சென்ற அனைவரும் அண்ணலாரைப் பின்பற்றி இயங்கினர்; இறைவசனத்தை ஓதினர்; ஏக இறைவனைப் பிரார்த்தித்தனர்.

அருமைச் சகோதரி உம்மு ஹானி தன் வீட்டில் தங்க அண்ணலாரை அழைத்தபோதும் அன்புச் சகோதரர் மக்கா நகருக்குள் எங்குமே தங்குவதாயில்லை. மினா வெளிக்குச் சென்ற அண்ணலார் தம் தோழர்களுடன் தங்கி அங்கேயே இரவுப் பொழுதைக் கழித்தார்.

அடுத்த நாள் அண்ணலார் தம் குழுவினருடன் அரபாவை நோக்கிப் பயணம் புறப்பட்டார். மக்காவிலிருந்து பதிமூன்று கல் தொலைவில் அரபாப் பெருவெளி இருக்கிறது. அது தாயிப் செல்லும் வழியில், வடக்கிலும் கிழக்கிலும் மலைத் தொடர்களைக் கொண்டதாக அமைந்துள்ளது. அரபாப் பெருவெளியை அடுத்து மையத்தில் குன்றும் சுற்றிலும் பரந்த வெளியும் கொண்டதாக அரபாக் குன்று என்று பெயர் தாங்கிய ஒரு சிறு மலையிருக்கிறது. அங்குதான் அண்ணலார் அன்று தங்கினார்.

குறைஷியர் புனித பூமியின் எல்லைக்குள்ளேயே புனிதப் பயணத்தை முடித்துக் கொள்வர்; வெளியூர் பயணிகளோ அரபா வரை செல்லும் பழக்கத்தை மேற்கொள்வர். அண்ணலாரோ அரபாக் குன்றுவரை சென்றார். இதைப் பற்றிக் கேட்டவர்க்கு ‘இதுதான் இபுறாகீம் நபிகளார் சென்றடைந்த எல்லை’ என அண்ணலார் இயம்பினார்.

இறுதியாக அரபாவில் கூடியிருந்த மக்களிடையே அண்ணலார் அருமையும் பெருமையும் மிக்க உரையொன்றை வழங்கினார். அவ்வுரையே ‘ஹஜ்ஜத்துல்விதா’ என அழைக்கப்படுகிறது.

‘முஸ்லிம்கள் அனைவரும் சகோதரர்கள் என நிறுவப்பட்டுவிட்டது. இனி இரத்தம் பழிவாங்கல்களுக்கு இடமே இல்லை. மன்னிப்பதும் இறைவனிடம் மன்றாடி மன்னிப்புக் கேட்டலுமே மாண்புடைய வாழ்க்கைக்கு வழிவகுக்கும். ஒவ்வொரு மனிதரின் உயிரும் உடலும் உடைமையும் பிறரால் பாதிக்கப்படக் கூடாதவகையில் அவை தூய்மை மிக்கதாகக் கருதப்பட வேண்டும்’ என எண்ணிய அண்ணலார் கூடியிருந்த லட்சக்கணக்கான புனிதப் பயணிகளிடையே இதை எடுத்துரைக்க விரும்பினார்.

அதற்கான ஏற்பாடாக அண்ணலார் மொழிவதை எடுத்துரைக்க ஸப்வானின் சகோதரர் ராபியா பணிக்கப்பட்டார். உரத்த குரலுக்குரிய

அவர் இடியோசைபோல் முழங்க, அதை ஆங்காங்கு நின்ற தோழர்கள் கூடியிருந்த கூட்டத்தின் கடைசி எல்லைவரைக் கொண்டு சென்றனர்.

‘அல்லாஹ்வின் தூதர் கூறுகின்றார்: இது என்ன மாதம் என்று நீங்கள் அறிவீர்களா?’ என ராபியா கேட்டார்.

கூட்டத்தினின்றும் பதிலில்லை. அண்ணலாரே பதிலைக் கூறி அடுத்த கேள்வியைக் கேட்டார்: இது புனித மாதமாகும் என்பதை எல்லோரும் அறிவோம். அன்புக்குரிய தோழர்களே! நாம் இங்கே நின்றிருக்கும் பூமி எத்தகைய பூமியென அறிவீர்களா?

இக்கேள்விக்கும் மக்கள் பதில் சொல்லாது மௌனமாகவே நின்றனர். அண்ணலாரே பதில் கூறினார். இது புனித பூமியாகும்! இன்றைய நாளின் சிறப்பென்னவென்று அறிவீர்களா?

மூன்றாவது கேள்விக்கும் பதிலில்லை. தெரிந்த பதில்கள்தான் என்றாலும் மக்கள் மௌனமாக மரியாதையுடன் நின்றனர். அண்ணலாரே பதிலைக் கூறினார்: புனித யாத்திரையின் மகத்தான நாள்.

கேள்விகளைக் கேட்ட அண்ணலார் பதில்களையும் கூறி ‘உங்களது இந்தப் புனித தினத்தை, புனித மாதத்தை, இந்தப் புனித பூமியை இறைவன் உங்களுக்குப் புனிதமாக்கி வைத்துள்ளதுபோல் உலக வாழ்வில் ஒவ்வொருவர் ரத்தத்தையும் உடலையும் உடைமைகளையும் புனிதமானதாக்கி வைத்துள்ளான்’ எனக் கூறி மானுட வாழ்க்கையின் ஒற்றுமையை வலியுறுத்தினார்.

அதன்பின் உச்சி வெயில் காய்ந்துகொண்டிருக்கும் வேளையில் அண்ணலார் குதிரையில் அமர்ந்த வண்ணம் தம் இறுதிப் பேருரையை ஆற்றினார்.

‘அல்லாஹ்வுக்கே எல்லாப் புகழும்! அவனைத் துதித்தும் அவனது உதவியையும் மன்னிப்பையும் கோரும் நாம் அவன் பக்கமே முகத்தைத் திருப்பியவர்களாக உள்ளோம். தீமைகளை விட்டும் நம் செயல்களின் தீய விளைவுகளைவிட்டும் நாம் அல்லாஹ்விடம் பாதுகாவல் தேடுகிறோம். யாரை அல்லாஹ் நேர்வழியில் செலுத்துகின்றானோ அவரை யாராலும் வழிகெடுக்க முடியாது. யாரை அல்லாஹ் வழிபிறழச் செய்கின்றானோ அவரை யாராலும் நேர்வழியில் செலுத்த முடியாது. அல்லாஹ் ஒருவனைத் தவிர வேறு இறைவனில்லை என்று நான் சான்று பகர்கின்றேன். முஹம்மது அவனது அடிமை என்றும் அவனது இறுதித்தூதர் என்றும் சான்று பகர்கின்றேன். அல்லாஹ்வின்

நல்லடியார்களே! அன்புச் சகோதரர்களே! அவனுக்கே அஞ்சுங்கள். அவனுடைய சட்டங்களுக்குக் கீழ்ப்படியுங்கள்.

'அன்புக்குரியவர்களே! என் சொற்களைக் கவனமாகக் கேளுங்கள். நான் இன்று உங்களுக்கு ஒரு செய்தியை வழங்கப் போகிறேன். இந்தப் புனிதப் பயணத்துக்குப் பின் வருமாண்டுப் புனிதப் பயணத்துக்கு நான் வருவேனா, வர மாட்டேனா என்பதை நான் அறியமாட்டேன். இந்நாளும் இம்மாதமும் இப்பூமியும் இன்று புனிதமானதாக இருப்பதுபோல் உங்கள் உயிரும் உடைமையும் கண்ணியமும் புனிதமானதாகும்; இறுதிநாள் வரை இவை புனிதமானதாகும். ஒருமுறைக்கு இருமுறை இதை உங்களுக்குக் கூறுகிறேன்.

'உறுதியாக நீங்கள் அனைவரும் மறுமைநாளில் உங்கள் இறைவனைச் சந்திப்பீர்கள்; உங்கள் செயல்கள் ஒவ்வொன்றுக்கும் நீங்கள் ஒவ்வொருவரும் பதில் சொல்ல வேண்டியவர்களாயிருப்பீர்கள். உங்களில் குற்றம் செய்யும் ஒவ்வொருவரும் தானே அக்குற்றத்துக்குப் பொறுப்பாளியாவார். மகன் தந்தையின் குற்றத்துக்கோ, தந்தை மகனின் குற்றத்துக்கோ பொறுப்பாளியாக மாட்டார்.

'அன்புச் சகோதரர்களே! என் பேச்சை நெஞ்சத்தில் இருத்துங்கள். ஒரு முஸ்லிம் மற்றொரு முஸ்லிமுக்கு சகோதரன்; அவர்கள் ஒன்றிணைந்த சமுதாயத்தின் அங்கங்கள்; சமமானவர்கள். அவர்களிடையே உயர்வு தாழ்வில்லை. உங்களில் அதிகமாக இறைவனுக்கு அஞ்சுபவனே உங்களில் மிகச் சிறந்தவனாவான். ஓர் அரபி அரபியல்லாதவரை விடச் சிறந்தவனாக மாட்டான். இதே போன்று அரபியல்லாதவன் அரபியைவிடச் சிறந்தவனாக மாட்டான். உயர்வு தாழ்வுக்குரிய அளவுகோல் தக்வா இறையச்சமேயாகும், பிறப்பும் குலமுமல்ல.

'அநாகரிகமான, அஞ்ஞான காலச்சடங்கு சம்பிரதாயங்களும் பழக்கங்களும் என் காலின் கீழ் மண்ணின் புதைந்துவிட்டன. கொலைக்குக் கொலை, ரத்தத்துக்கு ரத்தம் என்ற பழைய பழக்கம் அகற்றப்பட்டுவிட்டது. வட்டியும் தடை செய்யப்பட்டுவிட்டது. நீங்கள் தவறு செய்ய எண்ணாதீர்கள், உங்கள்மீதும் தவறிழைக்கப்படமாட்டாது.

'அன்புச் சகோதரர்களே! பெண்கள் உங்கள் அங்கங்களிலிருந்து படைக்கப்பட்டவர்கள். அவர்கள் சம்பந்தமான சங்கதிகளில் அல்லாஹ்வைப் பயந்து கொள்ளுங்கள். உறுதியாக அவர்கள் அல்லாஹ்வின் பாதுகாப்புப் பெற்றே உங்களின் உரிமைப்

பொருளாகியிருக்கிறார்கள். அவர்கள்மீது உங்களுக்கு உரிமையுள்ளது போலவே உங்கள்மீது அவர்களுக்கும் உரிமைகள் உள்ளன. அவர்கள் உங்கள் மண உறவுக்கு மதிப்பளிக்கவேண்டும். நேர்மையாக நடந்தும் நம்பிக்கையோடு செயல்பட்டும் கைத்தலம் பற்றியவனின் கண்களிலும் அகக்கண்களிலும் குளிர்ச்சியை உண்டாக்குவது மனைவியின் கடமையாகும். தங்களை முழுமையாக ஒப்படைத்த மனைவிக்கு உணவு, உடை, உறையுள் அளித்துப் பாதுகாப்பது கணவனின் கடமையாகும்.

'பேரன்புக்குரியவர்களே! நீங்கள் இறைநெறியில் நடப்பதன் மூலம் சத்திய சீலராக விளங்கி சைத்தானிய சக்திகளைப் புறங்காண்பீர்கள். இறைவன் அருளியிருக்கும் திருக்குர்ஆனும் என்னுடைய வழிமுறைகளும் உங்களுக்குக் காலமெல்லாம் கை கொடுக்கும். அவற்றைப் பற்றிப் பிடிப்பவர் எவரும் வழிதவற மாட்டார்கள்' என அண்ணலார் தம் பேருரையை நிறைவு செய்தார்.

அதன் பின் அண்ணலார் குழுமியிருந்த மக்களை நோக்கி 'நான் அல்லாஹ்வின் தூதைச் சரியாக எடுத்துரைத்தேன் என நீங்களெல்லாம் சான்று கூறுவீர்களா?' எனக் கேட்டார்.

'உறுதியாகக் கூறுவோம்' என மக்கள் திரள் சொன்னது.

அண்ணலார் 'இறைவா! நீயே சாட்சியாக இரு' என மூன்றுமுறை உரைத்தார்.

இறுதியாக அண்ணலார் 'நான் கூறுவதைக் கேட்பவர் கேட்காதவர்களிடம் எடுத்துக்கூறுங்கள். இச்செய்தி எட்டாத இடமே இருக்கக்கூடாது' எனக்கூறினார்.

உரை நிறைவுற பிலால் தொழுகைக்கான அழைப்பை விடுத்தார். ளுஹர், அஸர் இரு தொழுகைகளும் சேர்த்துத் தொழப்பட்டன.

தொழுகை முடிய தூதுத்துவத்தை நிறைவேற்றி முடித்த அண்ணலாரை நோக்கி அல்லாஹ் அருளினான்:

> 'இன்று உங்களுடைய தீன் வாழ்க்கை நெறி குறித்து நிராகரிப்போர் முற்றிலும் நிராசையடைந்து விட்டிருக்கின்றனர். எனவே, நீங்கள் அவர்களுக்கு அஞ்ச வேண்டாம். மாறாக, எனக்கே அஞ்சுங்கள். இன்று உங்களுடைய தீனை உங்களுக்காக நான் முழுமையாக்கிவிட்டேன். எனது அருட்கொடையையும் உங்கள்மீது நான் நிறைவு செய்துவிட்டேன். உங்களுக்காக இஸ்லாத்தை உங்களுடைய வாழ்க்கைநெறியாக நான் ஏற்றுக் கொண்டுவிட்டேன்.'

(திருக்குர்ஆன் 5: 3)

இந்த இறைவசனத்தை அண்ணலார் அபூபக்கரிடம் ஓதிக்காட்டியபோது கண்கலங்கி அழுதுவிட்டார். அண்ணலாரின் மறுமைப் பயணத்துக்குரிய நாள் நெருங்கிவிட்டது என்பதைப் புரிந்து கொண்ட தோழர் அபூபக்கர் அழுதார்.

இதே போன்று பின்வரும் அத்தியாயம் அருளப்பட்டபோதும் வசனங்களைக் கேட்ட அபூபக்கர் அழுதிருக்கிறார்.

> ‘அல்லாஹ்வின் உதவியும் வெற்றியும் வந்துவிடும்போது மேலும் (நபியே!) அல்லாஹ்வின் மார்க்கத்தில் மக்கள் திரள்திரளாக நுழைவதை நீர் காணும்போது நீர் உம் இறைவனைப் புகழ்ந்துகொண்டு அவனைத் துதிப்பீராக! மேலும், அவனிடம் பாவமன்னிப்புக் கோருவீராக! நிச்சயமாக அவன், பாவமன்னிப்புக் கோரிக்கையைப் பெரிதும் ஏற்பவனாக இருக்கின்றான்.’

(திருக்குர்ஆன் 110: 13)

அரபா பெருவெளியில் தியானங்களும் பிரார்த்தனைகளும் தொடர்ந்தன. சூரியன் மறைய கஸ்வாவில் ஏறிய அண்ணலார் உஸாமாவைப் பின்னால் அமரச் செய்து மக்காவை நோக்கிப் புறப்பட்டார்.

அண்ணலாரைத் தொடர்ந்து தோழர்கள் சென்றனர். மரபுப்படி அங்கே யாத்திரிகர்கள் வேகமாகவே செல்வர். அண்ணலார் ‘மிக வேகமாகச் செல்ல வேண்டாம், சிறிது வேகமிருந்தால்போதும். அமைதியாகச் செல்லுங்கள்; பலம் வாய்ந்தவர்கள் பலம் குறைந்தவர்களைக் கருத்தில் கொள்ளுங்கள்’ என்றார்.

முஸ்தலிபாவை அடைந்த அண்ணலாரும் தோழர்களும் அங்கேயே இரவைக் கழித்தனர். பின் புனித பூமியின் உள்ளேயேயிருந்த மினாவெளியின் அகபாவிலிருந்த மூன்று தூண்களை அடைந்தனர்.

பனிரெண்டு ஆண்டுகளுக்கு முன் அண்ணலார் அன்ஸாரிகளிடம் செய்துகொண்ட ஒப்பந்தம் நினைவுக்கு வந்தது. அவ்வொப்பந்தமும் அதன்பின் செய்யப்பட்ட ஹுதைபியா ஒப்பந்தமும் ஏற்படுத்திய மகத்தான வெற்றியை எண்ணி அண்ணலார் இறைவனுக்கு நன்றி கூறினார்.

அகபாவிலிருந்த மூன்று தூண்களின் மேல் அண்ணலாரும்

தோழர்களும் கல்லெறிந்தனர். ஷைத்தானைப் புறங்காணும் அடையாளமாக அந்நிகழ்ச்சி கருதப்படுகிறது.

கல்லெறிந்த பின்னால் குர்பானி கொடுக்கப்பட்டது; தலை மயிர் மழிக்கப்பட்டது.

மரபுப்படி செயல்பாடுகள் தொடர அகபாவில் தங்கியபடி யாத்திரிகர்களை கஅபாவைத் தரிசித்துவர அனுப்பினார். அன்றைய இரவையும் அடுத்த இரண்டு இரவையும் மினாவில் கழிக்க ஆயத்தமானார்.

அதன்பின் அண்ணலாரோடு யாத்திரிகர்கள் அனைவரும் மதீனாவுக்குப் புறப்பட்டனர்.

## அண்ணலாரின் மரணம்!

அரபா பெருவெளியில் ஹஜ்ஜத்துல்விதா சொற்பெருக்காற்றி மூன்று மாதங்கள் கூட நிறைவுறவில்லை. அண்ணலாருக்கு சுகமில்லாமல் போனது. இதற்கு முன் சில முறை சுகவீனம் அடைந்திருந்தாலும் இந்த அளவுக்குச் சுகவீனம் அடையவில்லை.

தலைவலி, கண்களில் எரிச்சல், உதடுகளில் ஈரமின்மை, உடலில் சூடு எனக் காய்ச்சல் பலவித வலிகளைக் கொடுத்தது. தொடர்ந்த காய்ச்சல் விடுவதும் தொடுவதுமாக இருந்தது.

அக்காலகட்டம் ஹிஜ்ரி 11 ஸபர், 18 19...

காய்ச்சல் அண்ணலாரைத் தொடுவதற்கு முன்பே சில நாட்களாக அவர்கள் இறைவனின் சொர்க்கத்தைப் பற்றி வர்ணித்து வந்தார். அவ்வர்ணனை சொர்க்கத்தை நேரில் பார்ப்பதைப் போலவே இருந்தது. சொர்க்கத்தைப் பற்றிப் பேசிய அண்ணலார் மரணத்தைப் பற்றியும் பேசினார்.

அறுபத்தி மூன்று வயதுடைய அண்ணலார் அப்போது வலிவுடனும் பொலிவுடனும் திகழ்ந்தார். முடிகள் நரைத்திருந்தாலும் முழுமையாக நரைக்கவில்லை. உடலில் திரைகளும் இல்லை.

நோய்வாய்ப்பட்ட பின்னரே அண்ணலாரிடம் தளர்வும் வாட்டமும் தெரிந்தன. காய்ச்சல் குறைந்திருந்தபோது அண்ணலார் தம் பணியாளர் அபூ முவைஹிபாவை அழைத்துக் கொண்டு அருகிலிருந்த அடக்கஸ்தலத்துக்குச் சென்றார்.

அங்கு நின்ற அண்ணலார் ‘மண்ணறைவாசிகளே! உங்களுக்கு சாந்தியுண்டாவதாக!’ என்று கூறி இறைவனிடம் மண்ணறைவாசிகளை மன்னிக்கும்படி பிரார்த்தித்தார்.

பகீ மண்ணறைக்கு அண்ணலார் சென்ற காரணம் அவர்களுக்கு ஏற்பட்டிருந்த மரண நினைவுகளே! அவர்கள் மண்ணறைவாசிகளுக்கு சலாம் கூறியதோடு அவர்களுக்காகப் பிரார்த்தனை புரிந்தது தம் சமுதாயத்தினருக்கு வழிகாட்டவே!

அடுத்தநாள் வைகறையின்போது அண்ணலார் கடுமையான தலைவலியால் அவதிப்பட்டார். நெற்றிப்பொட்டு நரம்புகள் துடிக்க வலியோடு பள்ளிவாசல் சென்ற அண்ணலார் தொழுகையை முன்னின்று நடத்தினார்.

தொழுகை முடிந்தபின்னர் உஹத் போரில் ஷஹீதான போராளிகளுக்காகப் பிரார்த்தனை செய்த அண்ணலார் மறைமுகமாக தாம் கண்மூடிப் பயணம் போகப்போவதைப் பற்றிய செய்தியை மொழிந்தார்.

அபூபக்கர் முதல் அனைத்துத் தோழர்களின் கண்களிலும் கண்ணீர்!

அன்றைய நாள் அன்னையர் மைமூனாவின் இல்லத்தில் இருக்க வேண்டிய நாள். அன்னையரின் அனுமதியோடு அண்ணலார் ஆயிஷா நாயகியின் இல்லத்தில் தங்கிட ஏற்பாடு செய்யப்பட்டது. அடுத்தடுத்த நாட்களிலும் அண்ணலார் மற்ற அன்னையர்களின் அனுமதியோடு ஆயிஷா நாயகியின் இல்லத்திலேயே தங்கும்படியானது. நோயின் தீவிரம் தான் அதற்குக் காரணம்.

அண்ணலார் நோய்வாய்ப்படுவதற்கு முன்பே சிரியா நோக்கி முஸ்லிம்கள் படையெடுக்க ஏற்பாடாகியிருந்தது. அந்த ஏற்பாட்டின்படி உஸாமா தலைமையில் படை புறப்பட்டிருந்தது. அப்படை அண்ணலாரின் உடல்நிலையறிந்து ஜுர்ப் என்ற இடத்தில் நிறுத்தப்பட்டு பாசறையமைத்தது.

அப்படையின் தலைவராக மிகச் சிறிய வயதுடைய இளைஞர் உஸாமா நியமிக்கப்பட்டதற்கு மூத்தவர்களிடமிருந்து முணுமுணுப்புகள்! முதல் சிரியாப் படையெடுப்பின்போது முதல் தளபதியாகச் சென்று ஷஹீதான ஜைதுவின் மகன் உஸாமா என்பதாலோ அண்ணலார் உஸாமாவைப் படைத்தளபதி ஆக்கினார்?

படையை ஜுர்ப்பில் தங்கச் செய்த உஸாமா அண்ணலாரைக் காண மதீனாவுக்குத் திரும்பினார்.

காய்ச்சலோடு தொழுகைக்குத் தலைமை தாங்கிய அண்ணலாரால் தொடர்ந்து தம் இமாமத் பணியைத் தொடர முடியவில்லை. அவர்கள் தம் தோழர் அபூபக்கரைப் பணித்தார்.

அபூபக்கர் தொழவைக்க தொழுகைகள் தொடர்ந்து கொண்டிருந்த வேளையில் இல்லம் சென்ற அண்ணலார் மிகவும் சோர்வுற்று ஆயிஷா நாயகியாரின் மடிமேல் சாய்ந்திருந்தார்.

மகளார் பாத்திமா, மாமி ஸபிய்யா எனப் பலர் வந்து பார்த்தனர். உம்மு ஐய்மன் தொடர்ந்து அங்கேயே இருந்து உதவிகள் புரிந்துவந்தார். அப்பாசும் அலீயும் கூட உதவிகள் புரிந்து, வந்து செல்வோருக்கு அண்ணலாரின் உடல்நலம் பற்றி மொழிந்து கொண்டிருந்தனர்.

தங்கள் உயிரினும் மேலான அண்ணலார் நோய்வாய்ப்பட்டிருந்ததால் முஸ்லிம்கள் அனைவரும் கவலையோடும் நிம்மதியற்றும் இருந்தனர். அண்ணலார் நலமடைவர் என நம்பிய தோழர்கள் தம் எண்ணமும் பிரார்த்தனையும் நிறைவேறாததால் சங்கடப்பட்டனர். அண்ணலார் நோய்வாய்ப்பட்டார், படுக்கையிலிருந்தார் எனக் கேள்விப்பட்டிராத மக்கள் கண்கலங்கினர்; மனமுடைந்தனர்.

ஹிஜ்ரி ஆறாம் ஆண்டில் ஒருமுறை அண்ணலாருக்குக் காய்ச்சல் ஏற்பட்டது. இரண்டு, மூன்று நாட்களில் அவர் நலமடைந்துவிட்டார்.

ஹிஜ்ரி ஏழாம் ஆண்டில் யூதப் பெண்ணொருத்தி அளித்த விருந்தில் சாப்பிடக் கொடுத்த நஞ்சு கலந்த இறைச்சியால் பாதிப்படைந்த அண்ணலார் உரிய மருந்துகள் சாப்பிட்டு நலமடைந்தார்.

இந்த இரு சுகக்குறைவுகள் தவிர அண்ணலார் உடல் நலம் பாதித்த நிகழ்வுகள் கிடையவே கிடையாது. இப்போது மூன்றாவதாக வந்த சுகவீனம் அண்ணலாரைப் பெரும்பாடு படுத்தியது.

உணவு உண்பதில் இருந்த அண்ணலாரின் கட்டுப்பாடு அவர்களுக்கு உடல்நலத்தைக் கொடுத்தது. உண்ணும் உணவே அவர்களுக்கு மருந்தாகவும் இருந்தது.

எப்பொழுதும் அண்ணலார் தூய்மையாகவே இருப்பார். தூய்மையாக இருப்பது ஈமானின் ஒரு பகுதியெனக் கூறிய அண்ணலார் தூய ஆடைகளையே அணிவர்.

அண்ணலார் ஓய்வெடுக்காமலேயே செயல்பட்டுக் கொண்டே இருப்பார். இறை வணக்கங்கள், இயக்க வேலைகள், மக்கள் சேவைகள்

என அண்ணலார் செய்த செயல்கள் அனைத்தும் நின்றிருந்தன. உறவுகள், சொந்தங்கள், தோழமைகள், நல்லிதயங்கள் எல்லாம் கலக்கமுற்றிருந்தன.

அன்புத் துணைவியார் மடிமேல் சாய்ந்திருந்த அண்ணலாரின் வாய் முணுமுணுத்தது.

‘எவர்கள் அல்லாஹ்வுக்கும் தூதருக்கும் கீழ்ப்படிகின்றார்களோ அவர்கள் அல்லாஹ் அருள்புரிந்துள்ள நபிமார்கள், உண்மையாளர்கள், இறைவழியில் உயிர்த்தியாகம் புரிந்தவர்கள் மற்றும் உத்தமர்கள் ஆகியோருடன் இருப்பார்கள். இவர்கள் எத்துணைச் சிறந்த தோழர்கள்!’

(திருக்குர்ஆன் 4: 69)

இந்த இறைவசனத்தை அண்ணலாரின் இதழ்கள் உதிர்த்தன. இதைக்கேட்ட ஆயிஷா நாச்சியாருக்கு அண்ணலாரின் இறுதிப்பயணம் சில நாழிகைகளில் தொடரப் போவது புரிந்தது.

அன்னையாரின் மடிமேலிருந்த அண்ணலாரின் உடல் கனக்க ஆரம்பித்தது.

இன்னாலில்லாஹி வஹின்னாஹு ராஜிவூன்

கூடியிருந்த மனைவிமார்கள் கண்களில் கண்ணீர், வாய்களில் ஆற்றாமையின் அடையாளச் சொற்கள்!

அண்ணலாரின் நல்லடக்கம்!

அண்ணலார் ஒவ்வொரு முஸ்லிமிடமும் தம்மை தன்னுடைய தாயைவிட, தந்தையைவிட, உடன்பிறப்புகளைவிட, மனைவியைவிட, பெற்ற பிள்ளைகளைவிட நேசிக்கும்படி சொல்லியிருந்தார். அவர்களும் அண்ணலாரை உயிரைவிட மேலாக மதித்தார்கள். அந்த நேசந்தான் அண்ணலாரையும் அன்புக்குரியவர்களையும் பிணைத்தது. அதனால்தான் அண்ணலார் தம்மைப் பின்பற்றியவர்களைத் தோழர்கள் என அழைத்தார்.

அண்ணலார் மரணமடைந்ததைக் கண்ட, கேட்ட, அறிந்த தோழர்கள் அனைவரும் தம்முடைய உயிரையே இழந்ததாகக் கருதினார்கள்.

ஆயிஷா நாச்சியாரின் மடியில் சாய்ந்தபடி அண்ணலார் மரணித்தபோது இறைநம்பிக்கையாளர்களின் அன்னையர்களான

உம்முஹபீபா, ஹப்ஸா, ஜைனப்,ஸவ்தா, உம்முஸல்மா, மைமூனா, ஸபிய்யா ஆகியோர் அடைந்த துன்பத்துக்கு அளவில்லை.

அபூபக்கர் ஸுன்ஹ் எனும் மதீனாவுக்கு மேற்கிலிருந்த பகுதிக்குச் சென்றிருந்தார். உமர் சிரியாவை நோக்கிச் சென்ற படையில் கலந்து கொண்டிருந்தார். அப்பாசும் அலீயும் அண்ணலாருடன் இருந்தனர். திண்ணைத் தோழர்களில் பலர் அப்போது அங்கிருந்தனர்.

மதீனாவிலிருந்தவர்கள் அனைவரும் அண்ணலாரின் மரணத்தையறிந்து கூடி கண்கலங்கினர்; சிலர் வாய்விட்டு அழுதனர்; சிலர் தேம்பித் தேம்பி அழுதனர். அழக்கூடாது என்பதையறிந்த அவர்கள் அனைவராலும் அழமுடியவில்லை. மனத்துக்குள் அழுதார்கள்!

சேதி கிடைத்தவுடன் ஓடோடி வந்த உமர் அண்ணலாரின் கால் மாட்டில் அமர்ந்து நிகழ்ந்த மரணத்தை நம்ப முடியாமல் தவித்துக் கொண்டிருந்தார்.

ஸுன்ஹாவிலிருந்து வந்த அபூபக்கர் தம் உயிருக்குயிரான தோழரின் உடலைக் கண்டு குலுங்கிக் குலுங்கி அழுதார்; தொடக்கம் முதல் உடனிருந்த தோழரின் நினைவுகளில் திளைத்து அண்ணலாரின் நெற்றியில் முத்தமிட்டார்.

உமரின் நிலையைக் கண்ட அபூபக்கர் கீழ்க்கண்ட திருக்குர்ஆன் வசனங்களை ஓதினார்.

> ‘முஹம்மத் ஒரு தூதரேயன்றி வேறல்லர். திண்ணமாக, அவருக்கு முன்பும் தூதர்கள் பலர் சென்றுள்ளனர். எனவே அவர் மரணமெய்திவிட்டால், அல்லது கொல்லப்பட்டுவிட்டால் நீங்கள் முந்திய வாழ்க்கைக்குச் சென்றுவிடுவீர்களா! நினைவிருக்கட்டும்! எவன் அவ்வாறு திரும்பிச் செல்கின்றானோ, அவனால் அல்லாஹ்விற்கு எத்தகைய தீங்கும் செய்துவிட முடியாது. ஆயினும், நன்றி செலுத்தி வாழ்பவருக்கு அல்லாஹ் மிக விரைவில் அதற்குரிய கூலியை வழங்குவான்.’

(திருக்குர்ஆன் 3: 144)

இவ்வசனத்தை கேட்டவுடன் அண்ணலாருக்கு மரணமில்லை எனச் சொல்லி நின்று கொண்டிருந்த உமர் நினைவிழந்து கீழே விழுந்தார். அல்லாஹ்வின் தூதர் மரணமடைந்துவிட்டார் என்பதை அவரால் நம்பமுடியவில்லை.

முஹாஜிரீன்களும் அன்ஸாரிகளும் கண்கலங்கி நின்ற சூழலில் அங்கிருந்த அன்ஸாரிகளில் பலர் பனூ ஸாஇதாக்களின் மண்டபத்தில் கூடிக் கொண்டிருந்தனர்.

இதையறிந்த உமர் அபூபக்கரோடு கலந்து பேசினார். பின் இருவரும் ஸாஇதாக்களின் மண்டபத்துக்கு விரைந்து சென்றனர். அங்கு ஸஅத் இப்னு உபாதா தலைமையில் ஆலோசனை நடந்து கொண்டிருந்தது.

அன்ஸாரிகளில் பலர் அண்ணலாரின் மறைவுக்குப் பின் மதீனாவின் ஆட்சி காலாவின் மக்களிடமே இருக்க வேண்டுமெனக் கூறினர். ஸஅத்தே அத்தலைமையை ஏற்க வேண்டுமென வற்புறுத்தினர்.

போரில் அம்புக்காயம் பட்டிருந்த ஸஅத் கையில் கட்டுடன் காணப்பட்டார். அவர் ரணக்காயத்துடனும் அண்ணலாரை இழந்த மனக்காயத்துடனும் இருந்ததை அவருடைய முகம் காட்டியது.

அன்ஸாரிகள் ஆலோசனையில் ஈடுபட்ட அவ்வேளையில் அபூபக்கர் உமர், அபூஉபைதாவுடன் அங்கு போய்ச் சேர்ந்தார். அன்ஸாரிகள் பேசியவற்றைக் கேட்ட அபூபக்கர் அவற்றை உள்வாங்கிப் பேசத் தொடங்கினார்.

'அன்ஸாரிகளாகிய நீங்கள் அகபா உடன்படிக்கையின்படி அண்ணலாரைப் புலம் பெயரச் செய்தீர்கள். அவ்வுடன்படிக்கைகளின்படி அண்ணலாரை மட்டுமல்ல முஹாஜிரீன்களாகிய எங்களையும் பேணிக்காத்தீர்கள். ஆதரவு தேடி வந்த எங்களுக்கு நீங்கள் அளித்த ஆதரவு உலகெங்கிலும் கிடைக்காத ஆதரவு. இல்லத்தைத் தந்தீர்கள், தோட்டந்துரவுகளைத் தந்தீர்கள், உங்கள் உறவுகளை எங்கள் உறவுகளாக்கினீர்கள், சுருக்கமாகச் சொன்னால் உங்கள் இதயங்களைத் தந்தீர்கள், ஈரல் குலையைத் தந்தீர்கள். காலாவின் மக்களே யத்ரிபை ஆள வேண்டுமெனச் சொல்கிறீர்கள்! அது நியாயந்தான்! மக்கத்துக் குறைஷிகளாகிய நாங்களும் கைலாவின் மக்கள்தான். மக்கா மதீனா கொள்வினை கொடுப்பினை நீண்ட பாரம்பர்யத்தைக் கொண்டது. உங்களுடைய மூத்த பெரியம்மா ஸல்மா எங்களுடைய அப்துல் முத்தலீபின் தாயார்; உங்களுடைய சிற்றன்னை ஆமீனா நம்முடைய அண்ணலாரின் தாயார்! இவ்வாறு சொல்லிக் கொண்டே செல்லலாம். என்றாலும் நமக்கு எதிரிகள் ஆங்காங்கேயிருக்கும் சூழலில் ஒரு மக்காவின் மைந்தரே அடுத்த ஆட்சியாளர் ஆவது மிகச் சிறந்த ஏற்பாடாக இருக்கும். காரணம்,

கஅபா ஏகத்துவத் தலைமையகமாகயிருந்தபோதும் அதன்பின் கற்சிலைகளின் கூடாரமாகயிருந்தபோதும் அது அரபகத்தின் மையப்புள்ளியாகும். அதனைப் பாதுகாக்கும் பணியைச் செய்த குறைஷிகள் அரபக மக்களின் தலைமாந்தராகத் திகழ்ந்தனர். எனவே அண்ணலாருக்கும் பின் ஒரு முஹாஜிரீன் கலீஃபாவாக வருவதையே குறைஷிகள் விரும்புவர். இது என்னுடைய கருத்து. இதை நாம் கலந்து பேசி நிறைவேற்றலாம்' என அபூபக்கர் கூற அன்ஸாரிகள் கலந்துரையாடினர்.

அபூபக்கர் எழுந்து 'நீங்கள் முஹாஜிரீன்களில் ஒருவரைத் தலைவராக்க விரும்பினால் உமரையோ அபூ உபைதாவையோ தலைவராக்கலாம்' என்றார்.

அன்ஸாரிகளில் ஒருவர் எழுந்து 'அன்ஸாரிகளில் ஒருவரையும் முஹாஜிரீன்களில் ஒருவரையும் தேர்ந்தெடுத்து இருவரையும் தலைவர்களாக்கலாம்!' என்றார்.

'ஓர் உறையுள் இரு வாள்களுக்கு இடமில்லை. அண்ணலார் தம் மரணத்தறுவாயில் தொழுகைக்குத் தலைமையேற்க அபூபக்கரைத்தான் பணித்தனர். அதை ஓர் குறியீடாகக் கொண்டு ஏன் நாம் அபூபக்கரைக் கலீஃபாவாக ஆக்கக் கூடாது?' என உமர் கூறினார்.

'உங்களில் சிறந்தவர், அல்லாஹ்வின் தூதரின் அருமைத்தோழர், குகையில் இருந்த இருவரில் ஒருவர்' என அன்ஸாரி ஒருவர் அபூபக்கரைப் பற்றிக் கூறினார்.

பின்னர் அனைவரும் சம்மதிக்க உமர் அபூபக்கரிடம் உறுதிமொழி கூறினார். அடுத்தடுத்து அங்கு கூடியிருந்தவர்கள் உறுதிமொழி கூறினர்.

அதன்பின் மஸ்ஜித் நபவி வந்த கலீஃபாவிடம் அங்கு கூடியிருந்த அனைவரும் உறுதிமொழி கூறினர்.

அண்ணலாரின் உடன் அவர்கள் வாழ்ந்த ஆயிஷா நாச்சியாரின் இல்லத்திலேயே அடக்கப்பட்டது. தோன்றிய நபிகளனைவரும் தாம் மரணித்த இடத்திலேயே அடக்கப்பட்டுள்ளர் என்பதே வரலாறு.

அண்ணலார் மொழிந்துள்ளனர்: நானும் இந்த உலகமும் பிரயாணியும் அவர் நிழலுக்காகத் தங்கியிருக்கும் மரமும் போலாகும். மரத்தைவிட்டுப் பயணி தன் பாதையில் சென்றுவிடுவார். (இப்னுமாஜா)

## பயணத்தின் முடிவில்!

அண்ணலார் தம் தாயின் வயிற்றில் இருந்தபோதே தந்தை அப்துல்லாஹ்வை இழந்தார். அக்குறையை அண்ணலாரின் பாட்டனார் அப்துல் முத்தலீபும் பெரிய சிறிய தந்தையரும் போக்கினர்.

அண்ணலார் சிறுவராக இருந்தபோதே தாயார் மரணித்தார். அக்குறையை பரகாஹ் எனும் அடிமையாக இருந்து விடுதலையான உம்மு ஐய்மனும் பெரிய தந்தை அப்துல் முத்தலிபின் துணைவியார் பாத்திமாவும் மாமிமார்கள் பர்ரா, ஸபிய்யா, அர்வா, ஆதிக்கா, உம்மு ஹகீம், உமைமாவும் நீக்கினார்கள்.

சகோதரர்கள் இல்லாத குறையை அலீ, ஜவ்பர் என அப்துல் முத்தலிபின் பேரர்களும் அபூபக்கர் போன்ற தோழர்களும் நிறைவுசெய்தார்கள்.

சகோதரிகள் இல்லாத குறையை அபூதாலிபின் புத்திரி உம்மு ஹானி போன்றவர்களும் வளர்ப்புச் சகோதரி ஷைமா போன்றவர்களும் பூர்த்தி செய்தார்கள்.

அநாதையாய் வாழ்வைத் தொடங்கியபோதும் அண்ணலார் அநாதையாய் வாழவில்லை. அநாதையான அண்ணலாரை அந்நினைப்பே இல்லாமல் வளர்த்த அபூதாலிபை அடுத்து அவர்களைக் கண்ணின் கருமணியைப்போல் காத்தவர் அன்னை கதீஜா நாச்சியார்!

அன்னை கதீஜா நாச்சியாரின் உன்னத ஆதரவில் இருந்த போதே எல்லாம் வல்ல அல்லாஹ் அண்ணலாரைத் தன் கைவசம் எடுத்துக் கொண்டான். அதன்பின் அண்ணலாருக்குக் கிடைத்த உறவு ஒரு நீண்ட சகோதரத்துவ உறவு. அது அபூபக்கரில் தொடங்கி அர்கம் இல்லத்தில் வளர்ந்தது.

அவ்வுறவுக்குத் தொல்லை வந்தபோது அதன் கிளை அபிசீனியாவில் ஆதரவு தேடியது. அது அகபா உடன்படிக்கையில் உறுதிபெற யத்ரிப் மதீனா ஆனது.

மதீனாவில் அண்ணலாரின் உறவு வலுப்பெற்றபோது பத்ருப் போர் வந்து உறவில் பலத்தைத் தந்தது. உஹதுப் போரில் குருதி சிந்தவைத்து அகழிப்போரில் வெற்றி காண வைத்தது. பின் பல்வேறு போர்கள் எல்லாமே உறவை வளர்க்கவும் உலக சகோதரத்துவத்தை நிலை நாட்டவுமே!

உறவையும் உரிமையையும் நிலைநாட்ட அண்ணலார் புனிதப்

பயணம் செய்தபோது தடைகள்! அதன்பின் ஹுதைபியா உடன்படிக்கை!

முஸ்லிம்களின் குரல்வளை நெரிப்பு எனப் பேசப்பட்ட உடன்படிக்கை ஓராண்டில் வெற்றிகளைக் குவித்தது. உம்ரா சென்ற முஸ்லிம்களின் மக்காப் பயணம் உறவுகளை வளர்த்தது. அடுத்து மக்காவையே முஸ்லிம்களின் கைகளில் கொடுத்தது.

நபித்துவம் பெற்றபின் அமைந்த மக்காவின் பதிமூன்று ஆண்டு முயற்சிகளும் பணிகளும் வழங்காத அற்புத வெற்றியை மதீனாவின் பத்தாண்டு காலப் பணிகள் வழங்கின.

அடுத்து இறுதியான புனிதப் பயணமும் ஹஜ்ஜத்துல் விதா சொற்பொழிவும் முஸ்லிம்களின் வரலாற்றில் முக்கியப் பதிவுகள். சபா மலையில் பேசத்தொடங்கிய அண்ணலார் தம் உரையை அரபாத் பெருவெளியில் முடித்தார்.

மஸ்ஜித் நபவி மையப்புள்ளியில் அமைக்கப்பட்ட இஸ்லாமிய அரசு மதீனாவுக்கும் வடக்கிலும் தெற்கிலும் தன் கிளைகளைப் பரப்பியது.

இச்சூழலில்தான் அண்ணலார் தம்முடைய அழைப்புப் பணியை நிறைவேற்றி இஸ்லாமிய ஆட்சியை முஸ்லிம்களின் கரங்களில் கொடுத்துவிட்டு மரணமடைந்தார்.

மதீனாவின் மக்களும் மதீனாவைச் சூழ வாழ்ந்த மக்களும் அண்ணலாரின் மரணத்தின்போது வருகை தந்திருந்தனர். மிகத் தொலைவிலிருந்தோர் வர இயலவில்லை. முஜாஹிரீன்கள், அன்ஸாரிகளை விட மதீனாவைச் சுற்றி வாழ்ந்த இனக்குழுவினர் மிக அதிகமாக அண்ணலாரின் இறுதிப் பயணத்தில் காணப்பட்டனர்.

ரத்தவெறி பிடித்தவர்களை, இன வெறி பிடித்தவர்களை மனிதர்களாக்கி உலக சகோதரத்துவத்தை உரைத்த அண்ணலாரை அரபுலகம் தம்முடைய உடன்பிறவாச் சகோதரராக ஏற்றுக் கொண்டிருந்தது. உயர்வு தாழ்வு பிறப்பால் அல்ல, உயர் எண்ணங்களால்தான் என்பதை உயர்த்திப் பிடித்த அண்ணலாரை அரபுலகம் தம் உயிரினும் மேலாக உணரத் தொடங்கியிருந்தது. தொலைவில் நிறுத்தப்பட்டவர்கள், தொலைத்துக்கட்டப்பட வேண்டியவர்கள் எனக் கருதப்பட்டவர்கள் எல்லோரும் தோளோடு தோள் நின்று தொழுததற்குப் பின்னால் அரபுலகம் தொலைதூரப் பார்வையைப் பெற்றுக் கொண்டு புதிய சமுதாயமாக மாறிக் கொண்டிருந்தது.

இதை அண்ணலாரின் மரணத்தின்போது குழுமிய தோழர்கள் நிரூபித்தார்கள்.

அண்ணலாரின் மரணத்தின்போது தொலைவிலிருந்து மனிதர்களால்தான் வரமுடியவில்லை. தொலைவிலிருந்த மக்காவின் ஜபலுத்தூர் மலைக்காற்று வந்திருந்தது. அருகிலிருந்த உஹத் மலைக்காற்றும் வந்திருந்தது. அவை அடைந்த துக்கத்தை அளவிட முடியாது.

அண்ணலாரின் முகத்தைத் தரிசித்த காற்றுகள், அண்ணலாரை அடக்கம் செய்தபின் மனங்கனத்து ஸ்தம்பித்து நின்றன. பின் அவை உயரே உயரே சென்று மதீனாவின் விண்ணில் நிறைந்த மேகங்களோடு துக்கத்தைப் பரிமாறிக் கொண்டன.

மேகங்கள் மழையைப் பொழிந்தன. மேகங்களால் ஈரமான காற்றுகள் பொறுமையாக தம் திக்குகளை நோக்கிச் சென்றன.

இஸ்லாம் எட்டுத் திக்குகளிலும் பயணத்தை மேற்கொண்டது.

# உசாத்துணை நூல்கள்


* Muhammad Martin Lings
* The Life of Mohamed Mohamed Husain Haikal
* நபிகள் நாயகம் M.R.M. அப்துற் றஹீம்
* அண்ணல் எங்கள் ஆருயிர் M.R.M. முகம்மது முஸ்தபா
* அகிலத்தின் அருட்கொடை டாக்டர் இனாயத்துல்லா சுப்ஹானி
* இஸ்லாம்: நம்பிக்கைகளும் போதனைகளும் குலாம் சர்வர்
* இஸ்லாமும் சமய நல்லிணக்கமும் மணவை முஸ்தபா
* இஸ்லாமின் வரலாற்றுப் பாத்திரம் எம்.என்.ராய்
* பத்ருப்போரில் அரசியல் ஏ. ஸயீத்
* நபி பெருமானார் வரலாறு N.B.அப்துல் ஜப்பார்
* தென்னிந்திய வரலாறு K.K.பிள்ளை
* மதீனாவை நோக்கி M.J.M .ரியான்
* அண்ணல் நபி (ஸல்) அழகிய வரலாறு மௌலானா அபூஸலீம் அப்துல் ஹை
* திருக்குர்ஆன் (மூலம், தமிழாக்கம், விளக்கவுரை) மௌலானா செய்யிது அபுல் அஃலா மௌதூதி
* ஸஹீஹுல் புகாரி (பாகம் 17) நபிமொழித் தொகுப்பு
* ஸஹீஹுல் முஸ்லிம் (பாகம் 14) நபிமொழித் தொகுப்பு
* அபூதாவூத், நஸாயீ நபிமொழித் தொகுப்பு

